''....நிகழ்காலத்துக்காக உழைக்கின்ற பொழுதே எதிர் காலத்தையும் உருவாக்குகின்ற கலா மேதைகளில், மாபெரும் சத்திரிர புருஷர்களில் ஒருவர் பூஷ்கின்.''

விசரியோன் பெலீன்ஸ்கி

''பூஷ்கின் ருஷ்யாவின் மாபெரும் தேசியக் கவிஞர்; அழகும் அறிவும் மிகுந்திருக்கும் கற்பனைக் கதைகளின் ஆசிரியர். கவிதை அழகிலும் உணர்ச்சிகளையும் சிந்தனைகளையும் வெளியிடுகின்ற ஆற்றலிலும் இன்று வரை எவரும் பூஷ்கினை விஞ்சியதில்லை. மாபெரும் ருஷ்ய இலக்கியத்தை நிறுவிய கவிஞர் அவர்.''

மக்சிம் கோர்க்கி

# அலெக்சாந்தர் பூஷ்கின்

## தேர்ந்தெடுக்கப்பட்ட நூல்கள்



ராதுகா பதிப்பகம்
மாஸ்கோ



விற்பனையாளர்கள்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்
சென்னை

மொழிபெயர்ப்பாளர்கள்: பூ. சோமசுந்தரம் (கவிதை)
நா. தர்மராஜன் எம். ஏ. (உரைநடை)
ஓவியர்: க. செமியோனவா

Александр Пушкин

ИЗБРАННОЕ

*На тамильском языке*

**Alexander Pushkin**

SELECTED WORKS

*In Tamil*

Перевод сделан по книгам:
Александр Пушкин. Сочинения в 3-х томах.
«Художественная литература», М., 1974


சோவியத் நாட்டில் அச்சிடப்பட்டது

П $\frac{4702010100-448}{031(01)-83}$ 691—82

# பொருளடக்கம்

## வாசகர்களுக்கு

இத்தொகுப்பில் அலெக்சாந்தர் பூஷ்கின் எழுதிய கவிதைகளிலும் உரைநடை இலக்கியங்களிலும் சிலவற்றைத் தேர்ந்தெடுத்து வெளியிட்டிருக்கிறோம். பூஷ்கின் ருஷ்யாவின் மாபெரும் கவிஞர். ஆனால் இத்தொகுப்பில் அவருடைய கவிதைகள் குறைவாகவே இடம் பெற்றிருப்பது வாசகர்களுக்கு வியப்பைத் தரக்கூடும்.

கால் நூற்றாண்டுக் காலமாக ருஷ்ய, சோவியத் இலக்கியங்களைத் தமிழில் மொழிபெயர்த்து அரும் பணியாற்றிய பூர்ணம் சோமசுந்தரம் அவர்கள் பூஷ்கின் கவிதைகளை இத்தொகுப்புக்காக மொழிபெயர்த்துக் கொண்டிருக்கும் பொழுது திடீரென்று மரணமடைந்தார். அவருடைய மரணம் எங்களுக்குப் பேரிழப்பு என்று கூறுவது மிகையல்ல.

அவர் மரணமடைவதற்கு முன்பு மொழிபெயர்த்த பூஷ்கின் கவிதைகளை மட்டும் இத்தொகுப்பில் வெளியிட்டிருக்கின்றோம். பூஷ்கினுடைய அழியாக் கவிதைகள் முழுவதையும் எதிர்காலத்தில் வெளியிடுவோம் என்ற நம்பிக்கையை வாசகர்களுக்குத் தெரிவிக்கிறோம்.

**பதிப்பாசிரியர் குழு**

# ஜிப்சிகள்[1]

கூட்டமாய் பெசராபியாவில்[2] திரிவர்
கூச்சலுடனே ஜிப்சிகள்.
ஆற்றின் கரையிலே கிழிந்த கூடாரங்கள்
அடித்துத் தங்குவர் இரவிலே.
கட்டின்மை போல் இன்பம் பொங்கிடும் தங்கிடம்
கவலை இல்லாத் தூக்கம் வானத்தின் கீழ்.
கட்டிய கம்பளங்கள் தொங்கும் வண்டிகள்
நடுவில் இதமாகக் கனலும் தீ;
சுற்றிலும் சமையல் செய்திடும் குடும்பம்;
தூய வெளியில் மேயும் பரிகள்;
பற்றுடன் வளர்க்கும் கரடி கூடாரத்தின்
பக்கத்தில் கட்டின்றிப் படுத்திருக்கும்.
மற்றோர் இடத்துக்குக் காலையில் புறப்பட
வசதிகள் செய்திடும் குடும்பங்கள்
சுற்றிப் பரந்திட்ட ஸ்தெப்பி நடுவிலே
சுறுசுறுப்பாகவே ஓடிச் சாடும்.
மாதர் பாட்டுக்களும் மதலைக் கத்தல்களும்
வழித்துணைப் பட்டடை ஓசைகளும்
காத தூரத்துக்குக் கேட்டிடும், இரவு
கனிவுடன் அவற்றை ஏற்றிடும்.
துயிற்று நேரம்; நாடோடி முகாமிலே
கவிந்தது ஆழ்ந்த உறக்க மோனம்.
நாயின் குலைப்பும் பரியின் கனைப்புமே
கலைத்தன நள்ளிருள் நிசப்தத்தை.
அணைந்தன எங்கும் விளக்குகள், அமைதி
அரசிருந்தது. தனி நிலா

அணைத்தது அரவம் இல்லாத முகாமைத் தன்
ஒளிக் கரங்களால் அன்புடனே.
கூடாரம் ஒன்றில் கணப்புக்கு முன்னாலே
குந்தி இருந்த கிழவன் அதன்
சூடாறும் தணலின் வெப்பத்தால் உடலைச்
சூடுபடுத்த முயன்று கொண்டே,
மூடுபனிப் போர்வை போர்த்திருந்த தொலை
வெளியைக் கண் மூடாமல் பார்த்திருந்தான்.
ஆளற்ற திடலில் உலவப் போயிருந்தாள்
அவன் இளம் புதல்வி செம்பீரா.
கேளிக்கைக்கும் கட்டின்மைக்கும் பழகியே
கேட்பார் இல்லாமல் திரிந்தாள் அவள்.
வந்திடுவாள், ஆனால் நள்ளிரவு ஆயிற்று,
மதி மறையும் நேரம் நெருங்கிற்று.
சொந்த மகளை எதிர்பார்த்த கிழவனின்
சொற்ப உணவுமே சூடாறிற்று.

அவளும் இதோ வந்து விட்டாள். ஸ்தெப்பியிலே
அவள் பின்னே வந்திட்டான் ஓர் இளைஞன்.
அவனைக் கிழவன் அறியான். "அப்பா, இந்த
அன்பரை விருந்தாக ஏற்றுக் கொள்வாய்.
குன்றின் மறு புறம் வெற்று வெளியிலே
கண்டேன், கூடாரத்துக்கே அழைத்தேன்
இன்றிரவு தங்க. இவர் நம்மைப் போலவே
ஜிப்சியாய் இருக்க விரும்புகிறார்.
சட்டத்துக்குத் தப்பித் திரியும் இவருக்குத்
தக்க தோழியாக நான் இருப்பேன்.
இட்டார் இவர் பெயர் அலேக்கோ என்பது;
எங்கும் என் பின் வர இசைகின்றார்."

கி ழ வ ன்

"மகிழ்ந்தேன் நான். காலை வரையில் இரு எங்கள்
வண்ணக் கூடாரத்தில் விருந்தினனாய்.
உகந்தால் எங்களுடன் ஊரூராய்ச் சுற்ற வா,
உணவும் உறையுளும் பகிர்ந்து கொள்வோம்.
எங்களவன் ஆகி, கட்டின்றி, ஏழையாய்

எங்கும் சுற்றும் வாழ்க்கைக்குப் பழகு.
எங்கள் முகாம் நாளைக் காலை கிளம்பிடும்,
எங்கள் வண்டியிலே நீயும் வா.
பட்டடை வேலை செய், கரடியை ஆட்டிவை,
பாட்டுக்கள் பாடு, விருப்பம் போலே.''

அலெக்கோ

''இட்டம் எனக்கு.''

செம்பீரா

''இவன் என்னவன், இவனை
என்னிடமிருந்து இனி யார் பிரிப்பார்?''
ஆனால் வெகு நேரம் ஆயிற்று... இளம் பிறை
மறைந்தது, அடர்ந்தது பனி மூட்டம்.
நானும் களைத்திட்டேன், என் வசம் இல்லாமல்
தூங்கி வழிகிறேன் நாணம் இன்றி...

---

பொழுது புலர்ந்தது. கிழவன் ஒலியற்ற
கூடாரத்தைச் சுற்றிப் போனான் மெல்ல.
''எழுவாய், செம்பீரா, பரிதி எழுந்தது,
எம் விருந்தாளியே, கண் விழிப் பாய்!..
குழந்தைகள், வெயில் ஏறுகின்றது, இன்பத்தின்
கொஞ்சு மடியினை விட்டெழுவீர்!..''
எழுந்தனர், இரைந்தனர் மக்கள்; கூடாரங்கள்
பெயர்த்தனர், ஏற்றினர் வண்டிகளில்.
புறப்பட ஆயத்தம் ஆயின வண்டிகள்,
போயின யாவுமே ஒன்றாக.
வெறித்த திடல்களில் நகர்ந்தது கும்பல்.
விளையாடும் குழந்தைகள் கழுதைகளின்
இரு புறம் தொங்கிய கூடைகள் தம்மிலே
ஏறிக் களிப்புடன் ஏகினவே.
புருடர்கள், சோதரர், மனைவியர், கன்னியர்,
பொடியர், பெரியர் பின்னே நடந்தார்;
கத்துலும் கூச்சலும் ஜிப்சிப் பாடல்களும்
கரடியின் உறுமலும் சங்கிலியின்

சற்றும் பொருந்த கணகணப்பும் பல
வண்ணக் கந்தல்களின் தகதகப்பும்
மதலையர், முதியவர் அம்மணமும் நாயின்
வள்ளென்ற குலைப்பும் நீள் ஊளையும்
சுதி பைக் குழல்களின் ஓலமும் வண்டிகள்
தொடர்ந்து செய் கிறீச்சொலியும் எல்லாம்
குறையும் பண்பின்மையும் கோலக்கேடும் இசைக்
குலைவும் கொண்டிருந்தாலும் நகரத்தாரின்
இறந்த, செயலற்ற போலி இன்பங்கட்கும்
ஏங்கும் அடிமையர் பாடுகின்ற
சலிப்பூட்டும் பாட்டுப் போல் இயங்கிடும் சத்தற்ற
வாழ்க்கைக்கும் முற்றுமே வேற்றான
களிப்பும் குதூகலமும் உயிரோட்டமும்
நிறைந்து காணுறுய்ப் பெருகினவே!

---

வெறு வெளி தன்னைச் சோர்வுடன் அலேக்கோ
வெகு நேரமாக நோக்கி இருந்தான்.
உறு துயரின் உள்ளுறை காரணத்தினை
உரைத்திடத் துணிந்திலன் தனக்கே கூட.
கரு விழிக் காரிகை செம்பீரா இவன் தோழி,
கட்டற்ற புள் இவன் இப்பொழுது,
பருதி இத வெயில் பரப்பித் தென்னகத்துப்
பகலின் எழில் எல்லாம் காட்டியதே;
இருந்தும் இவன் இள நெஞ்சம் பதைப்பதேன்?
இவனை அரித்திடும் கவலை யாது?

வலசை செல் பறவை அறியாது தொல்லையோ
மட்டின்றிக் கடியதாம் உழைப்போ;
நிலையான கூட்டையும் அரும்பாடு பட்டது
கட்டாது; நெடிய நிசியினிலே,
கிளை மேல் அமர்ந்தே உறங்கிடும் இன்பமாய்;
கீழ் வானம் தன்னிலே செங்கதிர் தான்
முளைத்ததும் இறைவன் குரல் கேட்டுச் சிலிர்த்து,
முழு மகிழ் பொங்கிடப் பாடிடுமே.
இயற்கையின் எழிலாம் இளவேனில் கழிந்த பின்

கிடும் வெம்மை சேர் முதுவேனில்;
யற்பனி மூட்டமும் மழையும் குளிருமாய்
ந்திடும் இன்பற்ற கூதிர் காலம்.
அலுத்துச் சலித்து வருந்துவர் மானிடர்;
ஆனால் புள்ளோ, புலம் பெயர்ந்திடும்;
அலை கடலுக்கு அப்பால் வெப்ப நிலங்களில்
அடுத்த வசந்தம் வரை தங்கிடும்.

கவலை இல்லாத பறவைபோல் நாடு
கடந்து ஊர் ஊராகத் திரிந்தான் இவன்;
இவனுக்கு வீடில்லை, வாசலில்லை இவன்
எதிலுமே பற்றினை வைக்கவில்லை.
எதிர்ப்பட்ட பாதையில் நடந்தான்; இரவு
எங்கு வந்தாலும் அங்கே தங்கினான்;
கதிரவன் எழுந்ததும் கண் விழித்தே, நாளைக்
கடவுள் பொறுப்பிலே ஒப்படைத்தான்.
இவன் நெஞ்சில் தேங்கிய சோம்பலைக் கலக்கிட
எந்தக் கிளர்ச்சிக்கும் இயலவில்லை.
இவனைக் கவர்ந்தது ஆனால் மாயப் புகழ்
ஆசை எப்போதேனும் தொலை விண்மீன் போல்;
இவனுக்குத் திடீரெனக் காட்சி அளித்தன
இன்பக் கேளிக்கைகளும் பகட்டும்;
சனியன் இவனுக்கு மேலே இடி சில
நேரங்களில் தடதடத்தது;
வானிலும் இடிப் புயல், தெளிந்த பருவம்,
எதிலும் இவன் தூக்கம் கலைந்ததில்லை.
கண்ணற்ற வஞ்சக விதியின் ஆட்சிக்குக்
கட்டுப்படாது இன்று வாழ்ந்த இவன்
எண்ணத்தில் முன்னர் விழைவுகள், கடவுளே!
எப்படி எழுந்தன அலை அலையாய்!
எப்படிக் கொந்தளித்தன வதைபட்ட
இவன் நெஞ்சத்தில் அவை அண்மையில் தான்!
எப்போதும் அடங்கி இருந்திடுமோ அவை?
எழுந்திடும். பொறு, மீண்டும் விரைவினிலே!

---

செ ம் பீ ர ா

''என்றென்றைக்கும் விட்டு வந்ததை எண்ணி நீ ஏங்கிடவில்லையா, என்றன் நண்பா?''

அ லே க் கே ா

''நன்று, எதை விட்டு?''

செ ம் பீ ர ா

''நீயே அறிகுவாய்:
தாயக மாந்தரை, நகர்களை.''

அ லே க் கே ா

''எதற்காக ஏங்குவது? இந் நகரங்களில்
எப்போதும் அடிமை நாற்றம் குமையும்!
மதிற்சுவரின் பின் செறிந்து நெரிபடும்
மக்கள் காலைக் குளிர்காற்று அறியார்,
புல் வெளிகளிலே
கமழும் இளவேனில்
புது மணம் முகரும் பேறு இல்லார்;
நல்ல காதலுக்கு நாணுவார், சிந்தனை
நாடவொட்டாமல் விரட்டிடுவார்.
தங்கள் விடுதலை விற்றுச் சிலைகள் முன்
தங்கமும் விலங்கும் கெஞ்சிக் கேட்பார்.
அங்கே நான் விட்டு வந்தது என்ன? துரோகமும்
அல்லலும் காழ்ப்புள்ள தீர்ப்பும் வெறி
பொங்கிய கும்பலின் தொந்தரையும் புகழ்
போலப் பகட்டிய மானக்கேடும்.''

செ ம் பீ ர ா

''ஆனால் பெரும் பெரும் கூடங்கள், பல் வண்ண
அலங்கார விரிப்புக்கள், கேளிக்கைகள்,
நானாவித ஆரவார விருந்துகள்,
நங்கையர் அணிகள் அங்கே உண்டே!..''

அ லே க் கே ா

''இன்பம் இல்லை உள்ளன்பு இல்லா இடத்திலே,
எதற்காகும் நகரத்தார் மகிழ்ச்சிக் கூச்சல்?

ஙபாய்ப் பசப்பும் நகர நங்கையா... உன்
அடித் துகளுக்கும் நிகர் ஆகார்.
மணிகளும் முத்து மாலைகளும் விலையுயர்
ஆடைகளும் இன்றியே மகளிர்
மணியாய்ச் சுடர்கிறாய் அன்பே நீ, மாறாதே!
என் மனத்தின் ஆசை... உன்னுடனே
இணை பிரியாமலே காதலில் கலந்து
எப்போதும் இங்கேயே வாழ்வதுதான்!''

## கிழவன்

''நிறை செல்வருக்குப் பிறந்தவன் என்றாலும்
நேசிக்கிறாய் எமை நீ; ஆனால்
குறைவற்ற சுகத்தில் வாழ்ந்தோர்க்கு விடுதலை
கொஞ்ச காலத்தில் கசந்து விடும்.
எங்களிடையே வழங்கும் இந்தக் கதை:
எவனோ அரசன் தெற்கிருந்து
இங்கே கடத்தித் தண்டித்திருந்தான்.[4] (அவன்
பெயர் எனக்கு இப்போது மறந்திட்டது.)
அப்போதே அவன் முதியவன், ஆனாலும்
அகத்தில் இளமை உற்சாகம் கொண்டோன்;
ஒப்பற்ற பாடல்கள் புனைந்தான், அவன் குரல்
ஒலித்தது அருவி முழக்கம் போலே.
ான்யூப் ஆற்றின் கரை தன்னில் வசித்த அத்
ஙனியன் மேல் யாவரும் அன்பு கொண்டார்;
நூறு வகைக் கதைகளால் மகிழ்வித்தான்,
நன்மையே செய்திட்டான் எல்லோருக்கும்.
ழைத்து வாழத் தெரியாதிருந்தான், பாலர்
ஒப்பவே வலுவும் துணிவும் இல்லான்
ிழைக்க விலங்குகள், மீன்கள் வலையிலே
பிடித்துத் தந்தார் பிறர் அவனுக்காக.
பனிப் பாளமாய் ஆறு உறைந்து, சூறைக்காற்று
ாழ்நடம் புரிகையில் குளிரைப் போக்கப்
புனிதக் கிழவனை மென்மயிர்த் தோலினால்
போர்த்தினார் மக்கள் பரிவுடனே.
என்றுமே ஆனால் ஏழை வாழ்க்கைத் தொல்லைக்குப்
பழக இயலாது இருந்தான் அவன்;

குன்றிக் குறுகி வெளிறிப் போனான். சொன்னான்
கொடிய குற்றத்துக்குத் தண்டனையாய்
கடவுள் தன்னை இங்கே அனுப்பியதாகவே...
கடைத்தேற்றத்தை எதிர்பார்த்திருந்தான்.
நடந்து திரிந்திட்டான் டான்யூப் கரைகளில்,
நகரம் திரும்பத் துடித்தான் பேதை.
கண்ணீர் பெருக்கினான். தாயகத்துக்காக
ஏங்கிய தனது கட்டையைத் தென்
மண்ணில் புதைக்க வகை செய்யுமாறு
மன்றாடி இறுதியில் வேண்டிக் கொண்டான்!''

அலேக்கோ

''ஓங்கு வல்லரசே, ரோமாபுரியே,
உன் மைந்தரின் விதி இதுவே போலும்!..
ஈங்கு எனக்கு உரைப்பாய் காதல் கவிஞனே,
கடவுளர் இசைஞனே, புகழ் என்பது
கல்லறை ஓலமா, போற்றிப் பனுவலா,
கால வெள்ளத்திலே நீந்தி வரும்
நல்லிசையா, புகை மண்டும் குடிசையில்
நாடோடி ஜிப்சி சொல்லும் கதையா?''

---

ஆண்டுகள் இரண்டு கழிந்தன. ஜிப்சிகள்
அமைதி உள்ள கும்பலாய்த் திரிந்தார்;
மூண்டிடும் அன்புடன் முன் போலவே மக்கள்
முக மலர்ந்து அவர்களை வரவேற்றார்.
அறிவியல் கல்வித் தளைகளை உள்ளி
அலேக்கோ அவர் போல் கட்டின்றி வாழ்ந்தான்;
சிறிதும் கவலையோ வருத்தமோ இல்லாமல்
திரிந்தான் நாடோடியாய் மகிழ்வுடனே.
சற்றும் அவன் மாறவில்லை; ஜிப்சிகளும்
தம் இயல்பில் மாறவில்லை; அவன்
முற்றும் மறந்திட்டு முந்திய நாட்களை
முழுதும் ஜிப்சியாகப் பழகி விட்டான்.
இரவைக் கழிக்கும் கூடாரங்கள், சோம்பலின்
இன்ப மயக்கம், வறிது எனினும்

உரையில் இனிய ஜிப்சி மொழி, யாவுமே
உவப்பாய் இருந்தன அவனுக்கே.
சொந்த முழையிலிந்தோடி நாடோடித்
தோழர் கூடாரத்தில் தங்கி வாழ்ந்து
வந்த சடைக் கரடி வழி தன்னிலே
மல்தாவியர் குடியிருப்புக்களில்
எச்சரிக்கை உள்ள கூட்டங்களின் முன்னே
இரு கால்களில் பாடுபட்டு ஆடி,
நச்சரிக்கும் சங்கிலியைக் கடித்தது,
உறுமிற்று கேட்போர் நடுங்கிடவே.
தடியை ஊன்றிச் சாய்ந்து கொண்டு முதியவன்
தம்பட்டம் அடித்தான் சோம்பலுடன்,
கொடிய விலங்கை ஆட்டினான் அலேக்கோ,
கூடியவர் தந்த காசுகளைப்
பெற்றுக் கொண்டாள் சுற்றி வந்து செம்பீரா.
பின்னர் இரவிலே சாமைப் பொங்கல்
வைத்துண்டார்; கிழவன் உறங்கினான்... இருளும்
அமைதியும் மெல்லெனச் சூழ்ந்தனவே.

---

உதிரம் சூடேறிட வசந்த வெயிலில்
உட்கார்ந்திருந்தான் கிழவன்; தொட்டில்
அதனை ஆட்டிக் கேலிப் பாட்டிசைத்தாள் மகள்;
அலேக்கோவோ, கேட்டு வெளிறிப் போனான்.

### செம்பீரா

"கிழட்டுக் கணவா, கெட்டவனே,
பழிகாரா, சுடு, குத்து என்னை:
நெஞ்சில் உறுதி பெற்றவள் நான்,
அஞ்சேன் தீக்கோ கத்திக்கோ.

உன்னை எனக்குக் கரிக்கிறது,
என் மனம் உன்னை வெறுக்கிறது;
இன்னொருவனைக் காதலிக்கின்றேன்,
இன்னுயிராக மதிக்கின்றேன்."

அ லே க் கே கா

''மூடு வாயை. இந்தப் பாட்டுச் சலித்தது,
முட்டாள் பாட்டுக்களை நான் விரும்பேன்.''

செ ம் பீ ரா

''பாட வேண்டாமோ? இதைச் சொல்ல
நீ யாராம்?
பாடுகிறேன் எனக்காகவே நான்.

சுடு, குத்து என்னை;
பட்டுக் கொள்வேன், வாய் திறவேன்;
கிழட்டுக் கணவா, கெட்டவனே, நீ
மட்டும் அவனை அறியாயே!

இளவேனிலின் புத்தெழில் பெற்றான்,
அளவில்லா மோகம் உள்ளான்;
துணிவு, இளமை வடிவானான், என்
தனிமை நிசிக்கு விடிவானான்!

கொஞ்சிக் குலவி மகிழ்ந்தேனே,
பஞ்சணை மேலே இரவினிலே!
உன் நரை முடியை எண்ணி எண்ணி,
என்னமாய்ச் சிரித்தோம் இருவருமே!''

அ லே க் கே கா

''பாடாதே செம்பீரா! போதும் இனி...''

செ ம் பீ ரா

''என்றன் பாட்டின் உட்பொருள் புரிந்ததோ?''

அ லே க் கே கா

''பாடக் கூடாது நீ, செம்பீரா!..''

செ ம் பீ ரா

''ஓகோ, நான்
பாடுவதும் உன்னைப் பற்றியே தான்.''

**(''கிழட்டுக் கணவா...'' என்று பாடிக் கொண்டு போகிறாள்.)**

கி ழ வ ன்

''நினைவு வருகிறது, இந்தப் பாட்டு இங்கே
நெடுங்காலமாக வழங்குவதே.
அனைவரும் கிண்டலும் கேலியுமாய் இதை
அன்புச் சிரிப்புடன் பாடிடுவார்.
பாடினுள் இதை என் மனைவி மரியூலா
பணிக்காலக் ககூல் ஸ்தெப்பியினிலே;
ஆடிய தொட்டிலில் கணப்பருகில் மகள்
அழகாய்ப் படுத்து இதைக் கேட்டனளே.
நினைவினிலே சென்ற கால நிகழ்ச்சிகள்
நிமிடந்தோறும் மங்கி வரும், ஆனால்
இனிய இப்பாட்டு என் நெஞ்சின் ஆழத்திலே
இன்னும் ஒலிக்குது புதிது போல.''

---

நிசப்தம் எங்கணும்; நள்ளிரவு. இள
நீலத் தென் வானை அணி செய் நிலா.
அசைத்தே எழுப்பினள் செம்பீரா கிழவனை.
''அப்பா, அஞ்சுகிறேன் அலேக்கோவுக்காய்!
விசித்தே அழுகிறான் ஆழ்ந்த தூக்கத்தில்,
வீறிடுகிறான், நான் என்ன செய்வேன்?''

கி ழ வ ன்

''விடு, உறங்கட்டும், பேசாதிரு. இவன்
விம்முவதன் காரணத்தினைக் கேள்:
நடு நிசியில் வீட்டின் ஆவி தூங்குபவன்
மூச்சை நெரிக்குமாம், நவில்வார் ருஷ்யர்.
விடியு முன் போய்விடுமாம் அது, உட்காரு.
மேலே எல்லாம் சீர் ஆகி விடும்.''

செ ம் பீ ரா

''அப்பா! செம்பீரா என்கிறான் வாய்க்குள்ளே!''

கி ழ வ ன்

''அழைக்கிறான் உன்னையே கனவில் கூட:
இப்பாரில் இவனுக்கு நீயே இனியவள்.''

செ ம் பீ ரா

''எனக்கோ, இவன் காதல் புளித்திட்டது,
அலுத்துப் போயிற்று, வேண்டும் விடுதலே
அகம்... ஆனுல்! கேட்டாயா? வேறு பெயர்
எடுத்து முனகுகிருன்...''

கி ழ வ ன்

''எவர் பெயர்?''

செ ம் பீ ரா

''கேள்:
ஈன சுரத்தில் கரகரத்து,
பற்களே நெறுநெறுக்கிருன்!.. பயங்கரம்!..
பார், இதோ எழுப்புகிறேன்...''

கி ழ வ ன்

''இது வீண்.
எற்றித் தள்ளாதே வீட்டின் ஆவியை, தானே
ஏகிடும்...''

செ ம் பீ ரா

''இவன் திரும்பி விட்டான்;
சற்றே நிமிர்ந்தென்னே அழைக்கிருன்... தூங்கு நீ
தந்தையே, இவனிடம் போகிறேன் நான்.''

அ லே க் கோ

''எங்கே போயிருந்தாய்?''

செ ம் பீ ரா

''அப்பாவின் பக்கத்தில்.
ஏதோ ஆவி உன்னே ஆட்டியது;
பொங்கி அழுதாய், புலம்பினுய், தூக்கத்தில்
புரண்டாய், துடித்தாய், நான் அரண்டு போனேன்.
நெறுநெறுத்தாய் பற்களே, என்னே அழைத்தாய்.''

அ லெ க் கோ

''நித்திரையில் நீயே என் முன் வந்தாய்.
கண்டேன் நமக்குள்ளே ஏதோ நேர்ந்தது போல்...
கண்டிட்டேன் கெட்ட கனவுகள் நான்!''

செ ம் பீ ரா

''கண்ட மாயக் கனவுகளை நம்பாதே.''

அ லெ க் கோ

''கட்டோடு நம்பிக்கை இழந்து விட்டேன்
கண்ட கனவுகள், இனிய வாக்குறுதிகள்,
காதலி, உன் நெஞ்சு, அனைத்தின் மீதும்.''

---

கி ழ வ ன்

''எதன் நினைவில் பெருமூச்செறிகிறாய்
இளம் வெறியனே? இங்கே மாந்தர்
சுதந்திரர், வானம் தெளிந்தது; பெண்களோ,
சுந்தரிகள் என உலகறியும்.
வெதும்பாதே, ஏக்கம் மாய்த்து விடும் உன்னை.''

அ லெ க் கோ

''அப்பா, இவள் என்னை விரும்பவில்லை!''

கி ழ வ ன்

''நண்பா, நெஞ்சம் தளராதே, உன் சோர்வு
நல்லறிவுக்கு உகந்ததல்ல: என்
பெண் வெறும் குழந்தை. உன்னுடையக் காதலில்
உள்ளது பெருந் துயரும் வெறியும்;
மங்கையர்க்கோ, காதல் இன்ப விளையாட்டு.
வானத்தில் கட்டின்றி உலா வரும்
திங்களைப் பார்: எங்கும் நிலவைப் பொழியுது,
மின்ன முகிலை நெருங்கியதும்
ஒளிக் கரங்களால் தழுவிக் கொள்ளுது;
ஒரு நொடியில் மற்றொன்றை அணுகி,

களிக்க வைக்குது; பின்னர் அப்பால் சென்று
விடுது கணமும் தரியாமல்.
விண்ணிலே இந்த இடத்திலே நில் என்று
வெண்மதிக்குச் சொல்ல வல்லவர்யார்?
உண்மையாய் ஒருவனைக் காதலி என்றிளம்
பெண் உளத்துக்காணை யார் இடுவார்?
கலங்காதே.''

அலேக்கோ

''எப்படிக் காதலித்தாள் அவள்!
கனிவாக என் மேலே சாய்ந்து, மோனம்
இலங்கும் வெளியிலே எத்தனை நீண்ட
இரவுகளை இன்பமாய்க் கழித்தாள்!
மதலை போல் உவகை பொங்கிடவே என்றன்
மனக் கவலைக்கு மருந்தாகக்
குதலை மொழி பேசி முத்த வெறியூட்டிக்
கொஞ்சிக் குலாவி மகிழ்ச்சி தந்தாள்!
என்ன வந்திட்டது இப்போது? செம்பீரா
எனக்குத் துரோகம் இழைத்தனளோ?
என் செம்பீராவின் காதல் எங்கே போயிற்று?
என் மேல் அவளுக்கு அன்பில்லையோ?..''

கிழவன்

''உன்றனுக்கே என்றன் சொந்தக் கதையினை
உரைத்திடுவேன், காது கொடுத்துக் கேளாய்:
அந்தக் காலத்திலே மாஸ்கோக்காரர்களால்
ஆபத்து டான்யூபுக்கு இல்லை, ஆனால்
(நெஞ்சில் புதைந்த பழைய துயரத்தை
நினைவுகூர்கிறேன், பார்த்தாயா!)
அஞ்சினோம் சுல்தானுக்கு; உயர் அக்கெர்மான்
கோபுரங்களிலிருந்து ஆண்டான்
பாட்சா புஜாக்கினை; இளைஞன் என் நெஞ்சில்
பாற்கடலாய்ப் பொங்கிற்று மகிழ்ச்சி;
காட்சிக்கு இனிய சுருள் கருங் குழலில்
வெண் முடி பெயருக்குக் கூட இல்லை.

ழகிய நங்கையரில் ஒருத்தி வானில்
கதவன் போல் ஒளி வீசக் கண்டேன்.
ழகி அவளோடு, பாங்காய் உரையாடி,
ந்தினி ஆக்கிக் கொண்டேன் முடிவில்....

வீழ் விண்கல் போலவே மின்னி மறைந்து,
நந்தது விரைவில் என் இளமை!
ழ் காதல் பருவமே, நீயோ கழிந்திட்டாய்
தனிலும் விரைவாய்: ஆண்டு ஒன்றே
ழையைக் காதலித்தாள் மரியூலா.
கி விட்டாள் பின்னர் எங்கேயோ.

ககூல் ஆற்றின் கரை தன்னில் ஒரு நாள்
ண்டோம் வேற்று ஜிப்சிகளின் முகாம்;
க அருகிலே எங்களுக்கு மலை
ந்து கூடாரங்கள் அடித்துக் கொண்டு,
ரவுகள் இரண்டு தங்கி இருந்த பின்
கினர் மூன்றும் இரவில் அவர்.
று குழந்தையை விட்டு விட்டவர் பின்
சென்று விட்டாள் என் மரியூலா.
மைதியாய் உறங்கி, விடிந்ததும் எழுந்த நான்
ருகே அவளைக் காணாது நொந்தேன்;
மைந்தேன், தேடினேன், கூப்பிட்டேன், பதில் இல்லை.
ழந்தை செம்பீரா ஏங்கி அழுதாள்,
னும் அரற்றினேன், அன்று முதலாக
ங்கையர் யாவரையும் வெறுத்தேன்;
ண்விழியாரிலே யாரையும் துணைவியாய்
ரிக்கவில்லை நான் இன்றளவும்;
னே தனியாக வாழ்ந்து வருகிறேன்,
மையிலே இன்பம் காணுகிறேன்.''

அலேக்கோ

''நன்றி கெட்டவளை உடனே விரட்டிப் போய்
ப் பயல்களையும் கேடியையும் குத்திக்
றித்து அவர் நெஞ்சுகளைக் கொன்று விடாமல்
ன் இருந்தாய், கட்டாரியால்?''

கி ழ வ ன்

''எதற்காக? கட்டற்றது புள்ளைக் காட்டிலும்
இளமை; அன்பைக் கட்ட யாரே வல்லார்?
எதிலும் இன்பம் முறையே வரும் யாவர்க்கும்;
இருந்தது மீண்டும் திரும்பாது.''

அ லே க் கோ

''என் வழி வேறு. நான் எதிர்த்திடாமல்
என் உரிமைகளை விட்டுக் கொடேன்!
இன்புறுவேன் இன்றேல் பழி வாங்கிட்டு.
ஏகே! எதிரி பெருங் கடலின்
அடியற்ற ஆழ நீருக்கு மேலே
எங்கேனும் அயர்ந்து தூங்கக் கண்டால்,
கொடியவனைக் காலால் எற்றித் தள்ளிடுவேன்
கொஞ்சமும் இரங்காமல் அலைகளிலே.
பாவி திடுக்கிட்டுப் பதைத்திடக் கண்டு
பாழ் நகை செய்து கூத்தாடிடுவேன்,
ஆவி துடிக்க அவன் வீழ்ந்த ஓசை என்
அகத்தைக் களிப்பிக்கும் நெடுங் காலம்.''

---

ஜி ப் சி இ ளை ஞ ன்

''இன்னும் ஒன்று... கொடு இன்னும் ஒரு முத்தம்...''

செ ம் பீ ரா

''என் கணவன் வன்மி, பொறுக்க மாட்டான்.''

ஜி ப் சி

''இன்னும் ஒரு நீண்ட முத்தம், பிரியு முன்!''

செ ம் பீ ரா

''இவன் வரு முன்னே போய் விடு நீ.''

ஜி ப் சி

''எப்போது மறு சந்திப்பு? சொல் எனக்கு.''

செம்பீரா

''இன்றே; மதி மறைந்ததும் மேட்டிற்கு
அப்பாலே கல்லறை அருகில் சந்திப்போம்,
அதுவரை பொறு...''

ஜிப்சி

''இவள் வர மாட்டாள்!
ஒப்புக்குச் சொல்லுகிறாள்!''

செம்பீரா

''பார் இதோ அவன்!
ஓடு!.. வருவேன் நான், என் அன்பா.''

---

தூங்கிய அலேக்கோ கெட்ட கனவினில்
தெளிவற்ற துன்பக் காட்சிகள் கண்டு,
வீங்கிய இருளில் வீரிட்டு விழித்து,
வீசினான் கையைப் பொறுமை இன்றி.
தயங்கிய கைக்குத் தட்டுப்பட்டன
தண்ணெனக் குளிர்ந்த போர்வைகள் தாம்.
மயங்கிய தோழியைக் காணமல் திகைத்து,
முனிவுடன் எழுந்து உற்றுக் கேட்டான்...
நிலவிற்று நிசப்தம். பதைப்பு மிகுந்தது
நெஞ்சிலே; வெம்மையும் தண்மையுமாய்ப்
பரவிற்று மேனியில்... எழுந்து கூடாரத்தின்
வெளியே போய்ப் பார்த்திட்டான்; வண்டிகளைச்
சுற்றிக் கலவரத்தோடு அலைந்தான்; எங்கும்
சூழ்ந்தது அமைதி, திடல்களிலே
மற்றும் இல்லை ஓசை; இருட்டு; ஆழ்ந்தது
தண்மதி மூடுபனியினிலே;
தாரகை மங்கலாய் மினுமினுத்தது;
பனித்துளி மேல் சற்றே பதிந்த தடம்
தூரத்து மேடுகளுக்கு அப்பால் போயிற்று;
தொடர்ந்து சென்றான் அவன் பொறுக்காமல்.

தொலைவில் வெண்மையாய்ப் பாதை முடிவினில்
தோற்றம் அளித்தது கல்லறை...

வலுவிழந்து கால்கள் தள்ளாடிடக்
கெடுகுறியால் மதி மருண்டிடவே,
அசைந்தான் அதை நோக்கி இதழ்கள் துடித்திட,
ஆகம் நடுங்கிட.... திடீரென்று...
நிசந்தானு, அல்லது வெறுங் கனவா? முன்னே
நெருக்கமாய் நின்றன இரு நிழல்கள்;
கிசுகிசுப்பும் காதுக்கு எட்டியது மானக்
கேடுற்ற கல்லறை மேலிருந்தே.

முதல் குரல்

''ஆயிற்று நேரம்...''

இரண்டாம் குரல்

''பொறு...''

முதல் குரல்

''வேண்டாம் அன்பே.''

இரண்டாம் குரல்

''பொறு, அதிகாலை வரை இருப்போம்.''

முதல் குரல்

''வெகு நேரம் ஆயிற்று.''

இரண்டாம் குரல்

''காதலில் தயக்கம்
என்ன வேண்டும்.''

முதல் குரல்

''என்னை நீ கொன்றிடுவாய்.''

இரண்டாம் குரல்

''தகுமோ இது?''

முதல் குரல்

''நான் இல்லாத போது அலேக்கோ
தான் விழித்தாலோ?..''

அ லே க் கோ

''விழித்திட்டேன் நான்.
என்ன அவசரம்? இங்கேயே இருங்கள்:
ஏற்றது உங்கட்குப் புதை குழியே.''

செ ம் பீ ரா

''என் அன்பே, ஓடிடு, ஓடிடு...''

அ லே க் கோ

''பொறு கொஞ்சம்!
எங்கே பரிகிறுய் என் அழகா?
கிட இங்கே!''

**(கத்தியால் அவனைக் குத்துகிறுன்.)**

செ ம் பீ ரா

''அலேக்கோ!''

ஜி ப் சி

''ஆ! கெட்டேன் நான்...''

செ ம் பீ ரா

''அலேக்கோ, இவனைக் கொல்கிறுயே!
அட, உன் மேலெல்லாம் குருதித் துளிகள்!
ஐயோ நீ என்ன செய்தாய் ?''

அ லே க் கோ

''ஒன்றுமில்லை.
இனிது சுவைத்திடு இனி இவன் காதலை.''

செ ம் பீ ரா

''இல்லை, கேடா, உனக்கு அஞ்சிடேன் நான்!
உனது மிரட்டலை இகழ்ந்து அருவருக்கிறேன்
பழிக்கிறேன் நீ செய்த படுகொலையை...''

அலேக்கோ

''இனி நீயும் இறந்திடு!''

(அவளைத் தாக்குகிறான்.)

செம்பீரா

''இறக்கிறேன் காதலில்...''

---

காலைக் கதிரால் ஒளி பெற்ற கீழ்த் திசை
கனன்றது; அலேக்கோ மேட்டின் பின்னே
மூலைச் சவக்குழிக் கல் மேல் கத்தியுடன்
முடங்கி இருந்தான் குருதி சோர.
அச்சம் தந்தது அவன் முகம்; இரு பிணங்கள்
அவன் முன் கிடந்தன; ஜிப்சிகள்
எச்சரிக்கை உள்ள கூட்டமாய்ச் சூழ்ந்திட்டார்
நடுங்கும் இதயங்களோடு அவனை.
தோண்டினார் ஒரு புறம் புதைகுழி; மாதர்கள்
துயர் பொங்கும் வரிசையாய் நடந்து,
மாண்டவர் கண்களை முத்தமிட்டார்; கிழத்
தந்தை தனியாய் அமர்ந்து, மகள்
பிணத்தைச் செயலற்ற ஏக்கத்துடன் பார்த்தான்;
பின்னர் உடல்களைப் பிறர் எடுத்து,
இணையாய்க் குளிர் தரை மடியில் கிடத்தினர்;
யாவற்றையும் கண்டிட்டான் அலேக்கோ...
இறுதிப் பிடி மண்ணால் குழி நிரம்பி, அன்பர்
ஈருடல் புதைந்ததும் அவன் மெதுவாய்ச்
சிறிது சாய்ந்தே கல்லிலிருந்து சரிந்து,
செத்தவன் போலப் புல் மேல் விழுந்தான்.

அப்போது அவனிடம் வந்து முதியவன்
அமைதியாய்ச் சொன்னான்: ''செருக்கா, நீ இப்போது
எங்களை விட்டு அகல்வாய்! நாங்கள்
காட்டார், சட்டங்கள் இல்லாதவர்.
கொல்லுதல், வதைத்தல் செய்ய மாட்டோம், வேண்டாம்
குருதியும் கண்ணீரும் எங்களுக்கு.
கொல்லும் குற்றம் செய்த உன்னோடு வாழ்ந்திடக்

கொஞ்சமும் விரும்போம் ஆனால் நாங்கள்.
விடுதலை என்று கதைக்கிறாய், ஆனால் உன்
ஒருவனுக்கே அதை வேண்டுகிறாய்;
கொடுமையும் துணிவும் கொண்டவன் நீ, நாங்கள்
கூச்சமும் நன்மையும் உள்ளவர்கள்;
உன் குரல் எங்களை அச்சுறுத்தும், உனக்கு
ஒத்து வராதெங்கள் வாழ்க்கை வழி;
மன்னித்துக் கொள், நன்றாய் வாழ்ந்திடு நீ, ஆனால்
வாராதே எங்களுடன் இனிமேல்.''

முதியவன் இப்படிச் சொன்னதுமே, முகாம்
முழங்கிடும் நாடோடிக் கூட்டமாக,
சதிச் செயல் நடந்த இடத்தை விட்டு நீங்கித்
தன் வழிச் சென்று மறைந்ததுவே.
நின்றது ஒரு தனி வண்டி மட்டும், பாவம்,
நிறம் மங்கி நைந்த கம்பளம் போர்த்து.
முன்பனிக் காலத்துக் காலையிலே, பனி
மூட்டம் அடர்ந்த வெளிகளிலே,
பின்தங்கி வலசை செல்லும் நாரைகளின்
பெருங் கூட்டம் கூச்சலுடனே தெற்கு
நோக்கிப் பறக்கையில் குண்டடி பட்டதால்
நொந்த இறக்கையைத் தொங்க விட்டே,
ஏக்கத்துடன் ஒரு நாரை தரையினில்
இருந்திடல் போன்றது அந்தக் காட்சி.
இரவு வந்தது; இருண்ட வண்டியின்
அருகில் யாரும் நெருப்பு எரிக்கவில்லை,
ஒருவருமே அதன் கூரைக்கு அடியிலே
படுத்துக் காலை வரை உறங்கவில்லை.

## முடிவுரை

மகிழ்வும் துயரும் மாறி மாறி வந்த
நாட்களின் காட்சிகள் பாவின் மாயம்
மிகு வலிமையால் உயிர்த் தெழும் மாந்தர்
மீதன்பு ததும்பும் என் நினைவில்.

நீண்ட காலம் எங்கு கொடிய போர் ஓசை

நீடித்ததோ ஓய்வில்லாது; ருஷ்யர்
ஆண்ட பரப்பெல்லைகள் இஸ்தம்பூலுக்கு
அறிவுறுத்தினரோ சமரில் வென்று;
பண்டை ருஷ்ய இருதலைக் கழுகு* இன்றும்
பழம் புகழ் எங்கு முழக்கிடுமோ;
கண்டேன் அங்கே தொன்மைப் பாசறை இடங்களில்
களித்திடும் ஜிப்சிகளின் வண்டிகள்.
கூட்டமாய்ச் சோம்பலுடன் கட்டில்லாத
குழந்தைகள் போல் இன்பம் குமிழியிடப்
பாட்டுக்கள் பாடி நகர்ந்த ஜிப்சிகளின்
பண்களில் மயங்கித் திரிந்தேன் பன்னாள்.
எளிய உணவைப் பகிர்ந்துண்டேன் அவரோடு,
இனிதே உறங்கினேன் நெருப்பருகே—
ஒளிர் மெல்லியல் மரியூலாவின் பெயரை
ஒலித்திட்டேன் மீண்டும் மீண்டும் அங்கே.

•

இன்பத்தை ஆனால் அறிய மாட்டீர் நீரும்
இயற்கையின் ஏழைப் புதல்வர்களே!..
தும்புகளாய்ப் பிய்ந்த உம் கூடாரங்களில்
துன்பக் கனவுகள் குமைந்திடுமே.
வெறு வெளிகளிலே உங்கள் முகாம்களும்
விபத்துக்களுக்குத் தப்பவில்லை,
விபத்துக்களுக்குத் தப்பவில்லை,
வெறிகள் அழிவு விளைத்திடும் எங்குமே,
விதியைத் தடுக்கவோ, வகை இல்லை.

*1824*

* இருதலைக் கழுகு புரட்சிக்கு முந்திய ஜார் கால ருஷ்யாவின் அரசுச் சின்னமாக இருந்தது.—ப-ர்.

# வெண்கலக் குதிரை வீரன்[5]

## பீட்டர்ஸ்பர்க் நகரக் கதை

### மு ன் னு ரை

*இந்தக் கதையில் வருணிக்கப்பட்டுள்ள நிகழ்ச்சி உண் மையை அடிப்படையாகக் கொண்டது. வெள்ளம் பற்றிய ங்கள் அந்தக் காலத்துப் பத்திரிகைகளிலிருந்து எடுத் ப் பட்டுள்ளன. ஆர்வம் உள்ளவர்கள்* **வி.நி. பேர்ஹ்** *யுள்ள செய்தியுடன் இவற்றை ஒப்பிட்டுக் கொள்ளலாம்.*

### பீடிகை

*கள் விடித்த நேவா ஆற்றின் கரையில்*
*ந்து பேரெண்ணங்களில் நின்றிட்டான்* **அவன்**
*லவில் பார்வை செலுத்தி. அகன்ற ஆறு*
*ந்து நுரைத்து முன்னே பாய்ந்து விரைந்தது;*
*யதோர் தனி ஓடம் அதில் மிதந்தது.*
*நிறைந்து பாசி படர்ந்த கரைகளில்*
*ய பின்லாந்தியர்கள் வாழ்ந்த குடில்கள்*
*கும் இங்கும் கருமையாய் வண்ணம் காட்டின.*
*னியில் ஆழ்ந்த பகலவன் கதிர்*
*முற்றும் வகை இன்றி அடர்ந்திருந்த*
*சுற்றும் இரைந்தது.*

*ணிஞன் அவன்:*
*ம் பிடித்த அண்டைச் சுவீடன் நாட்டார்*
*ங்க அமைப்போம் இங்கோர் நகரம், இயற்கை*
*ங்கு விதித்த பணி தன்னை முடிப்போம்;*
*ங்கு கடலருகில் காலூன்றி நின்றே,*
*ணர் ஐரோப்பாவை நோக்கப் பலகணி வைப்போம்.*
*ல நாடுகள் அனைத்தின் கப்பல்களும்*

நம் விருந்தாளிகளாய் இங்கு வந்திடும்;
நீலக் கடல் வெளியில் நாமும் தடையின்றி
நெறியில் செலுத்திடுவோம் நம் கலங்களை.

கழிந்ததோர் நூற்றுண்டு, எழில் இள நகர்
கண்டு வடவர் பெருமையில் திளைத்திட,
எழுந்தது இருண்ட காடும் புதைசேறுமாய்
இருந்த இடத்தில் பீடும் மாட்சியும் உற.
ஊழ் இகழ்ந்து ஒதுக்கிய ஏழைப் புதல்வன்,
ஒரு தனிப் பின்லாந்திய மீனவன்
தாழ் கரைகளின் அருகினில் தெளியொணுத்
தண்ணீரில் நைந்த பழைய வலையை
முன்னர் வீசி வந்திட்ட இடங்கள் தம்மிலே,
முழு மகிழ் பொங்கிய கரைகளுக்கு மேல்,
பொன் ஒளிர் மாடங்களும் மாளிகைகளும்
பொலிவுறும் அணிகளாய் நெரிந்திட்டனவே;
செல்வம் கொழித்த துறை முகங்கள் தமக்குத்
திரள்களாய் எல்லாத் திசைகளிலிருந்தும்
பல்வகைக் கப்பல்கள் வந்து போயின;
பாங்கான கற்கரைகள் அணிந்தது நேவா;
கரைகளை இணைத்தன வலிய பாலங்கள்;
கரும் பச்சை தளதளத்திட்ட பொழில்கள்
விரைந்த ஆற்றின் தீவுகளினில் அழகாய்
மளிர்ந்தன கண்களுக்கு விருந்தளிக்கவே.
இளைய புது அரசி முன்பு பட்டத்தை
இழந்த முது அரசி தேசு குன்றல் போல்களை இழந்தது
பழம் பெரும்பதி மாஸ்கோ
கட்டிளம் புதுத் தலைநகருக்கு முன்னே.

இனியை நீ எனக்கு, பீட்டரின் படைப்பே,
இனியதுன் பகட்டில்லா எழில் மிகு தோற்றம்,
நனி பெரு விறலுடை நேவாப் பெருக்கு,
அதன் நலம் மிகுத்திடும் சீர்க் கற்கரைகள்,
உன் சுற்று வேலிகளின் இரும்பணிக் கோலம்,
எண்ணத்தில் ஆழ்ந்த உன்றன் இரவுகளின்
வெண் நிலவில்லா ஒளி, வெளிறும் கருக்கல்,

கின்றி அறையினில் நூல் படித்திடவும்
திடவும் எனக்கு இயன்றிடும் வாய்ப்பு,
து உறங்கிடும் வெற்று வீதிகளிலே
கு மலைகள் நிகர் மாளிகைகளின்
ங் காட்சி, கடற்படையின் பெரிய கட்டிடம்
ணிந்த கோபுரக் கூம்பின் துலங்கும் ஒளிர்வு,
ர மணி இடைவெளிக்குள் இருளினை
க விடாத செக்கர் வானம் அதனில்
தி, காலைப் பொழுதுகளின் சாய்வும் புலர்வும்.
யவை இவற்றோடுன் கடுங் குளிர் காலம்,
க்கம் இல்லாத காற்று, நடுக்கிடும் கூதல்,
ச் சறுக்கு ஊர்திகளில் நேவாக் கரையிலே
ய்ச்சல்கள், மகளிரின் செம்மலர்கள் நேர்
வதனங்கள், நடனங்களின் மினுக்கு,
ரச்சல், உரையாடலின் கலகலப்பு,
னிடையார் இன்றி ஆண்கள் ஆடும் விருந்தில்
வித நறுமண மதுவின் பெருக்கு,
த்தும் எனக்கு இனியன. செவ்வாய்த் திடல்களில்
ணி நடை விழாக்களில் காலாட்படைகள்,
பரிப் படைகளின் போர் உற்சாகமும்
களைக் கவர்ந்திடும் சீர் அணிவகுப்பும்
பு தும்பாய்க் கிழிந்திட்ட வெற்றிக் கொடிகளும்
பட்ட தலைக்காப்புக்களின் ஒளிர்வும்
புக்குரியவை எனக்கு. அடல் நகரே,
ம் மகனை ருஷ்ய அரசி ஈன்றதும்,
றிப் பகைவர் மீது வெற்றி சூடியே
னை ருஷ்யா மீண்டும் ஒரு செருவில் ஆர்த்ததும்,
றன் கோட்டையினில் அதிர் வேடி முழக்கமும்
கயும் எனக்கு மிக உவகை ஊட்டிடும்.
னும், நேவா பனிப் பாளத் தளையைத் தகர்த்து,
வேனிலை உணர்ந்த களி வெறியிலே,
னே கடலுக்குப் பனிப் பாறைகளையே
த வாரிப் போகும் ஓதை எனை மகிழ்விக்கும்.

திகழ்ந்திடு, பீட்டரின் நகரமே,
றிடு ருஷ்யாவே போல் திண்மையுடனே.

ஆர் இயற்கையும் உன்னிடம் தோல்வியுற்றதால்
அணுகிடும் நட்பாடிட மிகப் பணிவுடன்.
முன்னுளின் பகைமையையும் மோதல்களேயும்
முற்றிலும் மறந்து தணிந்தே உய்ந்திடுவீர்
பின்லாந்திய அலேகாள், நீவிர் வீணிலே
பீட்டரின் நெடுந்துயில் கலேத்திடாமலே!

இன்றளவுமே அந்தக் கொடிய காலம்
என் நினேவில் துலக்கமாய்ப் பதிந்துளது...
நன்று, நேயர்களே, நான் அதனேக் குறித்தே
நவிலல் உற்றேன் உங்களுக்கு இந்தப் போதிலே.
என்றன் துயர் நிறை கதைதினேக் கேளீர்.

### முதல் பாகம்

இலேயுதிர் காலத்தின் நடுக்கும் குளிரை
இருண்ட பெத்ரோகிராதில் நவம்பர் பரப்பிற்று.
அலேகளே ஓசையுடன் அடித்திட்ட நேவா
அழகிய கட்டுக் கரைகளின் நடுவிலே,
கடும் காய்ச்சல்காரன் கட்டிலில் புரள்தல் போல்
கலங்கிக் குழம்பிப் பொங்கிக் கொந்தளித்தது.
அடர்ந்தது இருட்டு, வெகு நேரம் ஆயிற்று;
அடைமழை சீறிச் சன்னல் மேல் அடித்தது,
ஊளேயிட்டு ஏக்கமாய் வீசிற்று காற்று.
ஒரு விருந்திலிருந்து திரும்பினுன் இளம்
காளே யெவ்கேனி அந்நேரம்... நமது
கதையின் நாயகனுக்கு இந்நாமம் சூட்டுவோம்.
இனியது கேட்பதற்கு இப்பெயர்; அன்றியும்,
இதனேடு என் பேனு நீண்ட நட்பும் உள்ளது.
முனம் இவன் குலப் பெயர் பெரும் புகழுடன்
முழங்கிற்று போலும் வரலாற்றில், கரம்சின்
தம் கதைகளில் அதைக் குறித்திட்டார் போலும்;
தரணி ஆனுல் இன்றதை மறந்துவிட்டது.
நம் கதைக்கும் வேண்டாம் அது. கலோம்னுவில்
வாழ்ந்து எங்கோ அலுவல் பார்த்தான் நம் நாயகன்.
பெருங்குடியினரிடம் கூசி விலகினுன்;

பெருமை சேர் தன் பழமை மறந்ததனுலோ,
நெருங்கு சுற்றத்தினர் மறைந்ததனுலோ,
நெஞ்சம் குலைந்திடாமல் இருந்து வந்திட்டான்.

வீட்டுக்குள்ளே வந்த யெவ்கேனி நனைந்த
மேல்கோட்டை உதறி, உடைகள் களைந்து,
நீட்டிப் படுத்தான், ஆனுல் வரவில்லை தூக்கம்
நெடு நேரம்; எண்ணங்கள் நெஞ்சில் குமைந்தன:
வறியவன் அவன், கட்டில்லாமல் மானமாய்
வாழ்வதற்கு உழைத்திடவே வேண்டும்; இறைவன்
அறிவும் பணமும் இன்னும் கொஞ்சம் அவனுக்கு
அளித்திருந்தால் நல்லது. ஆயினும், சற்றும்
அறிவற்ற சோம்பேறிகள் வாழ்கிருர்களே
அகமகிழ்வுடன் ஏதும் கவலை இல்லாமல்!
முறையாக அவனே, இரண்டு ஆண்டுகள் கூட
முடித்திடவில்லை அலுவலில் இதுவரை.
இப்படி நினைத்த அவன் இன்னும் எண்ணினுன்:
இந்த மழை நின்றிடும் வழியினைக் காணேம்;
எப்படியும் ஆற்றில் வெள்ளம் ஏறத்தான் செய்யும்,
இதற்குள்ளே பாலங்களும் உயர்ந்திருக்கும்.
அக்கரையில் வசித்த அவன் அன்புப் பராஷா
ஆற்றைத் தாண்ட முடியாமல் அல்லல் படுவாள்.
இக்கரையில் அவள் இன்றி இவனும் தவிப்பான்
இரண்டொரு நாள், அன்றேல் மூன்று நாட்கள் கூட.
என்று எண்ணி, ஆழ்ந்த பெருமூச்சு விட்டு,
யெவ்கேனி கவிஞன் போலக் கற்பனை செய்தான்:

"மன்றல் முடித்திடுவோமா? ஏன்தான் கூடாது?
மணவினை கடினந்தான், ஆயினுமே நான்
இளமையும் வலிமையும் உள்ளவன், இன்னும்
இரவும் பகலும் உழைத்திட வல்லவன்;
எளிய குடிசில் ஒன்று கட்டி, அதிலே
இனியள் பராஷாவுடன் சேர்ந்து வாழுவேன்.
ஓர் இரண்டு ஆண்டுகளுக்குள்ளே எனக்கு
உயர்ந்த பதவி கிட்டும்; வீட்டு வேலைகள்
பார்த்து, குழந்தைகளைப் பயிற்றும் பொறுப்பைப்

பராஷாவிடத்திலே ஒப்படைத்திடுவேன்...
காதலில் இருவரும் கைகளைக் கோத்து,
கடைசி நாள் வரையிலும் நடை போடுவோம்.
ஆதரத்துடன் எம் அருமைப் பேரர்கள்
அடக்கம் செய்திடுவார்கள் எங்களைப் பின்பு...''

என்று கனவினுன் நம் யெவ்கேனி. ஏக்கமாய்
இருந்தது அவனுக்கு அந்த இரவினிலே.
ஒன்றே அவன் விரும்பினுன்: காற்று இப்படி
ஊளையிடக் கூடாது; மழையும் சன்னல் மேல்
இப்படிச் சீற்றத்துடன் அடிக்கக் கூடாது...
என எண்ணியவாறு அவன் தூக்கக் கண்களை
எப்படியோ முடிவில் மூடினுன்... பின்னர்
இரவின் மூட்டம் குறைந்து ஒளியற்ற நாள்
புலர்ந்தது... பேரச்சம் தந்திட்ட கரி நாள்!
பொங்கிய நேவா* ஆறு இரவு முழுவதும்
மலைந்த புயலைத் தாக்கி முறியடித்திட்டு,
மாகடல் சேர்ந்திட வீணே முயன்றபின்...
களைத்து, வலிவிழந்து, அலுத்துச் சலித்து,
காற்றுடன் போராடுவதைக் கைவிட்டிட்டது...
நுரைத்து, சினந்து, மலைகளாய் எழுந்து,
நுண் துளிகள் சிதறிய பேரலைகளைக்
காணக் காலையில் வந்த நகரத்து மக்கள்
கரைகள் மேல் திரள் திரளாய் நெரிந்தனரே.
ஆணவம் மிக்க நேவா அலைகடலினை
அடைவது புயலினுல் தடைபட்டிட்டதும்,
சீறி, குமிழியிட்டு, திரும்பிப் பாய்ந்து,
தீவுகள் யாவற்றையுமே மூழ்கடித்தது.
ஆருத வெறியுடன் மழையும் காற்றும்
அடித்தன. பொங்கி ஆர்த்திட்ட பேராறு
கொதிகல நீர் ஒப்பக் குமிழ்த்துத் தளம்பி
கொடுஞ் சீற்றத்துடனே விலங்கினைப் போல்
கதுமெனத் தாவிற்று நகரின் மீதிலே,
கதி கலங்கி ஓடின எதிர்ப்பட்டவை;
சூழ்ந்தது வெறுமை எப்புறமும்; தண்ணீர்
சொரிந்தது தரையடி நிலவறைகளில்;

ழ்ந்த கால்வாய்களின் தண்ணீர் உயர்ந்தே
ழியடைப்புக்களின் வழியே பாய்ந்தது.
நீர் அரக்கன் டிரிட்டான் போல் இடை வரை
நீரிலே ஆழ்ந்து நின்றிட்டது நகரம்.

போர்! முற்றுகை! தாக்கு! தீய அலைகள்
புகுந்தன திருடர் போல் வீடுகளுக்குள்.
நீரில் மிதந்து விரைந்திட்ட ஓடங்கள்
நேரே கண்ணாடிகளை மோதி நொறுக்கின.
மரத் திரை மூடிய அகல் தட்டங்களும்
ஏழைக் குடில் துண்டுகளும் கட்டைகளும்
கரைப் பகுதிகளும் புயல் பெயர்த்துக்
கொணர்ந்திட்ட பாலங்களும் வெள்ளம் அரித்த
இடுகாட்டில் புதைந்த சவப் பெட்டிகளும்
எளியோரின் அற்ப சொற்ப உடைமைகளும்
பெரு செட்டு வர்த்தகரின் பண்ட வகைகளும்
பரந்த வீதிகளிலே மிதந்தன!

மக்கள்

ஆண்டவன் சீற்றத்தினைக் கண்டு, தண்டனை
அடுத்து வரும் என்று எதிர்பார்த்திருந்தனர்.
மாண்டன, முடிந்தன, அந்தோ, யாவுமே!
வாழ்விடமும் உணவும் இனி எங்கு பெறுவார்?
அந்தக் கொடிய ஆண்டில் புகழுடன் இன்னும்
ஆண்டான் ருஷ்யாவை முந்தை அமர வேந்தன்.
வந்தான் முன்மாடத்துக்கு, மனம் குழம்பியே,
வருத்தம் பொங்கிடச் சொன்னான்: ''இறை இயற்கையைக்
கட்டுப்படுத்துவது மன்னர்க்கு ஆகாது.''
கண்களில் துயரம் ததும்ப அமர்ந்து,
கட்டு மீறிய கேடு செய்த விபத்தை
கலைப்புடன் பார்வையிட்டான். எதிரிலே
சதுக்கங்கள் ஏரிகளாய்க் காட்சி தந்தன,
தெருக்கள் அகன்ற ஆறுகளாய்ப் பெருகி,
பொதுக் கடலில் போல் அவற்றில் கலந்தன.
காவலன் அரண்மனை கடுந் துயர் தோய்ந்த
தீவை நிகர்த்தது. வேந்தன் பணிக்க,
சீறிய பெரு வெள்ளத்தை மதியாமல்,

சாவின் பேராபத்து நிறைந்த வழிகளில்
தளகர்த்தர் தயங்காமல் முன்னே சென்றிட்டார்—
பாவம், கிலி பிடித்து நீரில் மூழ்கிய
பயங் கொள்ளி மாந்தர்களைக் காப்பாற்றிடவே.

பீட்டர் சதுக்க மூலை தன்னில் அமைந்த
பெரிய புது வீடதன் உயர் முகப்பிலே
நீட்டிய முன்கால்கள் தூக்கி உயிருள்ளவை போல்
நின்ற இரு பளிங்குக் காவல் சிங்கங்கள்
ஒன்றின் மேல் மெய்கேனி ஏற்றப் பாங்கிலே
வெளிறி, வெறுந் தலையாய் உட்கார்ந்திருந்தான்.
குன்றிய மேனியுடன் கைகளைக் கட்டி,
கொஞ்சமும் அசைவின்றிக் குந்தி இருந்தவன்,
தன் பொருட்டு அஞ்சவில்லை. பேராசையுடன்
தன் அடி வருடி, மேல் எழுந்த அலையையோ,
தன் முகத்தில் சாட்டை போல் அடித்த மழையையோ,
தன் தொப்பியைப் பறித்துச் சென்று, வெறியுடன்
ஊளையிட்ட சூறையையோ மதிக்காமல்,
ஓரிடம் தன்னை நிலையாக நோக்கியே,
மீள வகை அறியாச் சோர்வு ததும்பும்
விழிகளை அதன் மீது நாட்டி இருந்தான்.
குமுறிக் கொந்தளித்த ஆழத்திலிருந்து
குன்றுகளாய் எழுந்த அலைகளோ, அங்கு
அமைதி இன்றிச் சீறின, ஆர்த்தது புயல்,
அங்கு மிதந்தன உடைபட்ட துண்டுகள்.
இன்னும்... கடவுளே! கடவுளே! அங்கே
எழுந்த அலைகளுக்கு மிகக் கிட்டத்தில்
சின்னக் குடாவின் கரை ஓரம் தன்னிலே
தெரிந்தன வண்ணம் பூசாச் சுற்று வேலியும்
வில்லோ மரமும் ஓர் இடிந்த குடிலும்.
விதவைத் தாய் தன் புதல்வி, அவன் காதலி,
நல்லாள் பராஷாவுடன் வாழ்ந்திருந்தாள் அதில்...
நனவோ அவன் காண்பது, அன்றிக் கனவோ?
அல்லால் நமது வாழ்வு முழுவதுமே
யாதுமற்ற சொப்பனம் போல் சூனியந்தானோ?

லாம் வல்ல விண்ணகம் நிலவுலகினை
ளி நகையாடிடும் ஏளனச் சிரிப்போ?

திரத்தால் கட்டுண்டவன் போலும், பளிங்குடன்
ரையாணியால் இறுக்கப்பட்டவன் போலும்,
ந்த வகையிலும் இறங்கிட மாட்டாமல்
ருந்தான் அவன் சூழ்ந்திட்ட நீரின் நடுவே!
லைத்துக் கொந்தளித்திட்ட ஆற்றுக்கு மேலே,
சைக்க முடியாத உயரம் தன்னிலே,
லைத்த வெய்கேனிக்கு முதுகைக் காட்டியே,
ார்த்த வெண்கலப் பரி மீதில் அமர்ந்து,
ரித்த கரத்தை மிடுக்காக நீட்டியே,
ளங்கிற்று பீடு திகழ் வீர உருவம்.

## இரண்டாம் பாகம்

ளைத்த அழிவால் மனநிறைவு கொண்டு,
ட்கம் அற்ற வெறியாட்டத்தால் அலுத்து, தன்
ார்ச்சியால் மகிழ்ந்து, சூறைப் பொருள்களைக்
க்க விட்டு அசட்டையாய், பழைய போக்குக்குத்
ரும்பிற்று நேவா. ஓர் சிற்றூரில் முரட்டுத்
ருடர் கூட்டத்துடன் புகுந்த கொடியன்
ரும்பியவற்றை எல்லாம் கொள்ளை அடித்தும்
ட்டியும் உடைத்தும் வீணே அழித்தும் எங்கும்
சலும் திட்டலும் நெறு நெறுப்பும் அச்சக்
குரலும் கிளப்பிக் கொடுமை செய்தபின்,
ளைத்து, ஊரார் தொடர்ந்திடும் திகில் பிடித்திட,
டுகி ஓடுகையில் கொள்ளைச் சுமையினை
டுத்துச் செல்ல மாட்டாமல் வழியில் சிதறல் போல்
ருந்தது நேவா ஆற்றின் இக்கொடுஞ் செயல்.

டிந்தது வெள்ளம், சாலை வழி திறந்தது.
தில் நம்பிக்கையும் பயமும் ஏக்கமும்
ு கொண்டு குமைய, நெஞ்சம் பதைத்திட,
ாந்தளித்த ஆற்றுக்கு விரைந்தான் வெய்கேனி.

வெற்றிக் களிப்பில் இன்னும் பொங்கிய ஆறே,
வெந்நீர்க் கலம் போல் சீறிக் குமிழியிட்டது.
தத்தும் அலைகளை நுரைப் படலம் போர்த்தது,
சண்டைக் களத்திலிருந்து பாய்ந்த பரி போல்
செருமிப் பெருமூச்செறிந்திட்டது நேவா.
தேடிய யெவ்கேனி ஒரு படகினைக் கண்டே,
அருநிதி பெற்றவன் போல் ஆனந்தம் கொண்டு,
அதனிடம் தாவி, அழைத்திட்டான் ஓட்டியை.
அச்சம் தந்த அலைகளைச் சட்டை செய்யாமல்,
அக்கரைக்குப் படகினைக் கொண்டு சேர்க்கவே
இச்சேயுடன் இசைந்திட்டான் படகுக்காரன்
ஈரைந்து கோப்பெக்குகள் கூலியாய்ப் பெற்றே.

தேர்ச்சியுடன் அவன் மிக நீண்ட நேரம்
வெறித்த அலைகளுடே தண்டு வலித்தான்;
இகலும் திரை அணிகள் இடையினில் ஆழ்ந்து,
துணிந்த பயணிகளோடு எந்தக் கணமும்
மறைந்திடப் பார்த்த படகு முடிவிலே
மறு கரை சேர்ந்திட்டது.

பாவம், யெவ்கேனி
அறிந்த தெருவினில் விரைந்தோடிச் சென்று,
அறிமுகமான இடங்களை நோக்கினன்.
இனம் காண முடியவில்லை அவனாலே.
எங்கும் படு கோரக் காட்சிகள்! அவனுக்கு
முனம் எல்லாம் இடிந்து கிடந்தன; சில
முழுதும் பாழ்; வெள்ளத்தில் போய் விட்டன சில.
சரிந்திருந்தன சில வீடுகள், சில
தகர்ந்திருந்தன முற்றுமே, அலைகளால்
அரித்து நகர்த்தப்பட்டிருந்தன சில;
அமர்க் களத்தில் போல் எங்கும் உடல்கள் சிதறிக்
கிடந்தன. எதிலும் எண்ணம் செலுத்தாமல்,
கிளர்ச்சியால் வதைபட்டு நைந்த யெவ்கேனி
நடந்தது குறித்த விதியின் தகவல்
நன்கு ஒட்டிய உறையில் வைத்த கடிதம் போல்
இருந்த வட்டாரத்திற்குத் தலை தெறித்திட
ஓடினன், இதோ நெருங்கி விட்டான் இடத்தை,

தெரிந்தது குடா, வீடு வந்திடும் இதோ...
னுல் என்ன இது?..

திகைத்து நின்றிட்டான் அவன்.

ந்த வழி போனுன், பின்பு திரும்பி வந்திட்டான்.
றுபடி பார்த்தான்... நடந்தான்... மீண்டும் பார்த்தான்.
இந்த இடத்தில்தான் அவர் இல்லம் இருந்தது;
இங்கே வில்லோ, வாயில் இங்கே இருந்தன முன்னே.
வெள்ளத்தில் போயின போலும். ஆனுல் வீடெங்கே?
வேதனை மிகுதியாலே உள்ளம் நொந்திட,
ள்ளம், மேடு பாராமல் சுற்றிச் சுற்றி வந்தான்,
கர்ந்தான் தன்னிடம் ஏதோ உரத்த குரலில்.
டுமென்று தலையில் அடித்துக் கொண்டவன்
ரிக்கலுற்ருன்.

இரவுப் பனி மூட்டந்தான்
ங்கிய நகரத்தை நன்கு போர்த்தது;
ரத்தாரோ, பின்னரும் உறங்கிடாமலே,
தகள் பேசிக் கொண்டார்
க்கு நாள் பற்றித் தமக்குள்ளே.
லைக் கதிர் கலைத்து வெளிறிச்
தந்த மஞ்சின் ஊடாக நோக்கிற்று அமைதி
ழ்ந்த தலைநகரை; சென்ற நாளிலே
ந்த விபத்தின் எந்தச் சுவடும் அங்கில்லை;
யிற்றின் செம்மைக்குள் மறைந்திருந்தது
ந்த நாளின் கொடுமை; பழைய போக்கிலே
ியங்கள் நடந்தன. திறந்த தெருக்களில்
லும் பற்றில்லாமல் உணர்ச்சி மரத்து,
கினர் மக்கள். அலுவலர்கள் இன்பம்
யும் தம் இல்லங்களை விட்டு விரைந்தார்
ணிமனைகளுக்கு. துணிந்த வர்த்தகர்
விளைத்த சேதங்கள் அனைத்தையும்
லார் தலையில் கட்டும் ஆர்வத்தோடு அது
றயாடிய நிலவறைகளை எல்லாம்
காயத் திறந்து தொழில் தொடங்கி விட்டார்.
பு வெளிகளில் கிடந்த ஓடங்கள்
போல ஆற்றில் விடப்பட்டன.

விண்ணோர் உகக்கும் கவிஞன் ஹ்வஸ்தோவ் பிரபு என்பான்
உள்ளம் உருக்கும் இறவாத பாக்களில்
மிகக் கொடும் நேவா ஆற்று வெள்ளத்தினையே
விவரித்து அதற்குள்ளேயே புகழ் பெற்றிட்டான்.

ஆனால் பாவம், பேதை நம் யெவ்கேனி...
அந்தோ! குழம்பி விட்ட அவனது மூளை
நானா வித அதிர்ச்சிகளைத் தாங்கிட
மாட்டாமல் நலிந்தது. அவன் செவிகளில்
ஓயாமல் இரைந்தன ஆறும் புயலும்
உண்டாக்கிய கலகக் கிளர்ச்சி ஓசைகள்.
வாயால் ஒன்றும் சொல்லாமல், துன்ப நினைவுகள்
மனத்தில் குமைய, அவன் அலைந்து திரிந்தான்.
ஏதோ கொடுங்கனவு வதைத்தது அவனை,
ஏகவில்லை அவன் தன் இருப்பிடத்துக்கு
மாதம் ஒன்று கழிந்த பின்னும்; அதனால்
வாடகைக்கு அதனை விட்டிட்டான் வீட்டுக்காரன்
கெடு முடிந்ததுமே ஓர் ஏழைக் கவிக்கு.
போகவில்லை யெவ்கேனி கேட்டிடவும் தன்
உடைமைகளை. விரைவில் அறவே வேற்றாய்
உலகினர் அவனை மதிக்க முற்பட்டார்.
கால் போன போக்கில் நாளெல்லாம் நடந்திட்டான்,
கப்பல் துறையில் தூங்கினான்; பிச்சை வாங்கியே
கால் வயிற்றுக்கு உண்டான். முற்றும் நைந்திட்ட உடை
கந்தல் ஆகி விட்டது. சீர் கெட்ட சிறுவர்
கற்களை அவன் மேல் எறிந்திட்டனர். வண்டிக்
காரர்களின் சாட்டைகளும் அவனை விளாறின—
சற்றும் கவனம் இன்றிச் சாலையினையே
தாண்டியதற்காய். அவனோ, சட்டை செய்யாமல்,
தன் போக்கில் வளைய வந்தான் செவிடனாய்,
தன் உள்ளக் கிளர்ச்சியின் பேரிரைச்சலால்.
இன்னும் வாழ்பவனும் அல்ல, ஆவியும் அல்ல,
இழிந்த விலங்கும் அல்ல, மனிதனும் அல்ல,
இன்னதென்று இனங்காண இயலாத ஒன்றாய்,
எப்படியோ அவல வாழ்வை ஓட்டினான்...

ஓர் நாள்

ஆற்றுத் துறையில் அவன் உறங்கினான். கோடை
சென்று, கூதிர் காலம் வர இருந்தது.
சீற்றலுடன் வீசிற்று காற்று. நுரைத்து,
துறையில் மோதியே முறையிட்ட கார் அலை
மனம் இரங்காத நீதிபதிகள் முன்னே
வணங்கி, தரையில் நெற்றி படிய, முட்டும்
மனுதாரன் போல அடித்தது கரையின்
மழமழப்பான படிகளின் மீதிலே.
தூங்கி எழுந்தான் பேதை. சூழ்ந்தது துயர்:
சீற்றிற்று மழை, காற்றோ, ஓலமிட்டது
ஏங்கிய குரலில், அதைத் தொலை இருளிலே
எதிரோலித்திட்டான் யாரோ முறைக் காவலன்...
துள்ளினான் யெவ்கேனி; உடன் நினைவு கூர்ந்தான்
உற்ற கொடுந் துன்பங்களை; துடியாய் எழுந்து
மெள்ள நடந்தான், பின்பு சட்டென நின்று,
இரண்டு விழித்து, சுற்றும் செலுத்தினான் பார்வை.
நின்றிருந்தான் அவன் பெரிய வீடொன்றின்
நெடிய தூண்களின் அருகில். முகப்பிலே
நின்றன முன் கால்கள் தூக்கி, காவல் சிங்கங்கள்
நிசமாய் உயிருள்ளவைப் போன்ற பாங்கிலே.
காரிருள் அடர்ந்த உயரம் தன்னிலே,
வளைத்த இரும்பு வேலி சூழ்ந்த பாறை மேல்,
வீறுடன் வெண்கலப் பரி மீதிருந்தது
மிடுக்காய்க் கரம் நீட்டிய வீர உருவம்.

நடுக்கிட்டான் யெவ்கேனி. கொடிய நினைவுகள்
உயிர்த்தன தெளிவாக அவன் சிந்தையிலே.
வெடுக்கென வெள்ளம் வந்து இடர் விளைத்ததும்
வேட்டை விலங்குகள் போல் அலைகள் கூடியே,
சீறி அவனைச் சூழ்ந்து பொங்கி ஆர்த்ததும்
சிங்கங்களும் சதுக்கமும் வீடும் இருந்ததும்
வீறுடன் வெண்கலத் தலை இருளில் நிமிர்த்தி,
வீரன் விண்ணுற அசைவின்றி மிளிர்ந்ததும்
அந்த இடத்திலேயே என்று தெளிந்த
யெவ்கேனி எண்ணமிட்டான்: இந்த வீரனின்
சிந்தையில் எழுந்த விருப்பத்தின் விளைவே

# கஞ்சப் பிரபு

## சென்ஸ்டோனின்The Covetous Knight என்ற

## துன்பியல் நகைச்சுவை நாடகத்தின் காட்சிகள்

### காட்சி 1

கோபுரத்தில்

ஆல்பெரும் இவானும்

ஆல்பெர்

என்னதான் ஆனாலும் வீரர்கள் போட்டிதனில் யான்
கலந்து கொள்வேன்; இவான், காட்டு தலைக்காப்பை,
பார்ப்போம்.

**(இவான் தலைக்காப்பை அவனிடம் கொடுக்கிறான்.)**

குத்துண்டு, துளைபட்டு, கோணி விட்டது. இதை அணிய
முடியாதினி. முற்றும் புதியது வாங்கத்தான் வேண்டும்.
எப்படித் தாக்கினான் என்னைப் பாழும் டெலோர்ஷ் பிரபு!

இவான்

பாக்கி வைக்கவில்லை நீங்களும் பதிலில்: நீங்கள்
அங்கவடியிலிருந்தடித்துத் தள்ளியதனால்
இரவும் பகலும் இறந்தவர் போல் அவர் கிடந்தார்.
இன்னும் எழவில்லை.

ஆல்பெர்

ஆனால் அவனுக்கில்லை இழப்பு;
வெனிசிய மார்புக் கவசம் வெட்டுப்படவில்லை;
அவன் மார்போ, கால் காசு பெறாது; அவன் புதுக் கவசம்

வாங்கிடப் போவதில்லை. மடையன் நான், ஏன்தானோ
அவன் தலைக்காப்பை அப்போதே அகற்றுமல் விட்டேன்!
கோமகனுருக்கும் கோதையர்க்கும் முன்பு கூசி,
பறிக்காமல் விட்டேன் தலைக்காப்பை. பாழும் பிரபு!
என் மண்டையை அவன் உடைத்திருந்தால் மேலாய் இருக்கும்.

புத்துடை வேறு வேண்டும் எனக்கு. போன தடவை,
பிரபு வீரர்கள் பட்டும் வெல்வெட்டுமாய்ப் பிலுக்க,
குந்தி இருந்தேன் நான் கோமகனுர் தந்த விருந்தில்
வலைக் கவசம் மாட்டி. தற்செயலாகவே வந்தேன்
வீரர் போட்டிக்கென்று மெய்ப்புக்குச் சொல்லித் தப்பித்தேன்.

ஆனுல் இனி என்ன சொல்வேன்? ஐயோ, என் மிடிமை!
இதயத்தை இப்படியா இழிவுபடுத்துதில் வறுமை!
கனத்த ஈட்டியால் டெலோர்ஷ் என்றன் தலைக்காப்பைக்
குத்தித் துளைத்துக்* குதிரை மேல் விரைந்ததுமே, நான்
வெறுந்தலையுடனே என் பரி எமீரை விட்டி,
அவன் பின் புயல் போலப் பாய்ந்து கொடுத்த அடியில்,
ஏவல் சிறுவன் போல் இருபது அடிகளுக்கப்பால்
எம்பி அவன் விழ, மாதர் எல்லாரும் எழுந்தார்;
குளொடில்டா கூடத் தன் வசம் இழந்து கூச்சல்
போட்டாள் முகத்தைப் பொத்திக் கொண்டு; அறிவிப்பாளர்கள்

எனது தாக்கினை ஏற்றிப் புகழ்ந்திட்டார்; எனக்கே
அத்தகைத் துணிவும் அற்புத ஆற்றலும் வந்த
காரணம் தன்னையோ, கண்டு கொள்ளவில்லை எவரும்!
வெறி கொண்டேன் தலைக்காப்பு வீணே உடைந்ததனுல்,
என் வீரத்தின் காரணம் யாது? கஞ்சத்தனந்தான்!
ஆமாம்! அருமைத் தந்தையாருடன் அதே வீட்டில்
வாழ்வதால் அவர் குணம் எனக்கும் வந்தது இயல்பே.
எப்படி இருக்குது பாவம் எமீர்?

இவான்

நொண்டுது இன்னும்.
ஏறக்கூடாது நீங்கள் அதன் மேலே இப்போது.

ஆல்பெர்

செய்வதற்கு ஒன்றும் இல்லை இனி, செம்பட்டைப் பரியை வாங்குகிறேன். அதன் விலையும் நிரம்ப மலிவு.

இவான்

மலிவுதான், ஆனால் நம்மிடம் பணமில்லை வாங்க.

ஆல்பெர்

என்ன சொன்னான் அந்தச் சோமாறி சலமோன் இன்று?

இவான்

ஈடு பெறாமலே உங்களுக்குப் பணம் இனிமேல்
கடன் தர முடியாதாம், கண்டிப்பாகச் சொன்னான்.

ஆல்பெர்

ஈடா? பேய்ப்பயல்! என்னிடம் ஏதடா ஈடு?

இவான்

சொன்னேன் நான்.

ஆல்பெர்

அவனோ?

இவான்

தொண்டையைக் கனைக்கிறான் கமறி.

ஆல்பெர்

என் தந்தை யூதர் போல் பெருத்த செல்வர், என்றேனும்
அவர் உடைமைகளை நானே உரிமையால் அடைவேன்
என்று தெளிவாக எடுத்துச் சொன்னாயா?

இவான்

சொன்னேன்.

ஆல்பெர்

அவனோ?

இ வா ன்

கமறிக் கனேக்கிருன்.

ஆ ல் பெ ர்

அடாடா, மோசம்!

இ வா ன்

தானே வருவதாய்ச் சொன்னுன்.

ஆ ல் பெ ர்

ஆகா, நல்ல தருணம்!
பிணேயாய் வைத்துக் கொள்வேன், மீட்புப் பணம் பெற்றே
விடுவேன்!

(கதவு தட்டப்படுகிறது.)

யார் அங்கே?

(யூதன் உள்ளே வருகிருன்.)

யூ த ன்

உங்கள் குற்றேவலன்.

ஆ ல் பெ ர்

ஆ, நீயா நண்பா!
பாழும் யூதப் பயலே, போற்றப்பட்டிடும் சலமோன்,
இப்படி வா சற்றே. என்ன நீ, எனக்குக் கடன் தர
மறுக்கிருயாமே?

யூ த ன்

ஐயோ, மாட்சி மிக்க வீரரே,
சந்தோஷமாகத் தருவேன்... ஆனுல பணம் தானில்லே,
சத்தியம். பணத்துக்கு எங்கே ஷோவேன்? வீரர் தமக்கே
ஊக்கமாய் உதவி நொடித்துப் போனேன். பெற்ற பணத்தை
ஒருவருமே தருவதில்லே. கேட்கிறேன் உங்களே:
பகுதியேனும் தர முடிந்தால் பாருங்கள்...

ஆ ல் பெ ர்

பாதகா!
என்னிடம் மட்டும் பணம் இருந்தால் எதற்கு உன்னுடன்

தொடர்பு வைத்துக் கொள்ளப் போகிறேன்? சும்மா
முரண்டாதே,
தங்க நாணயங்களை எடு, அன்புள்ள சலமோன்;
பொற்காசுகள் நூறு தந்திடு, சோதனை போட்டிட
வைக்காமல் மரியாதையாகவே.

யூதன்

என்ன, நூறு?
நூறு பொற்காசுகள் இருந்தால் நொடிப்பேனு?

ஆல்பெர்

கேளப்பா:
நண்பனை இப்படி நட்டாற்றில் விட்டிட நாணமாய்
இல்லையா உனக்கு?

யூதன்

சத்தியம் செய்கிறேன்...

ஆல்பெர்

இரடா!
ஈடா நீ கேட்கிறுய் என்னிடத்தில்? என்ன பிதற்றல்!
என்ன தருவேன் நான் ஈடாக? ஊம்? பன்றித் தோலா?
ஈடு வைத்திடவே ஏதேனும் என்னிடம் இருந்தால்,
விற்றிருப்பேனே எப்போதோ! அல்லால் வீரன் சொல்லை
நம்பவில்லையோ நீ, நாய்ப் பயலே?

யூதன்

உங்கள் சொல்லுக்கு
உங்கள் உயிர் உள்ளவரை உயர் விலை உண்டு.
பிளெமிஷ் செல்வர் பெட்டிகள் எல்லாம் அதைக் கேட்டு,
வழங்கத் திறக்கும் மந்திரத்தால் போல் உங்களுக்கு.
ஆனுல் ஏழை யூதன் எனக்கு அதைத் தந்து விட்டு,
நீங்கள் இறந்திட்டால் (நேராது காக்க இறைவன்),
கடலில் விழுந்த கைப்பெட்டியின் சாவிக்கொப்பாய்,
என் கைகளில் அது ஏதும் பயனற்றுப் போகும்.

ஆல்பெர்

தந்தைக்கு முன்பே தனயன் இறந்திடுவேனு?

யூ த ன்

யார் அறிவார்? நமது ஆயுள் இல்லையே நம் கையில்;
இருந்தான் நேற்று மாலை இளைஞன், இன்றோ இறந்தான்.
தொண்டு கிழவர்கள் நால்வர் அவனைத் தூக்கிக்
கூனல் தோள்கள் மேலே, கொண்டு போனார் கல்லறைக்கு.
உடல் நலம் உள்ளவர் உங்கள் தந்தை. இன்னும் பத்து,
இருபது, இருபத்தைந்து, முப்பதாண்டுகள் கூட
வாழலாம் கடவுள் அருளால் மன மகிழ்வோடு.

ஆ ல் பெ ர்

இது பொய், யூதா: இன்னும் முப்பதாண்டுகள் சென்றால்,
ஆகிடும் ஐம்பது வயதெனக்கே. அப்போது
பணத்தால் என்ன பயன்?

யூ த ன்

பணபத்தாலா? பணத்தால்
எப்போதும், எந்த வயதிலுமே, பயன் உண்டு;
இளைஞன் அதைத் துடியான ஏவலனாய் எண்ணி,
இங்கும் அங்கும் விட்டுகிறான் இரக்கம் இன்றி.
முதியவனோ, முற்றும் நம்பத்தக்க நண்பனாகக்
கருதிக் காக்கிறான் அதனைக் கண்மணி போலே.

ஆ ல் பெ ர்

என் தந்தையோ, அதைத் தொண்டன், தோழன் என்றெண்ணாமல்,
ஆண்டையாய் மதித்து, தொண்டு செய்கின்றார் அதற்கே.
அதுவும் எப்படி? பண்ணை அடிமை போல், சங்கிலி
கட்டிய காவல் நாய் போல். நடுக்கும் குடிலில்
குந்தி, தண்ணீர் குடித்து, பொருக்குகள் குதறித்
தின்று, இரவெல்லாம் தூங்காமல் குலைத்துத் திரிந்தே
தங்கத்தைக் காக்கிறார். தங்கமோ, தூங்குது வீணே.
பேசாதே! என்றேனும் என்னதாகிப் பெருந் தொண்டு
புரியும் எனக்கிப் பொன் எல்லாம் கிடக்கை மறந்தே.

யூ த ன்

ஆம், பிரபுக்களின் அந்திமச் சடங்குகளிலே
கண்ணீரைக் காட்டிலும் பணந்தான் பெருகும் காணுாய்.
அடைவீராக சொத்தின் உரிமையை விரைவில்.

ஆ ல் பெ ர்

ஆமென்!

யூ த ன்

ஒன்று செய்யலாமே...

ஆ ல் பெ ர்

என்ன?

யூ த ன்

நான் நினைத்தேன்... உண்டு
ஒரு வழி...

ஆ ல் பெ ர்

என்ன வழி அது?

யூ த ன்

பெரிதல்ல ஒன்றும்.
இருக்கிறுன் எனக்குத் தெரிந்த யூதக் கிழவன்,
மருந்துக் கடைக்காரன், ஏழை...

ஆ ல் பெ ர்

வட்டிக் கொள்ளைக்காரனு.
உன் போலவே, அல்லால் ஒழுங்குள்ள நேர்மையாளனு?

யூ த ன்

சொல்கிறேன் வீரரே, என் நண்பன் தோவியின் தொழிலே
வேறு—மருந்துத் துளிகள் செய்து விற்கிறுன்... அவை
அற்புதம் ஆற்ற வல்லவை.

ஆ ல் பெ ர்

அவற்ருல் எனக்கென்ன?

யூதன்

ஓரிரு துளிகள் ஒரு குவளை நீரில் கலந்தால்...
கொஞ்சமும் மாருது சுவையோ, நிறமோ; குடித்தால்,
வயிற்றில் குத்தலோ, வலியோ ஏற்படாது,
வாந்தியும் வாராது; மனிதன் மரித்து விடுவான்.

ஆல்பெர்

நஞ்சு விற்கிருனே உன் முதிய நண்பன்.

யூதன்

ஆமாம்.
நஞ்சுந்தான்.

ஆல்பெர்

அதற்கென்ன? நாணயங்களின் இடத்தில்,
ஒரு பொற்காசினுக்கு ஒன்று வீதம் நஞ்சுக் குப்பிகள்
இரு நூறு தருகிறேன் என்கிருயா என்ன, யூதனே?

யூதன்

என்னை நகையாட விருப்பம் எப்போதும் உங்களுக்கு—
இல்லை; நான் நினைத்தேன்... ஒருவேளை நீங்கள்... எண்ணினேன்,
சாங்காலமோ வந்து விட்டதுங்கள் தந்தையாருக்கு.

ஆல்பெர்

நாயே! என்ன சொன்னுய்? பெற்ற தந்தைக்கு நஞ்சூட்டவா?..
எப்படித் துணிந்தாய் இச்சைகை மகனுக்குச் செய்ய?
இவான், இவனைப் பிடி! ஈன யூதப் பாம்பே, ஏனடா
நாய் மகனே, உன்னை நானே இதோ தூக்கில் போடுவேன்.
எப்பேர்ப்பட்ட வஞ்சன்!

யூதன்

என் பிழை பொறுங்கள், வீரரே!
நான் வேடிக்கைக்குச் சொன்னேன்.

ஆல்பெர்

இவான், நல்ல கயிறு தா.

யூ த ன்

நான்.. விளையாட்டாக... நான் பணத்தோடு தான் வந்தேன்.

ஆ ல் பெ ர்

ஒழியடா, நாயே!

**(யூதன் வெளியேறுகிறான்.)**

தந்தையின் உலோபத்தால் நான்
எந்த நிலைக்கு இழிந்து விட்டேன்! யூதன் எனக்கே
என்ன யோசனை சொல்லத் துணிந்தான்! இவான், எனக்குக்
கொஞ்சம் மது ஊற்றிக் கொடு, என் உடம்பு முழுதும்
படபடக்கிறது... ஆனால் பணமும் வேண்டும்.
பாழும் யூதனிடம் உடனே ஓடிப் பணத்தை
வாங்கு. மசிக்கூட்டையும் கையோடு கொண்டு வா.
பற்புச் சீட்டு தருகிறேன் எத்தனுக்கு. நீ மட்டும்
அவனை இட்டு வாராதே... அன்றேல். பொறு, வேண்டாம்.
அவன் பொற்காசுகள் அடிக்கும் நஞ்சு நாற்றம் அவன்
முந்தை ஜூடாசின் வெள்ளிக்காசுகள் முன் அடித்தாற்
போல்...
நான் கேட்டேனே மது.

இ வா ன்

நம்மிடம் மதுவே இல்லை
ஒரு துளி கூட.

ஆ ல் பெ ர்

ஸ்பெயினிலிருந்து ஒரு புட்டி
என்னுயிர் நண்பன் ரெமோன் அனுப்பி இருந்தானே?

இ வா ன்

அதனை நோயாளிக் கொல்லனுக்கு அளித்தேன் உங்கள்
ஆணைப்படி.

ஆ ல் பெ ர்

ஆமாம், நினைவிருக்கிறது, அறிவேன்...
சரி, தண்ணீர் கொடு, சனியனைப் பிடித்த பிழைப்பு!
போதும், கோமகனாரிடம் நீதி கோரப் போவேன்:

எங்கோ நிலவறை இடுக்கில் பிறந்த சுண்டெலி போல்
இன்றி, மகனாக என்னை மதித்து நடத்தத்
தந்தையிடம் சொல்லிச் சம்மதிக்க வைக்கட்டும்.

## காட்சி 2

*நிலவறை*

*பி ர பு*

பசப்பி மயக்கும் பரத்தையினையோ, இன்றேல்,
தன் வலையில் வீழ்ந்த அசட்டுப் பேதைப் பெண் தனையோ,
காணத் துடிக்கும் இளம் விடன் போல் இக்கணத்தை
இன்று முழுதும் ஆவலாய் எதிர்பார்த்திருந்தேன்—
இரகசிய நிலவறையில் இறங்கி, என்றன்
ஆருயிர்ப் பெட்டிகளைக் கண்டிடவே. ஆகா,
எப்பேர்ப்பட்ட நன்னாள் இது! இன்று நான் ஆறும்
பெட்டியில் (இன்னும் நிறையாத பெட்டி தன்னில்)
திரட்டிய இந்தப் பொற்காசுகளையும் சேர்ப்பேன்.
கொஞ்சமாய்த் தோன்றுது, ஆனால் கொஞ்சங் கொஞ்சமாக
வளருது நிதியம். வாசித்தேன் எங்கோ, ஓர் மன்னன்
ஆளுக்கொரு பிடி மண்ணை அள்ளி ஓரிடத்தில்
போடச் சொன்னானும் போர் வீரர்களிடம், அதனால்
குவிந்ததாம் உயர்ந்த குன்று, கொற்றவன் அதன் மேல்
ஏறி, வெண் கூடாரங்கள் இருந்த தொலையினையும்
கப்பல்கள் விரைந்த கடலையும் கண்டு மகிழ்ச்சி
பெற்றானும். அவ்வாறே நானும் பிடி பிடியாக
நிலவறையில் என் நிதியை நிறைத்துக் குவித்தே,
எழுப்பி விட்டேன் என் குன்றினை. இங்கிருந்தென்னால்
முடியும் காண என் ஆட்சிப் பரப்பு முழுதும்.
என் ஆட்சிக்கு எதுதான் உட்படவில்லை? பேய் போல்
இங்கிருந்துலகை ஆண்டிட வல்லவன் யானே.
நான் மட்டும் நினைத்தால் எழும் நல் மாட கூடங்கள்,
கும்மாளம் அடிக்கும் கூட்டமாய்த் தேவ மகளிர்
இன் மணம் கமழும் என் பொழில்களிலே திரிவார்;
கலைத் தேவியர்கள் எனக்குக் காணிக்கை கொணர்வார்,

விடுதலை விழையும் மேதை என் அடிமை ஆகும்,
நன்மையும் உறங்கா உழைப்பும் நேர்மையும் நாடும்
இறைஞ்சி, வணங்கி, என் பரிசுகளை என்றும்.
குருதி பெருக்கும் கொடுமை என் சீழ்க்கை கேட்டு,
அடங்கி, ஒடுங்கி, என் அருகில் ஊர்ந்து வந்தே,
என் கையை நக்கி, என் உள்ளப் பாங்கை அறிய
என்றன் விழிகளை ஏறிட்டுப் பார்க்கும். எனக்கு
எல்லாம் அடிப்பட்டவை, நானோ, எதற்கும் அல்ல.
விழைவுகள் யாவுக்கும் மேம்பட்டவன் நான்; நெஞ்சில்
அமைதி உள்ளவன்; அறிவேன் என் ஆற்றலை; இந்தப்
புரிவெனக்குப் போதும்...

(தன் தங்கத்தைப் பார்க்கிறான்.)

காணாது கொஞ்சம் போல,
ஆயினும் மாந்தரின் எத்தனை அல்லல்கள், எத்தனை
வஞ்சனைகள், கண்ணீர், வேண்டல்கள், வன்பகைச் சாபங்கள்
கனவடிவிலே காட்சி தருகின்றன இதில்!
தொன்மைக் காலப் பொன் துப்ளோன் நாணயம் ஒன்று
இங்கே உண்டே... இதோ இருக்கிறது! ஒரு கைம் பெண்
கொடுத்தாள் எனக்கிதை, அதற்கு முன் குழந்தைகள் மூன்றும்
அவளும் என் வீட்டின் முன் முழந்தாள் படியிட்டு அழுது,
அரை நாள் கெஞ்சினர். அடித்தது மழை; நின்று, பின்னும்
பெய்தது, பாசாங்குக்காரியோ, பெயர்ந்திடவில்லை;
அவளை நான் விரட்டி இருப்பேன், ஆனால் ஏதோ ஒன்று,
கணவன் பட்ட கடனை அடைக்கவும் மறுநாள்
சிறை செல்வதைத் தவிர்க்கவும் சிந்தையில் விரும்பி,
அவள் வந்திருப்பதாய்க் கிசுகிசுத்தது என் அகத்தில்.
இதையோ? கொண்டு வந்தான் இதை என்னிடம் தீபோ—
அவனோ, வஞ்சகன், வீணன், அவனுக்கு இதெங்கே
அகப்பட்டிருக்கும்? திருடித்தான் இருப்பான், அன்றேல்,
அடித்திருப்பான் கொள்ளை சாலையில், அடர் இருட்டில்...
ஆம்! இங்கே நிறைந்த பொருள்கள் அனைத்துக்குமாகப்
பெருகிய கண்ணீரும் குருதியும் வேர்வையும் பெயர்த்துப்
புவியின் கீழிருந்து ஒன்ருகப் பொங்கினுல், ஊழி
வெள்ளம் பாயும் மீண்டும்; இனிய நிலவறையினில்,
நீர் புரையேற நானும் மடிவேன். அது நிற்க.

(பெட்டியைத் திறக்கப் போகிறான்.)

ஒவ்வொரு முறையும் உயிரான பெட்டி திறக்க
முற்படுங்கால் என்னுள் மூளும் காய்ச்சலும் விதிர்ப்பும்.
அச்சமில்லை இது (அட, நான் எதற்கஞ்ச வேண்டும்?
கையிலே வாள், பொன்னைக் காத்திடும் நேரிய எஃகு),
ஆனால் என் நெஞ்சை அடைக்கும் அறியா உணர்வு...
கொலையில் இன்புறுவாராம் சிலர், கூறுகின்றார்
மருந்தியவார். பூட்டின் வாயில் சாவியை நுழைக்கும்
போது, கொலைகாரர் கத்தியைச் செருகிடும் போது
அடையும் மகிழ்ச்சியும் அதனுடன் பதைப்பும் எனக்கும்
ஏற்படுகின்றன.

(பெட்டியைத் திறக்கிறான்.)

இதோ என் இன்பக் குவியல்!

(நாணயங்களைக் கொட்டுகிறான்.)

போங்கள் பெட்டிக்குள்ளே, போதும் புவியிலே மாந்தர்
தேவைகளுக்கும் வெறிகளுக்கும் தொண்டு செய்து
திரிந்ததெல்லாம். இனி விண்ணிலே தேவர்கள் போன்று
அமைதியும் விறலும் ஆர்ந்திடத் துயிலுங்கள் இங்கே...
விழாக் கொண்டாட விரும்புகின்றேன் இன்று; பெட்டி
ஒவ்வொன்றின் முன்னிலும் ஒரு விளக்கேற்றி வைத்து,
எல்லாவற்றையும் திறந்து, இடையிலே நின்று,
மின்னும் குவைகளின் மீது கண்ணோட்டி மகிழ்வேன்.

(மெழுகுவத்திகளை ஏற்றி, பெட்டிகளை ஒன்றன்

பின் ஒன்றாகத் திறக்கிறான்).

அரசாள்கின்றேன் நான்!... ஆ, என்ன அற்புத ஒளிர்வு!
அடங்கிய தெனக்கு, ஆற்றல் மிக்கதென் வல்லரசு;
என் இன்பம், மானம், இசை, யாவுமே இதில் இலகும்!
அரசாள்கின்றேன் நான்... ஆனால் எனக்குப் பின் இந்த
ஆட்சிக்கு உரியவன் யார்? என் அருமை மகன் தான்!
உன்மத்தன், ஊதாரி, ஒன்றும் அறியாத சிறுவன்,
விடர்கள், வெறியாடும் வீணர்கள் விரும்பும் உறவன்!

என் மூச்சு நின்றதுமே அவன், ஆ, அவன்! இங்கே,
நிம்மதி நிலவும் பேச்சற்ற நிலவறைக்குள்,
ஆசை மிகுதியால் அடி வருடும் அற்பர் கூட்டம்
புடைசூழப் புகுந்து, இந்தச் சாவிகளை எனது
பிணத்திடமிருந்து கள்ளத்தனமாய்ப் பிடுங்கி,
பெருஞ் சிரிப்புடன் பெட்டிகளைத் திறந்திடுவான்.
நான் திரட்டிய நவநிதி நாணம் இல்லாத
பட்டுடைகளின் துளையிட்ட பைகளில் பாயும்.
புனிதப் பாண்டங்களை உடைப்பான், புரவலர்க்கே
உரிய மஞ்சனத் தைலத்தை ஊற்றுவான் சேற்றில்—
அழிப்பான் செல்வத்தை... அதற்கவனுக் கென்ன உரிமை?
சும்மா கிடைத்ததோ எனக்கிந்தச் சொத்து அனைத்தும்?
பகடை உருட்டிப் பணக் குவியல்களை வாரிச்
சுறண்டிக் கொள்ளும் சூதாடி போல் விளையாட்டாய்த்
திரட்டினேனோ செல்வத்தை? இதன் விலையாக
அகம் கசந்திட அடக்கிய ஆசைகள் எத்தனை,
கட்டுப்படுத்திய வெறிகள் எத்தனை, கடுமை
நிறைந்த எண்ணங்கள், நித்தக் கவலைகள், உறக்கம்
இல்லா இரவுகள் எத்தனை செலுத்தினேன் என்று
யார் அறிவார்? இன்றேல், என் நெஞ்சம் உணர்விழந்து,
பாசி பிடித்துப் பாசம் அற்றுப் போயிற்றோ? எனக்கு
விருப்பங்கள் எழவில்லையோ? இதயத்தை விலங்காய்க்
கூருகிரால் வகிரும் மனச்சான்றென்னைக் குத்தி
வதைத்திடவில்லையோ? பாழும் மனச்சான்று—அழையா
விருந்தாளி, சலிப்புறுத்தும் வெற்றுப் பேச்சாளி, கொடுத்த
கடனைப் பெறக் கிட்டி கட்டிடும் காட்டாள், நிலாவை
மங்கச் செய்து, கல்லறைகளில் பிணங்களை மருட்டி,
விரட்டும் பேயள் மனச்சான்று—விட்டதோ என்னை?
பாடுபட்டுத் தேடு பணத்தை முதலில், அதன் பின்,
உதிரம் கொட்டிச் சேர்த்ததைச் சூறைவிட உள்ளம்
ஒருப்படுகிறதா, பார்ப்போம். ஊதாரிகள் பார்வை
படாமல் நிலவறையைப் பாதுகாக்க முடிந்தால்,
எவ்வளவு நன்றாய் இருக்கும்! புதை குழி விட்டு
வெளி வந்து, பெட்டிகளின் மேலே அமர்ந்து, காக்கும்
ஆவி உருவாகி, அருநிதியை இன்று போன்றே
பேணிட முடிந்தால் பெற்றிடுவேன் பேரின்பம்!..

## காட்சி 3

(அரண்மனையில்)

ஆல்பெரும் கோமகனும்

ஆல்பெர்

கோமகனே, நம்புங்கள் என்னை, கொடிய வறுமை
தரும் இகழ்வைச் சகித்தேன் மிக நீண்ட காலம்.
எல்லை மீறிப் போன பின்பே இங்கு வந்தேன், இன்றேல்,
முறையிட மாட்டேன் உங்கள் முன்.

கோமகன்

அறிவேன், அறிவேன்.

உயர்குடிப் பிறந்த உங்கள் போன்றோர் தந்தை மீது
சாட்ட மாட்டார் கூற்றம் சற்றேனும் தவிர்க்க முடிந்தால்.
வீண் பழி தூற்றிடும் வீணர்கள் குறைவே... நீங்கள்
கவலைப்படாதீர்கள், காண்பேன் உங்கள் தந்தையாரைத்
தனிமையில், அப்போது பரிந்துரைப் பேன் தக்கவாறு.
எவ்வளவோ காலம் இருவரும் எதிர்ப்படவில்லை.
இன்று வருவார். என் பாட்டனாரின் நண்பராக
இருந்தார் அவர். நினைவிருக்கிற தெனக்கு, என்னைத்
தம் குதிரை மேலே ஏற்றி, என்றன் தலை மீது
கோயில் மணி போன்ற கனத்த தலைக்காப்பைக் குல்லாய்
போல வைப்பார்.

(வெளியே பார்க்கிறான்.)

அதோ வருபவர் அவர்தாம் போலும்.
சரிதானா?

ஆல்பெர்

சரிதான், கோமானே.

கோமகன்

பக்கத்து அறைக்குள்
போய் இருங்கள், அழைப்பேன் வேண்டும் போது.

(ஆல்பெர் வெளியேற, பிரபு வருகிறான்.)

பிரபுவே,
உங்கள் உற்சாகமும் உடல்நலமும் கண்டு களித்தேன்.

பிரபு

ஆணைப்படி வர முடிந்ததில் மகிழ்ந்தேன் அடியேன்.
சித்தமாய் உள்ளேன் தேவரீர் இடும் பணி செய்ய.

கோமகன்

நீங்களும் நானும் பிரிந்தோம் நெடுங்காலம் முன்பு.
என்னை நினைவிருக்கிறதா?

பிரபு

கோமானே, எனக்கா?
அன்றிருந்த அதே சிறுவரைக் காண்கிறேன் இன்றும்.
ஒரே துருதுருப்பை நீங்கள். உங்கள் தாதை
என்னைப் பிலிப்பென்று வழக்கம் போல் அழைத்து,
''சொல்லு,
இன்னும் ஆண்டுகள் ஓர் இருபதில் நானும் நீயும்
அசடராய்த் தோன்றுவோம் இந்த வாண்டுக்கு முன்,
அல்லவா?''
என்பார். அவர் இப்படிக் குறித்தது உங்களைத்தான்...

கோமகன்

நல்லது, புதுப்பித்துக் கொண்டோம் நம் அறிமுகத்தை.
மறந்து விட்டீர்கள் என் மன்னவையை நீங்கள் முற்றும்.

பிரபு

வயதாகி விட்டது, கோமானே, மன்னவை தன்னில்
என்ன செய்வேன்? நீங்கள் இளைஞர்; வீரர்கள் போட்டி,
விழாக் கொண்டாட்டம் விரும்புவீர்கள். ஆனால் நானோ,
ஏற்றவன் அல்ல இவற்றுக்கு. போர் மட்டும் எதிர்ந்தால்,
இருமிக் கமறிக் கொண்டேறிக் குதிரை மேல், வாளை
உருவிப் பகைவரை ஒடுக்கிட விரைவேன் உடனே.
உங்கள் தொண்டுக்கின்னும் உரமுண்டென் முதிய
உடலில்.

கோமகன்

உங்கள் ஈடுபாட்டை அறிவேன்; உற்ற நண்பர் நீங்கள்
என் பாட்டனுருக்கு; என் தந்தையார் உங்களை மதித்தார்.
விசுவாசம் உள்ள பிரபு வீரராய் நானும்
எண்ணினேன் உங்களை எப்போதும்—வாருங்கள், அமர்
வோம்.

உண்டா குழந்தைகள் உங்களுக்கு?

பிரபு

மகன் ஒருவன்.

கோமகன்

இங்கே அவனை நான் ஏன் காண்பதில்லை? உங்களுக்கு
அரசவை அலுத்துப் போயிற்று; ஆனால் அவனுக்கோ,
வயதுக்கும் பதவிக்கும் ஏற்றது மன்னவை வாழ்வு.

பிரபு

இரைந்திடும் பெருங்குடி வாழ்வை என் மகன் விரும்பான்;
ஏக்கமும் கூச்சமும் உள்ளது அவனது இயல்பு.
என் கோட்டையைச் சூழ்ந்த காட்டிலே எப்போதும் சுற்றி
அலைகிறான் இள மான் போல்.

கோமகன்

அட, நல்லதல்ல
அவன் கூசுவது. பழக்குவோம் அவனை இன்றே
விருந்துகள், நடனங்கள், வீரப் போட்டிகள் தமக்கே.
அனுப்புங்கள் மகனை என்னிடம்; அவனுக்குத் தக்க
மானியம் செலவுக்கு வழங்கிடுங்கள்... உங்கள்
முகம் சுளித்திடக் காண்கிறேன், வழியில் மற்றும்
களைத்துப் போனீர்கள் போலும்.

பிரபு

கோமானே, களைப்பால்
அல்ல, உங்கள் சொற்களாலே அடைந்தேன் கலக்கம்.
உங்களிடம் இதை ஒப்புக் கொள்ளவே விரும்பேன்.
மகனைப் பற்றி எதை உங்களிடம் மறைக்க
நினைத்தேனோ, அதைச் சொல்லும்படி என்னை நீங்கள்

வற்புறுத்தி விட்டீர்கள். கோமானே, என்றன் மைந்தன்
அருகனே அல்லன் உங்கள் அருளுக்கோ, அன்புக்கோ.
கெட்டவன் செயல்கள், கீழோர் பொல்லாங்குகள், இவற்றில்
பாழ்படுத்துகிறுன் இளமையை...

கோமகன்

பாவம், தனிமை
இதற்குக் காரணம் பிரபுவே. இளேயோரை
உலேப்பவை செயலின்மையும் ஒதுக்கமுந்தாம்.
அனுப்புங்கள் நம்மிடம்: அவன் மறந்து விடுவான்
தனிமையால் வந்த தகாப் பழக்கங்கள் எல்லாம்.

பிரபு

கோமானே, பொறுத் தருளுங்கள் நான் கூறுவதனே:
இணங்கிட உங்கள் சொல்லுக்கென்ளுல் இயலாது...

கோமகன்

ஏனே?

பிரபு

வற்புறுத்தாதீர்கள் இந்த முதியவனே...

கோமகன்

அழுத்திக் கோருகிறேன்: அறிவியுங்கள் எனக்கு
மறுப்பின் காரணம் தன்னே.

பிரபு

மகன் மீதில் எனக்குக்
கோபம்.

கோமகன்

எதனுலே?

பிரபு

கொடுங் குற்றம் செய்ததாலே.

கோமகன்

என்ன குற்றம் என்பதனேயும் இயம்பிடுங்கள்.

பிரபு

விடுங்கள், கோமானே...

கோமகன்

இது மிக விந்தை, பிரபுவே,
அல்லால் மகனுக்காய் நாணுகின்றீர்களோ?

பிரபு

ஆமாம்.

கோமகன்

என்னதான் செய்திட்டான்?

பிரபு

அவன்... அவன் என்னைக் கொல்ல
விரும்பினான்.

கோமகன்

கொல்லவா? அந்தக் கொடிய வீணனை
நீதி மன்றத்தில் நிறுத்தி விசாரிப்போம் குற்றத்தை.

பிரபு

அவன் விழைவதென் சாவுதான் என்பதை அறிவேன்,
ஆனாலும் மெய்ப்பிக்க விரும்பவில்லை நான் அதனை.
தெரியும் எனக்கிங்கவன் திட்டமிட்ட சேதி
என்னை...

கோமகன்

என்ன?

பிரபு

சூறையிட.

(ஆல்பெர் அறைக்குள் பாய்கிறான்.)

ஆல்பெர்

பொய்யர் நீர், பிரபுவே.

கோமகன்

(ஆல்பெரிடம்)

எப்படித் துணிந்தீர்?..

பிரபு

இங்கேயா நீ? என்ன துடுக்கு!
என்னைக் கோமகன் முன் பொய்யன் என்று குற்றம் சாட்ட
எப்படித் துணிந்தாய்? என்ன, நான் சொல்வது பொய்யா?
என்னை, என்னை... இன்றேல், நான் பிரபு வீரன் இல்லையோ?

ஆல்பெர்

பொய்யர் நீர்.

பிரபு

ஐயோ, இன்னும் புவி பிளக்கவில்லையே!
வாளே தீர்க்கட்டும் நம் வழக்கை. இந்தா சவால், ஏற்றுக்
கொள்!

(இருவர் போருக்கு அறை கூவும் அடையாளமாகக் கையுறையை எறிகிறான். மகன் அதைப் பாய்ந்து எடுத்துக் கொள்கிறான்.)

ஆல்பெர்

நன்றி. தந்தையாரின் முதல் நன்கொடையும் இதுவே.

கோமகன்

என்ன கண்டிட்டேன் நான்? என்ன நடந்ததென் முன்னே?
வயதான தந்தையின் அறைகூவலை மகன் ஏற்றானா?
கோமகன் பட்டத்தை நான் சூடிய காலம் கொடிது!
மூடுங்கள் வாயை: வெறியரே, முற்றாப் புலிக்குட்டீ!
இந்தச் சச்சரவை விடுங்கள் இருவரும் இத்துடன்!

(மகனிடம்)

கையுறையை இந்தக் கணமே தந்திடுங்கள்!

(அதைப் பிடுங்கிக் கொள்கிறான்.)

ஆல்பெர்

(ஒரு புறமாக)
அடடா!

கோமகன்

உகிர்களை உள்ளுக்குள் புகுத்தி இருக்கிறான், பாவி!
போங்கள் இங்கிருந்து. நானாக அழைக்கும் போதே
வரலாம் நீங்கள் மீண்டும், அதன் முன் வாராதீர்கள்.

(ஆல்பெர் வெளியேறுகிறான்.)

ஆக்கம் கெட்ட முதியவரே, அறவே உமக்கு
வெட்கமாய் இல்லையா...

பிரபு

மேதகு கோமானே, பொறுங்கள்...
முடியவில்லை நிற்க என்னாலே... என் முழங்கால்கள்
தளர்கின்றன... மூச்சு முட்டுகிறது... எங்கே சாவிகள்?
எனது சாவிகள், சாவிகள்!..

கோமகன்

இறந்திட்டார். இறைவா!
கோரமான காலம்! கொடுமையுள்ள இதயங்கள்!

1830

## வலைஞனும் மீனும்

வாழ்ந்தான் கிழவன் தன் கிழவியுடன்
ஆழ்ந்த நீலக் கடலின் அருகே.
இடிந்த மட்குடிலில் வசித்திட்டார்
தொடர்ந்து முப்பத்து மூன்று ஆண்டுகளாய்.
கிழவன் பிடிப்பான் வலையால் மீன்,
கிழவி நூற்பாள் கையால் நூல்.
வீசினான் வலை ஒரு முறை கடலில்,
பாசிதான் வந்ததுவே வலையில்.
மறு முறை போட்டான் வலையினையே,
வெறுங் கடற்புல் அதில் வந்ததுவே.
மூன்றும் முறை வலை வீசினனே,
மீன் ஒன்று அதில் அகப்பட்டதுவே.
வெறும் மீன் அல்ல, பசும்பொன்மீன்!
சிறு மீன் கெஞ்சி இறைஞ்சியதே,
மனிதக் குரலில் மொழிந்ததுவே:
''எனை நீ, பாட்டா, கடலில் விடு!
அரு நிதி ஈடாய்த் தருவேனே:
விரும்புவது எல்லாம் கேள், கொடுப்பேன்.''
பெரியவன் வியந்தான், பயந்துவிட்டான்:
முப்பத்து மூன்றாண்டு வலை வீசியும் அவன்
செப்பிடும் மீன் குரல் கேட்டதில்லை.
பொன் மீனைக் கடலிலே விட்டுவிட்டே,
இன் மொழி அதனிடம் சொன்னான்:
''ஆண்டவன் உனைக் காக்க, பொன்மீனே!
வேண்டாம் எனக்கு உன்றன் ஈடே;

நீலக் கடலிலே நீந்திடுவாய்,
கோலப் பரப்பில் திரிந்திடுவாய்.''

திரும்பினன் கிழவன் கிழவியிடம்,
பெரும் புதுமை பற்றிய பேசலானன்;
''ஒரு மீனை இன்று பிடித்தேன் நான்,
வெறும் மீன் அல்ல, பசும்பொன் மீன்;
பேசிற்று நமது மொழியில் அது,
வீசிடு கடலில் என்றிட்டது,
அரு நிதி ஈடாய்த் தர வந்தது,
விரும்புவது எல்லாம் ஈவேன் என்றது.
பெற அதனிடம் ஈடு துணிந்திலேன் நான்,
வெறுமே நீலக் கடலில் விட்டிட்டேன்.''
திட்டினள் கிழவி கிழவனையே:
''முட்டாள் நீ, உருப்படாக் கட்டை அடா!
விட்டிட்டாய் மீனை ஈடு பெறுமல்!
தொட்டியேனும் கேட்டுப் பெற்றிடாயோ,
முற்றும் பிளந்திட்டதே நம் தொட்டி.''

கிழவன் சென்றன் நீலக் கடலினுக்கு;
எழு கடல் சற்றே பொங்கிடக் கண்டான்.
பொன் மீனைக் கூவி அழைத்திட்டான்,
சின்ன மீன் நீந்தி வந்தே கேட்டது:
''என்ன வேண்டும், பாட்டா, உன்றனக்கு?''
சொன்னன் கிழவன் அதை வணங்கி:
''இரக்கம் காட்டு என்மேல் மீனரசி,
உரக்க வைதாள் என்னை என் கிழவி,
முதியவன் என்னை நச்சரிக்கின்றள்:
புதிய தொட்டி வேண்டும் என்கின்றள்;
எங்கள் தொட்டி முற்றும் பிளந்திட்டது.''
தங்க மீன் இன்குரலில் சொல்லிடும்:
''வருந்தாதே, நலமே நீ வீடு செல்வாய்,
இருந்திடும் அங்கே ஓர் புதிய தொட்டி.''
முதியவன் திரும்பினன் கிழவியிடம்,
புதிய தொட்டியை அவளிடம் கண்டான்.
திட்டினள் கிழவி இன்னும் கடுப்பாய்:

''முட்டாள் நீ, உருப்படாக் கட்டை அடா!
தொட்டியைக் கேட்டாயே, மடமட்டி!
தொட்டியில் வெகு லாபம் கிட்டிடுமோ?
மூடா, மீனிடம் திரும்பிச் செல்வாய்;
வீடு வேண்டும் என்று கும்பிட்டுக்கேள்.''

உடனே சென்ருன் அவன் கடலினுக்கு
(கடலின் நீல நீரில் கலக்கம் கண்டான்).
பொன் மீனைக் கூவி அழைத்திட்டான்,
சின்ன மீன் நீந்தி வந்தே கேட்டது:
''என்ன வேண்டும், பாட்டா, உன்றனக்கு?''
சொன்னுன் கிழவன் அதை வணங்கி:
''என்மேல், மீனரசி, இரக்கம் காட்டு,
இன்னும் சினந்து வைதாள் கிழவி,
முதியவன் என்னை நச்சரிக்கின்ருள்;
புதிய வீடு கேட்கின்ருள் வம்பி.''
அரும் பொன்மீன் இன்குரலில் சொல்லிடும்:
''வருந்தாதே, நலமே திரும்பிச் செல்வாய்,
இருந்திடும் அங்கே ஓர் புதிய வீடு.''
வலைஞன் சென்ருன் தன் மட்குடிலுக்கு,
இலை அங்கே குடிலின் சுவடுதானும்;
தெள்ளொலி ஆர்ந்த பெரிய அறை,
வெள்ளைப் பூச்சுச் செங்கல் புகைபோக்கி,
ஓக் பலகை வாயில் கொண்ட வீட்டை
நோக்கினுன். கிழவி சன்னல் அருகே
உட்கார்ந்தே முழு மூச்சாய்த் திட்டலானுள்:
''முட்டாள் நீ, உருப்படாக் கட்டை அடா!
மட்டி, சிறு வீட்டைக் கேட்டு வந்தாய்!
சட்டெனப் போய் மீனைக் கும்பிட்டுக் கேள்:
உழத்தியாய் உழன்றிடேன், மரபில் பெருங்
கிழத்தியாய் வாழ விரும்புகின்றேன்.''

சென்ருன் அவன் நீலக் கடலினுக்கு
(கொந்தளித்தது நீலக் கடல் இப்போது).
பொன்மீனைக் கூவி அழைத்திட்டான்.
சின்ன மீன் நீந்தி வந்தே கேட்டது:

''என்ன வேண்டும், பாட்டா, உன்றனக்கு?''
சொன்னான் கிழவன் அதை வணங்கி:
''என்மேல், மீனரசி, இரக்கம் காட்டு!
முன்னிலும் கிழவி மதி கெட்டிட்டாள்,
கிழவன் என்னை நச்சரிக்கின்றாள்:
உழத்தியாய் இருந்திடேன், மரபில் பெருங்
கிழத்தியாக ஆசை எனக்கு என்கிறாள்.''
உரைத்தது பொன்மீன் கிழவனிடம்:
''வருத்தம் வேண்டாம், நலமே நீ செல்வாய்.''

திரும்பினான் கிழவன் தன் கிழவியிடம்.
பெரு மாளிகை கண்டு மலைத்துவிட்டான்.
தலை வாசலில் நின்றாள் அவன் மனைவி
விலைமிக்க ஸேபல்தோல் சிற்றங்கியும்,
இழைத்த பொற்சரிகைத் தலையணியும்,
கழுத்தில் செறிந்த நன்முத்துக்களும்,
விரல்களில் தங்க மோதிரங்களும்,
இரு கால்களில் செஞ்சோடுகளுமாய்.
துடியாகப் பணி செய்த தொழும்பர்களை
முடி பற்றி இழுத்தாள், அடித்தாள் அவள்.
சொன்னான் கிழவன் கிழவியிடம்:
''மன்னு பெருஞ் சீமாட்டி, வணக்கம்!
உன்னுளம் இப்போது நிறைவுற்றதோ?''
முதியோளோ அவன்மீது சீறி வீழ்ந்தாள்,
குதிரைலாயப் பணிக்கு ஏவிவிட்டாள்.

கழிந்தன ஓரிரு வாரங்கள்தாம்,
கிழவியோ இன்னும் மதி கெட்டிட்டாள்.
பின்னும் மீனிடம் கிழவனை ஏவினாள்:
''இன்னொரு முறை மீனை வணங்கிடுவாய்:
பெருங்குலக் கிழத்தியாய் இருந்திடேன் நான்,
விரும்புவேன் கட்டற்ற அரசி ஆக.''
அரண்டான் கிழவன், அழுத்திச் சொன்னான்:
''புரண்டுவிட்டதோ, மாதே, உன் மூளை?
பீடு நடையும் பேச்சும் அறியாய்!
நாடெங்கும் நகைப்புக்கு ஆளாவாய் நீ.''

முன்னிலும் சினங்கொண்டாள் முதியவள்தான்,
கன்னத்தில் கணவனை அறைந்துவிட்டாள்.
''பெருங்குலக் கிழத்தி நான், என்னுடனே,
வெறும் உழவா, வாதாடத் துணிந்தாய்?
மட்டி, ஒழுங்காகக் கடலுக்குப் போ;
நெட்டிச் செல்வார் இன்றேல் என் ஏவலர்.''

புறப்பட்டான் கிழவன் கடலினுக்கு
(கறுத்திட்டது நீலக் கடல் இப்போது).
பொன்மீனைக் கூவி அழைத்திட்டான்.
சின்ன மீன் நீந்தி வந்தே கேட்டது:
''என்ன வேண்டும், பாட்டா, உன்றனக்கு?''
சொன்னான் கிழவன் அதை வணங்கி:
''கருணை காட்டு என்மேல், மீனரசி!
முரணுகிறாள் மீண்டும் என் கிழவி:
பெருங்குலக் கிழத்தியாய் இருந்திடாளாம்,
விரும்புவேன் அரசி ஆக என்கிறாள்.''
''ஒன்றும் வருந்தாதே, நலமே செல்வாய்!
நன்று! முதியவள் அரசி ஆவாள்!''
என்றது பொன்மீன் கிழவனிடம்.

விரைவில் மீண்டான் அவன் கிழவியிடம்.
அரச மண்டபங்களை முன்னே கண்டான்.
ஒரு மண்டபத்தில் அவன் மனைவி
அரியணை அமர்ந்து விருந்துண்டாள்;
பிரபுக்கள், சீமான்கள் பரிமாறினர்,
பிற நாட்டு நறு மது ஊற்றித் தந்தார்;
உண்டாள் அச்சிட்ட பணியாரம்;
கண்டோர் அஞ்சிடும் மெய்க் காவலர்கள்
கோடரிகள் ஏந்திச் சூழ நின்றார்.
பீடு கண்டே வெருண்டான் கிழவன்!
கிழவியின் அடிகளில் முடி தாழ்த்தி,
மொழிந்தான்: ''வணக்கம், மாண் பேரரசி!
உள நிறைவு உற்றாயோ இப்போதேனும்?''
அவனை நோக்காமலே கிழவி கண்ணால்
இவனை விரட்டுக எனக் குறித்தாள்.

சட்டெனப் பிரபுக்களும் சீமான்களும்
நெட்டித் தள்ளினுர் முதியவனே.
வெளியிலோ காவலர் பாய்ந்துவந்தார்,
எளியனே மழுக்களால் வெட்டப் பார்த்தார்.
கெக்கலி கொட்டினுர் மக்களுமே:
''மக்குக் கிழவா, வேண்டும் உனக்கு!
முரடா, உனக்கு இது நல்ல பாடம்:
உரிமை பாராட்டாதே தகுதி இன்றி!''

கழிந்தன வாரங்கள் ஒன்றிரண்டு,
கிழவியோ இன்னும் மதி கெட்டிட்டாள்:
கணவனே இட்டுவரப் பணித்தாள்.
பணியாளர் அவனேத் தேடிக் கொணர்ந்தார்.
சொன்னுள் கிழவி கிழவனிடம்:
''சின்ன மீனிடம் போய் வணங்கிடுவாய்.
தரை நாட்டு அரசியாய் இருந்திடேன் நான்,
கரையில்லாக் கடலில் வாழ்ந்திடவும்,
உரை பொன்மீன் என் பணி செய்திடவும்,
ஏவலளாய் என்பால் இருந்திடவும்,
ஆவல் கொண்டேன் கடல் அரசியாக.''

வரமில்லே மறுத்திடக் கிழவனுக்கே,
ஒரு சொல் எதிர் பேசத் துணிவுமில்லே.
சென்ருன் அவன் நீலக் கடலினுக்கு,
கண்டான் கரும் புயல் கடல் மீதிலே:
அலேகள் சீற்றத்துடன் பொங்கினவே,
நிலேயின்றிப் புரண்டு முழங்கினவே.
பொன் மீனேக் கிழவன் அழைத்திட்டான்,
சின்ன மீன் நீந்தி வந்தே கேட்டது:
''என்ன வேண்டும், பாட்டா, உன்றனக்கு?''
சொன்னுன் கிழவன் அதை வணங்கி:
''ஏழைமேல் இரக்கம் கொள், மீனரசி!
பாழும் கிழவியை என்ன செய்வேன்?
தரையில் அரசியாய் இருந்திடாளாம்,
கரையிலாக் கடலில் வாழ்ந்திடவும்,
நீயே அவளுக்குப் பணி செய்யவும்,

ஏவலளாய் உடன் இருந்திடவும்
ஆவல் கொண்டாள் கடல் அரசியாக.''
ஏதுமே கூறாமல் மீன் வாலினால்
மோதிற்று நீரை, பின் முக்குளித்துக்
கடலுக்குள் ஆழத்தில் போய்விட்டது.
நெடு நேரம் காத்திருந்த கிழவன்,
விடையின்றித் திரும்பினான் கிழவியிடம்—
பார்க்கிறான்: முன்போன்றே சிறு மட்குடில்;
படி மேல் உட்கார்ந்திருந்தாள் கிழவி,
உடைந்த தொட்டி கிடந்தது அவள் முன்.

*1833*

## தங்கச் சேவலின் கதை

கடல்கள், மலைகளுக்கு அப்பாலே,
நெடிய தொலைவில் இருந்த நாட்டை
ஆண்டான் புகழ் வேந்தன் ததோன்.
தூண்டும் இளமை மிடுக்கில் அயலார்
அஞ்சத் தாக்கி* அழிம்பு செய்தான்.
கொஞ்சம் முதுமை வந்ததுமோ,
போரிலிருந்து ஓய்வு பெற்றுச்
சீராய் வாழ விருப்பம் கொண்டான்.
ஆனால் வேற்றூர் கிழ மன்னனுக்கு
நாளு விதத்தில் தீங்கு இழைத்துத்
துன்புறுத்தத் தொடங்கிடவே,
வம்பர் தாக்கிலிருந்து நாட்டைக்
காப்பதற்காய்ப் பெரும் படைகள்
நாற்புறமும் நிறுத்தும் தேவை
வந்தது. அரசின் படைத் தலைவர்
எந்த நேரமும் விழிப்பாய்
நாட்டைக் காத்தார், எனினும் பகைவர்
மீட்டும் மீட்டும் தொல்லை தந்தார்.
அரணைத் தெற்கில் உறுதி செய்தால்,
முரணும் அயலார் கிழக்கில் மொய்த்தார்.
இங்கே காத்தால் துணிந்த மாற்றூர்
பொங்கும் கடல் வழிப் புகுந்தார்.
சீற்றக் கண்ணீர் சிந்தி வேந்தன்
ஆற்றாமையால் உறக்கம் நீத்தான்.
கவலை வாழ்வும் வாழ்வதாமோ?

அவலம் நீங்கும் வழியைக் காண
உதவுமாறு வேண்டிக் கணியன்,
முதிய அறிவன், துறவன் தன்னை
வணங்கி அழைத்து வரப் பணித்தான்.

கணியன் வந்து அரசன் முன்பு
தன் கைப் பையிலிருந்து சின்னத்
தங்கச் சேவல் தனை எடுத்தான்.
''இந்தப் பறவையைக் கடம்பின் மேல்
குந்த வைப்பாய், காவலன் போல்
என்றன் தங்கச் சேவல் காக்கும்
உன்றன் அரசை. எங்கும் அமைதி
இருக்கும் போது அசைதல் இன்றி
இருக்கும் குந்தி இதுவும், ஆனால்
எங்கிருந்தும் சண்டை மூளும்
இங்கிதமோ, படையெடுப்பு,
அல்லால் அறியாத வேறு
தொல்லை வரும் குறியோ கண்டால்,
மறு கணம் கொண்டையை நிமிர்த்தி,
சிறகடித்துக் கொக்கரித்து,
அந்தத் திக்கில் திரும்பிக் கொள்ளும்''
என்று வேந்தனுக்கு உரைத்தான்.
மன்னன் துறவனுக்கு நன்றி
சொன்னதோடு வாக்கும் தந்தான்:
''நல்ல உதவி செய்தீர், நானும்
இல்லை என்று சொல்லிடாமல்,
உம் முதல் விருப்பம் எதையும்
செம்மையாக நிறைவு செய்வேன்.''

சேவல் உயரக் கடம்பில் இருந்து
காவல் காத்தது அந்த நாட்டை.
சிறு கெடுகுறி தெரிந்த போதும்
மறு நொடியில் உடல் சிலிர்த்து,
ஆடிச் சிறகுகளை அடித்து,
கேடு வந்த திக்கை நோக்கி,
கத்திற்று: ''கொக்-கொக்கரக்கோ.

சற்றும் கவலை இன்றிப் படுத்து
நாட்டை ஆள்வாய்!'' அரசன் சீறிக்
கேட்டை விலக்க விரைந்தான், உடனே
பகைவர் அடங்கிப் பணிந்து போனார்,
இகலும் துணிவை இழந்து விட்டார்.

ஆண்டோர் இரண்டு நிலவிற்று அமைதி;
மீண்டும் குந்தி இருந்தது சேவல்.
பின்னர் ஒரு நாள் கூச்சல் கேட்டு
மன்னன் தூக்கம் கலைந்து எழுந்தான்.
''எம் அரசே, விபத்து! எழுவாய்!
எம்மைக் காப்பாய், மக்கள் தந்தாய்!''
என அழைத்தான் படைத் தலைவன்.
கனவு நிலையில் கேட்டான் வேந்தன்:
''என்ன சேதி, பெருங்குடியீர்?
என்ன விபத்து?.. ஊம்?.. யார் அங்கே?''
சொன்னான் படைகளின் தலைவன்:
''சின்னச் சேவல் கத்துதல் கேள்.
நகரில் எங்கும் அச்சம், ஓலம்.''
நகர்ந்து வெளியே பார்த்த மன்னன்
சேவல் சிறகுகளை அடித்துக்
கூவிக் கிழக்கே திரும்பக் கண்டான்.
''குதிரைகள் மேல் ஏறிப் பாய்ந்து
எதிரிகளை விரட்டிடுவீர்!''
என்றான் வேந்தன். மூத்த மைந்தன்
சென்றான் பெரும் படையுடனே.
அமைதி உற்றது சேவல், நகரில்
அமளி நின்றது, படுத்தான் மன்னன்.

நாட்கள் எட்டு கழிந்தும் போன
ஆட்கள் பற்றி அறிவிப்பு இல்லை.
மோதல் நேர்ந்ததா, இல்லையா?
சேதி எதுவும் தெரியவில்லை.
சேவல் மீண்டும் கத்த, அரசன்
ஏவினான் இன்னொரு படையை.
பெரிய மகனை மீட்பதற்குச்

சிறியவனை அனுப்பி வைத்தான்.
நின்றது பறவைக் கத்தல், ஆனால்
சென்றவர் குறித்தோ, சேதி இல்லை!
கழிந்தன இன்னும் எட்டு நாட்கள்,
உழன்றனர் மக்கள் பேரச்சத்தில்.
சேவல் மறு முறை கத்திற்று.
காவலன் மீண்டும் படை திரட்டி,
வான முதுவரை வணங்கித்
தானே கிழக்கில் நடத்திச் சென்றான்.

நடந்தார் வீரர் இரவும் பகலும்,
அடைந்தார் அளவிலாத சோர்வு.
சமர்க் களமோ, பாசறையோ,
அமை குன்றோ, புதைமேடோ
எதுவும் காணாமையால் மன்னன்
"இது என்ன மாயம்?" எனத் திகைத்தான்.
அலைந்த பின்னர் எட்டு நாட்கள்
மலைகளூடு சென்றார். வானை
முட்டும் மலைத் தொடர் நடுவே
பட்டுக் கூடாரத்தைப் பார்த்தார்.
சுற்றும் விந்தை மௌனம்; குறுங்
கற்பிளவில் பிணக் குவியல்.
பாய்ந்தான் கூடாரத்தின் பக்கம்
வேந்தன்... அந்தோ, விபரீதம்!
தலை, மேனிக் கவசம் இன்றி
நில மீதில் கிடந்திட்டார்
ஒருவர் உடலை ஒருவர் துளைத்து
அரு மைந்தர் இருவருமே.
மிதிபட்டுக் குருதி பாய்ந்து,
சதசதத்த புல்லில் அவர்
இரு பரிகள் திரிந்தனவே.
"அருமை மக்காள், என் செய்தீர்?
சிக்கி விட்டீர் பகை வலையில்
ஒக்க, சிங்கக் குட்டிகளே!
இனி நானும் இறந்தொழிவேன்!"
என அழுதான் கிழ மன்னன்.

உடன் அழுதார் வீரர் எல்லாம்,
நெடும் பள்ளத்தாக்கிலிருந்து
வந்தது அனல் பெருமூச்சு,
அதிர்ந்தது மலை அதன் நெஞ்சம்.
திடுமெனத் திறந்தது கூடாரம்...
மடமயில், ஷமகா அரசி,
புலர் பொழுதாய் ஒளி வீசி,
மலர் முகத்தோடு எதிர் கொண்டாள்.
வரவேற்றவளைக் கண்டு,
இரவுப் புள் இளங்கதிர் முன்
கூசுதல் போல் பேச்சிழந்து,
ஆசை பொங்க அரசன் நின்றான்.
மறந்து விட்டான் இரு புதல்வர்
இறந்ததனை அவள் எதிரே.
புரவலன் முன் முறுவலித்து,
பரிவோடவன் கை பிடித்து,
தன் இருக்கைக்கு இட்டுச் சென்ற
பொன் மடந்தை மன்னனுக்குப்
பல் சுவை சேர் உணவூட்டி,
நல் மஞ்சம் தனில் கிடத்தி,
அவனை இளைப்பாற வைத்தாள்.
அவனோ, தன் வசம் இழந்து,
அவளுக்கே அடி பணிந்து,
அவள் புரிந்த மாயத்தில்
சொக்கிப் போய், ஒரு வாரம்
சொர்க்க சுகம் அனுபவித்தான்.

முடிவில், போர்ப் படையுடனும்
மடமங்கை தன்னுடனும்
தேரேறிப் புறப்பட்டான்
பேரரசன் ஊரை நோக்கி.
தெளித்தவாறு மெய்யொடு பொய்
களித்து முன் பாய்ந்தது வதந்தி.
வெற்றி முழக்கோடு மக்கள்
கொற்றவனைத் தலைநகரின்
வாயிலருகில் எதிர்கொண்டு,

போயினர் தேரைத் தொடர்ந்து.
அரசியோடு வந்த மன்னன்
நெரியும் கூட்டத்தினில் வெள்ளை
அரபுத் தொப்பி அணிந்து, அன்னப்
பறவைத் தூவி போல் நரைத்த
துறவிக் கணியனைக் கண்டான்.
''பெரியவரே, வணக்கம், நலமா?
இன்னும் கிட்ட வாரும், செல்லும்,
என்ன வேண்டும்? தருவேன்'' என்றான்.
''கணக்கு தீர்ப்போம், மன்னா'' என்றான்
கணியன். ''நினைவு இருக்கிறதா?
என் முதல் விருப்பம் எதையும்
சொன்னது போல் நிறைவேற்ற
ஒப்பி உறுதி தந்தாய் என்
அற்ப உதவிக்காய். இப்போது
பரிசு கொடு ஷமகாவின்
அரசி, இந்த அழகியினை...''
கேட்டு அரசன் மலைத்து விட்டான்.
''பாட்டா, என்ன பிதற்றுகிறீர்?
பிடித்ததோ உமக்குப் பேய்?
படித்த மூளை புரண்டிட்டதோ?
என்ன எண்ணினீர் ஐயா?
சொன்னேன் என்பது உண்மைதான்,
இறுதி ஆனால் எதற்கும் உண்டு!
துறவி உமக்குப் பெண் எதற்காம்?
போதும், நான் யார், தெரிகிறதா?
வாது வேண்டாம், நீர் கேளும்
செல்வக் குவைகள், பட்டம், பதவி,
நல்ல சாதி அரசப் புரவி,
பாதி அரசு, தருவேன்'' என்றான்.
''ஏதும் வேண்டேன் வேந்தே, நான்.
பரிசாய்த் தா ஷமகாவின்
அரசி இந்த அழகியினை!''
என்று துறவி கூற, மன்னன்
''நன்று, பெருந் துடுக்கர் நீர்.
எதுவும் கிடையாது உமக்கு,

வதை செய்வீர் உமை நீரே.
ஒழியும் உயிர் பிழைக்க வேண்டின்.
இழுத்துப் போங்கள் இவரை!'' என்றான்.
வாதிட முனைந்தான் கிழவன், ஆனால்
மோதிடல் தீது மன்னரோடு.
கொற்றவன் துறவியைத் தண்டாலே
நெற்றியில் அடிக்க, நிலத்தில் சாய்ந்து
மடிந்தான் துறவி. நகரம் முழுதும்
நடுங்கிற்று, ஆனால் நங்கை சிரித்தாள்
இ-ஹி-ஹீ என்றும் அ-ஹ-ஹா என்றும்,
இகழுக்கு அஞ்சா எழில் நஞ்சனையாள்.
உள்ளம் விதிர்த்த போதும், வேந்தன்
கள்ளியை நோக்கிக் கனிவாய் நகைத்தான்.
இப்படி நகரில் புகுதான் மன்னன்...
அப்போது கேட்டது கிண்ணென் மெல்லொலி.
எல்லோரும் காணக் கடம்பிலிருந்து
மெல்லக் கிளம்பிற்று தெங்கச் சேவல்.
தேரை நோக்கி வந்த பறவை
நேரே அரசன் மண்டை மேல் குந்தி
சிறகடித்து, உச்சந் தலையில் கொத்தி,
பறந்து போயிற்று. தேரிலிருந்து
பொட்டெனச் சரிந்து விழுந்த வேந்தன்
நெட்டுயிர்த்து, உடனே விட்டான் உயிரை.
அரசியோ, இருந்த சுவடும் இன்றி
ஒரே நொடியில் மறைந்து போனாள்.
புனைகதை, எனினும் புகட்டும் நீதி!
அனைவருக்கும் இதில் படிப்பினை உண்டு.

1834

## காலஞ்சென்ற இவான் பெத்ரோவிச் பெல்கின் கதைகள்[7]

திருமதி புரொஸ்தக்கோவா.

ஆமாம், ஐயா, குழந்தைப் பருவத்திலிருந்தே கதைகளைக் கேட்பதில் அவருக்கு விருப்பம் அதிகம்.

ஸ்கொதீனின்.

மித்ரஃபான் என்னைப் போலவே இருக்கிறான்.

மூடன்[8]

### பதிப்பாசிரியரிடமிருந்து

இ. பெ. பெல்கின் எழுதிய கதைகளை வாசகர்கள் படித்துப் பயன்பெறுவதற்காக வெளியிட முடிவு செய்த பொழுது, காலஞ்சென்ற பெல்கின் அவர்களது வாழ்க்கைச் சுருக்கத்தை முன்னுரையாகக் கொடுக்க விரும்பினோம். அதன் மூலம் நம் தாய் மொழி இலக்கியத்தை ரசிப்பவர்களின் ஆவலை ஓரளவாவது பூர்த்தி செய்ய முடியுமென்று கருதினோம். எனவே இவான் பெத்ரோவிச் பெல்கின் அவர்களது நெருங்கிய உறவினரும் வாரிசுமான மார்யா அலெக்சேயெவ்னா த்ரஃபீலினா அவர்களது உதவியை நாடினோம். துரதிருஷ்டவசமாக அவரால் நமக்கு எத்தகைய தகவலும் கொடுக்க முடியவில்லை. ஏனென்றால் காலஞ்சென்ற பெல்கினோடு எவ்விதமான தொடர்பும் எந்தக் காலத்திலும் அவருக்கு இல்லை. இவான் பெத்ரோவிச்சின் நண்பரான ஒரு குறிப்பிட்ட கனவானைச் சந்தித்தால் இது பற்றிய விவரங்கள் கிடைக்கும் என்று அவர் நமக்கு ஆலோசனை கூறினார். அதன்படி நாங்கள் அவருக்குக் கடிதம் எழுதினோம். அவரிடமிருந்து கிடைத்த திருப்திகரமான பதிலைக்

கிலே தந்திருக்கிறோம். அவருடைய கடிதத்தில் நாம் எத்தகைய மாற்றமும் செய்யவில்லை, ஏனென்றால் இக்கடிதம் பெல்கினுடைய வாழ்க்கை விவரங்களை நல்ல முறையில் சுருக்கமாகக் கொடுத்திருப்பதோடு இரண்டு சிறந்த நண்பர்களுடைய உயர்ந்த பண்புகளை எடுத்துக்காட்டும் அரிய சின்னமாகவும் அமைந்திருக்கிறது.

பெருமதிப்பிற்குரிய ஐயா!

என்னுடைய இனிய நண்பரும் கிராமத்தில் என்னுடைய அண்டை வீட்டுக்காரராகவும் இருந்த காலஞ்சென்ற இவான் பெத்ரோவிச் பெல்கின் அவர்களுடைய பிறப்பு, தொழில், குடும்ப வாழ்க்கை, குண நலன்கள், மரணம் ஆகியவை பற்றிய விரிவான விவரங்களைத் தெரிந்து கொள்ள விரும்புவதாகத் தாங்கள் இம்மாதம் 15ந் தேதியன்று எழுதிய கடிதம் இம்மாதம் 23ந் தேதியன்று எனக்குக் கிடைத்தது. உங்களுடைய இந்த வேண்டுகோளின்படி அவருடைய உரையாடல்களில் என் நினைவில் நிலைத்திருக்கும் செய்திகளையும் அவற்றோடு என்னுடைய சொந்தக் கருத்துக்கள் சிலவற்றையும் எழுதியுள்ளேன். இந்தப் பணி எனக்கு மிகவும் மகிழ்ச்சியைத் தருகிறது.

இவான் பெத்ரோவிச் பெல்கின் கொரியூகினோ என்ற கிராமத்தில் ஒரு கௌரவமான குடும்பத்தில் 1798ம் வருடத்தில் பிறந்தார். அவருடைய தகப்பனார் காலஞ்சென்ற மேஜர் (இரண்டாம் நிலை) பியோத்தர் இவானவிச் பெல்கின், த்ரஃபீலினு குடும்பத்தைச் சேர்ந்த பெலகேயா கவ்ரீலவ்னு என்ற பெண்ணைத் திருமணம் செய்துகொண்டார். அவர் செல்வந்தரல்ல. அவர் தன்னுடைய காரியங்களைத் தானே நேரடியாகப் பார்த்துக் கொள்ளும் திறமையுடையவர்; சிக்கனமானவர். அவர்களுடைய மகன் பெல்கினுக்கு மாதாகோவில் எழுத்தர் ஆரம்பக் கல்வி கற்பித்தார். பெல்கினுடைய படிப்பார்வத்துக்கும் தாய் மொழியில் எழுத வேண்டும் என்ற தீவிரமான மொழிப்பற்றுக்கும் இவரே காரணமாவார் என்று தோன்றுகிறது. 1815ம் வருடத்தில் அவர் ஜாகெர் காலாட்படைப் பிரிவில் (படைப்

பிரிவின் எண் எனக்கு நினைவில்லை) சேர்ந்து, 1823ம் வருடம் வரை அதிலிருந்தார். அவருடைய பெற்றோர்கள் அடுத்தடுத்து மரணமடைந்த காரணத்தால் அவர் இராணுவத்திலிருந்து விலகிக் கொண்டு கொரியூகிநோ கிராமத்தில் தம்முடைய பரம்பரைப் பண்ணையில் வசிக்க ஆரம்பித்தார்.

அவருடைய காலஞ்சென்ற தகப்பனார் அதிகக் கண்டிப்பான முறையில் பண்ணையை நிர்வகித்தார். ஆனால் இவான் பெத்ரோவிச் பண்ணை நிர்வாகத்தை மேற்கொண்ட பொழுது தமது இளகிய மனதாலும் அனுபவக் குறைவினாலும் நிர்வாகத்தில் கண்டிப்பைக் குறைத்தார். இதன் விளைவாக அவருடைய நிலங்கள் கவனிப்பாரற்றுக் கிடந்தன. முன்பு பண்ணையை நிர்வாகம் செய்து வந்த கிராமப் பெரியவர் திறமையானவர், பொறுப்புணர்ச்சி மிக்கவர். ஆனால் விவசாயிகள் அவரைக் குறை கூறினார்கள் (வழக்கம் போல). பெல்கின் இவரைப் பொறுப்பிலிருந்து விடுவித்து விட்டு, முன்பு வீட்டு நிர்வாகத்தைக் கவனித்த வயதான அம்மையாரைப் புதிதாகப் பொறுப்பில் நியமித்தார். கதைகளை ஜோடித்துச் செல்வதில் அபாரமான திறமையுடைய அந்த அம்மையார் அவருடைய நம்பிக்கைக்குப் பாத்திரமானதில் ஆச்சரியமில்லை. ஆனால் இந்த அப்பாவிப் பெண்மணிக்கு இருபத்தைந்து ரூபிள் நோட்டுக்கும் ஐம்பது ரூபிள் நோட்டுக்கும் உள்ள வித்தியாசம் கூடத் தெரியாது. விவசாயிகள் பலருடைய குழந்தைகளுக்கு அந்த அம்மையார்தான் ஞானத்தாயார். எனவே விவசாயிகளுக்கு அவரிடம் சிறிது கூட பயமில்லை. விவசாயிகள் புதிதாக ஒரு நிர்வாகியைத் தேர்ந்தெடுத்துக் கொண்டார்கள். அவர் விவசாயிகளோடு சேர்ந்து தம்முடைய எஜமானரை ஏமாற்றினார். இதன் விளைவாக இவான் பெத்ரோவிச் விவசாயிகள் தர வேண்டிய பழைய குத்தகை முறைக்குப் பதிலாக மிகவும் குறைவான வாரம் வசூலிக்கின்ற முறையை அமுலாக்கினார். எனினும் விவசாயிகள் தங்கள் எஜமானருடைய இளகிய மனதைப் பயன்படுத்திக் கொண்டு இது அமுலான முதல் வருடத்துக்குப் பல அனாவசியமான சலுகைகளைப் பெற்றார்கள். அடுத்த வருடத்தில் தாங்கள் கொடுக்க வேண்டிய வாரத்தில் மூன்றில் இரண்டு பங்குக்கும் கூடுதலாகவே பழங்கள்,

கொட்டைகள், இவை போன்ற பொருள்களாகக் கொடுத்தார்கள். அதிலும் பலர் முழுமையாகக் கொடுக்காமல் பாக்கி வைத்து விட்டார்கள்.

இவான் பெத்ரோவிச்சின் காலஞ்சென்ற தகப்பனுருடைய நண்பன் என்ற முறையில், அவருடைய மகனுக்கு ஆலோசனை சொல்வது என்னுடைய கடமை என்று நான் கருதினேன். நிர்வாகம் சீர்குலைந்த பொழுது அதை முன்பு இருந்த மாதிரி சீரமைத்துத் தருகிறேன் என்று நானே வலியச் சென்று கூறினேன். இதற்காக ஒரு நாள் அவரைப் போய்ப் பார்த்தேன். பண்ணையை நிர்வாகித்து வந்த அயோக்கியனிடம் கணக்குப் புத்தகங்களை எடுத்துக் கொண்டு வருமாறு உத்தரவிட்டேன். இவான் பெத்ரோவிச் முன்னிலையில் கணக்குப் புத்தகங்களைப் பார்வையிட்டேன். இளம் எஜமானர் என்னுடைய விசாரணைகளை ஆரம்பத்தில் மிகவும் அக்கறையோடு கவனித்துக் கொண்டிருந்தார். கடந்த இரண்டு வருடங்களில் விவசாயிகளின் எண்ணிக்கை அதிகரித்திருக்கும் பொழுது, கோழி, வாத்து, கால்நடைகளின் எண்ணிக்கை குறிப்பிடத்தக்க அளவுக்குக் குறைந்திருக்கிறது என்பதை எடுத்துக் கூறிய பொழுது இவான் பெத்ரோவிச் இந்த ஆரம்பப் புள்ளிவிவரங்களோடு திருப்தியடைந்து விட்டு, பிறகு எதையும் கவனமாகக் கேட்கவில்லை. என்னுடைய நுட்பமான விசாரணையும் கண்டிப்பான கேள்விகளும் அந்த அயோக்கியனைக் குழப்பிவிடவே அவன் எத்தகைய பதிலும் சொல்ல முடியாமல் மௌனமாக நின்றுன். அந்த நேரத்தில் நாற்காலியில் இவான் பெத்ரோவிச் குறட்டை விட்டுத் தூங்கும் சத்தம் கேட்டது. அது எனக்கு மிகவும் வேதனையைக் கொடுத்தது. அந்த விநாடியிலிருந்து அவருடைய பண்ணை நிர்வாகத்தில் தலையிடுவதை நிறுத்திக் கொண்டேன். ஆண்டவன் சித்தப்படி நடக்கட்டும் என்று நினைத்துக் கொண்டேன் (அவரும் அப்படியேதான் முடிவு செய்திருக்க வேண்டும்).

எங்களுடைய நட்பு இதனுல் பாதிக்கப்படவில்லை. நம் நாட்டில் பிரபுத்துவக் குடும்பங்களைச் சேர்ந்த இளைஞர்களிடம் பலவீனமும் அலட்சியமும் இயல்பான குணங்களாக உள்ளன. இவான் பெத்ரோவிச்சிடம் இக்குறைபாடுகள் இருந்தது பற்றி நான் வருத்தப்பட்டாலும், நான் அவர்

மீது உண்மையான அன்பு கொண்டிருந்தேன். இனிமையும் கண்ணியமும் நிறைந்த அந்த இளைஞரிடம் அன்பு செலுத்தாமல் எப்படி இருக்க முடியும்? அவரும் என்னுடைய வயதுக்கு ஏற்ற மரியாதையைக் கொடுத்ததோடு என் மீது சிறந்த அபிமானம் கொண்டிருந்தார். பழக்க வழக்கங்கள், சிந்தனைப் போக்குகள், குணநலம் ஆகியவற்றில் எங்களுக்கிடையே சிறிதும் ஒற்றுமை இல்லை. எனினும் என்னுடைய எளிமையான பேச்சை அவர் விரும்பிய காரணத்தால் நாங்கள் கடைசி வரை நாள் தோறும் சந்தித்துக் கொண்டோம்.

இவான் பெத்ரோவிச் மிதமான பழக்க வழக்கங்களைக் கொண்டவர். எதிலும் அளவுக்கு மீறிப் போனதில்லை. குடி மயக்கத்தில் அவர் தவறாக நடந்து கொண்டது கிடையாது (எங்கள் வட்டாரத்தில் இது மிகவும் அதிசயமாகும்). அவர் பெண்கள் விஷயத்தில் சபலபுத்தி உடையவர். ஆனால் தன்னைப் பொறுத்த வரை திருமணமாகாத பெண்ணைப் போல வெட்கப்படும் சுபாவம் அவருக்குண்டு.*

உங்கள் கடிதத்தில் நீங்கள் குறிப்பிட்டிருக்கக் கூடிய கதைகளைத் தவிர, இன்னும் பல கையெழுத்துப் பிரதிகளை இவான் பெத்ரோவிச் விட்டுச் சென்றார். இவற்றில் சில என்னிடமிருக்கின்றன. வேறு சிலவற்றை அவருடைய வீட்டை நிர்வகித்த அம்மையார் பல வழிகளில் பயன்படுத்தி விட்டார். சென்ற பனிக் காலத்தின் போது அந்த வீட்டில் அம்மையார் வசிக்கும் பகுதியில் எல்லா சன்னல்களிலும் ஒட்டப்பட்டிருந்த காகிதங்கள் அவர் எழுதிய முடிவடையாத நாவலின் முதற்பகுதி என்று தெரிகிறது. மேலே குறிப்பிட்ட கதைகள்தான் அவருடைய இலக்கிய முயற்சியின் ஆரம்பம் என்று எனக்குத் தோன்றுகிறது. இக்கதைகளில் பெரும்பாலானவை உண்மையில் நடந்தவை; பல நபர்கள் தம்மிடம் சொன்னவை என்று இவான் பெத்ரோவிச்

---

* இங்கே விவரிக்கப்பட்டிருக்கும் நிகழ்ச்சி தேவையில்லை என்ற காரணத்தால் நீக்கப்பட்டிருக்கிறது. இவான் பெத்ரோவிச் பெல்கினின் புகழைப் பாதிக்கக் கூடிய நிகழ்ச்சி எதுவும் இங்கே எழுதப்படவில்லை என்று வாசகர்களுக்குத் தெரிவித்துக் கொள்கிறோம்.—ஆ-ர்.

சொல்வார்.* ஆனால் இக்கதைகளில் வருகின்ற அநேகமாக எல்லாப் பெயர்களும் கற்பனையே. இவைகளில் வர்ணிக்கப் படுகின்ற கிராமங்களும் குக்கிராமங்களும் எங்கள் வட்டாரத்தில் உள்ளவையே. என்னுடைய கிராமமும் இக்கதைகளில் இடம் பெற்றிருக்கிறது. அதற்குக் காரணம் அவரிடம் கற்பனை வளம் இல்லை என்பதைத் தவிர வேறு தவறான நோக்கம் எதுவுமில்லை.

*1828*ம் வருடத்தில் இலையுதிர்காலத்தில் இவான் பெத்ரோவிச்சுக்குக் கடுமையான தடுமன் ஏற்பட்டு, அது மோசமான காய்ச்சலாக மாறியதன் விளைவாக அவர் மரணமடைந்தார். எங்களூர் வைத்தியர் எவ்வளவோ மருந்து கொடுத்தும் பலனில்லை. இத்தனைக்கும் அந்த வைத்தியர் சிறந்த திறமைசாலி. நாள்பட்ட வியாதிகளை, அதிலும் பாதத்தில் ஏற்படுகின்ற காய்ப்பு, கட்டிகள் முதலியவற்றைக் குணப்படுத்துவதில் நிபுணர். இவான் பெத்ரோவிச் தனது முப்பதாவது வயதில் என் கைகளில் சாய்ந்தபடியே மரணமடைந்தார். கொரியூகினோ கிராமத்திலுள்ள மாதா கோவிலில் அவரது பெற்றோர்களின் சமாதிகளுக்கு அருகில் அவருடைய உடல் அடக்கம் செய்யப்பட்டது.

இவான் பெத்ரோவிச் நடுத்தரமான உயரமுடையவர்; ஒல்லியான உடல்; மாநிறம். பழுப்பு நிறமான கண்களும் நேரான மூக்கும் பொன்னிறமான தலைமுடியும் உடையவர்.

ஐயா, காலஞ்சென்ற எனது பக்கத்து வீட்டுக்கார நண்பரின் வாழ்க்கை, தொழில், தோற்றம், குணநலம் ஆகியவை பற்றி என் நினைவில் தங்கியவை இவ்வளவுதான். ஆனால் இந்தக் கடிதத்தை நீங்கள் உபயோகிக்க முடிவு செய்தால்,

---

* இ. பெ. பெல்கின் விட்டுச் சென்ற கையெழுத்துப் பிரதியிலுள்ள ஒவ்வொரு கதையிலும், ''இந்தக் கதை இன்னாரால் எனக்குத் தெரிவிக்கப்பட்டது'' என்று அவர் தம் கைப்பட எழுதியிருக்கிறார் என்பது உண்மை. **அஞ்சல் நிலைய அதிகாரி** என்ற கதையை அரசு உயர் அதிகாரி அ.கி. நி...யும் **கைத்துப்பாக்கி வேட்டு** என்ற கதையை லெப்டினென்ட்-கர்னல் இ.லி. பி...யும் **சவப்பெட்டி வியாபாரி** என்ற கதையை சிப்பந்தி பி. வி...யும் **பனிப்புயல், சீமாட்டியின் மாறுவேடம்** ஆகிய கதைகளை க.இ. த...என்ற இளம் பெண்ணும் கூறியதாக எழுதப்பட்டிருப்பதை ஆர்வமுள்ளோருக்குக்காகக் குறிப்பிடுகிறோம்.—ஆ-ர்.

*என் பெயரை வெளியிட வேண்டாம் என்று தயவு செய்து கேட்டுக் கொள்கிறேன். நான் எழுத்தாளர்களை மிகவும் நேசிக்கிறேன்; அவர்களை மிகவும் மதிக்கிறேன். எனினும் அந்த உடையில் தோன்றுவதற்கு எனக்கு விருப்பமில்லை. அதிலும் என்னுடைய முதிர்ந்த வயதில் அது எனக்கு கௌரவமான காரியமல்ல. மனப்பூர்வமான மரியாதையுடன்....*

**நவம்பர் 16, 1830**
**நெனராதவோ கிராமம்**

*நமது கதாசிரியருடைய நண்பரின் விருப்பத்தை மதிப்பது நமது கடமையாகும். அவர் தெரிவித்துள்ள செய்திகளுக்கு நமது ஆழ்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம். ஒளிவு மறைவில்லாமலும் இதய பூர்வமாகவும் அவர் எழுதியுள்ள வாழ்க்கைக் குறிப்பை வாசகர்கள் பாராட்டுவார்கள் என்று நம்புகிறோம்.*

**அ.பூ.**

# கைத்துப்பாக்கி வேட்டு

நாங்கள் இருவரும் சண்டையிட்டோம்.*

பராதீன்ஸ்கி[9]

இருவர் சண்டையின் வழக்கப்படி அவனைச் சுட்டே தீர்வேன் என்று சபதம் செய்தேன் (ஒரு வேட்டு அவனுக்கு நான் பாக்கி தர வேண்டும்).

வெட்டவெளியில் ஒரு மாலைநேரம்[10]

## I

க... என்ற சிறிய நகரத்தில் நாங்கள் தங்கியிருந்தோம். ஒரு இராணுவ அதிகாரியின் வாழ்க்கை எப்படியிருக்கும் என்பது எல்லோருக்கும் நன்கு தெரிந்ததுதான். காலையில் உடற்பயிற்சிகளும் குதிரைச் சவாரிப் பயிற்சிகளும் நடைபெறும். பிறகு படைப் பிரிவின் தளபதியின் வீட்டில் அல்லது ஏதாவதொரு யூதர் உணவுவிடுதியில் மதிய உணவு சாப்பிடுவோம். பிறகு மாலை நேரத்தில் குடித்துவிட்டுச் சீட்டு விளையாடுவோம். அந்த நகரத்தில் எங்களை வரவேற்கக் கூடிய வீடு ஒன்றுகூட இல்லை; திருமணமாகாத பெண்களும் இல்லை. எங்களுடைய படைப் பிரிவு நண்பர்களின் அறைகளில்தான் நாங்கள் கூடிப் பொழுது போக்கினோம். அங்கே எங்களது இராணுவ உடைகளைத் தவிர வேறொன்றையும் நாங்கள் பார்க்க முடியாது.

எங்கள் குழுவில் ஒருவர் மட்டும் இராணுவத்தைச் சேர்ந்தவரல்ல. அவருக்கு வயது சுமார் முப்பத்தைந்து இருக்கும். எனினும் நாங்கள் அவரை வயதானவராகவே கருதினோம். எங்களோடு ஒப்பிடுகின்ற பொழுது அவர் சிறந்த அனுபவசாலி. அது மட்டுமல்லாமல் அவருடைய

---

* இந்தப் புத்தகத்தில் ''சண்டை'' என்பது «duel» என்ற ஆங்கிலச் சொல்லைக் குறிக்கிறது.—ப-ர்.

இயல்பான சோகமும் முரட்டுப் பழக்கங்களும் சலிப்பைக் காட்டும் உரையாடலும் எங்களுடைய இளம் உள்ளங்களை அதிகமாக பாதித்திருந்தன. அவரிடம் மர்மம் நிறைந் திருந்தது. அவர் ருஷ்யாவைச் சேர்ந்தவராகத் தோன்றிய போதிலும் அந்நிய நாட்டுப் பெயரை வைத்திருந்தார். ஒரு காலத்தில் அவர் ஹுஸார் படைப் பிரிவில் பணியாற்றி யிருந்தார். அவருடைய இராணுவ வாழ்க்கை மிகவும் வெற்றி கரமாக அமைந்திருக்கலாம்; எனினும் அவர் இராணுவப் பதவியிலிருந்து விலகி அந்தக் கீழ்த்தரமான சிறிய நகரத் தில் வந்து ஏன் குடியேறினர் என்பது யாருக்கும் தெரியாது. அந்த நகரத்தில் அவருடைய வாழ்க்கை கருமித்தனமாகவும் இருந்தது; மிகவும் ஆடம்பரமானதாகவும் தோன்றியது. எங்கே சென்ருலும் நைந்து போன கறுப்பு நிறக் கோட்டை அணிந்து கொண்டு நடந்துதான் போனார். ஆனல் எங்கள் படைப் பிரிவைச் சேர்ந்த எல்லா அதிகாரிகளுக்கும் எல்லா நேரங்களிலும் விருந்தளித்துக் கொண்டிருப்பார். அவரு டைய சமையற்காரன் ஒரு காலத்தில் இராணுவத்தில் வேலை செய்தவன். அவருடைய விருந்தில் இரண்டு அல்லது மூன்று வகை உணவுகள் மட்டுமே இருக்கும் என்பது உண்மைதான். ஆனல் அங்கே ஷாம்பேன் மது வேண்டிய அளவுக்குக் கிடைக் கும். அவருடைய சொத்துக்களைப் பற்றியோ அல்லது வரு மானத்தைப் பற்றியோ அங்கே யாருக்கும் தெரியாது. அதைப் பற்றி அவரிடம் விசாரிப்பதற்கும் அங்கே ஒருவருக் கும் தைரியம் கிடையாது. அவரிடம் சில புத்தகங்கள் இருந் தன. அவை பெரும்பாலும் இராணுவம் சம்பந்தப்பட்ட வையாக இருக்கும், அல்லது நவீனங்களாக இருக்கும். அவர் இப்புத்தகங்களைத் தயங்காமல் இரவல் கொடுப்பார். அவற் றைத் திருப்பிக் கேட்கவும் மாட்டார். அது போலவே தாமும் இரவல் வாங்கிய புத்தகத்தைத் திருப்பிக் கொடுக்க மாட்டார். அவருடைய பிரதான வேலை கைத்துப்பாக்கி யைக் கொண்டு குறி தவருமல் சுடுவதாகும். அவருடைய அறையில் எல்லாப் பக்கங்களிலும் கைத்துப்பாக்கிக் குண்டு துளைத்த துவாரங்கள் இருந்த படியால் அந்த அறை ஒரு தேன்கூட்டைப் போலத் தோன்றியது. அவர் வாழ்ந்து வந்த அந்த மோசமான மண்குடிசையில் பலவிதமான விலையுயர்ந்த கைத்துப்பாக்கிகளைச் சேகரித்து வைத்திருந்தது மட்டுமே

ஒரு சிறப்பான அம்சமாகும். குறி தவறுமல் சுடுவதில் அவர் வியக்கத்தக்க திறமையுடையவர். யார் தலை மீதாவது ஒரு பழத்தை வைத்து அதைக் குறி பார்த்துச் சுடுவதற்கு அவர் விரும்பியிருந்தால், எங்கள் படைப் பிரிவில் எல்லோருமே தயங்காமல் முன்வந்திருப்பார்கள். இரண்டு வீரர்கள் சண்டையில் ஈடுபடுவதைப் பற்றி நாங்கள் அடிக்கடி பேசிக் கொள்வோம். ஆனுல் ஸில்வியோ (அவரை இப்பெயரால் குறிப்பிடுவோம்) அதைப் பற்றி ஒன்றுமே பேச மாட்டார். நீங்கள் சண்டை போட்டிருக்கிறீர்களா என்று கேட்டால், ஆம் என்று வெடுக்கென்று பதிலளிப்பார். ஆனுல் அது பற்றி எத்தகைய விவரத்தையும் சொல்ல மாட்டார். அத்தகைய கேள்விகளை அவர் விரும்பவில்லை என்பது தெரிந்தது. அவருடைய பயங்கரமான திறமைக்கு யாரோ பலியாகியிருக்க வேண்டும், அவருடைய மனச்சாட்சியை அது துன்புறுத்துகிறது என்று நாங்கள் முடிவு செய்தோம். அவர் கோழையாக இருக்கலாம் என்ற சந்தேகம் எங்கள் மனதில் நிச்சயமாக ஏற்படவில்லை. சிலரைப் பார்த்தவுடனேயே அத்தகைய சந்தேகங்களுக்கு இடமில்லாது போய் விடுகிறது. ஆனுல் முன்னெரு சமயத்தில் நடைபெற்ற ஒரு சம்பவம் எங்களுக்கு வியப்பைத் தந்தது.

ஒரு நாள் ஸில்வியோவின் வீட்டில் நாங்கள் சுமார் பத்து அதிகாரிகள் உணவருந்திக் கொண்டிருந்தோம். வழக்கம் போலக் குடித்தோம், அதாவது அதிகமாகக் குடித்தோம். விருந்து முடிந்ததும் எங்களுக்கு விருந்தளித்த ஸில்வியோவை சீட்டுக்களைக் கலைத்துப் போடுமாறு கேட்டுக் கொண்டோம். அவர் வெகு நேரம் வரை மறுத்தார். ஏனென்முல் அநேகமாக அவர் சீட்டாடுவது கிடையாது. கடைசியில் சீட்டுக் கட்டைக் கொண்டு வருமாறு உத்தரவிட்டார். சுமார் ஐம்பது பத்து ரூபிள் நாணயங்களை மேசையில் போட்டார். சீட்டுக்களைக் கலைத்துப் போட ஆரம்பித்தார். நாங்கள் அவரைச் சுற்றி உட்கார்ந்து கொண்டோம். விளையாட்டு ஆரம்பமாயிற்று. மௌனமாக விளையாடுவது ஸில்வியோவின் பழக்கம்; பேசுவதும் விளக்கங்கள் கொடுப்பதும் அவருக்குப் பிடிக்காது. ஒருவர் தவருக விளையாடினுல் அவர் உடனே பணத்தை எண்ணிக் கொடுத்து விடுவார் அல்லது அதிகத் தொகையைக் கணக்கில் குறித்துக்

கொள்வார். அவர் பழக்கம் எங்களுக்குத் தெரியும். அவர் விதிகளை நாங்களும் அனுசரித்தோம். ஆனால் எங்கள் குழுவில் புதிதாக மாற்றலாகி வந்த ஒரு இராணுவ அதிகாரியும் இருந்தார். சீட்டாட்டம் நடைபெற்றுக் கொண்டிருக்கும் பொழுது அவர் பந்தயத் தொகையை ஒரு புள்ளி அதிகமாக எழுதினார். அதற்கு ஞாபக மறதியே காரணம். ஸில்வியோ தன்னுடைய வழக்கப்படி சாக்குக் கட்டியை எடுத்து எண்ணிக்கையைத் திருத்தி எழுதினார். ஸில்வியோ தவறாகக் கணக்குப் போடுவதாகக் கருதிய அதிகாரி விளக்கம் சொல்ல ஆரம்பித்தார். ஆனால் ஸில்வியோ எதுவும் பேசாமல் தொடர்ந்து விளையாடினார். அதிகாரி பொறுமையிழந்து போய் பிரஷ்ஷை எடுத்துத் தவறு என்று தாம் கருதிய எண்ணிக்கையை அழித்தார். ஸில்வியோ மறுபடியும் சாக்குக்கட்டியை எடுத்து பழைய எண்களையே எழுதினார். அந்த அதிகாரி குடி போதையிலிருந்தார். சீட்டாட்ட வேகமும், அங்கிருந்த தோழர்களின் கேலிச் சிரிப்பும் அவருக்குக் கோபத்தை ஏற்படுத்தியது. தாம் மிகவும் அவமதிக்கப்பட்டது போலக் கருதி, மேசை மீதிருந்த பித்தளை மெழுகுவத்தி விளக்கை எடுத்து ஸில்வியோவின் மீது எறிந்தார். ஆனால் ஸில்வியோ தற்செயலாக விலகிக் கொண்டதால் தப்பினார். இந்த சம்பவம் எங்கள் அனைவருக்கும் மிகுந்த சங்கடத்தை ஏற்படுத்தியது. ஸில்வியோவின் முகம் கோபத்தால் வெளிறிப் போயிற்று. அவர் கண்கள் பிரகாசித்தன. அவர் எழுந்து நின்றார். ''ஐயா! தயவு செய்து போய்விடுங்கள். இந்த சம்பவம் என் வீட்டிலே நடைபெற்றதனால் நீங்கள் தப்பினீர்கள். அதற்கு ஆண்டவனுக்கு நன்றி செலுத்துங்கள்'' என்றார்.

இதன் விளைவு என்னவாக இருக்கும் என்பதில் எங்களுக்குச் சிறிதும் சந்தேகமில்லை. அந்த அதிகாரியின் வாழ்க்கை முடிந்தது என்றே கருதினோம். ஸில்வியோவுக்கு எப்படி உசிதமோ அந்த முறையில், அவருக்குத் தான் செய்த அவமதிப்புக்குப் பதில் சொல்லத் தயார் என்று கூறிவிட்டு அந்த அதிகாரி வெளியேறினார். சீட்டாட்டம் சற்று நேரம் தொடர்ந்தது. எனினும் ஸில்வியோவால் சீட்டாட்டத்தில் கவனம் செலுத்த முடியாது என்று உணர்ந்து நாங்கள் ஒவ்வொருவராக விடைபெற்றுக் கொண்டோம். போகும்

வழியில் எங்களது படைப் பிரிவில் சீக்கிரமாக ஏற்படப் போகும் காலி இடத்தைப் பற்றிப் பேசிக் கொண்டு சென்றோம்.

மறு நாள் காலையில் நாங்கள் குதிரைப் பயிற்சி நிலையத்தில் இருந்த பொழுது அந்த அதிகாரி இன்னும் உயிரோடிருக்கிறாரா என்று ஒருவரையொருவர் கேட்டுக் கொண்டோம். அந்த நேரத்தில் அவரே வந்து விட்டார். அந்தக் கேள்வியை நாங்கள் அவரிடமே கேட்டோம். ஸில்வியோவிடமிருந்து தமக்கு எந்தத் தகவலும் இல்லை என்று அவர் பதிலளித்தார். இதைக் கேட்டு நாங்கள் ஆச்சரியமடைந்தோம். அடுத்தபடியாக ஸில்வியோவின் வீட்டுக்குப் போனோம். அவர் வீட்டுக்கு முன்புறத்தில் நின்று, கதவின் மீது சொருகப்பட்டிருந்த சீட்டின் நடுப்பகுதியைக் குறி பார்த்து ஒரே இடத்தில் தொடர்ந்து சுட்டுக் கொண்டிருந்தார். வழக்கம் போல எங்களை வரவேற்றார். முந்திய நாள் நடைபெற்ற சம்பவத்தைப் பற்றி ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை. மூன்று நாட்கள் கழிந்தன. அந்த இராணுவ அதிகாரி இன்னும் உயிரோடுதான் இருந்தார். ஸில்வியோ சண்டை போட விரும்பவில்லையா என்று நாங்கள் ஒருவரையொருவர் வியப்புடன் கேட்டுக் கொண்டோம். ஸில்வியோ சண்டை போடவில்லை. அந்த அதிகாரியின் மிகவும் சாதாரணமான மன்னிப்பை ஏற்றுக் கொண்டு அவரோடு சுமுகமாகப் பழக ஆரம்பித்தார்.

அங்கிருந்த இளம் வீரர்கள் மத்தியில் அவருக்கிருந்த மரியாதை இதனால் அதிகமாகக் குறைந்து போயிற்று என்பதில் சந்தேகமில்லை. ஒருவர் எவ்வளவு மோசமானவராக இருந்த போதிலும் வீரமுடையவராக இருந்தால் போதும். அந்த இளைஞர்கள் அவரை உன்னதமான மனிதராகக் கருதுவார்கள். எனவே துணிவின்மையை அவர்களால் ஒரு போதும் மன்னிக்க முடியாது. ஆனால் சிறிது காலத்துக்குப் பிறகு அந்த சம்பவத்தை எல்லோரும் மறந்து விட்டனர். ஸில்வியோவும் தம்முடைய பழைய செல்வாக்கை மீண்டும் பெற்றார்.

என்னால் மட்டும் அவரைப் பழைய மாதிரி மதிக்க முடியவில்லை. ஏனென்றால் என்னிடம் இயல்பாகவே கற்பனை அதிகம். அவருடைய வாழ்க்கை ஒரு புதிராக எனக்குத்

தோன்றியதால், ஒரு மர்மக் கதையின் கதாநாயகராக அவரை நான் கருதிய காரணத்தால், இதுவரை மற்றவர்களைக் காட்டிலும் அதிகமாகவே அவரை மதித்தேன். அவரும் என் மீது தனிப் பிரியம் கொண்டிருந்தார். என்ன இருந்தாலும் என்னை மட்டும் அவர் தம்முடைய வழக்கப்படி ஏளனம் செய்ததில்லை; பல விஷயங்களை என்னிடம் எளிமையாகவும் கவர்ச்சியாகவும் விவாதிப்பார். ஆனால் அந்தத் துரதிருஷ்ட வசமான மாலை நேரத்தில் நடைபெற்ற சம்பவத்தின் விளைவாக அவருடைய கௌரவத்துக்கு ஏற்பட்ட இழுக்கைப் போக்கிக் கொள்ள அவர் முயற்சிக்கவில்லை என்பதை என்னால் மறக்க முடியவில்லை. எனவே பழைய மாதிரி அவரை மதிக்கவும் என்னால் முடியவில்லை. அவரை நேருக்கு நேராகப் பார்க்க எனக்குச் சங்கடமாக இருந்தது. ஸில்வியோ மிகவும் கெட்டிக்காரர், அதோடு அனுபவமிக்கவர். எனவே நிச்சயமாக இதைக் கவனித்திருக்க வேண்டும். அதன் காரணத்தையும் புரிந்து கொண்டிருக்க வேண்டும். அவருக்கு வேதனை ஏற்பட்டிருக்குமெனத் தோன்றுகிறது. ஏனென்றால் என்னிடம் மனந்திறந்து பேசுவதற்கு அவர் இரண்டொரு சந்தர்ப்பங்களில் முயற்சி செய்தார் என்பதை நான் கவனித்தேன். ஆனால் நான் அதற்கு இடம் கொடுக்கவில்லை. ஸில்வியோவும் அதோடு விட்டு விட்டார். அதற்குப் பிறகு நான் எப்பொழுதும் என்னுடைய தோழர்களோடுதான் அவரைச் சந்தித்தேன். முன்பு எங்களுக்கிடையே நடைபெற்ற அந்தரங்கமான உரையாடல்கள் நின்று விட்டன.

கிராமங்களிலும் சிறிய நகரங்களிலும் வசிப்பவர்களுக்குப் பழக்கமான பல இனிய அனுபவங்களைப் பற்றி பெரிய நகரங்களில் பலவிதமான பணிகளில் தங்களை மறந்து வாழ்க்கை நடத்துபவர்கள் புரிந்து கொள்வது கடினம். உதாரணமாக, தபால் வண்டியை எதிர்பார்த்துக் காத்திருப்பதைக் குறிப்பிடலாம். செவ்வாய்க் கிழமைகளிலும் வெள்ளிக் கிழமைகளிலும் எங்கள் படைப் பிரிவின் தலைமையகத்தில் அதிகாரிகள் குழுமியிருப்பார்கள். சிலர் பணத்தையும் சிலர் கடிதங்களையும் சிலர் பத்திரிகைகளையும் எதிர்பார்த்துக் காத்திருப்பார்கள். அநேகமாகக் கடிதங்களை அங்கேயே பிரித்துப் படிப்பார்கள். அவற்றிலுள்ள செய்திகளை ஒரு

வருக்கொருவர் பரிமாறிக் கொள்வார்கள். தலைமையகத்தில் அதிகமான பரபரப்புக் காணப்படும். ஸில்வியோவுக்கு எங்கள் படைப் பிரிவின் மூலமாகவே கடிதங்கள் வந்து கொண்டிருந்தன. எனவே அவரும் அங்கே வருவார். ஒரு நாள் அவரிடம் ஒரு கடிதம் கொடுக்கப்பட்டது. அதன் மீதிருந்த முத்திரையை மிகுந்த அவசரத்தோடு உடைத்தார். கடிதத்தைப் படிக்கும் பொழுது அவருடைய கண்கள் பிரகாசித்தன. அங்கே இருந்த அதிகாரிகளனைவரும் தங்களுக்கு வந்த கடிதங்களை ஆர்வத்தோடு படித்துக் கொண்டிருந்த காரணத்தால் யாரும் அவரைக் கவனிக்கவில்லை. ''கனவான்களே! நான் உடனே இவ்வூரை விட்டுப் போக வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டிருக்கிறது. இன்றிரவு நான் புறப்பட வேண்டும். கடைசித் தடவையாக என்னோடு உண வருந்த நீங்கள் மறுக்க மாட்டீர்கள் என்று நம்புகிறேன்'' என்று ஸில்வியோ அவர்களிடம் சொன்னார். பிறகு என்னைப் பார்த்து ''உன்னை எதிர்பார்ப்பேன். தவறாமல் வர வேண்டும்'' என்றார். உடனே அவர் தலைமையகத்தை விட்டுப் போய்விட்டார். அவர் வீட்டில் சந்திப்பதென்று முடிவு செய்த பின்னர் நாங்களும் தனித்தனியே பிரிந்து சென்றோம்.

நான் குறித்த நேரத்தில் ஸில்வியோவின் வீட்டுக்குப் போன பொழுது அநேகமாக எல்லா அதிகாரிகளும் அங்கே இருப்பதைப் பார்த்தேன். அவருடைய சாமான்கள் கட்டப் பட்டுத் தயாராக இருந்தன. கைத்துப்பாக்கி குண்டுகள் துளைத்த சுவர்களைத் தவிர அங்கே வேறு ஒன்றுமில்லை. நாங்கள் சாப்பிட உட்கார்ந்தோம். ஸில்வியோ மிகுந்த உற்சாகத்தோடு பேசிக் கொண்டிருந்தார். அவரைப் பின் பற்றி நாங்களும் உடனே உற்சாகத்தில் மிதந்தோம். மதுப் புட்டிகளைத் திறக்கும் சத்தம் இடைவிடாமல் கேட்டுக் கொண்டிருந்தது. டம்ளர்களில் ஒயின் நுரைத்துக் கொள்ளும் மெல்லிய ஒலி கேட்டது. நாங்கள் அவருடைய இனிமையான பிரயாணத்துக்கும் எதிர்காலத்துக்கும் எங்களது நல்வாழ்த்துக்களைத் திரும்பத் திரும்பத் தெரிவித்தோம். விருந்து முடிந்து நாங்கள் எழுந்த பொழுது மாலை மங்கி விட்டது. நாங்கள் தொப்பிகளை அணிந்து கொண்டிருந்த பொழுது ஸில்வியோ ஒவ்வொருவரிடமும் தனித்தனியே

விடைபெற்றுக் கொண்டார். நான் புறப்பட்ட பொழுது என் கையைப் பிடித்து நிறுத்தி, ''உன்னிடம் பேச விரும்புகிறேன்'' என்று தணிவான குரலில் சொன்னார். நான் போகாமல் அங்கேயே உட்கார்ந்திருந்தேன்.

விருந்தினர்கள் போய்விட்டார்கள். நாங்கள் இருவர் மட்டும் எதிரும் புதிருமாக அமர்ந்திருந்தோம். மௌனமாகப் புகைக் குழாய்களைப் பற்ற வைத்தோம். ஸில்வியோ எதையோ நினைத்துக் கொண்டு வேறு கவனத்தில் இருந்தார். அவரிடம் திடீரென்று ஏற்பட்ட குதூகலத்தின் சுவடு கூட இப்பொழுது தென்படவில்லை. அவருடைய வெளிறிப் போன தோற்றமும், பிரகாசமான கண்களும், அவர் வாயிலிருந்து வந்து கொண்டிருந்த அடர்த்தியான புகையும் அவரை ஒரு பேய் போலக் காட்டியது. சில நிமிடங்களுக்குப் பிறகு ஸில்வியோ பேச ஆரம்பித்தார். ''நாம் மறுபடியும் சந்திக்க முடியாமல் போய்விடலாம். எனவே நாம் பிரிவதற்கு முன்பு உன்னோடு சில விஷயங்களைப் பேச விரும்புகிறேன். மற்றவர்கள் என்னைப் பற்றி என்ன நினைக்கிறார்கள் என்பதைப் பற்றி நான் கவலைப்படுவதில்லை. இது உனக்குத் தெரிந்திருக்கும். ஆனால் உன் மீது எனக்குப் பிரியமுண்டு. எனவே என்னைப் பற்றி உண்மைக்கு மாறான எண்ணங்களை உன்னிடம் விட்டுச் சென்றால் எனக்கு வேதனையேற்படும்'' என்று அவர் என்னிடம் சொன்னார்.

அவர் பேச்சை நிறுத்திவிட்டுத் தனது புகைக் குழாயை மறுபடியும் நிரப்பலானார். நான் ஒன்றும் பேசாமல் கீழே பார்த்தபடியே உட்கார்ந்திருந்தேன்.

''குடிமயக்கத்திலிருந்த அந்தப் பகட்டுப் பேர்வழியான ரி... என்னை அவமதித்த பொழுது நான் அவனைப் பழி வாங்காமல் இருந்து விட்டேன். அது உனக்கு ஆச்சரியமாக இருந்திருக்கும். எந்த ஆயுதத்தை உபயோகிப்பது என்று முடிவு செய்யும் உரிமை என்னுடையது. எனவே என் உயிருக்குச் சிறிதும் ஆபத்து ஏற்படாது. ஆனால் அவன் உயிர் என் கையில் இருந்தது என்பதை நீ ஒத்துக் கொள்வாய். நான் நிதானமாக நடந்து கொண்டதற்கு என்னுடைய பெருந்தன்மைதான் காரணம் என்று நீ நினைக்க நான் அனுமதிக்கலாம். ஆனால், உன்னை ஏமாற்ற எனக்கு விருப்பமில்லை. என்னுடைய உயிருக்குச் சிறிதும் ஆபத்தில்லாமல்

அந்த நபரைத் தண்டித்திருக்க முடியுமாஞல் நான் அவனை ஒருபோதும் மன்னித்திருக்க மாட்டேன்.''

நான் அவரை ஆச்சரியத்தோடு பார்த்தேன். அவர் இப்படி ஒத்துக் கொண்டது என்னை முற்றிலும் திடுக்கிடச் செய்தது. ஸில்வியோ தொடர்ந்து பேசிஞர்:

''ஆம். என் உயிருக்கு ஆபத்தை ஏற்படுத்திக் கொள்ள எனக்கு உரிமை இல்லை. ஆறு வருடங்களுக்கு முன்பு என் முகத்தில் ஒருவன் அறைந்தான். அந்த எதிரி இன்னும் உயிரோடுதான் இருக்கிருன்.''

எனக்கு ஆர்வக் கிளர்ச்சி ஏற்பட்டது. ''நீங்கள் அவனைச் சவாலுக்கழைத்துச் சண்டை போடவில்லையா? சந்தர்ப்ப நெருக்கடிகள் உங்களைப் பிரித்து விட்டனவா?'' என்று நான் கேட்டேன்.

''நாங்கள் சண்டை போட்டோம். எங்கள் சண்டையின் சின்னம் இங்கே இருக்கிறது'' என்ருர் ஸில்வியோ.

அவர் எழுந்து போய் ஒரு அட்டைப் பெட்டியிலிருந்து ஒரு சிகப்புத் தொப்பியை எடுத்துக் காட்டிஞர். அந்தத் தொப்பியில் பொன்னிறத்தில் ஒரு குஞ்சம் கட்டப்பட்டிருந்தது (இப்படிப்பட்ட தொப்பியை பிரெஞ்சுக்காரர்கள் bonnet de police* என்று சொல்வார்கள்). அவர் தொப்பியைத் தலையில் அணிந்த பொழுது, நெற்றிப் பகுதிக்கு ஒரு அங்குல உயரத்தில் துப்பாக்கி குண்டு துளைத்த துவாரம் இருப்பதைப் பார்த்தேன்.

''ஒரு காலத்தில் ஹுஸார் படைப் பிரிவு ஒன்றில் நான் பணியாற்றியது உனக்குத் தெரிந்திருக்கும். என்னுடைய குண இயல்புகளைப் பற்றியும் உனக்குத் தெரியும். நான் எல்லாவற்றிலும் முதலாவதாகவே இருந்து பழக்கப்பட்டவன். என் இளமைப் பருவத்திலே எனக்கிருந்த ஆசை அதுதான். அந்தக் காலத்தில் நமது இராணுவத்தில் ரவுடித்தனம் அதிகம், நான் மிக மோசமான சண்டைப் பிரியஞக இருந்தேன். அதிகமாகக் குடிப்பதைப் பற்றி நாங்கள் கர்வம் அடைவதுண்டு. கவிஞர் தெனீஸ் தவீதவ் புகழ்ந்து எழுதியுள்ள முதன்மையான பூர்த்ஸவ் என்பவரைக்[11] காட்டிலும் அதிகமாகக் குடித்து அவரைத் தோற்கடித்தேன். நமது படைப் பிரிவில்

* போலீஸ்காரர்கள் தொப்பி.—ப-ர்.

அநேகமாக ஒவ்வொரு நிமிடமும் ஏதாவது சண்டை நடக்கும். நான் முதல் நபராகவோ இரண்டாவது நபராகவோ பங்கெடுக்காத சண்டையே கிடையாது. என் தோழர்கள் என்னைப் போற்றினார்கள். படைப் பிரிவின் தளபதிகள் என்னைத் தவிர்க்க முடியாத தீமையாகக் கருதினார்கள். ஆனால் அவர்கள்தான் அடிக்கடி மாறிக்கொண்டிருப்பார்களே!

''என்னுடைய செல்வாக்கை அமைதியாக (அல்லது அவ்வளவு அமைதி என்று சொல்ல முடியாதபடி) அனுபவித்துக் கொண்டிருந்தேன். அப்போது எங்கள் படைப் பிரிவில் பணக்காரக் குடும்பத்தைச் சேர்ந்த ஒரு இளைஞன் சேர்ந்தான். அவன் புகழ்மிக்க பரம்பரையில் வந்தவன் (அவனது பெயரை நான் சொல்லப் போவதில்லை). திறமையும் அதிருஷ்டமும் அப்படி ஒன்றுசேர்ந்து விளங்கிய ஒருவனை நான் அதுவரை பார்த்ததில்லை! இளமை, அறிவு, அழகு, அடக்க முடியாத உற்சாகம், ஆபத்தைப் பற்றிக் கவலைப்படாத துணிவு, பரம்பரைப் பெருமை, ஆடம்பரச் செலவுக்குத் தேவையான பணவசதி (அந்தப் பணத்துக்குக் குறைவே கிடையாது)— இவ்வளவையும் கற்பனை செய்து பார். அந்த இளைஞனை எல்லோரும் எவ்வளவு விரும்பியிருப்பார்கள் என்பதை நீ கற்பனை செய்து கொள்ளலாம். அதுவரை எனக்குத் தரப்பட்ட 'முதன்மையான' அந்தஸ்து ஆட்டம் கொடுக்க ஆரம்பித்தது. என்னுடைய புகழினால் ஈர்க்கப்பட்டு, அவன் என்னோடு நட்புக் கொள்ள முயற்சித்தான். ஆனால் நான் அதற்கு இடம் கொடுக்கவில்லை. பிறகு அதைப் பற்றிக் கவலைப்படாமலே அவன் தன்னுடைய முயற்சிகளை நிறுத்தி விட்டான். நான் அவனை மிகவும் வெறுத்தேன். படைப் பிரிவிலும் பெண்கள் மத்தியிலும் அவனுக்கு ஏற்பட்டுவந்த செல்வாக்கு என்னிடம் அவனுக்கு எதிரான வெறியை ஏற்படுத்தியது. நான் அவனை வம்புக்கு இழுத்தேன். என்னுடைய பாட்டுக்கு அவன் எதிர்ப்பாட்டுப் பாடினான். எப்போதுமே அவை உண்மையிலேயே புதுமையாகவும் நகைச்சுவையோடும் ரசிக்கக் கூடிய வகையிலும் அமைந்திருந்தன. அவன் எப்பொழுதும் வேடிக்கையாகவே பேசினான். நானோ மனதைப் புண்படுத்தும் வகையில் குத்தலாகப் பேசினேன். கடைசியில் ஒரு மாலைப்பொழுதில் போலந்து

நாட்டு நிலப்பிரபு ஒருவர் நடத்திய விருந்து நிகழ்ச்சியின் பொழுது, அங்கே வந்திருந்த எல்லாச் சீமாட்டிகளும் அவனைச் சுற்றிக் கொண்டிருப்பதைப் பார்த்தேன். அதிலும் நான் தொடர்பு கொண்டிருந்த ஒரு சீமாட்டி—அவள்தான் அந்த வீட்டுத் தலைவி—அவன் மீது அதிகமான அக்கறை காட்டியதைப் பார்த்தேன். நான் கோபத்தோடு அவனிடம் போய்க் கொச்சையான வார்த்தைகள் சிலவற்றைக் காதுக்குள் சொன்னேன். உடனே அவன் முகம் சிவந்தது. என் முகத்தில் ஓங்கி அறைந்தான். இருவரும் உடனே இடைவாள்களை உருவினோம். அங்கேயிருந்த சீமாட்டிகள் இதைப் பார்த்ததும் மயக்கமடைந்தார்கள். எங்கள் நண்பர்கள் மிகுந்த சிரமத்தோடு எங்களைப் பிரித்தார்கள். அன்றிரவே சண்டை போடுவதற்கு நாங்கள் புறப்பட்டோம்.

''அதிகாலை நேரம். மூன்று உதவியாளர்களோடு நான் குறிப்பிட்ட இடத்திலே நின்று கொண்டிருந்தேன். என் எதிரியின் வருகையைச் சொல்ல முடியாத ஆவலோடு எதிர் பார்த்தேன் வசந்த காலக் கதிரவன் ஏற்கெனவே தோன்றி விடுவதால் அதிக வெப்பமாக இருந்தது. அவன் வந்து கொண்டிருப்பதை வெகு தூரத்திலேயே பார்த்து விட்டேன். ஒரே ஒரு உதவியாளனோடு அவன் நடந்து வந்தான். அவனுடைய கோட்டைத் தன்னுடைய வாளின் மீது சுற்றியிருந்தான். நாங்கள் அவனைச் சந்திக்க முன்னே சென்றோம். அவன் வந்துகொண்டிருந்த பொழுது அவன் கையிலிருந்த தொப்பி நிறைய செர்ரிப் பழங்கள் இருந்தன. எங்கள் உதவியாளர்கள் எங்களுக்கிடையே பனிரெண்டு காலடிகளை அளந்து அதற்கப்பால் எங்களை நிறுத்தினார்கள். நான் முதலில் சுட வேண்டும். ஆனால் தாங்க முடியாத கோபத்தின் காரணமாக என் கை நடுங்கியபடியால் சரியாகக் குறி பார்க்க முடியும் என்று எனக்குத் தோன்றவில்லை. எனவே நான் நிதானமடைவதற்காக முதலில் அவன் சுடட்டும் என்று அனுமதி கொடுத்தேன். ஆனால் என் எதிரி இதற்கு ஒத்துக் கொள்ளவில்லை. எனவே திருவுளச்சீட்டுப் போட முடிவு செய்தோம். வழக்கம் போல அதிருஷ்டம் அவன் பக்கமே இருந்தது. சீட்டு அவனுக்கு விழுந்தது. அவன் குறி பார்த்துச் சுட்டான். குண்டு என் தொப்பியைத் துளைத்துக் கொண்டு சென்றது. அடுத்து நான் சுட வேண்டும். இப்

பொழுது அவன் உயிர் என் கையிலிருந்தது. அவனிடம் சிறிதளவாவது கவலைக் குறி தென்படுகிறதா என்று அவன் முகத்தைக் கவனமாக உற்றுப் பார்த்தேன்.... அவன் என்னுடைய கைத்துப்பாக்கியின் எதிரில் நின்ற போதிலும் சிறிதும் கவலையின்றித் தொப்பியிலிருந்து செர்ரி பழங்களைப் பொறுக்கியெடுத்துத் தின்றுவிட்டுக் கொட்டைகளைத் துப்பிக் கொண்டிருந்தான். அந்தக் கொட்டைகள் என் காலடியில் வந்து விழுந்தன. அவனுடைய நிதானம் எனக்குக் கோப மூட்டியது. இவனுக்குத் தன்னுடைய உயிரை மதிக்கத் தெரியவில்லை; அப்படிப்பட்ட அவனுடைய உயிரைப் பறிப்பதில் பயனுண்டா என்று யோசித்தேன். திடீரென்று என் மனதில் ஒரு பயங்கரமான திட்டம் உருவாயிற்று. நான் கைத்துப்பாக்கியைக் கீழே இறக்கினேன். 'மரணத்தைப் பற்றி நினைப்பதற்குக் கூட உனக்கு இப்போது நேரமில்லை போலும். நீ காலைச் சிற்றுண்டி சாப்பிடுவதால், அதைக் கெடுக்க எனக்கு விருப்பமில்லை' என்றேன். 'நீ தாராளமாகச் சுடலாம். என்னுடைய காலைச் சிற்றுண்டியைப் பற்றி நீ கவலைப்பட வேண்டாம்' என்று அவன் பதிலளித்தான். 'எனினும் உன் விருப்பம் போலவே இருக்கட்டும். எப்பொழுதும் என்னைச் சுடுவதற்கு உனக்கு உரிமையுண்டு. நீ விரும்பும் நேரத்தில் நான் தயாராக இருப்பேன்' என்று தொடர்ந்து கூறினேன். எனது உதவியாளர்களிடம் இந்த நேரத்தில் சுடுவதற்கு நான் விரும்பவில்லை என்று சொன்னேன். சண்டை அரைகுறையாக முடிவடைந்தது.

''நான் இராணுவத்திலிருந்து விலகிக் கொண்டேன். இந்தச் சிறிய நகரத்தில் வந்து குடியேறினேன். அந்த நாள் முதல் அவனைப் பழி வாங்க வேண்டும் என்று நினைக்காமல் ஒரு நாள் கூட நான் இருக்கவில்லை. அந்தத் தருணம் இப்பொழுது வந்து விட்டது....''

ஸில்வியோ காலையில் தனக்கு வந்த கடிதத்தைப் பையிலிருந்து எடுத்து அதைப் படிக்குமாறு என்னிடம் கொடுத்தார். அந்தக் கடிதத்தை மாஸ்கோவிலிருந்து யாரோ (அவருடைய பிரதிநிதியாகத்தான் இருக்க வேண்டும்) எழுதியிருந்தார். உங்களுக்குத் தெரிந்த நபர் விரைவில் அழகான இளம் பெண்ணைப் புனிதத் திருமணம் செய்து கொள்ளப் போவதாகக் கடிதத்தில் எழுதப்பட்டிருந்தது.

''எனக்குத் தெரிந்த நபர் யாராக இருக்கலாம் என்பதை நீ யூகித்திருக்கலாம். நான் மாஸ்கோவுக்குப் புறப்படுகிறேன். அன்று தொப்பி நிறைய செர்ரி பழங்களை வைத்துக் கொண்டு மரணத்தை அலட்சியமாக வரவேற்றுனே, அது போல இன்று திருமணம் நடைபெறப் போகும் சமயத்தில் இருப்பாளு என்பதைப் பார்ப்போம்'' என்று ஸில்வியோ கூறிஞர்.

பிறகு ஸில்வியோ எழுந்து நின்ருர். தனது தொப்பியைத் தரையில் வீசியெறிந்துவிட்டுக் கூட்டில் அடைக்கப்பட்ட புலியைப் போல அந்த அறையில் முன்னும் பின்னுமாக நடந்து கொண்டிருந்தார். நான் இதைக் கேட்டபடியே அசையாமல் நின்று கொண்டிருந்தேன். என் உள்ளத்தில் விசித்திரமான மாறுபட்ட உணர்ச்சிகள் குமுறிக் கொண்டிருந்தன.

குதிரைகள் தயாராக நிற்கின்றன என்று வேலைக்காரன் வந்து கூறிஞன். ஸில்வியோ என் கையை அன்போடு பிடித்து அழுத்திஞர். நாங்கள் கட்டித் தழுவி முத்தமிட்டோம். அவர் வண்டியில் ஏறி உட்கார்ந்தார். அந்த வண்டியில் இரண்டு பெட்டிகள் வைக்கப்பட்டிருந்தன. ஒரு பெட்டியில் அவருடைய கைத்துப்பாக்கிகளும் அடுத்த பெட்டியில் அவருடைய சாமான்களும் இருந்தன. நாங்கள் மீண்டும் ஒருவருக்கொருவர் விடை கொடுத்த பிறகு, குதிரைகள் வேகமாகப் புறப்பட்டன.

## 2

ஆண்டுகள் சில உருண்டோடின. என்னுடைய குடும்பச் சூழ்நிலை காரணமாக நி... என்ற மாவட்டத்தில் ஏழ்மை நிறைந்த ஒரு கிராமத்தில் நான் வசிக்க நேரிட்டது. அங்கே என்னுடைய பண்ணையை நேரடியாக கவனித்துக் கொண்டிருந்தேன். எனினும் என்னுடைய கடந்த கால வாழ்க்கையை, அந்தக் கவலையற்ற, சந்தடி நிறைந்த வாழ்க்கையை நினைத்து நான் ஏங்கிப் பெருமூச்சு விடாத நேரமில்லை. இலையுதிர் காலத்திலும் பனிக் காலத்திலும் மாலை நேரங்களில் ஏற்பட்ட பூரணமான தனிமையைத் தாங்கிக் கொள்வது எனக்கு மிகவும் கடினமாக இருந்தது. மதிய

ணவு நேரம் வரை எப்படியோ பெரும்பாடுபட்டு ஏதோ ஒரு வழியில் நேரத்தைக் கழித்து விடுவேன். கிராமத்துப் பெரியவரோடு பேசிக் கொண்டிருப்பேன்; வயல்களைச் சுற்றிப் பார்ப்பேன்; அல்லது புதிதாகத் தொடங்கப்பட்ட வேலைகளை மேற்பார்வை செய்து கொண்டிருப்பேன். ஆனால் மாலை தொடங்கும் பொழுது, இனி எப்படிப் பொழுதைக் கழிப்பதென்று எனக்குச் சிறிதும் தெரியாது. அங்கே அலமாரிகளிலும் சாமான் அறையிலும் வைக்கப்பட்டிருந்த ஒரு சில புத்தகங்களை நான் பல முறை படித்து விட்டேன். அவற்றில் எழுதியிருப்பவை மனப்பாடமாகி விட்டன. என் வீட்டின் பணிப்பெண்ணை கிரீலவ்ன தனக்குத் தெரிந்த எல்லாக் கதைகளையும் என்னிடம் திரும்பத் திரும்பச் சொல்லி விட்டாள். பெண்களுடைய பாடல்கள் என்னுடைய மனதில் வேதனையைத்தான் ஏற்படுத்தின. நான் குடிக்க ஆரம்பித்தேன். ஆனால் குடித்தவுடன் எனக்குத் தலைவலி உண்டாகிவிடும். மேலும் **துன்பத்தின் காரணமாக மிதமிஞ்சிய குடிகாரனுகி** விடக் கூடாது என்று நான் பயப்படுவதுண்டு. ஏனென்றால் குடிகாரர்களிலேயே அதுதான் மிகவும் மோசமான ரகம். எங்கள் மாவட்டத்தில் அப்படிப் பல பேர்களை நான் பார்த்திருக்கிறேன். அத்தகைய **பரிதாபத்துக்குரிய** இரண்டு அல்லது மூன்று **பேர்களைத்** தவிர வேறு நல்லவர்கள் யாரும் என்னைச் சுற்றி வசிக்கவில்லை. அவர்களுடைய பேச்சு பெரும்பாலும் விக்கலும் பெருமூச்சுமாகவுமே இருக்கும். இவர்களோடு பேசிக் கொண்டிருப்பதைக் காட்டிலும் தனிமையைத் தாங்கிக் கொள்வது சுலபம்.

பி... கோமகளின் வளங்கொழிக்கும் பண்ணை நான்கு வெர்ஸ்டா* தூரத்தில் இருந்தது. ஆனால் அங்கே அதன் மேற்பார்வையாளரைத் தவிர வேறு யாரும் வசிக்கவில்லை. திருமணமான முதல் வருடத்தில் மட்டும் கோமகள் ஒரே ஒரு தடவை பண்ணைக்கு வந்தாள். ஒரு மாதம் மட்டுமே அங்கு தங்கியிருந்தாள். ஆனால் நான் கிராமத்துக்கு வந்த பிறகு இரண்டாவது வசந்த காலத்தின் போது கோமகளும் அவள் கணவரும் கோடை காலத்தின் போது ஓய்வுக்காகப்

---

* ஒரு வெர்ஸ்டா என்பது 1.06 கிலோமீட்டர் தூரமாகும்.—**ப-ர்.**

பண்ணைக்கு வரப் போகிறார்கள் என்ற வதந்தி பரவியது. ஜூன் மாதத்தின் தொடக்கத்தில் அவர்கள் உண்மையாகவே அங்கு வந்து விட்டார்கள்.

கிராமவாசிகளின் வாழ்க்கையில் அண்டை வீட்டுக்காரரான செல்வந்தரின் வருகை ஒரு புதிய சகாப்தத்தின் தொடக்கத்தைக் குறிக்கிறது. அவர் வருவதற்கு இரண்டு மாதங்களுக்கு முன்பே நிலச்சுவான்தார்களும் அவர்களுடைய பண்ணையாட்களும் அதைப் பற்றிப் பேச ஆரம்பித்து விடுவார்கள். அவர் போய் மூன்று வருடங்களான பிறகும் கூட அதைப் பற்றியே பேசிக் கொண்டிருப்பார்கள். இளமையும் அழகும் நிறைந்த கோமகள் வந்து விட்டாள் என்ற செய்தி என்னை மிகவும் பாதித்தது என்பதை நான் ஒத்துக் கொள்ள வேண்டும். ஏனென்றால் அவள் வந்த பிறகு முதல் ஞாயிற்றுக் கிழமையன்று அந்தக் கிராமத்துக்கு உடனடியாகப் போக வேண்டும், அந்தக் கோமகளைப் பார்க்க வேண்டும் என்று நான் துடித்தேன். மேன்மை தங்கிய பெருமக்களின் பக்கத்து கிராமத்தில் நான் வசிக்கிறேன்; நான் உங்களுடைய பணிவு மிகுந்த ஊழியன் என்று அவர்களிடம் அறிமுகம் செய்து கொள்ள வேண்டும் என்று ஆசைப்பட்டேன்.

வேலைக்காரன் கோமகனின் படிப்பறைக்குள் என்னை அழைத்துக் கொண்டு சென்றான். பிறகு என் வருகையை அறிவிப்பதற்காகப் போனான். அந்தப் பெரிய படிப்பறையில் அதிகமான செல்வ வளத்தின் சின்னங்கள் தென்பட்டன. சுவரோரத்தில் புத்தக அலமாரிகள் இருந்தன. ஒவ்வொரு புத்தக அலமாரியின் மேற்பகுதியின் மீதும் ஒரு சிறு வெண்கலச் சிலை வைக்கப்பட்டிருந்தது. பளிங்கினால் அமைக்கப்பட்ட கணப்புக்கு மேலே ஒரு பெரிய நிலைக் கண்ணாடி தென்பட்டது. தரை நெடுகிலும் பச்சை நிறத் துணி விரிக்கப்பட்டிருந்தது; அதன் மீது கம்பளங்கள் பரப்பப்பட்டிருந்தன. எளிமையான இல்லத்தில் வசித்து வருகின்ற எனக்கு வளப்பம் என்பதே மறந்து போய்விட்டது. செல்வந்தர்களின் ஆடம்பரமான வாழ்க்கையைப் பார்த்தும் வெகு காலமாகி விட்டது. எனவே அந்த இடத்தில் இருப்பதற்கே எனக்கு மருட்சி ஏற்பட்டது. மாண்புமிக்க அமைச்சரிடம் மனுக் கொடுப்பதற்காக வெகு தூரத்திலிருந்து வந்திருக்கும் கிராமவாசிக்கு நடுக்கமும் பீதியும் ஏற்படுவதைப் போல

பிரபுவை எதிர்பார்த்துக் கொண்டிருந்த எனக்கும் ஏற்பட்டது. கதவு திறக்கப்பட்டது. மிகவும் அழகான தோற்றமுடைய ஒருவர் உள்ளே வந்தார். அவருக்கு முப்பத்திரண்டு வயதிருக்கலாம். அந்தக் கோமகன் அன்பும் நட்பும் ததும்பயன் அருகே வந்தார். என்னுடைய படபடப்பைத் தணித்துக் கொள்ள விரும்பிய நான் என்னை அறிமுகம் செய்து கொள்ள முயற்சித்தேன். ஆனால் அவர் என்னைத் தடுத்தார். நாங்கள் உட்கார்ந்தோம். நான் நெடுங்காலமாகத் தனியே வாழ்ந்ததால் எனக்கு ஏற்பட்ட சங்கோசத்தை அவருடைய அன்பும் இயல்பான உரையாடலும் விரைவில் அகற்றியது. நான் சகஜமான நிலைமைக்கு வந்து கொண்டிருக்கும் பொழுது கோமகள் அறைக்குள் வந்தாள். முன்பு இருந்ததைக் காட்டிலும் அதிகமான படபடப்பு எனக்கு ஏற்பட்டது. அவள் உண்மையிலேயே பேரழகி. கோமகன் என்னை அறிமுகப்படுத்தினார். நான் என்னைச் சமாளித்துக் கொண்டு நிதானமாக இருக்க முயற்சித்தேன். ஆனால் இதற்குப் பழக்கப்பட்டவன் போல என்னைக் காட்டிக்கொள்ள எவ்வளவு முயற்சித்தேனோ, அவ்வளவு அதிகமான திகைப்பு எனக்கு ஏற்பட்டது. நான் நிதானமடைவதற்கும், அந்நியர்களைக் கண்டு கூச்சப்படுவதைப் போக்கிக் கொள்வதற்கு உதவும் வகையிலும் அவர்கள் தங்களுக்குள் பேசிக்கொள்ள ஆரம்பித்தார்கள். எந்த சம்பிரதாயமும் இல்லாமல் என்னை ஒரு நல்ல அண்டை வீட்டுக்காரனைப் போல நடத்தினார்கள். இதற்கிடையில் நான் அங்கிருந்த புத்தகங்களையும் ஓவியங்களையும் பார்த்துக்கொண்டு அறையைச் சுற்றி வந்தேன். ஓவியங்களைப் பற்றி எனக்கு அதிகமாகத் தெரியாது என்றாலும் ஒரு ஓவியம் என் கவனத்தைக் கவர்ந்தது. அப்படத்தில் ஸ்விட்சர்லாந்தின் இயற்கைக் காட்சி சித்திரிக்கப்பட்டிருந்தது. அதில் வரையப்பட்டிருந்த காட்சியைக் காட்டிலும் இரண்டு கைத்துப்பாக்கிக் குண்டுகள் ஒரே இடத்தில் துளைத்த துவாரம் தென்பட்டதுதான் என் கவனத்தை ஈர்த்திருக்க வேண்டும். முதல் துவாரத்தின் மீது இரண்டாவது துவாரம் இருந்தது. ''சரியான குறி'' என்று கோமகனிடம் கூறினேன். ''ஆமாம்!'' என்று அவர் பதிலளித்தார். ''மிகச் சரியான குறி. உங்களால் குறி தவறாமல் சுட முடியுமா?'' என்று கேட்டார். கடைசியில் எனக்குப் பிடித்த

மான ஒரு விஷயத்தைப் பற்றிப் பேச ஆரம்பித்த மகிழ்ச்சியோடு ''முதல் தரமாகச் சுடுவேன்'' என்று பதிலளித்தேன். ''முப்பது காலடி தூரத்திலிருந்து கொண்டு ஒரு சீட்டைக் குறி பார்த்துச் சுடுவேன். என்னுடைய சொந்தக் கைத்துப்பாக்கியில் அவ்வளவு திறமை எனக்கு உண்டு'' என்றேன். ''அப்படியா?'' என்று கோமகள் மிகுந்த அக்கறையோடு கேட்டாள். ''அன்பே! முப்பது காலடி தூரத்திலிருந்து ஒரு சீட்டைக் குறி பார்த்துச் சுடுவதற்கு உங்களால் முடியுமா?'' என்று பிரபுவைக் கேட்டாள். ''ஒரு நாள் சுட்டுப் பார்ப்போம்'' என்று அவர் பதிலளித்தார். ''சில வருடங்கள் முன்பு வரை நான் நன்ருகவே சுடுவேன்; ஆனுல் கடந்த நான்கு வருடங்களாக நான் கைத்துப்பாக்கியைத் தொடவில்லை'' என்ருர். ''அப்படியானுல் மேன்மை தங்கிய பிரபு அவர்களால் இருபது காலடி தூரத்திலுள்ள சீட்டைக் கூடச் சுட முடியாது என்று நான் பந்தயம் கட்ட முடியும். கைத்துப்பாக்கியில் சுடுவதற்கு அன்ருடப் பழக்கம் வேண்டும். இதை என்னுடைய அனுபவத்தில் தெரிந்து கொண்டேன். எங்களுடைய படைப் பிரிவில் குறி தவருமல் சுடக் கூடிய சிலரில் நானும் ஒருவன் என்று என்னைப் பாராட்டுவார்கள். ஒரு சமயத்தில் என்னுடைய கைத்துப்பாக்கி கெட்டுப் போய்விட்டது. எனவே ஒரு மாத காலம் வரை நான் கைத்துப்பாக்கியைத் தொடவில்லை. பிரபு அவர்களே! அதன் விளைவு என்ன தெரியுமா? அதன் பிறகு முதன் முறையாகச் சுடுவதற்கு முயற்சித்த பொழுது. இருபத்தைந்து காலடி தூரத்தில் உள்ள பாட்டிலைக் சுட என்னுல் கூட முடியவில்லை. ஒரு முறையல்ல, நான்கு முறைகள் முயற்சித்த பொழுதும் என்னுல் சுட முடியவில்லை. எங்கள் துணை அதிகாரி ஒரு வேடிக்கையான பேர்வழி. சிலேடையாகப் பேசுவார். அவர் இதைப் பார்த்தார். 'நண்பனே! பாட்டிலை உடைப்பதை நீ விரும்பவில்லை எனத் தோன்றுகிறது' என்ருர். இல்லை, இல்லை, பிரபு அவர்கள் தினசரிப் பயிற்சியை விட்டுவிடக் கூடாது. இல்லையென்ருல் பழக்கம் விட்டுப் போய்விடும். குறி தப்பாமல் சுடக் கூடிய ஒருவரை எனக்குத் தெரியும். அவர் தினந்தோறும் சுட்டுக் கொண்டே இருப்பார். மதிய உணவுக்கு முன்பு குறைந்தது மூன்று தடவைகளாவது சுட்டுப்பார்ப்பார். உணவருந்துவதற்கு முன்பு சிறிதளவு

வோட்கா சாப்பிடுவதைப் போல அது அவருக்கு அன்றாடப் பழக்கம்.'' நான் இயற்கையாகப் பேச ஆரம்பித்ததைக் கண்டு அவர்களிருவரும் மகிழ்ச்சியடைந்தார்கள். ''குறி தவறாமல் சுடுவதில் அவருக்கிருந்த திறமையைப் பற்றி இன்னும் சொல்லுங்கள்'' என்று பிரபு கேட்டுக்கொண்டார். ''பிரபு அவர்களே! சில சமயங்களில் சுவர் மீது ஒரு ஈ உட்காருவதைப் பார்த்தவுடன், 'குஸ்கா! என்னுடைய கைத்துப்பாக்கியை உடனே எடு' என்று உத்தரவிடுவார். சீமாட்டி அவர்கள் சிரிக்கிறார்கள். சத்தியமாகச் சொல் கிறேன். நான் சொல்வது முழு உண்மையாகும். குஸ்கா அவருடைய கைத்துப்பாக்கியை நீட்டுவான். மறு விநாடி யில் அந்த ஈ சுவரில் நசுங்கிப் போயிருக்கும்!'' என்றேன். ''பிரமாதம்! அந்த நண்பரின் பெயர் என்ன? '' என்று பிரபு கேட்டார். ''பிரபு அவர்களே! அந்த நண்பரின் பெயர் ஸில்வியோ'' என்றேன். ''ஸில்வியோவா?'' என்று பிரபு நாற்காலியிலிருந்து திடுக்கிட்டெழுந்தார். ''உங்களுக்கு ஸில்வியோவைத் தெரியுமா?'' என்று கேட்டார். ''பிரபு அவர்களே! எனக்கு ஸில்வியோவை நன்றாகத் தெரியும். நாங்களிருவரும் நெருங்கிய நண்பர்கள். அவரை எங்க ளோடு சேர்ந்த ஒருவராகத்தான் படைப் பிரிவில் நினைத் திருந்தோம். ஆனால் கடந்த ஐந்து வருடங்களாக எனக்கு அவரைப் பற்றித் தகவல் இல்லை. பிரபு அவர்களுக்கும் அவரைத் தெரியுமா?'' என்றேன். ''எனக்குத் தெரியும். அவரை நன்றாகவே தெரியும். அவர் உன்னிடம் சொல்ல வில்லையா.... இல்லை, சொல்லியிருக்க முடியாது. அவருடைய வாழ்க்கையில் நடைபெற்ற ஒரு அசாதாரணமான சம் பவத்தைப் பற்றி அவர் எதுவுமே சொல்லவில்லையா?'' என்று கேட்டார். ''பிரபு அவர்களே! ஒரு பகட்டான இளை ஞன் அவர் முகத்தில் அறைந்த சம்பவத்தைக் குறிப்பிடு கிறீர்களா?'' என்றேன். ''அந்தப் பகட்டுப் பேர்வழியின் பெயரை அவர் சொல்லவில்லையா?'' ''இல்லை, பிரபு அவர் களே! அவர் சொல்லவில்லை'' என்றேன். அடுத்த விநாடி யில் எனக்கு உண்மை பளிச்சிட்டது. ''பிரபு அவர்களே! நீங்கள்தான்?.. எனக்கு முதலில் புரியவில்லை. தயவு செய்து, என்னை மன்னித்து விடுங்கள்'' என்றேன். பிரபுவின் முகத்தில் கவலைக் குறிகள் தென்பட்டன. ''ஆம். நான்

தான். எங்களது கடைசி சந்திப்பின் நினைவுச் சின்னமே அந்தக் கைத்துப்பாக்கிக் குண்டுகள் துளைத்த ஓவியம்'' என்றார். ''அன்பே! உங்களைக் கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறேன். அதைப் பற்றிப் பேச வேண்டாம். அதைக் கேட்கவே எனக்குப் பயமாக இருக்கிறது'' என்றாள் கோமகள். ''இல்லை, நான் அந்த சம்பவம் முழுவதையும் சொல்லப் போகிறேன். இவருடைய நண்பரை நான் எப்படி அவமதித்தேன் என்பது இவருக்குத் தெரியும். ஸில்வியோ எப்படி என்னைப் பழி வாங்கினார் என்பதையும் இவர் தெரிந்து கொள்ளட்டும்.'' இப்படிச் செல்லிக் கொண்டே பிரபு அவர்கள் நான் உட்காருவதற்காக ஒரு நாற்காலியை அருகில் இழுத்துப் போட்டார். அவர் கூறியதை நான் மிகுந்த ஆவலோடு கேட்டுக் கொண்டிருந்தேன்.

''ஐந்து வருடங்களுக்கு முன்பு நான் திருமணம் செய்து கொண்டேன். முதல் மாதத்தை, the honeymoon* இந்தக் கிராமத்தில்தான் கழித்தேன். என் வாழ்க்கையில் இனிமை நிறைந்த பொழுதுகளை இங்கே கழித்தேன். அது போல துன்பம் நிறைந்த ஒரு அனுபவமும் இங்குதான் எனக்கு ஏற்பட்டது.

''ஒரு நாள் மாலையில் நாங்களிருவரும் குதிரையில் ஏறிக் கொண்டு வெளியே சென்றோம். என்னுடைய மனைவியின் குதிரை இடக்குச் செய்தது. அவள் பயந்து போய் கடிவாளத்தை என்னிடம் கொடுத்துவிட்டு வீட்டுக்கு நடந்து வந்தாள். நான் குதிரையில் முன்னே வந்தேன். என் வீட்டுக்கு முன்பு ஒரு வண்டி நின்று கொண்டிருந்தது. என்னைச் சந்திக்க ஒருவர் வந்திருப்பதாகவும் அவர் தம் பெயரைத் தெரிவிக்க மறுத்து விட்டாரென்றும் என்னிடம் அவருக்கு ஏதோ ஒரு வேலை இருப்பதாகக் கூறினாரென்றும் சொன்னார்கள். அவர் என்னுடைய படிப்பறையில் அமர்ந்திருக்கிறார் என்றும் கூறினார்கள். நான் அறைக்குள் சென்றேன். அங்கே கணப்புக்கு எதிரே, இதே இடத்தில் ஒருவர் நின்று கொண்டிருப்பதை மாலையின் மங்கிய வெளிச்சத்தில் பார்த்தேன். அவர் உடம்பு முழுவதும் தூசி படிந்திருந்தது. சவரம் செய்யாததால் முகத்தில் மீசை, தாடி வளர்ந்திருந்தது. அவர் யாராக

---

* தேநிலவுக் காலம்.—ப-ர்.

இருக்கலாம் என்று யோசித்தபடியே நான் அருகில் சென்றேன். 'பிரபு அவர்களே! என்னைத் தெரியவில்லையா?' என்று கேட்டார். அவர் குரலில் நடுக்கம் இருந்தது. 'ஸில்வியோ!' என்று நான் சத்தமாகச் சொன்னேன். அந்த நேரத்தில் என்னுடைய மயிர்க்கால்கள் குத்திட்டு நின்றன என்பதை ஒத்துக் கொள்ள வேண்டும். 'ஆமாம்! என்னுடைய கைத்துப்பாக்கியைப் பயன்படுத்த வந்திருக்கிறேன். என்னுடைய நேரம் வந்து விட்டது. தாங்கள் தயாரா?' என்று கேட்டார். அவருடைய மார்புப் பையிலிருந்து ஒரு கைத்துப்பாக்கி வெளியே நீட்டிக் கொண்டிருந்தது. அவர் இடத்திலிருந்து பனிரெண்டு காலடிகளை அளந்து கொண்டு அந்த மூலையில் நான் நின்றேன். என் மனைவி திரும்புவதற்குள் சீக்கிரமாகச் சுடுமாறு அவரைக் கேட்டுக் கொண்டேன். அவர் தாமதம் செய்தார். விளக்கு வேண்டுமென்றார். மெழுகுவத்திகள் கொண்டுவரப்பட்டன. உள்ளே யாரையும் அனுமதிக்கக் கூடாது என்று பணியாட்களுக்கு உத்தரவிட்டேன். கதவைத் தாளிட்டேன். உடனே சுடுமாறு மீண்டும் அவரைக் கேட்டுக் கொண்டேன். அவர் கைத்துப்பாக்கியை வெளியே எடுத்துக் குறி பார்த்தார்... நான் வினாடிகளை எண்ண ஆரம்பித்தேன்... என் மனைவியை நினைத்தேன்... ஒரு நிமிடம் பயங்கரமான எண்ணங்கள் தோன்றி மறைந்தன. ஸில்வியோ கைத்துப்பாக்கியைத் தாழ்த்தினார். 'என்னுடைய கைத்துப்பாக்கியில் இருப்பது செர்ரிக் கொட்டைகள் அல்ல, கனமான கைத்துப்பாக்கிக் குண்டுகள் உள்ளே இருக்கின்றன என்பது பரிதாபமானதே. நான் சண்டை போடவில்லை; கொலை செய்யப் போகிறேன் என்பது போன்ற ஒரு உணர்ச்சி எனக்கு ஏற்படுகிறது. ஆயுதமில்லாத ஒருவரைச் சுடுகின்ற பழக்கம் எனக்குக் கிடையாது. நாம் முதலிலிருந்து மறுபடியும் ஆரம்பிக்கலாமே. யார் முதலில் சுடுவதென்று சீட்டுக் குலுக்கிப் போடுவோம்' என்றார். என் தலை சுற்றியது... நான் அதை ஒத்துக் கொள்ளவில்லை என்று நினைக்கிறேன்.... கடைசியில் இன்னொரு கைத்துப்பாக்கியை எடுத்து அதில் குண்டை அடைத்தோம். இரண்டு காகிதங்களில் எண்களை எழுதினோம். எந்தத் தொப்பியை நான் முன்பு சுட்டேனோ அந்தத் தொப்பியில் சீட்டுக்களைப் போட்டுக் குலுக்கினார். மறுபடியும் அதிருஷ்டம் என் பக்கமே. 'கோமான் அவர்களே!

நீங்கள் மிகவும் அதிருஷ்டசாலி' என்று சொல்லிச் சிரித்தார். அந்தச் சிரிப்பை என்னுல் மறக்கவே முடியாது. நான் ஏன் அப்படி மாறினேன், அந்தக் காரியத்தைச் செய்ய நான் எப்படி உடன்பட்டேன் என்று எனக்குப் புரியவில்லை.... ஆனுல் நான் குறி பார்த்துச் சுட்டேன். அந்தப் படத்தில் குண்டு பாய்ந்தது.'' (பிரபு கைத்துப்பாக்கிக் குண்டுகள் துளைத்த ஓவியத்தைச் சுட்டிக் காட்டினுர். அவரது கன்னங்கள் சூடேறிச் சிவப்பாக மாறின. சீமாட்டி தம்முடைய கைக்குட்டையின் நிறத்தைக் காட்டிலும் வெண்மையாக மாறினுர். எனது ஆச்சரியத்தைக் காட்டும் ஒலி என்னையறியாமல் வெளிவந்தது.)

''நான் சுட்டேன். குறி தவறியதற்குக் கடவுளுக்கு நன்றி செலுத்த வேண்டும். பிறகு ஸில்வியோ.... (அந்த நேரத்தில் அவரைப் பார்க்க பயங்கரமாக இருந்தது) என்னை நோக்கிக் குறி பார்த்தார். கதவு திடீரெனத் திறந்தது. மாஷா கூக்குரலிட்டுக் கொண்டு ஓடி வந்து என் மீது விழுந்தாள். அவளைப் பார்த்ததும் உடனே சமயோசிதமாகச் சொன்னேன். 'அன்பே! நாங்கள் வேடிக்கை செய்து கொண்டிருக்கிருேம் என்பது உனக்குப் புரியவில்லையா? என்ன இவ்வளவு பதறிவிட்டாய்? உள்ளே போய் தண்ணீர் சாப்பிட்டுவிட்டுப் பிறகு வா. இவர் எனது பழைய நண்பர், அன்புத் தோழர். இவரை உனக்கு அறிமுகம் செய்து வைக்க விரும்புகிறேன்' என்றேன். நான் சொன்னதை மாஷா நம்பவில்லை. பயங்கரமான தோற்றமுடைய ஸில்வியோவின் பக்கம் திரும்பி 'என் கணவர் சொல்வது உண்மையா? நீங்கள் வேடிக்கை செய்து கொண்டிருக்கிறீர்களா?' என்று கேட்டாள். 'கோமகள் அவர்களே! அவருக்கு எப்பொழுதுமே வேடிக்கைதான். ஒரு நாள் வேடிக்கையாக மட்டுமே என் முகத்தில் அறைந்தார். ஒரு தடவை வேடிக்கையாக இதே தொப்பியைக் குறி பார்த்துச் சுட்டார்; இப்பொழுது அவருக்குக் குறி தவறியதும் ஒரு வேடிக்கைதான். இப்பொழுது நானும் ஒரு வேடிக்கை செய்யப் போகிறேன்....' இப்படிச் சொல்லிவிட்டு என்னைச் சுடப் போவது போல அவர் குறி பார்த்தார். ஆம், அவள் எதிரில் என்னைக் குறி பார்த்தார்! மாஷா ஓடிச் சென்று அவர் காலடியில் விழுந்தாள். 'மாஷா! எழுந்திரு! உனக்கு வெட்கமாக இல்லையா?' என்று நான்

கோபத்தில் கத்தினேன். 'ஐயா! ஒரு அபலைப் பெண்ணைக் கேலி செய்ய வேண்டாம். நீங்கள் சுடப் போகிறீர்களா அல்லது சுட விருப்பமில்லையா?' என்று அவரை நோக்கிக் கேட்டேன். 'நான் சுடப் போவதில்லை. நான் பழி வாங்கி விட்டேன். நீ பயந்து போய் நடுங்கியதைப் பார்த்து விட்டேன். என்னைக் குறி பார்த்துச் சுடுமாறு உன்னைச் செய்தேன். அது போதும். நீ என்னை மறக்க முடியாது. மற்றதை உன் மனச்சாட்சிக்கு விட்டு விடுகிறேன்' என்று ஸில்வியோ பதிலளித்தார். இப்படிச் சொல்லிவிட்டு அவர் அறையிலிருந்து வெளியேறினர். போகும் வழியில் கதவின் அருகே நின்று என் குண்டு துளைத்துச் சென்ற ஓவியத்தைத் திரும்பிப் பார்த்தார். சிறிதும் குறி பார்க்காமல் அதை நோக்கிச் சுட்டார். உடனே அங்கிருந்து மறைந்து விட்டார். என் மனைவி மயங்கிக் கீழே விழுந்து விட்டாள். என்னுடைய வேலையாட்கள் பிரமித்துப் போய் அவரைப் பார்த்தபடியே நின்றனர்கள். அவரைத் தடுத்து நிறுத்த ஒருவருக்காவது தைரியம் கிடையாது. அவர் முன் வாயிலுக்கு வந்ததும் நம்முடைய வண்டிக்காரனைக் கூப்பிட்டார். என்ன நடந்தது என்பதை நான் உணர்வதற்குள்ளாக அவர் போய் விட்டார்.''

பிரபு மேலே ஒன்றும் பேசவில்லை. எந்தக் கதையின் ஆரம்பம் ஒரு காலத்தில் என்னை ஆழமாக பாதித்ததோ, அந்தக் கதையின் முடிவை இப்படி நான் தெரிந்து கொண்டேன். இக்கதையின் நாயகரை நான் பிறகு ஒருபோதும் சந்திக்கவில்லை. ஸில்வியோ அலெக்சாந்தர் இப்ஸிலாந்தியின் கலகத்தின் போது[12] ஒரு படைப் பிரிவுக்குத் தலைமை தாங்கினரென்றும் ஸ்குலியானி போரில் கொல்லப்பட்டாரென்றும் பிறகு கேள்விப்பட்டேன்.

பாறைகளைத் தாவிப் பறக்கும் குதிரை
கள்,
பனியை மிதித்து நசுக்கும் குளம்பு
கள்... வெட்ட வெளியில் தோன்றும்
ஜோதி—
அதோ! இறைவனின் தனியொரு வீடு.

. . . . . . . . . . . . . . . . . . . . . . .

திடீரென வீசும் பனிப்புயல்
பூமியில் எல்லாம் மறைந்தது;
பனித்துகள் சுழன்று விழுகுது;
போகும் வண்டியின் மேலே
கிழக்காக்கை தணிவாகப் பறக்குது.
சிறகுகள் காற்றைக் கிழித்தன;
தீமை வருகுது வருகுதென
அதன் குரல் உணர்த்தும். ஐயமில்லை.
எதிரே இருளில் உற்றுப்பார்த்து
பயத்தால் பிடரிமயிர் குத்திட்டு
நிற்கும் குதிரைகள்....

ஜுக்கோவ்ஸ்கி[13]

நம் நாட்டு வரலாற்றில் ஒருபோதும் மறக்க முடியாத பகுதியான 1811ம் வருடத்தின் இறுதியில் கவ்ரீலா கவ்ரீலவிச் ரி... என்ற பெருமகனார் தமது நெனராதவோ பண்ணையில் வசித்து வந்தார். அவருடைய அன்பும் விருந்தோம்பும் பண்பும் மாவட்டம் பூராவிலும் பிரபலமாகியிருந்தது. அவருடைய அண்டை வீட்டுக்காரர்கள் விருந்துக்கும், குடிப்பதற்கும், அவர் மனைவியோடு ஐந்து கோபெக்கு வைத்துச் சீட்டு விளையாடுவதற்கும் அவர் வீட்டுக்கு எப்பொழுதும் வந்து கொண்டிருந்தார்கள். சிலர் அவருடைய மகள் மார்யா கவ்ரீலவ்னவைப் பார்ப்பதற்கு வருவார்கள். அந்தப் பெண்ணுக்கு வயது பதினேழு. ஒல்லியான உடல், வெளிர் நிறம். அவள் திருமணத்துக்கு ஏற்ற பணக்காரப் பெண். அவளைத் தாங்கள் அடைய வேண்டுமென்றோ அல்லது தங்களுடைய குமாரர்களுக்கு அவளைத் திருமணம் செய்து வைக்க வேண்டுமென்றோ பலரும் எண்ணிக் கொண்டிருந்தார்கள்.

மார்யா கவ்ரீலவ்னா பிரெஞ்சு மொழியில் எழுதப்பட்ட பல நாவல்களைப் படித்தவள். எனவே அவள் காதல்வயப் பட்டாள். விடுமுறைக்காகத் தனது சொந்த கிராமத்துக்கு வந்திருந்த ஒரு ஏழை இராணுவ அதிகாரியை அவள் காதலித்தாள். அந்த இளைஞனும் அவளை அதே ஆசையோடு விரும்பினான் என்று சொல்லவும் வேண்டுமா? அவர்களுக் கிடையே பரஸ்பரம் ஏற்பட்டிருந்த காதலைத் தெரிந்து கொண்ட பெண்ணின் பெற்றோர்கள், அவனை மறந்துவிட வேண்டும் என்று அவளுக்கு உத்தரவிட்டார்கள். அவன் தங்களுடைய வீட்டுக்கு வருகின்ற சந்தர்ப்பங்களில் ஓர் ஓய்வுபெற்ற நீதிபதியிடம் பேசுவதைப் போல எத்தகைய ஆர்வமுமின்றி அவனிடம் பேசினார்கள்.

காதலர்கள் இருவரும் தொடர்ந்து கடிதம் எழுதிக் கொண்டார்கள். ஒவ்வொரு நாளும் பைன் மரக் காட்டில் அல்லது ஒரு பழங்காலத்திய மாதாகோவிலில் அவர்கள் தனியே சந்தித்துக் கொண்டார்கள். அங்கே அவர்கள் தங்களுடைய காதல் அழியாதது என்று சத்தியம் செய்து கொடுத்தார்கள். தங்களுடைய பரிதாபமான நிலைமையைப் பற்றி வருத்தத்தோடு பேசிக் கொண்டார்கள். இன்னும் தங்களுடைய எதிர்காலத்தைப் பற்றிப் பலவிதமான திட்டங்களையும் தீட்டினார்கள். இத்தகைய சந்திப்புக்களும் கடிதங்கள் எழுதிக் கொள்வதும் தொடர்ந்து நடைபெற்றதன் விளைவாக அவர்கள் பின்வரும் முடிவுக்கு வந்தார்கள் (அது முற்றிலும் இயற்கைதானே): ஒருவர் இல்லாமல் மற்றவர் வாழ முடியாது; ஆனால் இரக்கமற்ற பெற்றோர்கள் தங்களுடைய திருமணத்துக்குத் தடையாக இருப்பதால், அவர்களுடைய அனுமதி இல்லாமலே திருமணம் செய்து கொண்டால் என்ன? இந்த நல்ல யோசனையை முதலில் சொன்னது அந்த இளைஞனாகத்தான் இருக்கும் என்பதை நிச்சயமாக ஊகிக்க முடியும். மார்யா கவ்ரீலவ்னாவின் காதல் கற்பனைகளுக்கு இந்த யோசனை மிகவும் உகந்ததாக இருந்தது.

பனிக்காலம் வந்ததும் அவர்களுடைய சந்திப்புக்கள் நின்று விட்டன. ஆனால் அவர்கள் கடிதங்கள் உணர்ச்சிப் பரவசமாக மாறின. விளதீமிர் நிக்கலாயெவிச் தன்னுடைய ஒவ்வொரு கடிதத்திலும்: நாம் இரகசியமாகத் திருமணம்

செய்து கொள்வோம்; நீ எனக்குரியவளாகிய பின்னர் கொஞ்ச காலம் மறைவாக வாழ்க்கை நடத்துவோம்; அதன் பிறகு பெற்ருேர்களின் காலடியில் விழுந்து எங்களே மன்னித்து விடுங்கள் என்று மன்ருடுவோம். காதலர்களின் மனவுறுதியும் அவர்கள் அனுபவித்திருக்கும் துன்பங்களும் அவர்கள் மனதை நிச்சயமாக மாற்றிவிடும். அவர்கள் தங்களுடைய கைகளே நீட்டி ''குழந்தைகளே, வாருங் கள்'' என்று நிச்சயமாக வரவேற்பார்கள் என்று எழுதி ஞன்.

மார்யா கவ்ரீலவ்ஞ ஒரு முடிவுக்கு வருவதற்கு நெடுங் காலமாயிற்று. ஓடிப் போவதற்குச் சொல்லப்பட்ட பல திட் டங்களே அவள் ஏற்றுக் கொள்ளவில்லே. கடைசியாக ஒரு திட்டத்துக்கு அவள் இசைந்தாள்: குறிப்பிட்ட தினத்தன்று இரவில், அவள் பெற்ருேர்களுடன் உணவருந்தாமல் தலே வலிக்கிறதென்று சொல்லிவிட்டுப் படுக்கை அறையில் இருக்க வேண்டும். அவளுடைய பணிப்பெண்ணுக்கு விஷ யம் தெரியும். கொல்லேப்புற வாயில் வழியாக இருவரும் தோட்டத்துக்குள் போக வேண்டும். அங்கே தயாராக இருக்கும் சறுக்கு வண்டியில் ஏறிக்கொண்டு நெனராதவோ கிராமத்திலிருந்து ஐந்து வெர்ஸ்டாக்கள் தொலேவிலுள்ள ஷாட்ரிஞே என்ற கிராமத்துக்குப் போக வேண்டும். அங்கே யுள்ள மாதாகோவிலில் விளதீமிர் அவர்களுக்காகக் காத்துக் கொண்டிருக்க வேண்டும்.

அந்தக் குறிப்பிட்ட தினத்துக்கு முந்திய இரவில் மார்யா கவ்ரீலவ்ஞ சிறிதும் உறங்கவில்லே. தன்னுடைய துணிகளேக் கலேத்துப் போட்டு அவற்றில் சில உடைகளேத் தேர்ந்தெடுத்து மூட்டையாகக் கட்டிஞள். அவளுடைய தோழியான அன்புமிக்க இளம் பெண்ணுக்கு ஒரு நீண்ட கடிதம் எழுதிஞள். தன்னுடைய பெற்ருேர்களுக்கு மற் ெருரு கடிதம் எழுதி வைத்தாள். அக்கடிதத்தில் உள்ளத்தை உருக்கும் வார்த்தைகளில் தன்னுடைய பெற்ருேர்களிட மிருந்து விடை பெற்றுக் கொண்டாள். காதல் வயப்பட்ட தன்னுடைய செயலுக்காக மன்னிப்புக் கோரிஞள். தன் னுடைய அன்புக்குரிய பெற்ருேர்களின் காலடியில் விழுந்து அவர்களால் ஏற்றுக் கொள்ளப்படுகிற தருணமே தன் னுடைய வாழ்க்கையில் அதிகமான மகிழ்ச்சியைத் தருவ

தாகும் என்று முடிவில் எழுதினாள். இரண்டு கடிதங்களையும் ஒட்டி முத்திரை வைத்தாள்—அந்த முத்திரையில் பொருத்தமான சொற்றொடருக்கு மேலே இரு இதயங்கள் நெருப்புப் பற்றியிருக்கும் படம் வரையப்பட்டிருந்தது. பொழுது புலர்வதற்குச் சற்று முன்பு அவள் படுக்கையில் விழுந்தாள். ஆனால் அவள் நன்றாகத் தூங்கவில்லை. அடிக்கடி பயங்கரமான கனவுகள் ஏற்பட்டு விழித்துக் கொண்டாள். மாதா கோவிலுக்குப் போவதற்காகச் சறுக்கு வண்டியில் ஏறுகின்ற சமயத்தில் அவளுடைய தகப்பனார் வந்து அவளைப் பனியில் பொறுக்க முடியாத வேகத்தில் சரசரவென்று இழுத்துக் கொண்டு போய் முடிவில்லாத இருட்டறைக்குள் தூக்கி யெறிவது போலவும்.... அவள் வேகமாகக் கீழே விழுந்து கொண்டிருக்கும் பொழுது அவளுடைய இதயத்துடிப்பு நின்று விடுவது போலவும் அவள் கனவு கண்டாள். பிறகு விளதீமிர் புல்வெளியில் இரத்தம் சொட்டக் கிடப்பது போலக் கனவு கண்டாள். அவன் உடல் வெளிறிப் போய் விட்டது. சீக்கிரமாகத் திருமணம் நடக்கட்டும் என்று அவன் மரணத்தின் பிடியில் கேட்டுக் கொள்கிறான்.... பயங்கரமான கனவுகள், விவரிக்க முடியாத கனவுகள் ஒவ்வொன்றாக வந்து கொண்டிருந்தன. கடைசியில் அவள் உண்மையான தலைவலியோடு அதிகமாக வெளிறிப் போன நிறத்தில் படுக்கையிலிருந்து எழுந்தாள். அவளுடைய தகப்பனாரும் தாயாரும் அவளுடைய உடல்நிலையைக் கவனித்தார்கள். அதைப் பற்றி அன்போடு விசாரித்தார்கள். "மாஷா! ஏன் ஒரு மாதிரியாக இருக்கிறாய்? மாஷா! உனக்கு உடம்பு சரியில்லையா?" என்று திரும்பத் திரும்பக் கேட்டார்கள். அவர்களுடைய கேள்விகள் அவள் இதயத்தை வேதனைப் படுத்தின. அவர்களுடைய கவலையைப் போக்கும் எண்ணத்தோடு அவள் உற்சாகமாக இருப்பது போல நடிக்க முயன்றாள். ஆனால் அவள் வெற்றி பெறவில்லை. மாலை நேரம் வந்தது. தன்னுடைய குடும்பத்தில் இதுவே தனது கடைசி நாள் என்று உணர்ந்ததும் அவள் மிகவும் வேதனைப்பட்டாள். அவளால் மூச்சு விடக்கூட முடியவில்லை. அங்கேயிருந்த எல்லா நபர்களிடமிருந்தும் வீட்டிலிருந்த பொருள்களிடமிருந்தும் அவள் இரகசியமாக விடை பெற்றுக் கொண்டாள்.

இரவு உணவுக்கு வந்த பொழுது அவளுடைய இதயம்

பலமாகத் துடித்தது. தனக்கு உணவு வேண்டாம் என்று நடுங்கும் குரலில் சொன்னாள். பிறகு தன் தகப்பனாருக்கும் தாயாருக்கும் இரவு வணக்கம் சொன்னாள். அவர்கள் வழக்கம் போல அவளை முத்தமிட்டு ஆசீர்வதித்தார்கள். அவளுடைய கண்களிலிருந்து நீர்த்துளிகள் உருண்டன. தன்னுடைய படுக்கையறைக்குச் சென்றதும் அவள் நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு விம்மி விம்மியழுதாள். அவளுடைய பணிப்பெண் அவளைச் சமாதானப்படுத்த அரும்பாடு பட்டாள். எல்லாம் தயாராக இருந்தது. இன்னும் அரை மணி நேரத்தில் மாஷா தான் பிறந்து வளர்ந்த குடும்பத்திலிருந்து, தன்னுடைய அறையிலிருந்து, அறியாப் பெண்மையிலிருந்து நிரந்தரமாக விடை பெற்றுக் கொள்ளப் போகிறாள்... வெளியே பனிப்புயல் பலமாக வீசிக் கொண்டிருந்தது. காற்று பலமாக அடித்தது. சன்னல் பலகைகள் சத்தத்தோடு ஆடிக் கொண்டிருந்தன. எல்லாம் அவளுக்கு அபாய அறிவிப்புகளைப் போல, துர்ச்சகுனங்களைப் போலத் தோன்றின. சிறிது நேரத்தில் வீட்டில் எல்லோரும் தூங்கி விட்டார்கள். மாஷா தன்னுடைய உடலில் ஒரு சால்வையைப் போர்த்திக் கதகதப்பான கம்பளி உடைகளை அணிந்து கொண்டாள். ஓர் ஆபரண டப்பியைக் கையிலெடுத்துக் கொண்டு கொல்லைப்புற வாயில் வழியாக வீட்டிலிருந்து வெளியேறினாள். பணிப்பெண் இரண்டு மூட்டைகளை எடுத்துக் கொண்டு அவளைப் பின்தொடர்ந்தாள். அவர்கள் தோட்டத்துக்குள் நடந்து சென்றனர். பனிப்புயல் சிறிதும் குறையவில்லை. அந்த இளம் பெண் செய்யப் போகும் காரியத்தைத் தடுப்பது போல காற்று அவர்கள் முகத்தில் அடித்தது. அவர்கள் மிகுந்த சிரமத்தோடு தோட்டத்தை விட்டு வெளியே வந்தார்கள். பாதையோரத்தில் அவர்களுக்காக ஒரு சறுக்கு வண்டி காத்துக் கொண்டிருந்தது. பனியில் குளிர்ந்து போன குதிரைகளால் நேராக நிற்க முடியவில்லை. குதிரைகளின் சேட்டைகளைக் கட்டுப்படுத்துவதற்காக விளதீமிரின் வண்டிக்காரன் ஏதேதோ முயற்சிகளைச் செய்து கொண்டிருந்தான். அவன் அந்த இளம் சீமாட்டியையும் அவளுடைய பணிப்பெண்ணையும் வண்டியில் வசதியாக உட்காரச் செய்தான். மூட்டைகளையும் ஆபரண டப்பியையும் உள்ளே பத்திரமாக வைத்

தான். பிறகு லகானைக் கையிலெடுத்தான். குதிரைகள் முன்னே பாய்ந்து சென்றன. வண்டிக்காரன் தெரியோஷ்காவின் திறமைக்கும் விதியின் திட்டத்துக்கும் கதாநாயகியை விட்டுவிட்டு, அவளுடைய இளம் காதலனைப் பின் தொடர்வோம்.

விளதீமிர் அன்றைய பகற்பொழுது முழுவதும் பல இடங்களுக்குச் சென்றான். காலையில் ஷாட்ரினோவுக்குப் போய் மதகுருவைப் பார்த்தான். அதிகமான வற்புறுத்தலுக்குப் பிறகுதான் அவனுடைய திட்டத்துக்கு அவர் உடன்பட்டார். அடுத்தபடியாக, பக்கத்து நிலச்சுவான்தார்கள் யாராவது சாட்சிகளாக வர இசைவார்களா என்று தேடிச் சென்றான். முதலில் திராவின் என்ற ஒய்வுபெற்ற இராணுவ அதிகாரியைச் சந்தித்தான். அவருக்கு நாற்பது வயதிருக்கும். அவனுடைய திட்டம் பழைய காலத்தில் ஹுஸார் இராணுவ அதிகாரிகளின் துணிகரமான செயல்களை நினைவுபடுத்துவதாகச் சொல்லி அவர் உடனே மகிழ்ச்சியோடு ஒத்துக் கொண்டார். மற்றும் இரண்டு சாட்சிகள் சுலபமாகக் கிடைப்பார்கள் என்று உறுதியளித்து விளதீமிரைத் தன்னோடு விருந்து சாப்பிடுமாறு வற்புறுத்தி இணங்கச் செய்தார். விருந்து முடிந்த பிறகு நில அளவையாளரான மீசைக்கார ஷ்மித் மாவட்ட காவல்துறை அதிகாரியின் மகனோடு அங்கே வந்தார். அந்த இளைஞனுக்குப் பதினாறு வயது முடிந்திருக்கும். அவன் சமீபத்தில்தான் உலான்ஸ் படைப் பிரிவில் சேர்ந்திருக்கிறான். அவர்கள் விளதீமிரின் திட்டத்தை ஏற்றுக் கொண்டதோடு நில்லாமல் தேவைப்பட்டால் அவனுக்காகத் தங்களுடைய உயிரையே கொடுக்கத் தயார் என்று உறுதி கூறினார்கள். விளதீமிர் அவர்களைப் பாசத்தோடு தழுவிவிட்டு மற்ற ஏற்பாடுகளை கவனிப்பதற்காக வீட்டுக்குச் சென்றான்.

மாலை மறைந்து வெகு நேரமாகி விட்டது. அவனுடைய நம்பிக்கைக்குப் பாத்திரமான வண்டிக்காரன் தெரியோஷ்காவிடம் விவரங்களைச் சொல்லி டிரோய்கா வண்டியை* எடுத்துக் கொண்டு நெனராதவோ கிராமத்துக்குப் போகுமாறு உத்தரவிட்டான். பிறகு ஒரு குதிரை இழுக்கின்ற

---

* மூன்று குதிரைகள் பூட்டப்பட்ட வண்டி.—ப-ர்.

சிறு சறுக்கு வண்டியில் ஏறிக் கொண்டு வண்டிக்காரன் இல்லாமல் அவன் ஷாட்ரிஞ்ஞே கிராமத்துக்குப் புறப்பட்டான். இன்னும் இரண்டு மணி நேரத்தில் மார்யா கவ்ரீலவ்னு அந்தக் கிராமத்துக்கு வந்து சேர்ந்து விடுவாள். அந்தப் பாதை அவனுக்கு நன்ருகத் தெரியும். அங்கே போய்ச் சேர இருபது நிமிடங்களுக்கு மேல் ஆகாது.

விளதீமிர் கிராமத்தைக் கடந்து திறந்த வெளிக்கு வந்ததும் பலமான காற்று வீசியது; அடர்த்தியான பனிப் புயலில் அவனுல் எதையும் பார்க்க முடியவில்லே. ஒரு நிமிடத்துக்குள் பாதை முழுவதும் பனி நிறைந்து விட்டது. மங்கலான, மஞ்சள் நிறப் பனிப் படலத்தில் சுற்றுப் புறங்கள் மறைந்தன. எங்கும் வெண்மையான பனித்துகள் சுழன்றடித்தது. வானமும் பூமியும் ஒன்ருகி விட்டன. வண்டி ஒரு வயலின் நடுவில் சென்று கொண்டிருப்பதைப் பார்த்த விளதீமிர் அதைப் பாதைக்குத் திருப்ப மிகவும் முயற்சி செய்தான். குதிரை எங்கெல்லாமோ வண்டியை இழுத்துச் சென்றது. ஒவ்வொரு நிமிடமும் பனிக் குவியல் மீது மோதி நிற்கும், அல்லது ஏதாவது பொந்தில் விழுந்துவிடும். வண்டி அடிக்கடி தலே கீழாகக் கவிழ்ந்து கொண்டிருந்தது. பாதை மாறிவிடக் கூடாது என்பதற்காக விளதீமிர் மிகுந்த கவனத்தோடு எல்லா முயற்சிகளும் செய்தான். வண்டி புறப்பட்டு அரை மணி நேரத்துக்கு மேலே ஆகியிருக்கலாம் என்று அவனுக்குத் தோன்றிய போதிலும் ஷாட்ரிஞ்ஞேவிலுள்ள காட்டை அடையவில்லே. மேலும் பத்து நிமிடங்களான பிறகும் கூட அந்தக் காட்டுக்கு வந்து சேரவில்லே. விளதீமிர் இன்னும் ஆழமான பள்ளங்கள் நிறைந்த திறந்த வெளியில்தான் வண்டியைச் செலுத்திக் கொண்டிருந்தான். பனிப்புயல் நின்றபாடில்லே. வானத்தில் மேகங்கள் திரண்டு நின்றன. குதிரை களேத்துப் போய்விட்டதற்கான அறிகுறிகள் தென்பட்டன. விளதீமிர் அடிக்கடி இடுப்பு வரை பனிக் குவியலில் இறங்கிய போதிலும், அவன் உடலிலிருந்து வியர்வை பெருக்கெடுத்து ஓடியது.

வண்டி இவ்வளவு நேரமும் தவருன திசையில் போய்க் கொண்டிருந்தது என்பதை அவன் வெகு நேரம் கழித்துத் தான் தெரிந்து கொண்டான். விளதீமிர் குதிரையை நிறுத்தி விட்டு யோசித்தான். ஆழ்ந்த சிந்தனேக்குப் பிறகு வலது

பக்கம் திரும்பியிருக்க வேண்டும் என்ற முடிவுக்கு வந்தான். இப்பொழுது வண்டியை வலது புறத்தில் திருப்பினான். அவன் குதிரை அநேகமாக நகரவில்லை. வண்டி புறப்பட்டு ஒரு மணி நேரமாவது ஆகியிருக்கும். எனவே ஷாட்ரினோ அதிக தூரத்தில் இருக்காது என்று நினைத்தான். அவன் வண்டி போய்க் கொண்டிருந்தது. ஆனால் திறந்த வெளிக்கு முடிவில்லை. பள்ளங்களும் பனிக் குவியல்களும் வந்து கொண்டிருந்தன. வண்டி அடிக்கடி கவிழ்ந்து போவதும் விளதீமிர் அதைச் சரி செய்வதும் தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டிருந்தது. நேரமாகிக் கொண்டிருந்த காரணத்தால் விளதீமிருக்குக் கவலை அதிகமாயிற்று.

கடைசியில் ஒரு திசையில் கறுப்பாக ஏதோ தெரிந்தது. அவன் அதை நோக்கித் திரும்பினான். அதை நெருங்கிய பொழுது அது ஒரு காடு என்பது தெரிந்தது. நல்லவேளை கடவுள் காப்பாற்றினார். சீக்கிரத்தில் கிராமத்துக்குப் போய் விடலாம் என்று நினைத்தான். காட்டுக்கு அப்பால்தான் ஷாட்ரினோ கிராமம். அதைத் தாண்டிவிட்டால் வழக்கமான பாதை தென்படும் என்று நினைத்து வண்டியைச் செலுத்தினான். சிறிது நேரத்துக்குப் பிறகு பாதை தென்பட்டது. பனிக் காலத்தில் இலைகளை உதிர்த்துவிட்டு மரங்கள் வெறும் கிளைகளோடு மட்டும் காட்சி தந்தன. இரு மருங்கும் சோகமாகத் தோன்றிய மரங்களின் நடுவே வண்டி போய்க்கொண்டிருந்தது. இங்கே காற்று பலமாக வீச முடியவில்லை. பாதை நன்றாக இருந்தது. குதிரை புத்துணர்வோடு வண்டியை இழுத்தது. விளதீமிர் பதட்டம் குறைந்து நிதானமடைந்தான்.

எனினும் இன்னும் அதிகமான தூரம் போன பிறகும் ஷாட்ரினோ கிராமத்துக்கு வந்து சேரவில்லை. அந்தக் காடு முடிவில்லாமல் நீண்டிருந்தது. தனக்குத் தெரியாத காட்டில் வந்து மாட்டிக்கொண்டதாக விளதீமிர் நினைத்த பொழுது அவனுக்கு அதிகமான பயம் ஏற்பட்டது. என்ன செய்வதென்று தெரியாமல் அவன் குதிரையை ஓங்கி அடித்தான். உடனே அது வேகமாக ஓடியது. ஆனால் வெகு சீக்கிரத்தில் களைத்துப் போய் பதினைந்து நிமிடங்களுக்குப் பிறகு மெதுவாக நடக்க ஆரம்பித்தது. பரிதாபத்துக்குரிய விளதீமிர் என்ன பாடுபட்டும் குதிரை வேகமாக ஓட மறுத்தது.

கடைசியில் மரங்கள் குறைந்த, காட்டின் ஓரத்துக்கு வண்டி வந்து சேர்ந்தது. விளதீமிர் காட்டை விட்டு வெளியே வந்தான். ஷாட்ரினே கிராமம் கண்ணுக்குப் புலப்படவில்லை. அப்பொழுது நள்ளிரவாகியிருக்கும் என்று நினைத்தான். அவன் கன்னங்களில் கண்ணீர் வழிந்தோடியது. அவன் வண்டியை மறுபடியும் ஒழுங்கில்லாமல் ஓட்டினன். புயல் நின்று விட்டது. மேகங்கள் மறைந்து விட்டன. அவனுக்கு முன்பு வெண்மையான பனியால் மூடப்பட்ட திறந்த வெளி தென்பட்டது. அந்த இரவில் தெளிவாகப் பார்க்க முடிந்தது. சற்று தூரத்தில் நான்கைந்து குடிசைகள் அமைந்திருப்பதை, ஒரு குக்கிராமத்தைக் கண்டான். விளதீமிர் வண்டியை அங்கே செலுத்தினன். அவன் கண்ணுக்குத் தென்பட்ட முதல் குடிசை அருகே வண்டியிலிருந்து கீழே குதித்தான். சன்னலருகே ஓடிச் சென்று தட்டினன். சில நிமிடங்களுக்குப் பிறகு சன்னல் கதவு திறக்கப்பட்டு, ஒரு கிழவன் தன்னுடைய வெண்மையான தாடியை வெளியே நீட்டினன். ''உனக்கு என்ன வேண்டும்?'' ''ஷாட்ரினே இங்கிருந்து அதிக தூரமா?'' ''ஷாட்ரினேவா?...'' ''ஆமாம்! எவ்வளவு தூரம் இருக்கும்?'' ''அதிகமில்லை. பத்து வெர்ஸ்டாக்கள் தூரம்.'' இந்த பதிலைக் கேட்டதும் விளதீமிர் தலையிலடித்துக் கொண்டான். மரணதண்டனை விதிக்கப்பட்ட செய்தியைக் கேட்ட குற்றவாளியைப் போலப் பிரமித்துப் போய் நின்றான்.

''நீங்கள் எங்கேயிருந்து வருகிறீர்கள்?'' என்று அந்தக் கிழவன் கேட்டான். அவனுடைய கேள்விக்குப் பதிலளிப்பதற்குக் கூட விளதீமிரிடம் சக்தியில்லை. ''ஐயா! ஷாட்ரினேவுக்குப் போவதற்குக் குதிரைகள் கிடைக்குமா?'' என்று கிழவனிடம் கேட்டான். ''எங்களிடம் குதிரை ஏது?'' என்று அந்தக் கிழவன் பதிலளித்தான். ''பாதையைக் காட்டுவதற்காவது யாராவது கிடைப்பார்களா? அவர்கள் கேட்கும் பணத்தைக் கொடுத்து விடுவோம்.'' இதைக் கேட்ட கிழவன் சன்னலை மூடினன். ''கொஞ்சம் பொறுங்கள். என்னுடைய மகனை அனுப்புகிறேன். அவன் உங்களுக்குப் பாதையைக் காட்டுவான்'' என்றான். விளதீமிர் மௌனமாக நின்றான். ஒரு நிமிடம் முடிவதற்குள்ளாக மறுபடியும் சன்னலை ஓங்கித் தட்டினன். சன்னல் திறந்து மறுபடியும் கிழ

வனின் தாடி தெரிந்தது. ''என்ன வேண்டும்?'' ''உன் மகன் எங்கே?'' ''அவன் புறப்பட்டு விட்டான். பூட்சுகளை அணிந்து கொண்டிருக்கிறன். வெளியே குளிர் அதிகம். உள்ளே வந்து சூடேற்றிக் கொள்ளலாமே'' என்றன். ''இல்லை. நன்றி. உன் மகனை சீக்கிரமாகப் புறப்படச் சொல்'' என்றன் விளதீமிர்.

கதவு கிறீச்சிட்டது. ஓர் இளைஞன் கையில் கம்புடன் வெளியே வந்தான். அவன் வண்டிக்கு முன்பாக நடந்தான். சில சமயங்களில் அவன் பாதையைக் காட்டுவான். சில சமயங்களில் பாதையைத் தேடுவான். ஏனென்றல் பாதையில் அதிகமான பனி விழுந்து மூடி விட்டது. ''இப்பொழுது மணி என்ன?'' என்று விளதீமிர் அவனைக் கேட்டான். ''சீக்கிரத்தில் விடியப் போகிறது'' என்று இளம் விவசாயி பதிலளித்தான். இதைக் கேட்ட பிறகு விளதீமிர் ஒன்றும் பேசவில்லை.

அவர்கள் ஷாட்ரினேவை அடைந்த பொழுது சேவல்கள் கூவின. கீழ்வானத்தில் வெளிச்சம் தெரிந்தது. மாதா கோவில் பூட்டப்பட்டிருந்தது. விளதீமிர் தன்னுடைய வழிகாட்டியிடம் பணத்தைக் கொடுத்தான். பிறகு மதகுருவின் வீட்டுக்குப் போனன். அங்கே டிரோய்கா வண்டி எதுவுமில்லை. அவனுக்குக் கிடைத்த தகவல் என்னவென்று நினைக்கிறீர்கள்?!

நாம் இப்பொழுது நெனராதவோ பண்ணையின் சொந்தக்காரர்களைச் சந்திப்போம். அங்கே என்ன நடக்கிறது என்று பார்ப்போம்.

அங்கே ஒன்றும் நடக்கவில்லை.

வீட்டுப் பெரியவர்கள் தூங்கியெழுந்து வரவேற்பு அறைக்குச் சென்றர்கள். கவ்ரீலா கவ்ரீலவிச் தலையில் தொப்பியும் கம்பளி உடையும் அணிந்திருந்தார். அவர் மனைவி பரஸ்கோவியா பெத்ரோவ்ன பஞ்சு திணிக்கப்பட்ட உடை அணிந்திருந்தாள். சமோவார் பாத்திரம்* அங்கே கொண்டுவரப்பட்டது. மார்யா கவ்ரீலவ்ன நன்றகத் தூங்கினளா? அவள் உடல் நலம் எப்படி என்று பார்த்து வருமாறு கவ்ரீலா கவ்ரீலவிச் ஒரு பெண்ணை அனுப்பி வைத்தார்.

---

* தேநீர் தயாரிக்கப்படும் பாத்திரம்.—ப-ர்.

அந்தப் பெண் திரும்பி வந்து மார்யா கவ்ரீலவ்ன சரியாகத் தூங்கவில்லை, இருந்தாலும் உடம்பு தேவலை, சீக்கிரமாக வரவேற்பு அறைக்கு வந்து பெற்றோர்களைச் சந்திப்பாள் என்று சொன்னாள். உண்மையில், அந்த நேரத்தில் கதவு திறந்தது. மார்யா கவ்ரீலவ்ன உள்ளே வந்து பெற்றோர் களுக்கு வணக்கம் செலுத்தினாள்.

''மாஷா! தலைவலி எப்படி இருக்கிறது?'' என்று கவ் ரீலா கவ்ரீலவிச் கேட்டார். ''குணமாகியிருக்கிறது, அப்பா'' என்றாள் மாஷா. ''அடுப்புப் புகையினால்தான் தலைவலி ஏற் பட்டிருக்க வேண்டும்'' என்றாள் பரஸ்கோவியா பெத் ரோவ்ன. ''ஒருவேளை அப்படியிருக்கலாம், அம்மா'' என்றாள் மாஷா.

அன்று பகலில் எத்தகைய விசேடமுமில்லை, ஆனால் அன் றிரவில் மாஷா நோய்வாய்ப்பட்டாள். பக்கத்து நகரத் திலிருந்து மருத்துவர் வரவழைக்கப்பட்டார். மறு நாள் மாலையில் அந்த மருத்துவர் வந்த பொழுது நோயாளி ஜன் னியில் பிதற்றிக் கொண்டிருந்தாள். அவளுக்குக் கடுமை யான காய்ச்சல் ஏற்பட்டிருந்தது. இரண்டு வாரகாலம் அந்தப் பெண்ணின் உயிர் ஊசலாடிக் கொண்டிருந்தது.

மாஷா ஓடிப் போகத் திட்டமிட்டிருந்தது அந்த வீட் டில் ஒருவருக்கும் தெரியாது. முந்திய நாளன்று மாலையில் எழுதப்பட்ட கடிதங்கள் நெருப்பில் எரிக்கப்பட்டன. எசமா னரின் கோபத்துக்குப் பயந்து மாஷாவின் பணிப்பெண் ஒரு வரிடமும் ரகசியத்தைச் சொல்லவில்லை. மதகுரு, ஓய்வு பெற்ற இராணுவ அதிகாரி, மீசைக்கார நில அளவையாளர், இளம் உலான் ஆகிய அனைவருமே வாயைத் திறக்கவில்லை. அதற்குக் காரணமுண்டு. வண்டிக்காரனாகிய தெரியோஷ்கா குடிமயக்கத்தில் கூட அனாவசியமாக எதுவும் பேசிவிடாமல் அந்த ரகசியத்தைக் காப்பாற்றினான். அரை டஜன் சதிகாரர் களுக்குத் தெரிந்த ரகசியம் மற்றவர்களுக்குத் தெரிந்து விடாமல் காப்பாற்றப்பட்டது. ஆனால் மார்யா கவ்ரீலவ்ன ஜன்னியில் பிதற்றும் பொழுது தானே ரகசியத்தைச் சொல்லி விட்டாள். நல்லவேளையாக அவளுடைய வார்த்தைகள் தெளிவாக இல்லை. எனவே அவளுடைய படுக்கை அருகி லேயே உட்கார்ந்திருந்த தாயாரால் உண்மையைப் புரிந்து கொள்ளமுடியவில்லை. விளதீமிர் நிக்கலாயெவிச்சைத் தன்

மகள் மிகவும் காதலிக்கிருள், அதனுல்தான் அவள் நோய் வாய்ப்பட்டிருக்கிருள் என்று நினைத்தாள். அவள் தன்னுடைய கணவரையும் பக்கத்து வீட்டுக்காரர்கள் சிலரையும் கலந்து யோசித்தாள். கடைசியில் எல்லோரும் ஒருமனதாக விதி யாரை விட்டது, மார்யா கவ்ரீலவ்னுவின் வாழ்க்கை எழுதியபடிதான் நடக்கும் என்று முடிவு செய்தார்கள். மேலும் ஏழ்மை ஒரு மனிதனுடைய குற்றமல்ல; பண மூட்டைகளோடு வாழ்க்கை நடத்த முடியாது, மனிதனேடுதான் வாழ முடியும்—இப்படிப் பலவிதமான வாசகங்களைச் சொல்லிக் கொண்டார்கள். நம்முடைய காரியங்களுக்கு நம்மால் நியாயம் கற்பிக்க முடியவில்லை என்ருல் பழமொழிகள் தானே உதவி செய்கின்றன.

இதற்கிடையில் அந்தப் பெண் மெதுவாக குணமடைந்து வந்தாள். கவ்ரீலா கவ்ரீலவிச்சின் வீட்டுக்கு விளதீமிர் வந்து வெகு நாட்களாகி விட்டன. அவனுக்கு அங்கே வழக்கமாகக் கிடைக்கும் வரவேற்பு அவனை பயமுறுத்தி விட்டிருக்க வேண்டும். இப்பொழுது அவனை வீட்டுக்கு வருமாறு அழைத்தார்கள். அவனுக்கு முற்றிலும் எதிர்பாராத மகிழ்ச்சி காத்திருந்தது. அவன் மாஷாவைத் திருமணம் செய்து கொள்வதற்கு அவர்கள் இசைந்தனர். ஆனுல் அவர்களுடைய அழைப்புக்கு அந்த இளைஞன் எழுதிய கிறுக்குத்தனமான பதிலைக் கண்டு நெனராதவோ பண்ணையின் சொந்தக்காரர்கள் திகைத்துப் போய்விட்டனர். அவர்களுடைய வீட்டுக்கு இனிமேல் நான் வர மாட்டேன் என்று கடிதத்தில் உறுதியளித்திருந்தான். எனக்குக் கடைசி நம்பிக்கை மரணமே; எனவே பரிதாபத்துக்குரிய இந்த நபரை மறந்து விடுங்கள் என்று எழுதியிருந்தான். சில நாட்களுக்குப் பிறகு அவன் இராணுவச் சேவைக்குப் போய்விட்டான் என்று கேள்விப்பட்டார்கள். இது 1812ம் வருடத்தில் நடைபெற்றது.

நோயாளி மாஷாவிடம் இந்த விவரங்களைத் தெரிவிப்பதற்கு நெடுங்காலமாயிற்று. அவள் ஒருபோதும் விளதீமிரின் பெயரை உச்சரிப்பதில்லை. சில மாதங்களுக்குப் பிறகு பரதினே போர்க்களத்தில்* ஆபத்தான காயங்களைப் பெற்று

* மாஸ்கோவிலிருந்து 110 கிலோமீட்டர் தொலைவில் உள்ள பரதினே என்ற கிராமத்தில் 1812ம் வருடம் ஆகஸ்ட்

வீரச் செயல்களுக்காகப் பதக்கங்கள் வழங்கப்பட்ட வீரர்களின் பட்டியலில் விளதீமிரின் பெயரைப் படித்த மாஷா மயங்கி விழுந்தாள். அவள் மறுபடியும் நோயில் விழுந்து விட்டாள் என்று எல்லோரும் பயமடைந்தனர். கடவுள் கருணையால் அத்தகைய விபரீதம் ஏற்படவில்லை.

அவளுக்கு வெகு சீக்கிரத்தில் மற்றொரு சோதனை ஏற்பட்டது: அவள் தகப்பனார் திடீரென்று மரணமடைந்தார். அந்தப் பண்ணையின் ஒரே வாரிசு அவள்தான். ஆனால் சொத்து அவளுக்கு மகிழ்ச்சியைத் தரவில்லை. பரிதாபத்துக்குரிய பரஸ்கோவியா பெத்ரோவ்னாவின் துயரத்தில் அவள் மனப்பூர்வமாகப் பங்கு கொண்டதோடு, அவளை விட்டுப் பிரிவதில்லை என்றும் உறுதி கொண்டாள். நெனராதவோ கிராமத்தில் துன்பமயமான நினைவுகள் சூழ்ந்த காரணத்தால், அ... என்ற வட்டாரத்திலுள்ள தங்களுடைய பண்ணையில் குடியிருப்பதற்கு அவர்கள் இருவரும் சென்றார்கள்.

அழகும் செல்வமும் படைத்த அந்தப் பெண்ணை விரும்பி இங்கும் ஏராளமான இளைஞர்கள் சுற்றி வந்தனர். ஆனால் அவள் ஓர் இளைஞனைக் கூட சிறிதும் ஏறெடுத்துப் பார்க்கவில்லை. அவளுடைய தாயார் சில சமயங்களில் மார்யா தனக்கொரு வாழ்க்கைத் துணைவனைத் தேடிக் கொள்ள வேண்டும் என்று சொல்லிப்பார்த்ததுண்டு. ஆனால் அவளோ முடியாது என்று தலையை அசைத்துவிட்டு சிந்தனையில் மூழ்கி விடுவாள். விளதீமிர் மரணமடைந்து விட்டான். மாஸ்கோ நகரத்தில் பிரெஞ்சுப் படைகள் நுழைவதற்குச் சற்று முன்பாக, அவன் மரணமடைந்தான். மாஷா அவனுடைய நினைவைப் புனிதமாகப் போற்றினாள். அவன் ஒரு காலத்தில் படித்த புத்தகங்கள், அவன் தீட்டிய ஓவியங்கள், அவளுக்காக அவன் பிரதியெடுத்துத் தந்த சங்கீதப் பாடங்கள், கவிதைகள்—அவனை நினைவுபடுத்தக் கூடிய ஒவ்வொரு பொருளையும் அவள் கவனமாகப் பாதுகாத்தாள். இதைப் பற்றிக் கேள்விப்பட்ட பக்கத்து வீட்டுக்காரர்கள் அவளுடைய மாறாத காதலைக் கண்டு வியந்தனர். இந்தத் தூய்மையான நங்கையின் சோகத்தைப் போக்கி அவளைத் திரு

---

மாதம் 26ந் தேதியன்று ருஷ்யப் படைகளுக்கும் பிரெஞ்சுப் படைகளுக்கும் உக்கிரமான போர் நடைபெற்றது.—**ப-ர்.**

மணம் செய்து கொள்ளும் தகுதி மிக்க இளைஞன் யார்
என்று அவர்கள் ஆர்வத்தோடு காத்திருந்தார்கள்.

இந்த இடைக்காலத்தில் போர் வெற்றிகரமாக முடி வடைந்தது. வெளிநாடுகளிலிருந்து நமது படைகள் ருஷ்யா வுக்குத் திரும்பின. மக்கள் வீடுகளிலிருந்து வெளியே ஓடி வந்து வீரர்களை வரவேற்றார்கள். பகைவர்களிடமிருந்து பறித்த பாடல்களையும் நடன இசைகளையும் வாத்தியக் குழு வினர் இசைத்தார்கள். இளம் வயதில் இராணுவத்தில் சேர்ந்த அதிகாரிகள் பலரும் போர்க்கள அனுபவங்களின் முதிர்ச்சியோடு திரும்பினார்கள். அவர்களுடைய மார்புகளைப் பதக்கங்கள் அலங்கரித்தன. படைவீரர்கள் ஒருவரோடொரு வர் ஆனந்தமாகப் பேசினார்கள். அவர்களுடைய பேச்சுக் களில் பிரெஞ்சு, ஜெர்மன் சொற்கள் சரளமாகக் கலந் திருந்தன. மறக்க முடியாத நாட்கள்! புகழும் உற்சாகமும் நிரம்பிய நாட்கள்! தாய்நாடு என்ற சொல்லைக் கேட்டதும் ருஷ்யர்களின் இதயங்கள் வேகமாகத் துடித்தன. பிரிந்தவர் கள் கூடினால் பேசவும் வேண்டுமோ? தாய்நாட்டுப் பெரு மையும் சக்கரவர்த்தி மீது அன்பும் ஒவ்வொருவருடைய இதயத்திலும் ஊற்றெடுத்துப் பாய்ந்தது. ஆம், அவருக்குத் தான் அது எத்தகைய பொற்காலம்!

அன்றைய ருஷ்ய நாட்டுப் பெண்களை, அந்தப் பெண் களை வேறு யாருடனும் உவமித்துக் கூற முடியாது. அவர் களுடைய வழக்கமான அடக்கம் எங்கோ போய் விட்டது. வெற்றியாளர்களைக் கண்ட மாத்திரத்தில் பெண்கள் வாழ்க என்று முழங்கி

வானத்தில் தொப்பிகளை வீசினர்.[14]

அப்போது அவர்களுடைய உற்சாகம் உண்மையில் போதை யூட்டுவதாக இருந்தது....

அந்த நாட்களில் ருஷ்யப் பெண்களிடமிருந்து தங்க ளுக்குக் கிடைத்த உன்னதமான, விலைமதிப்பற்ற அன்பளிப்பு களை எந்த அதிகாரி இல்லையென்று சொல்ல முடியும்?...

இத்தகைய சிறப்புமிக்க காலத்தில் மார்யா கவ்ரீலவ்னா தன்னுடைய தாயாரோடு அ... என்ற வட்டாரத்தில் வசித்துக் கொண்டிருந்தாள். படைகள் திரும்பிய விழாக்களை

இரண்டு தலைநகரங்களும் எவ்வாறு கொண்டாடின என்பது அவளுக்குத் தெரியாது. ஆனால் இந்த உற்சாகம் சிறிய நகரங்களிலும் கிராமங்களிலும் இன்னும் அதிகமாகவே இருந்தது என்று சொல்லலாம். இந்த இடங்களில் இராணுவ அதிகாரிகளைப் பெருமிதத்தோடு வரவேற்றார்கள். இராணுவத்தில் இல்லாத நபர்களைப் பெண்கள் ஏறெடுத்தும் பார்க்கவில்லை.

மார்யா கவ்ரீலவ்னாவைத் திருமணமாகாத இளைஞர்கள் பலர் சுற்றி வந்தார்கள் என்பதை நாம் முன்பே குறிப்பிட்டிருக்கிறோம். இதை அவள் விரும்பாவிட்டாலும் அந்த இளைஞர்கள் சிறிதும் தளர்ச்சியடையவில்லை. ஆனால் ஹுஸார் படைப் பிரிவைச் சேர்ந்த காயமடைந்த கர்னல் ஒருவர் அங்கே வந்த பொழுது இவர்களனைவரும் பின்வாங்க நேர்ந்தது. அந்த அதிகாரியின் பெயர் புர்மீன். அவர் மார்பை புனித கியோர்கி வீரப் பதக்கம் அலங்கரித்தது. அவ்வூர் இளம் பெண்கள் சொன்னது போல அவரிடம் சுவாரசியமான வெளுத்த முகத்தோற்றம் இருந்தது. அவருக்கு சுமார் இருபத்தாறு வயது இருக்கும். மார்யா கவ்ரீலவ்னாவின் கிராமத்துக்கு அருகில் உள்ள தனது பண்ணைக்கு அவர் விடுமுறையில் வந்திருந்தார். மார்யா கவ்ரீலவ்னா மற்ற இளைஞர்களைக் காட்டிலும் அந்த நபரை விரும்பியது தெரிந்தது. அவர் முன்னிலையில் அவளுடைய வழக்கமான சோகம் மறைந்து கலகலப்பாக இருப்பாள். மற்றபடி அவரைக் கவர்ச்சிக்க முயற்சித்தாள் என்று சொல்ல முடியாது. ஆனால் அவரோடு பேசிக் கொண்டிருக்கும் பொழுது அவளை ஒரு கவிஞன் பார்த்தால்

Se amor non è, che dunque?...*

என்றுதான் பாடுவான்.

புர்மீன் தகுதிமிக்க இளைஞர் என்பதில் சிறிதும் சந்தேகமில்லை. கண்ணியம், எதையும் ஊன்றிக் கவனிப்பது, போலியான தன்மைகள் எதுவும் இல்லாதிருப்பது. கேலிப்

---

* காதல் என்பது இதுவே இல்லையென்றால் வேறு எது?...—ப-ர்.

பேச்சு—இப்படிப் பெண்கள் விரும்பக் கூடிய எல்லா அம்சங்களும் அவரிடமிருந்தன. மார்யா கவ்ரீலவ்னுவுக்கு முன்பு அவர் இயல்பாகவும் சுதந்திரமாகவும் நடந்துகொண்டார். ஆனல் அவள் பேசிக் கொண்டிருக்கும் பொழுதும் வேறு காரியங்களில் ஈடுபடும் பொழுதும் அவருடைய கண்கள் அவளையே சுற்றிக் கொண்டிருந்தன. அவர் அமைதியாகவும் அடக்கமாகவும் வாழ்க்கை நடத்திய போதிலும் ஒரு காலத்தில் உல்லாசமாக வாழ்க்கை நடத்தியவர் என்ற வதந்தி இருந்தது. ஆனல் மார்யா கவ்ரீலவ்னு அதைப் பற்றிக் கவலைப்படவில்லை. ஏனென்றல் அவள் (எல்லா இளம் பெண்களையும் போல) இளைஞர்களின் வாழ்க்கையில் துணிச்சலையும் தீவிரத்தையும் காட்டக் கூடிய சம்பவங்கள் நடந்திருக்குமானல் அவற்றை மகிழ்ச்சியோடு மன்னிக்கத் தயாராக இருந்தாள்.

ஆனல் எல்லாவற்றுக்கும் மேலாக.... (அந்த இளம் ஹுஸாரின் கண்ணியம், கலகலப்பான பேச்சு, சுவாரசியமான வெளுத்த முகத்தோற்றம், கரத்தில் ஏற்பட்ட வீரக் காயம் ஆகிய எல்லாவற்றுக்கும் மேலாக) அளவோடு பழகுகின்ற அவருடைய அடக்கம் அவளது ஆர்வத்தைத் தூண்டியது, அவளுடைய கற்பனைகளை வளர்த்தது. அவர் அநேகமாகத் தன்னிடம் மயங்கி விட்டார் என்பதை அவள் புரிந்து கொள்வதற்கு அதிக காலமாகவில்லை. அதே சமயத்தில் மார்யா கவ்ரீலவ்னு தன்னுடைய வருகையிலும் பேச்சிலும் தனியான ஆனந்தமடைகிருள் என்பதை அறிவும் அனுபவமும் உள்ள அந்த இளைஞரும் ஒருவேளை காணத் தவறவில்லை. அப்படியானல் அவர் ஏன் மார்யா கவ்ரீலவ்னவின் காலடியில் விழுந்து தன்னுடைய காதலை ஏற்றுக் கொள்ளுமாறு இன்னும் மன்றாடவில்லை? அவரைத் தடுப்பது எது? உண்மையான காதலின் பிரிக்க முடியாத பகுதி என்பார்களே, அந்தத் தயக்கமா? அல்லது ஆணவமா? அல்லது காதல் விவகாரங்களில் அதிக அனுபவம் உள்ளவர்கள் கையாளுகின்ற தந்திரமா? அவளால் அவரைப் புரிந்து கொள்ள முடியவில்லை. அவருடைய தயக்கத்துக்குக் காரணம் தன்னம்பிக்கை இல்லாததுதான் என்று அதிக சிந்தனைக்குப் பிறகு அவள் முடிவு செய்தாள். எனவே அவரிடம் அவள் விசேஷமான அக்கறையைக் காட்டுகின்ற வகை

யில் அடிக்கடி நடந்துகொள்ள வேண்டும்; சந்தர்ப்பம் கிடைக்கும் பொழுது தனது அன்பைச் சொரிந்து அவரை ஊக்குவிக் கவேண்டுமென்று முடிவு செய்தாள். அவர் தன்னுடைய காதலை ஏற்றுக்கொள்ளுமாறு தன்னிடம் கேட்கும் தருணத்தை அவள் ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள். மர்மமான எந்த விஷயத்தையும் பெண்களால் தாங்கிக் கொள்ள முடியாது. அவளுடைய இராணுவரீதியான தந்திரங்கள் அநேகமாக வெற்றியடைந்தன. புர்மீன் இனிய கனவுகளில் திளைத்தார். மார்யா கவ்ரீலவ்னுவின் முகத்தை அவருடைய கரிய விழிகள் ஆசை ததும்பப் பார்த்தன. காதலை அறிவிக்கும் தீர்மானமான தருணம் நெருங்கி விட்டது என்று தோன்றியது. பக்கத்து வீட்டுக்காரர்களோ அவர்கள் திருமணம் செய்து கொள்ளப் போவது மிகவும் உறுதி என்று பேச ஆரம்பித்தார்கள், இவ்வளவு காலத்துக்குப் பிறகு தன் மகள் ஒரு தகுதியான இளைஞனைத் தேர்ந்தெடுத்து விட்டாள் என்று பரஸ்கோவியா பெத்ரோவ்ன பெரு மகிழ்ச்சியடைந்தாள்.

ஒரு நாள் அந்த வயதான அம்மையார் வரவேற்பு அறையில் உட்கார்ந்து கொண்டு தனியாகச் சீட்டு விளையாடுவதற்காக சீட்டுகளைக் கலைத்துப் போட்டுக் கொண்டிருக்கும் பொழுது, புர்மீன் உள்ளே நுழைந்தார். மார்யா கவ்ரீலவ்ன எங்கே இருக்கிருள் என்று கேட்டார். ''அவள் தோட்டத்திலிருக்கிருள். அங்கே போய்ப் பாருங்கள். நான் இங்கே உங்களுக்காகக் காத்திருக்கிறேன்'' என்று சொன்னுள். புர்மீன் தோட்டத்துக்குள் போனதும் அவள் ''ஒருவேளை இன்று முடிவாகி விடும்!'' என்று நினைத்தபடி சிலுவைக் குறியிட்டாள்.

மார்யா கவ்ரீலவ்ன தோட்டத்திலிருந்த குளத்தில் ஒரு மரத்தின் அருகே உட்கார்ந்திருப்பதை புர்மீன் பார்த்தார். அவள் வெள்ளை நிற உடையணிந்து கையில் ஒரு புத்தகத்தோடு நாவல்களில் வருகின்ற கதாநாயகியைப் போலத் தோற்றமளித்தாள். வழக்கமான உரையாடலுக்குப் பின்னர் மார்யா கவ்ரீலவ்ன வேண்டுமென்றே மௌனமாக இருந்தாள். எப்படி உரையாடலைத் தொடர்வதென்று தெரியாமல் புர்மீன் திக்குமுக்காட வேண்டும்; அந்த நெருக்கடியில் அவர் திடீரென்று அவளைத் தான் மிகவும் காதலிப்பதைத்

தெரிவிக்குமாறு செய்ய வேண்டும் என்று விரும்பினாள். அவள் நினைத்தபடியே நடந்தது. அந்த நிலைமையிலிருந்த சங்கடத்தை உணர்ந்த புர்மீன் பேசத் தொடங்கினார். ''நான் மனந்திறந்து சில விஷயங்களைச் சொல்லப் போகிறேன்; அதை நீ சிறிது நேரம் கவனமாகக் கேட்க வேண்டும்'' என்றார். மார்யா கவ்ரீலவ்னா தன் கையிலிருந்த புத்தகத்தை மூடிவிட்டு, அவரிடம் பேசுங்கள் என்று சொல்வது போல, தன் இமைகளைத் தாழ்த்திக் கீழே நோக்கினாள்.

''நான் உன்னைக் காதலிக்கிறேன்'' என்றார் புர்மீன். ''உன்னை மிகுந்த ஆசையோடு காதலிக்கிறேன்....''(மார்யா கவ்ரீலவ்னா இதைக் கேட்டதும் நாணத்தால் இன்னும் அதிகமாகத் தலை குனிந்தாள்.) ''தினமும் உன்னைப் பார்ப்பதும் உன் பேச்சைக் கேட்பதும் எனக்கு மகிழ்ச்சியைத் தரும் அந்த இனிமையான பழக்கத்துக்கு நான் அடிமையானது தவறுதான்....'' (சென்-பிரியோ எழுதிய முதல் கடிதம்[15] அவள் நினைவுக்கு வந்தது.) ''என்னுடைய உணர்ச்சிகளைத் தடுக்க இனிமேல் முயற்சிப்பது பயனற்றது. உன்னுடைய இனிமையான தோற்றத்துக்கு ஒப்பானது உலகில் எதுவுமில்லை. இனி என்னுடைய வாழ்க்கையில் இன்பமும் துன்பமும் அதுவே. ஆனால் அதற்கு முன்பு ஒரு துயரமான கடமையை நான் நிறைவேற்ற வேண்டும்: என்னைப் பற்றிய ஒரு பயங்கரமான ரகசியத்தை உன்னிடம் தெரிவிக்க வேண்டும். அது நமக்கிடையே ஒரு உயரமான மதிற்சுவரை ஏற்படுத்தி நம்மைப் பிரித்து விடலாம்....'' மார்யா கவ்ரீலவ்னா ஆவலோடு அவரைத் தடுத்தாள்: ''அத்தகைய சுவர் முன்பே உண்டு.... நான் உங்கள் மனைவியாக ஒருபோதும் இருக்க முடியாது'' என்றாள். ''எனக்குத் தெரியும்'' என்று அவர் தாழ்ந்த குரலில் பதிலளித்தார். ''நீ முன்பு ஒருவரைக் காதலித்தது எனக்குத் தெரியும். ஆனால் அவர் மரணமடைந்து விட்டார். நீயும் மூன்று வருட காலம் சோகமாக இருந்து விட்டாய்.... அருமை மார்யா கவ்ரீலவ்னா! அன்பே! எனக்கு இது ஒன்றுதான் மகிழ்ச்சியைத் தரும். அதை நீ மறுத்துவிடாதே. நீ என்னை மணந்து மகிழ்ச்சியைத் தர வேண்டும். ஆனால்.... பேசாதே! உன்னைக் கெஞ்சிக் கேட்கிறேன். நீ ஒன்றும் சொல்ல வேண்டாம். என்னைத் துன்புறுத்தாமலிரு. நீ எனக்குரியவள் என்பதை நான் உணர்

கிறேன். ஆனால்—என்ன துரதிருஷ்டம்.... எனக்குத் திருமண மாகி விட்டது!'' என்றார்.

மார்யா கவ்ரீலவ்னு ஆச்சரியத்தோடு அவரைப் பார்த்தாள்.

''எனக்குத் திருமணமாகி விட்டது'' என்று புர்மீன் தொடர்ந்தார். ''நான்கு வருடங்களுக்கு முன்பு நடைபெற்றது. ஆனால் என்னுடைய மனைவி யார், அவள் எங்கேயிருக்கிறாள் என்று எனக்குத் தெரியாது. அவளை இனிமேல் நான் சந்திக்கக் கூடுமா என்பதும் எனக்குத் தெரியவில்லை!''

''இது உண்மையா?'' என்று கேட்டாள் மார்யா கவ்ரீலவ்னு. ''ஒரே புதுமையாக இருக்கிறதே! சொல்லுங்கள். நான் பின்னர் சொல்லுகிறேன்... ஆனால் நீங்கள் தொடர்ந்து சொல்லுங்கள் தயவு செய்து சொல்லுங்கள்'' என்றாள்.

''1812ம் வருடத்தின் தொடக்கத்தில் எங்கள் படைப் பிரிவு வில்னுவில் முகாமிட்டிருந்தது. நான் அங்கே போவதற்காகப் பிரயாணம் செய்து கொண்டிருந்தேன். ஒரு நாள் மாலையில் ஒரு நகரத்திலுள்ள பிரயாணிகள் தங்கும் நிலையத்துக்கு வந்தவுடன், உடனடியாகப் புதிய குதிரைகளை ஏற்பாடு செய்யுமாறு நிலைய அதிகாரிக்கு உத்தரவிட்டேன். ஆனால் திடீரென்று பனிப்புயல் பயங்கரமாக வீசத் தொடங்கியது. அந்த அதிகாரியும் வண்டியை ஓட்டிவந்தவர்களும் பனிப்புயல் நின்ற பிறகு போவது நல்லது என்று ஆலோசனை சொன்னார்கள். நான் அவர்களுடைய ஆலோசனையின்படி நடக்க விரும்பினேன். ஆனால் அந்த நேரத்தில் ஒரு விசித்திரமான உணர்ச்சி என்னைப் பிடித்து ஆட்டியது. அது உடனே புறப்படு என்று என்னை உந்தித் தள்ளியது. பனிப்புயல் சிறிதும் குறையவில்லை. எனக்குப் பொறுமையில்லை. உடனே குதிரைகளை வண்டியில் பூட்டுங்கள் என்று உத்தரவு கொடுத்தேன். அந்தப் பனிப்புயலில் என்னுடைய பிரயாணத்தைத் தொடர்ந்தேன். வண்டியை ஓட்டியவன் குறுக்கு வழியில் நதியின் ஓரமாக வண்டியைச் செலுத்தினான். அந்தப் பாதையில் சென்றால் மூன்று வெர்ஸ்டாக்கள் குறைவான தூரமாகும். நதியின் ஓரப் பகுதிகளைப் பனி மூடியிருந்தது. நாங்கள் ஓர் இடத்தில் குறுக்கு வழியிலிருந்து சாலைக்கு வந்திருக்க வேண்டும். ஆனால் நாங்கள்

தைத் தாண்டிப் போய்விட்டோம். எனவே வேறு இடத்துக்கு வந்து சேர்ந்தோம். அப்பொழுதும் கூட புயல் நிற்பதாகத் தெரியவில்லை. சற்று தூரத்தில் விளக்கின் வெளிச்சம் தெரிந்தது. அதை நோக்கி வண்டியை ஓட்டுமாறு உத்தரவிட்டேன். நாங்கள் ஒரு கிராமத்துக்கு வந்து சேர்ந்தோம். அங்கே மரப்பலகைகளால் அமைக்கப்பட்ட மாதாகோவிலில் விளக்குகள் எரிந்து கொண்டிருந்தன. கதவு திறந்திருந்தது. சில சறுக்கு வண்டிகள் அங்கே நிற்பதையும் ஆட்கள் உள்ளே போவதும் வருவதுமாக இருப்பதையும் பார்த்தோம். 'இந்தப் பாதையில் வாருங்கள்' என்று எங்களைப் பார்த்து பலர் உரக்கக் கத்தினார்கள். வண்டியை மாதாகோவிலுக்கு முன்பாக நிறுத்து என்று வண்டிக்காரனிடம் உத்தரவிட்டேன். 'ஏன் இவ்வளவு தாமதம்? என்ன காரணம்?' என்று யாரோ என்னிடம் கேட்டார்கள். 'மணப்பெண் மயக்கமடைந்து விட்டாள்; மதகுருவுக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை. நாங்களும் வீடுகளுக்குத் திரும்புவதாக இருந்தோம். உள்ளே வா! சீக்கிரம்!' நான் ஒன்றும் பேசாமல் உடனே வண்டியிலிருந்து கீழே குதித்து மாதாகோவிலுக்குள் நுழைந்தேன். உள்ளே இரண்டு அல்லது மூன்று மெழுகுவத்தி விளக்குகள் லேசான வெளிச்சத்தைத் தந்து கொண்டிருந்தன. ஓர் இருளான மூலையில் ஓர் இளம் பெண் பெஞ்சில் உட்கார்ந்திருந்தாள். இன்னொரு பெண் அவளுடைய நெற்றியை அழுத்தித் தேய்த்துக் கொண்டிருந்தாள். 'கடவுள் காப்பாற்றினார். நல்ல வேளையாகக் கடைசி நேரத்திலாவது வந்து விட்டீர்கள். உங்கள் தாமதம் என் எஜமானியை முக்கால் வாசி கொன்று விட்டது' என்றாள். மிகவும் வயதான மதகுரு ஒருவர் என் அருகில் வந்தார். 'ஆரம்பிக்கலாமா?' என்று என்னிடம் கேட்டார். 'ஆரம்பியுங்கள்! தந்தையே! ஆரம்பியுங்கள்!' என்று நான் ஏதோ ஒரு ஞாபகத்தில் சொல்லிவிட்டேன். அந்தப் பெண்ணைச் சிலர் தூக்கி நிறுத்தினார்கள். அவள் மிகவும் அழகாக இருந்தாள் என்பதைக் கண்டேன்.... அந்த நேரத்தில் நான் ஏன் அப்படிச் செய்தேனென்று எனக்குப் புரியவில்லை. நான் செய்த வேடிக்கையை யாரும் மன்னிக்க மாட்டார்கள். நான் பலிபீடத்திற்குச் சென்று அவளருகில் நின்றேன். மதகுரு அவசரமாகச் சடங்குகளை

நடத்தினர். மூன்று நபர்களும் ஒரு பணிப்பெண்ணும் மணப்பெண்ணைத் தாங்கிப் பிடித்துக் கொண்டிருந்தார்கள். அவளை மட்டுமே கவனித்துக் கொண்டிருந்தார்கள். நாங்கள் கணவனும் மனைவியுமாக இணைக்கப்பட்டோம். 'முத்தமிடுங்கள்' என்று அவர்கள் சொன்னார்கள். என் மனைவி தன்னுடைய வெளிறிய முகத்தை என்னை நோக்கி நீட்டினாள். நான் அவளை முத்தமிட நெருங்கினேன். அவள் திடீரென்று 'ஐயோ, அவரில்லை! அவரில்லை!' என்று அலறிக் கொண்டு மயங்கி விழுந்தாள். அங்கே சாட்சிகளாக வந்தவர்கள் முதல் தடவையாக என்னை கவனமாக உற்றுப் பார்த்தார்கள். நான் உடனே திரும்பி மாதாகோவிலை விட்டு வெளியே வந்தேன். யாரும் என்னைத் தடுக்கவில்லை. வெளியே வந்ததும் என்னுடைய சறுக்கு வண்டிக்குள் குதித்தேன். ''ஓட்டு! என்று உத்தரவிட்டேன்.''

''அட கடவுளே!'' என்றாள் மார்யா கவ்ரீலவ்னா. ''அந்தப் பரிதாபத்துக்குரிய பெண் பிறகு என்ன செய்தாள் என்று உங்களுக்குத் தெரியாதா?'' என்று கேட்டாள்.

''இல்லை, எனக்குத் தெரியாது. திருமணம் நடந்த கிராமத்தின் பெயர் கூட எனக்குத் தெரியாது. நான் எந்த இடத்திலிருந்து அங்கே போனேன் என்பதும் எனக்கு நினைவில்லை. நான் செய்த வேடிக்கை எவ்வளவு மோசமானது என்பதை அந்த நேரத்தில் நான் சிறிது கூட உணரவில்லை. எனவே வண்டி மாதாகோவிலை விட்டுப் புறப்பட்டதும் நான் தூங்கி விட்டேன். மறு நாள் காலையில் வண்டி மூன்றுவது தங்கும் நிலையத்தைக் கடந்த பிறகுதான் விழித்துக் கொண்டேன். அப்பொழுது என்னிடமிருந்த வேலைக்காரனும் பிறகு போரில் இறந்து விட்டான். எனவே எந்தப் பெண்ணிடம் நான் குரூரமாக விளையாடினேனோ, அந்தப் பெண்ணை இனிமேல் கண்டுபிடிக்க முடியும் என்று எனக்கு நம்பிக்கையில்லை. ஆனால் விளையாட்டு வினையாகி விட்டது. இன்று அவள் என்னைப் பழி வாங்கி விட்டாள்'' என்றார் புர்மீன்.

மார்யா கவ்ரீலவ்னா அவருடைய கையை இழுத்தாள். ''அட கடவுளே! அது நீங்கள் தானா? என்னை அடையாளம் தெரியவில்லையா?'' என்று கேட்டாள்.

புர்மீனுடைய முகம் வெளிறிப் போயிற்று... அவள் காலடியில் அவர் விழுந்தார்....

## சவப்பெட்டி வியாபாரி

> நாம் சவப்பெட்டிகளை
> தினமும் காணவில்லையா? அவை
> இந்த பூமியில் முதுமையின்
> சின்னமான வெள்ளை முடியல்
> லவா?
>
> **தெர்ழாவின்[16]**

அத்ரியான் புரோஹரவ் ஒரு சவப்பெட்டி வியாபாரி. அவர் பஸ்மான்னயா தெருவில் குடியிருந்த வீட்டைக் காலி செய்துவிட்டு நிக்கீத்ஸ்கயா தெருவில் தான் வாங்கியிருக்கும் வீட்டுக்குத் தன்னுடைய குடும்பச் சாமான்களை மாற்றிக் கொண்டிருந்தார். பிரேதங்களைச் சுமந்து செல்லும் வண்டியில் கடைசியாக இருந்த சாமான்களை ஏற்றினார். அந்த வண்டியை மெலிந்து போன இரண்டு குதிரைகள் மெதுவாக இழுத்துக் கொண்டு நான்காவது தடவையாக நிக்கீத்ஸ்கயா தெருவுக்குப் போய்க் கொண்டிருந்தன. அவர் கடையை இழுத்துப் பூட்டிய பிறகு வாயிலில் 'இந்த வீடு வாடகைக்கு அல்லது விற்பனைக்குக் கிடைக்கும்' என்று ஓர் அறிவிப்பை மாட்டினார். பிறகு அவர் தன்னுடைய புதிய வீட்டை நோக்கி நடந்தார். அந்த வீட்டை வாங்க வேண்டுமென்பது அவருடைய நெடுநாள் விருப்பம். கடைசியில் ஒரு வழியாக, அதிகமான விலைக்கு அந்த வீட்டை வாங்கியிருந்தார். அந்தப் புதிய வீட்டின் மஞ்சள் நிறச் சுவர்களை நெருங்கிய பொழுது தன் மனதில் எத்தகைய மகிழ்ச்சியும் ஏற்படவில்லை என்பதை நினைக்கும் பொழுது அவருக்கு ஆச்சரியமாக இருந்தது. பழக்கமில்லாத வாயிலின் வழியாக அவர் அந்தப் புதிய வீட்டுக்குள் நுழைந்தார். உள்ளே எல்லாச் சாமான்களும் ஒழுங்கில்லாமல் அங்கங்கே கிடந்தன. உடனே இதற்கு முன்பு தாம் குடியிருந்த பாடாவதியான வீட்டை அவர் நினைத்தார். அங்கே எல்லாம் மிகவும் ஒழுங்காக இருக்கும். அந்த வீட்டில் இப்படி பதினெட்டு வருடங்கள் வாழ்ந்திருக்கிறார். சாமான்களை எடுத்து வைத்துக்

கொண்டிருந்த தன்னுடைய இரண்டு பெண்களையும் வேலைக் காரியையும் பார்த்து இன்னும் வேலை முடியவில்லையா என்று அவர் கோபித்துக் கொண்டார். பிறகு அவர்களுக்கு உதவியாகத் தானும் வேலை செய்தார். அங்கே வேகமாக ஒழுங்கு ஏற்பட்டது. வழிபாட்டுப் பொருள்கள், சீன அல மாரி, மேசை, கட்டில், படுக்கை முதலியனவற்றை உள் அறையில் கொண்டுபோய் வைத்தார்கள். அவருடைய தொழில் சம்பந்தமான பொருள்களை—பல வர்ணங்களிலும் பல அளவுகளிலுமிருந்த சவப்பெட்டிகள், மரணத்துக்குத் துக்கம் அனுஷ்டிக்கத் தேவையான தொப்பிகள், மேலங்கி கள், தீவட்டிகள் முதலியவை வைக்கப்பட்டுள்ள அலமாரி கள்—வரவேற்பு அறையிலும் சமையலறையிலும் அடுக்கி வைத்தார்கள். வீட்டுக்கு வெளியே கதவுக்கு மேலே ஓர் அறிவிப்பு தொங்க விடப்பட்டது. அதில் தீவட்டியைத் தலை கீழாகப் பிடித்துக் கொண்டிருக்கும் காதல் தெய்வத்தின் படம் பெரிதாக வரையப்பட்டிருந்தது. அதன் கீழே ''சவப் பெட்டிகள்—சாதாரணமாகவும் பல வர்ணங்களிலும்—விற் பனைக்கு அல்லது வாடகைக்குக் கிடைக்கும்; பழைய சவப் பெட்டிகள் பழுது திருத்தப்படும்; மெத்தை வைத்துத் தைத்துக் கொடுக்கப்படும்'' என்று எழுதப்பட்டிருந்தது. அவருடைய பெண்கள் ஓய்வெடுப்பதற்காகத் தங்களுடைய அறைக்குப் போனார்கள். அத்ரியான் தன்னுடைய புதிய இல்லத்தின் ஒவ்வொரு பகுதியையும் கவனமாகப் பார்த்து விட்டு சன்னலுக்கு எதிரே உட்கார்ந்து கொண்டார். சமோவார் பாத்திரத்தை சூடாக்குமாறு உத்தரவிட்டார்.

ஷேக்ஸ்பியரும் வால்டர் ஸ்காட்டும் தங்களுடைய பாத்திரங்களான சுடுகாட்டு வெட்டியான்களை உற்சாகமான வர்களாகவும் வேடிக்கையானவர்களாகவும் சித்திரித்தார் கள்;[17] இந்த வேறுபாட்டின் உதவியோடு அந்தப் பாத்திரங் கள் வாசகர்களின் உள்ளங்களில் ஆழமாகப் பதியும் என்று கருதினார்கள் என்பது நிறையப் படித்த வாசகர்களுக்குத் தெரிந்ததுதான். எனினும் இங்கு நாம் உண்மையை எழுத விரும்புவதால் அவர்களுடைய உதாரணத்தைப் பின்பற்ற முடியவில்லை. சவப்பெட்டி விற்பனையாளரான அத்ரியான் புரோஹரவ் தமது இருண்ட தொழிலுக்குத் தகுந்த மனோ பாவம் கொண்டவர் என்பதை ஒத்துக் கொள்ள வேண்டிய

நிலையில் இருக்கிறோம். அத்ரியான் புரோஹரவ் கடுகடுப் பான தோற்றம் உடையவர்; சதா மௌனமாகவே இருப் பார். எப்பொழுதாவது அவர் வாயைத் திறந்தால் அது சன்னல் வழியாகத் தெருவிலே போய்க்கொண்டிருப்பவர்களை வேடிக்கை பார்க்கிற தன்னுடைய பெண்களை அதட்டுவதற் காகத்தானிருக்கும். அல்லது தன்னுடைய பொருள்களைத் தேடி வந்திருக்கின்ற பரிதாபத்துக்குரியவர்களிடம் (அல் லது அவர்கள் அதிருஷ்டசாலிகளாகவும் இருக்கலாம்) அவற் றுக்கு மிகவும் அதிகமான விலை சொல்லிக் கொண்டிருப்பார். அத்ரியான் சன்னலுக்கு எதிரே உட்கார்ந்து ஏழாவது தட வையாகத் தேநீர் அருந்திக் கொண்டிருந்தார். அவர் வழக் கம் போல சோர்வு தரும் விஷயங்களைப் பற்றி சிந்தித்துக் கொண்டிருந்தார். சென்ற வாரத்தில் மரணமடைந்த ஓய்வு பெற்ற இராணுவ பிரிகேடியரின் சவ ஊர்வலம் சுங்கச் சாவடி வழியாகப் போய்க் கொண்டிருக்கும் பொழுது பலத்த மழை பெய்ததை அவர் நினைத்துக் கொண்டார். அதன் விளை வாகப் பல மேலங்கிகள் சுருங்கி விட்டன; பல தொப்பி களின் ஓரங்கள் வளைந்து விட்டன. அவரிடமிருக்கும் சவ அடக்கப் பொருள்கள் மிகவும் பழமையானவை. அவை மோசமான நிலையிலிருப்பதால் அவற்றைப் பழுதுபார்க்க அதிகப் பணம் செலவழிக்க வேண்டுமே என்று யோசித்துக் கொண்டிருந்தார். ஒரு வியாபாரியின் மனைவியான வயதான விதவை திரியூகினு மரணமடைகிற பொழுது கிடைக்கும் பணத்தில் இதைச் சரிசெய்து விடலாம் என்பது அவருடைய திட்டம். திரியூகினுவின் உயிர் கடந்த ஒரு வருட காலமாக மரணத்தின் பிடியில் ஊசலாடிக் கொண்டிருக்கிறது. ஆனுல் அவள் வீடு ரஸ்குலாய் தெருவில் இருக்கிறது. அவளுடைய வாரிசுகள் தன்னிடம் உறுதியாகச் சொல்லியிருக்கிருர்கள் என்ற போதிலும் தனக்குத் தகவல் அனுப்புவார்களா என்று அத்ரியான் சந்தேகப்பட்டார். பக்கத்திலுள்ள வியாபாரி யாரிடமாவது அவர்கள் சவ அடக்கப் பொருள்களை வாங்கிக் கொள்ளலாம்.

அவர் வீட்டின் வாசற்கதவை யாரோ மூன்று தடவை கள் பலமாகத் தட்டிய காரணத்தால் அவருடைய சிந்தனை கள் தடைப்பட்டன. ''யாரங்கே?'' என்று கேட்டார் சவப் பெட்டி வியாபாரி. கதவு திறக்கப்பட்டதும் பார்த்த

வுடனேயே ஜெர்மானியக் கைவினைஞர் என்று சொல்லக் கூடிய ஒரு நபர் உற்சாகமாக உள்ளே வந்து அவரை அணுகினார். ''என் அடுத்த வீட்டுக்கார நண்பரே!'' என்று அவர் ருஷ்ய மொழியில் தப்புந்தவறுமாகப் பேசினார். அதிலும் கேட்டவுடனேயே சிரிக்கத் தூண்டுகிற பாணியில் அவர் பேசினார். ''உங்கள் வேலையில் குறுக்கிடுவதற்கு மன்னிக்கவும். ஆனால் சீக்கிரமாக உங்கள் நட்பைப் பெற வேண்டுமென்பது என்னுடைய விருப்பம். என் பெயர் காட்லிப் ஷுல்த்ஸ் என்பதாகும். நான் பூட்சுகளைத் தயாரித்து விற்பனை செய்கிறேன். உங்கள் சன்னலுக்கு எதிரே தெரிகின்ற அந்தச் சிறிய வீட்டில் நான் வசிக்கிறேன். என்னுடைய திருமணத்தின் இருபத்தைந்தாவது ஆண்டுவிழாவை நாளைக்குக் கொண்டாடப் போகிறோம். தாங்களும் தங்களுடைய இரண்டு பெண்களும் எங்கள் வீட்டில் நாளைக்கு நடைபெறும் விருந்தில் கலந்து கொள்ள வேண்டுமென நட்புரிமையோடு அழைக்கிறேன்'' என்றார். அவருடைய அன்பான அழைப்பை அத்ரியான் விருப்பத்தோடு ஏற்றுக் கொண்டார். பிறகு சவப்பெட்டி வியாபாரி அவரைத் தம்முடன் தேநீர் அருந்துமாறு கேட்டுக்கொண்டார். காட்லிப் ஷுல்த்சினுடைய வெள்ளை மனத்தின் காரணமாக வெகு சீக்கிரத்தில் அவர்களிருவரும் அதிகமான நட்புணர்ச்சியோடு பேசிக் கொண்டிருந்தார்கள். ''உங்கள் தொழில் எப்படி இருக்கிறது?'' என்று அத்ரியான் விசாரித்தார். ''சுமார் தான்'' என்று ஷுல்த்ஸ் பதிலளித்தார். ''சில சமயங்களில் கூடுதல்; சில சமயங்களில் குறைவு. நான் அது பற்றி அதிகமாகக் கவலைப்படுவதில்லை. ஆனால் என்னுடைய பொருள்களுக்கும் உங்களுடைய பொருள்களுக்கும் வித்தியாசமுண்டு: உயிரோடிருப்பவர்கள் பூட்சுகளை வாங்காமல் இருந்துவிடலாம், ஆனால் செத்துப் போனவர்களுக்குச் சவப்பெட்டி வாங்காமல் இருக்க முடியாதே'' என்றார். ''உண்மைதான்'' என்று அத்ரியான் ஒத்துக் கொண்டார். ''அது சரி. உயிரோடிருப்பவனுக்கு பூட்சுகள் வாங்கப் பணமில்லையென்றால் அவன் வெறுங்காலோடு நடக்க வேண்டியதுதான்; ஆனால் ஒரு பிச்சைக்காரன் செத்துப் போனால் இலவசமாக சவப்பெட்டி கிடைக்கும்'' என்றார். அவர்களது உரையாடல் இப்படியே சிறிது நேரம் தொடர்ந்தது.

பிறகு பூட்ஸ் பழுது பார்ப்பவர் எழுந்து சவப்பெட்டி வியாபாரியிடம் விருந்துக்கு அவசியம் வர வேண்டும் என்று வற்புறுத்திச் சொல்லிவிட்டு விடை பெற்றுக் கொண்டார்.

மறு நாள் சவப்பெட்டி வியாபாரியும் அவருடைய பெண்களும் சரியாக நடுப்பகலாகும் போது தங்களுடைய புதிய வீட்டிலிருந்து வெளியே வந்து எதிர் வீட்டை நோக்கி நடந்தார்கள். அத்ரியான் புரோஹரவ் அணிந்திருந்த ருஷ்ய உடையையும் அவருடைய பெண்கள் அக்குலீனுவும் தாரியாவும் அணிந்திருந்த ஐரோப்பிய பாணி உடைகளையும் நான் இங்கே வருணிக்கப் போவதில்லை. அவ்வாறு வருணிப்பது நவீன நாவலாசிரியர்களின் அங்கீகரிக்கப்பட்ட வழக்கம். நான் அதைப் பின்பற்றப் போவதில்லை. எனினும் இரண்டு பெண்களும், முக்கியமான சந்தர்ப்பங்களில் மட்டும் தாங்கள் அணிகின்ற மஞ்சள் நிறத் தொப்பிகளையும், சிவப்பு நிறக் காலணிகளையும் அணிந்திருந்தார்கள் என்பதைக் குறிப்பிடுவது போதுமானதாகும்.

பூட்ஸ் பழுது பார்ப்பவரின் வீட்டில் ஒரு சிறிய அறையில் ஏராளமான விருந்தினர்கள் குழுமியிருந்தார்கள். அவர்களில் பெரும்பாலோர் ஜெர்மன் நாட்டுக் கைவினைஞர்களும் அவர்களுடைய மனைவிமார்களும் உதவியாளர்களுமாகும். அங்கிருந்த ஒரே ஒரு ருஷ்ய அதிகாரி போலீஸ்காரர் யுர்க்கோ என்பவர்தான். அவர் சுக்கோன் (பின்லாந்து) பகுதியைச் சேர்ந்தவர். அவர் சாதாரணமான பதவி வகித்த போதிலும் விருந்தளிப்பவரின் விசேஷ அபிமானத்துக்குரியவராக இருந்தார். பகரேல்ஸ்கியால் வருணிக்கப்பட்ட தபால்காரனைப் போல[18] அவர் கடந்த இருபத்தைந்து வருடங்களாக உண்மையோடும் விசுவாசத்தோடும் தமது கடமையைச் செய்து வந்தார். நம் நாட்டின் பழமையான தலைநகரம் 1812ம் வருடத்தில் நெருப்புப் பிடித்து எரிந்த பொழுது அவருடைய மஞ்சள் நிறக் காவலர் நிலையகம் எரிந்து விட்டது. ஆனால் எதிரி விரட்டியடிக்கப்பட்டவுடன் பழுப்பு வர்ணம் பூசப்பட்டு அதில் வெள்ளை நிறத்தில் பட்டைகள் அடிக்கப்பட்ட புதிய காவலர் நிலையகம் அங்கே நிறுத்தப்பட்டது. மீண்டும் யுர்க்கோ அதன் அருகில் ஆயுதமேந்தி முன்னும் பின்னும் நடந்து கொண்டிருந்தார். நிக்கீத்ஸ்கியே வாயிலைச் சுற்றியுள்ள தெருக்களில் வசித்து வந்த ஜெர்மானியர்

களில் பெரும்பாலோருக்கு அவரைத் தெரியும். அவர்களில் சிலர் ஞாயிற்றுக்கிழமை இரவுகளில் அந்தக் காவலர் நிலையகத்தில் புகலிடம் தேடுவதும் உண்டு. அத்ரியான் விரைவில் அவரிடம் தன்னை அறிமுகம் செய்து கொண்டார். எப்பொழுதாவது அவருடைய உதவி தனக்கு அவசியம் தேவைப்படும் என்று உறுதியாக நம்பினார். விருந்தினர்கள் சாப்பிட உட்கார்ந்த பொழுது அவர்களிருவரும் அடுத்தடுத்து உட்கார்ந்திருந்தனர். ஷுல்த்சும் அவருடைய மனைவியும் அவர்களுடைய மகள் பதினேழு வயது நிரம்பிய லோஹ்றெனும் விருந்தினர்களை நன்கு கவனித்து உபசரித்தார்கள். உணவு வகைகளைப் பரிமாறுவதிலும் சமையற்காரனுக்கு உதவி செய்தார்கள். பீர் தாராளமாகக் கிடைத்தது. யுர்க்கோ நான்கு பேர் சாப்பிடக் கூடிய உணவைச் சாப்பிட்டார். அத்ரியானும் பின்வாங்கவில்லை. அவருடைய பெண்கள் நாசூக்காக உணவைக் கொறித்தார்கள். ஜெர்மன் மொழியில் நடைபெற்றுக் கொண்டிருந்த உரையாடல் மென்மேலும் பலமாகக் கேட்டது. ஷுல்த்ஸ் திடீரென்று எழுந்து நின்றுகொண்டு ஒரு பாட்டிலைத் திறந்தார். ''என் அருமை லுயீஸாவின் நலத்துக்காக'' என்று ருஷ்ய மொழியில் உரக்கச் சொன்னார். அந்த பாட்டிலிலிருந்து ஷாம்பேன் மது நுரைத்தது. அவர் நடுவயதை அடைந்த தமது துணைவியாரின் மலர்ந்த முகத்தில் முத்தமிட்டார். விருந்தினர்கள் எல்லோரும் லுயீஸாவின் நலத்துக்காக என்று பலத்த குரலில் சொல்லிவிட்டு மதுவருந்தினார்கள். ''எனது அருமை விருந்தினர்களின் நலத்துக்காக'' என்று சொல்லிவிட்டு ஷுல்த்ஸ் இன்னொரு பாட்டிலைத் திறந்தார். விருந்தினர்கள் கோப்பைகளிலிருந்த மதுவைக் குடித்தவாறு தங்கள் நன்றியைத் தெரிவித்தனர். பாராட்டுரைகள் ஒன்றுக்குப் பின் ஒன்றாக வந்து கொண்டிருந்தன. அங்கிருந்த ஒவ்வொருவருடைய நலத்துக்காகவும் தனித்தனியே பாராட்டுரை சொல்லிக் குடித்தனர். பிறகு மாஸ்கோ நகரத்துக்கும் ஒரு டஜன் ஜெர்மன் நகரங்களுக்கும் பாராட்டுரைத்துவிட்டுக் குடித்தார்கள். பிறகு எல்லாத் தொழில்களுக்கும் பொதுவாகப் பாராட்டுரை; பிறகு ஒவ்வொரு தொழிலுக்கும் தனித்தனியாகவும், அவற்றில் ஈடுபட்டுள்ள கைவினைஞர்கள் மற்றும் அவர்களது உதவியாளர்களின் நலத்துக்கும் பாராட்

ிைரத்தனர். ஒவ்வொரு பாராட்டுச் சொல்லும் பொ
ழுதும் அத்ரியான் நிறையக் குடித்தார். அவருக்கு அதிகமான
ற்சாகம் ஏற்படவே அவர் திடீரென்று ஒரு விசித்திரமான
பாராட்டைச் சொன்னார். உடனே அங்கு வந்திருந்த பரும
னை ரொட்டி தயாரிப்பாளர் ஒருவர் தமது கோப்பையை
யர்த்தினார். ''நாம் யாருக்காகப் பாடுபடுகிறோமோ, அவர்
களுடைய நலத்துக்காக! Unserer Kundleute* நலத்துக்
காக!'' என்றார். அங்கிருந்த எல்லோரும் அதை உற்சாக
மாகவும் ஏகமனதாகவும் ஆமோதித்துக் குடித்தனர். பிறகு
விருந்தினர்கள் எழுந்து ஒருவருக்கொருவர் குனிந்து வணக்
கம் செலுத்திக் கொண்டனர்: தையற்காரர் பூட்ஸ் பழுது
பார்ப்பவருக்கு வணக்கம் செலுத்தினார்; அவர் பதிலுக்குத்
தையற்காரரை வணங்கினார்; ரொட்டி தயாரிப்பாளர் அவர்
களிருவரையும் வணங்கினார்; அங்கிருந்த எல்லோரும்
ரொட்டி தயாரிப்பாளரை வணங்கினார்கள். இப்படியே நடை
பெற்றுக் கொண்டிருந்தது. இந்த பரஸ்பர வணக்கங்களுக்
கிடையே யுர்க்கோ சவப்பெட்டி வியாபாரியை நோக்கித்
திரும்பினார். ''நண்பரே! உங்களுடைய செத்துப் போனவர்
களின் நலத்துக்காகக் குடியுங்கள்'' என்று சொன்னார்.
இதைக் கேட்ட அனைவரும் பலமாகச் சிரித்தனர். ஆனால்
சவப்பெட்டி வியாபாரி மட்டும் கோபத்தில் முகத்தைச்
சுளித்தார். இதை யாரும் கவனிக்கவில்லை. ஏனென்றால்
அவர்களுடைய கவனம் முழுவதும் குடிப்பதில் மட்டுமே
இருந்தது. அவர்கள் விருந்து முடிந்து எழுவதற்கும் மாதா
கோவிலின் ஆறாவது வழிபாட்டுக்கு மணி அடிப்பதற்கும்
சரியாக இருந்தது.

விருந்து முடிவடைந்து விருந்தினர்கள் புறப்பட்ட
பொழுது இரவு வெகு நேரமாகி விட்டது. அவர்களில் பலர்
குடிமயக்கத்தில் தள்ளாடினர். உடல் பருமனான ரொட்டி
தயாரிப்பாளரும் புத்தகங்களை ஏடுகட்டுபவரும்—அவர்
முகம்

> சிகப்பு நிற மொராக்கோ தோலினால்
> ஏடுகட்டப்பட்டது போலிருந்தது[19]

போலீஸ்காரனை ஆளுக்கு ஒரு பக்கமாகக் கையைப் பிடித்துக்
கொண்டு அவருடைய இருப்பிடத்துக்கு அழைத்துச் சென்

* நம்முடைய வாடிக்கையாளர்கள்.—ப-ர்.

ருர்கள். அதன் மூலம் ''கடனுக்கு மரியாதை திருப்பிக் கொடுப்பதே'' என்ற ருஷ்யப் பழமொழியை அவர்கள் பின் பற்றினுர்கள். சவப்பெட்டி வியாபாரி அதிகமான கோபத் தோடும் மயக்கத்தோடும் வீட்டுக்குத் திரும்பினுர். ''ஏன் இது? என்னுடைய தொழில் மற்ற தொழில்களைக் காட்டி லும் எந்த வகையில் குறைவானது? சவப்பெட்டி வியாபாரி தூக்கிலிடுபவனுக்கு சகோதரனு என்ன? இந்த அந்நியர்கள் எதைக் கண்டு சிரிக்கிறுர்கள்? சவப்பெட்டி வியாபாரி என் றுல் கோமாளி என்று நினைப்பா? புது மனை புகும் விழாவுக்கு இவர்களைப் போய்க் கூப்பிட நினைத்தேனே. இல்லை. இவர் களை அழைக்கப் போவதில்லை! என்னுடைய வாடிக்கை யாளர்களை—கிறிஸ்தவப் பிரேதங்களை—மட்டுமே கூப்பிடு வேன்'' என்று உரத்த குரலில் சொன்னுர். அவருடைய பூட்சுகளைக் கழற்றிக் கொண்டிருந்த வேலைக்காரி இதைக் கேட்டதும் ''ஐயா! இப்படிச் செல்லலாமா?'' என்று மறுத்துக் கூறினுள். ''என்ன சொல்கிறீர்கள் என்று யோசித்தீர் களா? சிலுவைக் குறி போட்டுக் கொள்ளுங்கள்! புது மனை புகும் விருந்துக்கு செத்துப் போனவர்களைக் கூப்பிடுவதா? என்ன கொடுமை!'' என்றுள். ''கடவுள் சத்தியமாக நான் கூப்பிடத்தான் போகிறேன்'' என்றுர் அத்ரியான். ''நாளைக்கே கூப்பிடுவேன்: என்னுடைய அன்பான வாடிக் கையாளர்களே, நாளை இரவில் என் வீட்டில் நடைபெறும் விருந்தில் நீங்கள் அனைவரும் கலந்து கொள்ள வேண்டும். என்னுடைய எளிய உணவைப் பகிர்ந்து கொள்வோம்'' என்றுர். இப்படிச் சொன்ன பிறகு சவப்பெட்டி வியாபாரி படுக்கையில் படுத்துக் குறட்டை விட்டுத் தூங்கினுர்.

அத்ரியானை உறக்கத்திலிருந்து எழுப்பிய பொழுது வெளியே இன்னும் இருட்டு மறையவில்லை. பணக்கார வித வையான திரியூகினு அதே இரவில் மரணமடைந்து விட் டாள். அந்தக் குடும்பத்து வேலைக்காரன் குதிரையில் ஏறிக் கொண்டு வேகமாக வந்து அத்ரியானிடம் தகவலைச் சொன்னுன். சவப்பெட்டி வியாபாரி மகிழ்ந்து போய் அவன் மதுவருந்துவதற்காகப் பத்து கோபெக்கு வெகுமதியளித் தார். பிறகு அவசரமாக உடையணிந்து கொண்டு ஒரு வண்டியைக் கொண்டுவருமாறு உத்தரவிட்டார். வண்டி வந்ததும் அதில் ஏறிக்கொண்டு ரஸ்குலாய் தெருவுக்குப்

போனார். வீட்டு வாசல் முன்பு போலீஸ்காரர்கள் நின்று கொண்டிருந்தார்கள். பிணவாடையை மோப்பம் பிடித்து அண்டங்காக்கைகள் வருவதைப் போல பல வியாபாரிகள் அங்கே கூடியிருந்தனர். ஒரு மேசை மீது பிரேதம் கிடத்தப் பட்டிருந்தது. அதன் முகம் மெழுகைப் போல மஞ்சளாக மாறியிருந்த போதிலும் இன்னும் கெட்டுப் போகாமலி ருந்ததால் அடையாளம் தெரிந்தது. உறவினர்களும், பக் கத்து வீடுகளில் உள்ளவர்களும், வீட்டு வேலைக்காரர் களும் பிரேதத்தைச் சுற்றி நின்று கொண்டிருந்தார்கள். எல்லா சன்னல்களும் நன்முகத் திறந்து வைக்கப்பட்டிருந் தன. எங்கு பார்த்தாலும் மெழுகுவத்திகள் எரிந்து கொண் டிருந்தன. மதகுருக்கள் இறந்தவனுக்காகத் தோத்திரங்களைப் படித்துக் கொண்டிருந்தார்கள். அத்ரியான் இறந்துபோன திரியூகினுவின் மருமகனை, ஆடம்பரமான கோட்டு அணிந்து கொண்டிருந்த ஓர் இளம் வியாபாரியைப் பார்த்து, சவ அடக்கத்துக்குத் தேவையான சவப்பெட்டி, மெழுகுவத்தி கள், பிணச்சீலை, மற்ற எல்லாப் பொருள்களையும் நல்ல முறையில் உடனே ஏற்பாடு செய்வதாகக் கூறினுர். அந்த வாரிசு அவரைச் சரியாகக் கூட கவனியாமல் நன்றி சொல்லிவிட்டு, பணத்தைப் பற்றி நான் பேரம் பேசப் போவ தில்லை; நீ நியாயமான தொகையைக் கேட்டு வாங்கிக் கொள் என்ருர். சவப்பெட்டி வியாபாரி ஒரு காசு கூட அதிக மாகக் கேட்க மாட்டேன் என்று வழக்கம் போல சத்தியம் செய்தார். இப்படிச் சொல்லிவிட்டு அவரும் அவருக்குத் தகவல் கொடுத்த வேலைக்காரனும் பொருள் பொதிந்த பார்வைகளைப் பரிமாறிக் கொண்டார்கள். பிறகு சாமான் களை அனுப்பிவைக்க வீட்டுக்குத் திரும்பினுர். அன்று முழு வதும் ரஸ்குலாய் தெருவுக்கும் நிக்கீத்ஸ்கியே வாயிலுக்கும் அவர் போவதும் வருவதுமாக இருந்தார். மாலை நேரத் தில்தான் வேலை முடிந்தது. வண்டிக்காரனைப் போகச் சொல்லிவிட்டு அவர் வீட்டுக்கு நடந்து வந்தார். வானத் தில் நிலவு பிரகாசித்துக் கொண்டிருந்தது. சவப்பெட்டி வியாபாரி பத்திரமாக நிக்கீத்ஸ்கியே வாயிலுக்கு வந்து சேர்ந்தார். மாதாகோவிலை நெருங்கும் பொழுது நமது நண்பர் யுர்க்கோ அவரைப் பார்த்து நில் என்று அதட் டினுர். பிறகு அவருடைய அடையாளம் தெரிந்தவுடன்

இரவு வணக்கம் தெரிவித்தார். அப்பெழுது இரவு வெகு நேரமாகியிருந்தது. சவப்பெட்டி வியாபாரி தன் வீட்டை நெருங்கும் பொழுது, யாரோ தன் வீட்டை நெருங்கி கத வைத் திறந்து கொண்டு உள்ளே போவது போல அவ ருக்குத் தோன்றியது. ''அது யாராக இருக்கும்? வேறு யாருக்காவது என் உதவி தேவைப்படுகிறதா?'' என்று அவர் யோசித்தார். ''திருடன் வீட்டுக்குள் நுழைந்திருப்பானு? அல்லது இரவு நேரத்தில் இளைஞர்கள் என் வீட்டிலுள்ள சின்னஞ்சிறிசுகளைப் பார்க்க வருகிருர்களா?'' என்று ஆச்சரியப்பட்டார். தன் நண்பர் யுர்க்கோவைக் கூப்பிட லாமா என்று முதலில் நினைத்தார். அந்த நேரத்தில் இன் ஞெரு நபர் கதவைத் திறந்து கொண்டு உள்ளே நுழையப் போனுர். ஆனுல் சவப்பெட்டி வியாபாரி வருவதைப் பார்த் ததும் அவர் அங்கேயே நின்று கொண்டு தன்னுடைய தொப்பியை உயர்த்தி அவருக்கு மரியாதை செய்தார். அத்ரியானுக்கு அவருடைய முகம் அறிமுகமானதாகத் தோன்றியது. ஆயினும் அவசரத்தில் அவர் முகத்தை சரி யாகக் கவனிக்கவில்லை. ''என்னைப் பார்க்க வந்திருக்கிறீர் களா? தயவு செய்து உள்ளே வாருங்கள்'' என்ருர். ''நண் பரே! நமக்குள் சம்பிரதாயங்கள் அவசியமா?'' என்று அந்த அடையாளம் தெரியாத மனிதர் உடைந்த குரலில் பேசினுர். ''நீங்கள் முதலில் நுழையுங்கள். விருந்தினர்களுக்கு வழி காட்டுங்கள்!'' என்ருர். அத்ரியான் உண்மையிலேயே மிக வும் அவசரப்பட்டார். எனவே கதவு திறக்கப்பட்டது. அவர் படிகளில் ஏறினுர். அவருக்குப் பின்னுல் அந்த மனி தரும் வீட்டுக்குள் வந்தார். அங்கே பலர் நடமாடிக் கொண்டிருப்பது போல அத்ரியானுக்குத் தோன்றியது. அங்கே நடப்பது என்ன என்று புரியாமல் அவசரமும் வியப்பும் மேலிட அவர் அறைக்குள் நுழைந்ததும்... அவர் நிற்க முடியாமல் விழுந்தார். அந்த அறை முழுவதும் செத்துப் போனவர்கள் இருந்தார்கள். சன்னல் வழியாக வந்த நிலவு வெளிச்சத்தில் மஞ்சள் நிறத்திலும் நீல நிறத்திலுமிருந்த அவர்களுடைய முகங்கள், கோணலான வாய்கள், பாதிமூடி யிருந்த மங்கலான கண்கள், விறைத்துப் போன மூக்குகள் தெரிந்தன.... அத்ரியான் அவர்களை அடையாளம் கண்டு கொண்டார்: அவர்கள் எல்லோரும் செத்த பிறகு அத்ரி

யான் உதவியினுல் மண்ணில் புதைக்கப்பட்டவர்கள். கொட்டும் மழையில் புதைக்கப்பட்ட ஓய்வுபெற்ற பிரிகேடியர் தான் தன்னிடம் பேசிக் கொண்டு வீட்டுக்குள் வந்தவர் என்று அத்ரியான் புரிந்து கொண்டார். அந்த சீமான்கள், சீமாட்டிகள் அனைவரும் சவப்பெட்டி வியாபாரியைச் சூழ்ந்து கொண்டு வணக்கம் செலுத்தி அன்பாகப் பேச ஆரம்பித்தார்கள். ஆனுல் ஒரே ஒரு நபர் மட்டும் அவரருகில் வராமல், தன்னுடைய கிழிந்த உடைகளைக் கண்டு வெட்கப்படுவது போல அந்த அறையின் ஒரு மூலையில் தள்ளி நின்று கொண்டிருந்தார். சிறிது காலத்துக்கு முன்பு அந்த நபரை அத்ரியான் இலவசமாகப் புதைத்தார். அந்த நபரைத் தவிர மற்ற எல்லோரும் பொருத்தமாக உடையணிந்திருந்தார்கள்: பெண்கள் நாடா வைக்கப்பட்ட தொப்பிகளை அணிந்திருந்தார்கள்; ஓய்வுபெற்ற அதிகாரிகள், முகச் சவரம் செய்யவில்லையே தவிர தங்களுடைய பதவிகளுக்குரிய உடையை அணிந்திருந்தார்கள்; வியாபாரிகள் மிகவும் ஆடம்பரமான உடைகளை அணிந்திருந்தார்கள். அங்கு வந்திருந்த எல்லோருடைய சார்பிலும் பிரிகேடியர் பேச ஆரம்பித்தார். ''புரோஹரவ் அவர்களே! உங்கள் அழைப்பை ஏற்றுக் கொண்டு நாங்கள் எல்லோரும் இங்கே வந்திருக்கிருேம். சிலர் வர முடியவில்லை என்ருலும் அதற்குக் காரணம் அவர்கள் முழுமையாக மக்கிப் போய்விட்டார்கள், வெறும் எலும்புக்கூடுகள் என்பதால்தான். அப்படிப்பட்டவர்களில் ஒருவருக்கு உங்களைச் சந்திக்க வேண்டும் என்ற அர்வம் அதிகம். எனவே அவரால் வராமல் இருக்க முடியவில்லை. இதோ அவர்....'' என்ருர். அதே சமயத்தில் ஒரு சிறிய எலும்புக்கூடு அங்கே நின்று கொண்டிருந்தவர்களைத் தள்ளிக்கொண்டு முன்னுல் வந்து அத்ரியானை நெருங்கியது. அதன் தசையில்லாத முகம் அத்ரியானை மிகவும் அன்போடு பார்த்தது. அதன் உடல் எலும்புகளில் இங்குமங்கும் பச்சை, சிவப்பு நிறங்களில் நைந்து போன துணிகள் ஒட்டிக்கொண்டிருந்தன. மரவையில் குழவியை வைத்திருப்பதைப் போல உயரமான குதிரைச் சவாரி பூட்சுகளில் அதன் கால் எலும்புகள் இருந்தன. ''புரோஹரவ்! என்னை அடையாளம் தெரியவில்லையா? ஓய்வுபெற்ற சார்ஜன்ட் பியோத்தர் பெத்ரோவிச் குரீல்கினை மறந்து

10*

விட்டாயா? 1799ம் வருடத்தில் எனக்குத்தானே உன் முதல் சவப்பெட்டியை (ஓக் மரத்தால் செய்யப்பட்டது என்று நீ சொன்னய்; ஆனல் அது உண்மையில் சாதாரணப் பல கையால்தான் செய்யப்பட்டிருந்தது) விற்பனை செய்தாய்.'' இப்படிச் சொன்ன பிறகு அந்த எலும்புக்கூடு அத்ரியானை அன்போடு அணைப்பதற்காகத் தன்னுடைய எலும்புக் கரங்களை நீட்டியது. ஆனல் அத்ரியான் தன் முழு பலத்தையும் திரட்டி, தள்ளிப் போ என்று கத்தியபடியே அதைப் பிடித்துத் தள்ளினர். பியோத்தர் பெத்ரோவிச் இங்குமங்கும் ஆடிக்கொண்டு பொத்தென்று கீழே விழுந்தார். பிறகு அங்கே உடைந்து போன எலும்புகள்தான் குவியலாகக் கிடந்தன. அங்கே குழுமியிருந்த பிரேதங்கள் கோபமடைந்து ஆவேசமாகக் கத்தின. தங்கள் தோழனுகிய சார்ஜன்டின் கௌரவத்தைப் பாதுகாப்பதற்காக அவை அத்ரியான் மீது வசவுகளைப் பொழிந்து கொண்டு ஆத்திரத்தோடு அவரைத் தாக்குவதற்கு முன்னே வந்தன. அந்தப் பிரேதங்களின் கூக்குரலால் காது செவிடாகி, அவற்றின் தாக்குதலால் நசுக்கப்பட்டு, பாவம் அத்ரியான் என்ன செய்வதென்று தெரியாமல் ஓய்வுபெற்ற சார்ஜன்டின் எலும்புக் குவியல் மீது மயக்கமடைந்து விழுந்தார்.

சவப்பெட்டி வியாபாரி தூங்கிக் கொண்டிருந்த படுக்கையின் மீது சூரிய ஒளி நன்ருகப் பிரகாசித்துக் கொண்டிருந்தது. வெகு நேரம் கழித்து அவர் கண்களைத் திறந்த பொழுது எதிரே வேலைக்காரி சமோவார் பாத்திரத்தில் நெருப்பை ஊதிக் கொண்டிருப்பது தெரிந்தது. முந்திய இரவில் நடைபெற்ற சம்பவங்களை நினைத்த பொழுது அவருக்குப் புல்லரித்தது. விதவை திரியூகின, பிரிகேடியர், சார்ஜன்ட் குரீல்கின் ஆகியோர் அவருடைய நினைவில் தெளிவற்ற பிம்பங்களாக வந்தார்கள். நேற்றிரவில் நடைபெற்ற சம்பவங்களையும் அவற்றின் விளைவுகளையும் பற்றி முதலில் வேலைக்காரி பேச ஆரம்பிக்கட்டும் என்று அவர் மௌனமாகக் காத்திருந்தார்.

''அத்ரியான் புரோஹரவிச் அவர்களே! எவ்வளவு நேரம் தூங்கி விட்டீர்கள்!'' என்று சொல்லிக் கொண்டு அவள் அவருடைய காலை உடையை நீட்டினள். ''அடுத்த வீட்டுத் தையற்காரர் உங்களைப் பார்க்க வந்தார். இன்று

போலீஸ் இன்ஸ்பெக்டருக்குப் பெயர் சூட்டிய நாளின் வருடாந்தர விழாவைக் கொண்டாடுவதாகக் போலீஸ்காரர் வந்து சொன்னார். நீங்கள் தூங்கிக் கொண்டிருந்தபடியால் உங்களை எழுப்பித் தொந்தரவு செய்யவில்லை'' என்றாள்.

''காலஞ்சென்ற விதவை திரியூகினாவின் வீட்டிலிருந்து யாரும் வந்தார்களா?'' என்று அத்ரியான் கேட்டார்.

''திரியூகினாவின் விட்டிலிருந்தா? ஏன்? அவள் செத்துப் போய்விட்டாளா?''

''முட்டாள்! நேற்று அவளுடைய சவ அடக்க ஏற்பாடு களுக்காக எனக்கு நீ உதவி செய்யவில்லையா?''

''ஐயா! உங்களுக்கென்ன பைத்தியமா? நேற்று விருந் தின் போது குடித்த மயக்கம் இன்னும் நீடிக்கிறதா? நேற்று யாருடைய சவ அடக்கமும் இல்லை. அந்த ஜெர்மானியரின் வீட்டில் விருந்து சாப்பிட்டுவிட்டுக் குடிமயக்கத்தில் வீட் டுக்குத் திரும்பினீர்கள். வந்ததும் படுக்கையில் விழுந்தீர் கள். இது வரை நன்றாகத் தூங்கிக் கொண்டிருந்தீர்கள். மாதாகோவில் பிரார்த்தனை மணி அடித்து ஓய்ந்து விட் டது'' என்றாள்.

''அப்படியா?'' என்று சவப்பெட்டி வியாபாரி மகிழ்ச்சி யோடு கேட்டார்.

''ஆமாம், நன்றாகத் தூங்கினீர்கள்'' என்றாள் வேலைக் காரி.

''அப்படியானால் சீக்கிரம் தேநீர் கொண்டுவா. என் பெண்களைக் கூப்பிடு'' என்றார் அத்ரியான்.

## அஞ்சல் நிலைய அதிகாரி

*அவர் ஒரு பிராந்திய அதிகாரி, அஞ்சல் நிலையத்தின் ஏகச்சக்கராதிபதி.*

இளவரசர் வியாஸெம்ஸ்கி[20]

*அஞ்சல் நிலையத்தின் அதிகாரியை ஒருபோதும் குறை சொல்லாத அல்லது அவரோடு சச்சரவு செய்து கொள்ளாத ஒரு மனிதரை எனக்குக் காட்டுங்கள். அவர் மீது அவமதிப்பு, காலதாமதம், விருப்பம் போல நடந்து கொள்ளுதல் போன்ற குற்றச்சாட்டுகளை எழுதுவதற்காக (அதனால் எத் தகைய பயனும் ஏற்படாவிட்டாலும்) அந்தத் துர்ப்பாக்கிய கரமான புகார்ப் புத்தகத்தைக் கொண்டுவா என்று கோபமாகக் கேட்காத மனிதரை எனக்குக் காட்டுங்கள். அஞ் சல் நிலைய அதிகாரிகளை மனித உருவத்திலிருக்கும் இராட் சசர்கள்; பண்டைய அநியாய அதிகாரிகளைப் போல மோச மானவர்கள் அல்லது மூரொம் காட்டுக் கொள்ளைக்காரர்க ளைப்* போல ஆபத்தானவர்கள் என்று கருதாத மனிதரை எனக்குக் காட்டுங்கள். ஆனால் நாம் நியாயமாக நடந்து கொள்ள முயற்சிப்போம். அந்த அதிகாரிகளின் இடத்தில் நாம் இருப்பதாக நினைத்துக் கொள்வோம். அப்படியானல் தான் அவர்களைப் பற்றி அனுதாபத்தோடு சிந்தித்து நியாயமான முடிவுக்கு வர முடியும். அஞ்சல் நிலைய அதி காரி என்பவர் யார்? அரசாங்கத்தின் கீழ்நிலை அதிகாரிகள் மத்தியில் அவர் ஒரு துர்ப்பாக்கியசாலி; பிரயாணிகளின் அடிதடிகளிலிருந்து தன்னைக் காப்பதற்குப் பதவியைத் தவிர வேறு எந்த ஆயுதமுமில்லாதவர்.[21] அந்தப் பதவி பெரும் பாலான சந்தர்ப்பங்களில் அவரைக் காப்பதுமில்லை (வாசகர் களின் மனச்சாட்சிக்கு இதை விட்டுவிடுகிறேன்). அவரைப்*

---

* *ஒக்கா ஆற்றின் வட கரையோரக்காட்டில் வழிப் பறிக்காரர்கள் ஏராளமாயிருந்தார்கள்.*—ப-ர்.

பற்றி ''ஏகச்சக்கிராதிபதி'' என்று இளவரசர் வியாஸெம்ஸ்கி வேடிக்கையாக எழுதியிருக்கிறாரே, அவருடைய நிலை எவ்வளவு சிரமமிக்கது? சிறைச்சாலையில் கடுமையான தண்டனையை அனுபவிப்பது போன்றதுதானே அவருடைய அன்றாட வேலை. பகலிலோ, இரவிலோ அவருக்குச் சிறிதாவது ஓய்வுண்டா? பிரயாணி தன்னுடைய அலுப்பூட்டும் பயணத்தின் போது தனக்கு ஏற்பட்ட அத்தனை துன்பங்களையும் அவர் மீதுதானே தீர்த்துக் கொள்கிறார். பருவநிலை மிகவும் மோசம்; பாதைகளோ கேட்க வேண்டாம்; குதிரைகள் ஓட மறுக்கின்றன; வண்டியோட்டி நாம் சொல்வதைக் கேட்க மறுக்கிறான்—இத்தனை கோபத்தையும் அவர் மீதுதானே காட்டுகிறோம். அவருடைய எளிமையான இருப்பிடத்துக்கு வருகின்ற பிரயாணி அவரைத் தன்னுடைய எதிரியாகவே கருதுகிறார். அந்த அழையா விருந்தாளியைச் சீக்கிரமாக அனுப்ப முடிந்தால் அந்த அதிகாரி அதிருஷ்டசாலி. பிரயாணத்துக்குக் குதிரைகள் கிடைக்கவில்லையென்றால் அவரை எப்படியெல்லாம் திட்டுகிறார்கள், எவ்விதமாகவெல்லாம் பயமுறுத்துகிறார்கள்? மழையிலும் சேற்றிலும் அவர் வீடு வீடாக ஓட வேண்டும். பிரயாணியின் கோபத்திலிருந்து, அவருடைய அதட்டல் மிரட்டல்களிலிருந்து தப்பிப்பதற்காகவே அவர் புயலடித்துக் கொண்டிருக்கும் பொழுதும் ஜனவரி மாதத்தில் உறைபனி விழுந்து கொண்டிருக்கும் பொழுதும் தம்முடைய வீட்டை விட்டுப் போய் விடுகிறார். ஒரு ஜெனரல் அங்கே வந்து சேருகிறார். அவரைக் கண்டு நடுங்கிப் போன அஞ்சல் நிலைய அதிகாரி உடனே தம்மிடமுள்ள கடைசி இரண்டு டிரோய்கா வண்டிகளை அவருக்குத் தந்து விடுகிறார். அதில் ஒரு வண்டி தபால் எடுத்துக் கொண்டு போவதற்காகப் பிரத்யேகமாக ஒதுக்கப்பட்டதாக இருக்கும். அவருக்கு ஒரு வார்த்தை நன்றி கூடச் சொல்லாமல் ஜெனரல் அடுத்த ஊருக்குப் புறப்படுகிறார். ஐந்து நிமிடங்களுக்குப் பிறகு—சலங்கையொலி!... அரசாங்கச் செய்திகளைக் கொண்டுவரும் ஊழியர் உள்ளே நுழைகிறார். உடனடியாகக் குதிரைகள் ஏற்பாடு செய்யுமாறு அவரைக் கேட்டுக் கொள்கின்ற உத்தரவை மேசை மீது வீசுகிறார்!... இது போன்ற சூழ்நிலைகளை நன்கு நினைத்துப் பார்த்தோமென்றால் அவர் மீது கோபப்படுவதற்குப் பதி

லாக நாம் உண்மையிலேயே அவருக்காக அனுதாபப்படு வோம். இதைப் பற்றி மேலும் சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். கடந்த இருபது வருடங்களில் நான் ருஷ்யா வின் எல்லாப் பகுதிகளுக்கும் போய் வந்திருக்கிறேன். எனக்கு எல்லாச் சாலைகளிலும் நல்ல அனுபவமுண்டு. வண்டி யோட்டிகளிலும் சில தலைமுறைகளைச் சேர்ந்தவர்களை நான் நன்ருக அறிவேன். எனக்கு நேர்முகமாகத் தெரியாத அல்லது நான் அலுவல் முறையில் தொடர்பு கொள்ளாத ஒரு அஞ்சல் நிலைய அதிகாரி கூட இருக்க முடியாது. என்னு டைய பிரயாணங்களின் போது எனக்கு ஏற்பட்டுள்ள சுவார சியமான அனுபவங்களையும் என்னுடைய கருத்துக்களையும் சீக்கிரமாக எழுத உத்தேசித்திருக்கிறேன். ஆனல் அதற் கிடையில் அஞ்சல் நிலைய அதிகாரிகள் என்ற இனத்தைப் பற்றி பொது மக்கள் மத்தியில் மிகவும் தவருன கருத்துக்களைச் சிலர் பரப்பியிருக்கிருர்கள் என்பதை மட்டும் குறிப்பிட விரும் புகிறேன். பலவிதமான கண்டனங்களுக்கு ஆளாகியிருக்கும் அஞ்சல் நிலைய அதிகாரிகள் உண்மையில் மிகவும் சாது வானவர்கள்; ஒத்துப்போகக் கூடியவர்கள்; நட்புக்குத் தகுதி யானவர்கள். அவர்களிடம் அகப்பட்டதைச் சுருட்டும் இழிகுணம், அளவுக்கு மீறிய பேராசை கிடையாது. அவர் களோடு உரையாடும் பொழுது விசேஷமான செய்திகளை, பயன்மிக்க விவரங்களை நாம் தெரிந்து கொள்ள முடியும். ஆனல் நமது மதிப்புக்குரிய பல பிரயாணிகள் இவற்றைப் புறக்கணித்து விடுகிருர்கள். அது அவர்கள் செய்கின்ற தவ ருகும். என்னைப் பொறுத்தவரை, அரசாங்க வேலையாகப் பிரயாணம் செய்கின்ற உயர்தர அதிகாரிகளுடைய சலிப் புத் தருகின்ற சொற்பொழிவுகளைக் கேட்டுக் கொண்டிருப் பதைக் காட்டிலும் இவர்களுடைய உரையாடலை மதிக் கிறேன்.

மரியாதைக்குரிய அஞ்சல் நிலைய அதிகாரிகள் என்ற குழாத்தில் எனக்குச் சில நண்பர்கள் இருக்கிருர்கள் என் பதை நீங்கள் எளிதாகப் புரிந்து கொண்டிருக்கலாம். அந்த நண்பர்களில் ஒருவருடைய நினைவை நான் விலைமதிப்பற்ற தாகக் கருதுகிறேன் என்பது உண்மையே. என்னுடைய வாழ்க்கையில் ஒரு குறிப்பிட்ட கட்டத்தில் நாங்கள் பழகிக் கொள்ளும் சந்தர்ப்பம் ஏற்பட்டது. அவருடைய கதையை

(எ)ன்னுடைய அன்பான வாசகர்களுக்குத் தெரிவிக்க விரும்பு கிறேன்.

1816ம் வருடத்தில் மே மாதத்தில் அ... என்ற மாவட்டத்தில் பிரயாணம் செய்து கொண்டிருந்தேன். நான் பிரயாணம் செய்தபாதை இப்பொழுது இல்லை. நான் கீழ்நிலை அதிகாரி என்பதால் இரண்டு குதிரைகள் இழுக்கும் வாடகை வண்டியில்தான் பிரயாணம் செய்தேன். அதற்கு மேல் எனக்கு வசதி இல்லை. இதனால் பல அஞ்சல் நிலைய அதிகாரிகள் என்னை அலட்சியம் செய்வதுண்டு. அதனால் நான் அவர்களோடு பல சந்தர்ப்பங்களில் சண்டை போட்டு எனக்குரிய உதவிகளைப் பெற்றிருக்கிறேன். சில அதிகாரிகள் எனக்காக ஏற்பாடு செய்யப்பட்ட குதிரைகளைத் திடீரென்று வந்திருக்கும் பெரிய அதிகாரிகளுக்கு மாற்றி விடுவதுண்டு. அப்பொழுது நான் இளைஞனாகவும் உணர்ச்சி வசப்பட்டவனாகவும் இருந்த காரணத்தால் அந்த அதிகாரிகளின் (தாழ்)ந்த குணத்தையும் கயமையையும் கண்டு மிகவும் ஆத்திரப்பட்டிருக்கிறேன். அது போலவே கவர்னர் அளிக்கும் விருந்தில் நான் கலந்து கொண்டிருக்கும் பொழுது அங்கேயுள்ள முட்டாள் சிப்பந்திகள் சில வகை உணவுகளை என்னுடைய தட்டில் வைக்காமலே போய்விடுவதுண்டு. மேலே குறிப்பிட்டதைப் போல இப்படிப்பட்ட அவமதிப்புகளைத் தாங்கிக் கொள்வதற்கு எனக்குச் சிறிது காலமாயிற்று. இப்பொழுது இரண்டுமே நமது அமைப்பில் இயற்கையானவையாக எனக்குத் தோன்றுகின்றன. மேலான பதவிகளில் உள்ளவர்களுக்குக் கீழான பதவிகளில் உள்ளவர்கள் விட்டுக் கொடுக்க வேண்டும் என்ற கொள்கையை நாம் எல்லாக் காரியங்களிலும் பின்பற்றி வருகிறோம். இதற்குப் பதிலாக அதிக அறிவுடையவர்களுக்குக் குறைந்த அறிவுடையவர்கள் விட்டுக் கொடுக்க வேண்டும் என்ற கொள்கையைப் பின்பற்றினால் என்ன நிலைமை ஏற்படும்? எவ்வளவு சிக்கல் தான் உண்டாகும்! கவர்னர் வீட்டிலுள்ள சிப்பந்திகள் யாருக்கு முதல் மரியாதை செய்ய வேண்டியிருக்கும்? போகட்டும். நம்முடைய கதைக்கு வருவோம்.

அன்று அதிக வெப்பமாக இருந்தது. அஞ்சல் நிலையத்துக்கு மூன்று வெர்ஸ்டாக்கள் தூரத்திலிருக்கும் பொழுதே லேசாக மழை பெய்ய ஆரம்பித்தது. ஆனால் அடுத்த நிமி

டத்திலேயே பலத்த மழை பெய்து என் உடல் முழுவதும் நனைந்து விட்டது. அஞ்சல் நிலையத்தை அடைந்ததும் உடனே முதல் காரியமாக உடைகளை மாற்றிக் கொண்டேன். அடுத்தபடியாகத் தேநீர் கொண்டுவருமாறு சொன்னேன். ''தூன்யா! சமோவாரைத் தயார் செய்! பால் வாங்கி வா!'' என்று அந்த அதிகாரி உரத்த குரலில் சொன்னார். இதைக் கேட்டதும் தடுப்புச் சுவருக்குப் பின்னாலிருந்து ஒரு பெண் வேகமாக வந்து வாசற்பக்கம் ஓடினாள். அவளுக்குப் பதினான்கு வயதிருக்கும். ஆனால் அவள் நல்ல அழகி என்று எனக்குத் தோன்றியது. ''உங்களுடைய மகளா?'' என்று அதிகாரியிடம் கேட்டேன். ''ஆமாம்'' என்று திருப்தியுடன் சொன்னார். ''செத்துப் போன தாயாரைப் போலவே கெட்டிக்காரி; சூடிக்கையானவள்'' என்று சொன்னார். உடனே அவர் என்னுடைய உத்தரவைப் பிரதியெடுக்க ஆரம்பித்தார். நான் அந்த எளிமையான ஆனால், சுத்தம் நிறைந்த வீட்டை அலங்கரித்த படங்களைப் பார்த்துக் கொண்டிருந்தேன். அவை கெட்டுப் போய்த் திருந்திய புதல்வனின் கதையைச் சித்திரித்தன. முதல் படத்தில் படுக்கைக் குல்லாயும் இரவு அங்கியும் அணிந்த மரியாதைக்குரிய மிகவும் வயதான ஒரு கிழவர் சஞ்சலமுள்ள இளைஞனுக்கு விடை கொடுத்துக் கொண்டிருந்தார். அவன் அவரிடமிருந்து ஒரு பை நிறையப் பணமும் ஆசீர்வாதமும் பெற்றுக் கொண்டிருந்தான். அடுத்த படம் அந்த இளைஞனுடைய ஒழுக்கக் குறைவான வாழ்க்கையைப் பளிச்சென்று சித்திரித்தது. அந்தப் படத்தில் அவனைச் சுற்றிலும் போலியான நண்பர்களும் ஒழுக்கமில்லாத பெண்களும் உட்கார்ந்திருந்தார்கள். அடுத்த படத்தில் அவனுடைய வீழ்ச்சி சித்திரிக்கப்பட்டிருந்தது. கிழிந்த உடைகளையும் மூன்று முனைத் தொப்பியையும் அணிந்து, பன்றிகளை மேய்த்துக் கொண்டு, அவை சாப்பிடும் உணவை அவன் சாப்பிட்டுக் கொண்டிருந்தான். அவன் முகத்தில் அதிகமான துன்பமும் பச்சாத்தாபமும் தென்பட்டன. கடைசிப் படத்தில் அவன் தன்னுடைய தகப்பனாரிடம் திரும்புகின்ற காட்சி வரையப்பட்டிருந்தது. அந்த வயதான நல்ல மனிதர் அதே குல்லாயும் இரவு உடையும் அணிந்து கொண்டு அவனை வரவேற்க ஓடி வருகிறார். கெட்டுப் போய்த் திருந்திய புதல்வன்

முழந்தாளிட்டு நிற்கிருன். அன்றைய விருந்துக்காக நன்கு கொழுக்க வைக்கப்பட்ட ஆட்டுக் குட்டியை சமையற்காரன் வெட்டிக் கொண்டிருப்பதும், மூத்த சகோதரன் என்ன காரணம் என்று பணியாளர்களை விசாரிப்பதும் படத்தின் பின்னணியில் வரையப்பட்டிருந்தன. ஒவ்வொரு படத்தின் கீழும் ஜெர்மன் மொழியில் எழுதப்பட்டிருந்த பொருத்தமான கவிதை வரிகளைப் படித்தேன். அன்று பார்த்த படங்களும் அந்த அறையிலிருந்த பூத்தொட்டிகளும், வண்ணக் கட்டம் போட்ட திரையிட்டிருந்த படுக்கையும், என்னைச் சுற்றிலுமிருந்த மற்ற பொருள்களும் இன்னும் என்னுடைய நினைவில் தங்கியிருக்கின்றன. அந்தக் குடும்பத்தின் தலைவருக்கு ஐம்பது வயதிருக்கும். அவருடைய உற்சாகமான, ஆரோக்கியமான தோற்றமும் அவரணிந்திருந்த பச்சை நிற நீள் கோட்டில், வெளிறிப் போன நாடாக்களில் தொங்கிக் கொண்டிருந்த மூன்று பதக்கங்களும் இன்றும் என் மனக் கண்ணில் தெரிகின்றன.

நான் பழைய வண்டிக்காரனுக்குப் பணத்தைக் கொடுத்து அனுப்பி வைத்த சிறிது நேரத்தில் தூன்யா சமோவாரை எடுத்து வந்தாள். அவளுடைய அழகு என்னை வசீகரித்திருப்பதைத் தெரிந்து கொள்ள அந்த இளம் பெண்ணுக்கு அதிக நேரமாகவில்லை. அவள் நாணத்தோடு தன்னுடைய அகன்ற, நீல விழிகளைக் கீழே தாழ்த்திக் கொண்டாள். நான் அவளோடு பேச ஆரம்பித்தேன். ஓரளவுக்கு உலகியல் அறிவு வாய்க்கப் பெற்ற பெண்ணைப் போல அவள் சிறிதும் கூச்சமின்றி என்னுடைய கேள்விகளுக்குப் பதிலளித்தாள். நான் அவளுடைய தகப்பனுருக்கு மதுவை ஊற்றிக் கொடுத்தேன். தூன்யாவுக்கு ஒரு கோப்பை தேநீர் கொடுத்தேன். நாங்கள் மூவரும் நெடுங்காலம் பழகியவர்களைப் போல மனந்திறந்து பேசிக் கொண்டிருந்தோம்.

குதிரைகள் புறப்படத் தயாராக நின்றன. ஆனுல் அந்த அஞ்சல் நிலைய அதிகாரியையும் அவருடைய மகளையும் பிரிந்து செல்வதற்கு எனக்கு மனமில்லை. கடைசியில் அவர்களிடமிருந்து விடை பெற்றுக் கொண்டேன். தகப்பனுர் என்னுடைய பிரயாணம் சுகமாக இருக்கட்டும் என்று வாழ்த்தினுர். அவர் மகள் என்னை வழியனுப்புவதற்காக

வண்டி வரை என்னோடு வந்தாள். வாயிலுக்கு வந்ததும் நான் நின்றேன்; அவளை முத்தமிடுவதற்கு அனுமதிக்குமாறு வேண்டினேன். தூன்யா சம்மதித்தாள்....

இந்தப் பழக்கத்தின் இனிமையைச்
சுவைக்க ஆரம்பித்த நாள் முதல்,—

நான் கொடுத்த எண்ணற்ற முத்தங்களை ஒவ்வொன்றாக நினைத்துப் பார்க்கிறேன். ஆனால் அன்று தூன்யாவை முத்த மிட்ட பொழுது ஏற்பட்ட மகிழ்ச்சி பிறகு ஏற்படவில்லை; அந்த மறக்க முடியாத இனிமை பிறகு எப்பொழுதும் எனக்குக் கிடைக்கவில்லை.

சில வருடங்களுக்குப் பிறகு மீண்டும் அதே இடத்துக்கு அதே பாதையில் போக வேண்டிய சந்தர்ப்பம் ஏற்பட்டது. அந்த அஞ்சல் நிலைய அதிகாரியின் மகளின் நினைவு வந்தது. அவளை மறுபடியும் சந்திக்கலாம் என்று நினைத்த பொழுது நான் மிகவும் மகிழ்ச்சியடைந்தேன். ஆனால் அடுத்த விநாடியே, ஒருவேளை அந்த வயதான அதிகாரி வேலையிலிருந்து நீக்கப்பட் டிருக்கலாம்; தூன்யாவுக்கும் திருமணம் நடைபெற்றிருக்கும் என்ற எண்ணம் ஏற்பட்டது. அவர்களில் யாராவது ஒருவர் மரணமடைந்திருக்கலாம் என்ற எண்ணமும் என் மனதி லேற்பட்டது. எனவே அந்த அஞ்சல் நிலையத்தை நெருங்கிக் கொண்டிருந்த பொழுது என் மனதில் பலவிதமான உணர்ச்சி களும் கவலைகளும் நிறைந்திருந்தன.

அஞ்சல் நிலைய அதிகாரியின் சிறிய வீட்டுக்கு முன்னால் என் வண்டி நின்றது. அறைக்குள் சென்றவுடன் கெட்டுப் போய்த் திருந்திய மகனின் வாழ்க்கையைச் சித்திரிக்கும் படங்களை அடையாளங்கண்டு கொண்டேன். மேசையும் படுக் கையும் வழக்கமான இடத்தில் இருந்தன. ஆனால் முன்பு போல சன்னலில் மலர்த் தொட்டிகள் வைக்கப்பட்டிருக்க வில்லை. அந்த அறையில் எல்லாப் பொருள்களும் போது மான கவனிப்பு இல்லாமல் தூசி படிந்திருந்தன. அஞ்சல் நிலைய அதிகாரி ஆட்டுத் தோல் கோட்டைப் போர்த்து தூங்கிக் கொண்டிருந்தார். என்னுடைய வருகை அவரை எழுப்ப, அவர் நிமிர்ந்து உட்கார்ந்தார்... அது சம்சோன் வீரின் என்பதில் சந்தேகமில்லை. ஆனால் அவர்தான் எவ் வளவு மூப்படைந்து விட்டார்! என்னுடைய உத்தரவை

அவர் பிரதியெடுத்துக் கொண்டிருக்கும் பொழுது, அவருடைய வளைந்து போன தோள்களையும், சவரம் செய்யாத முகத்தையும், அவற்றில் ஆழமான சுருக்கங்களையும், அவருடைய நரைத்த தலைமயிரையும் நான் கவனித்தேன். திடகாத்திரமான உடலோடு கூடிய ஒருவர் மூன்று அல்லது நான்கு வருடங்களில் இப்படி மெலிந்து, மூப்படைந்து விட்டாரே என்று யோசித்தேன். ''என்னைத் தெரியவில்லையா? நாம் பழைய நண்பர்கள் அல்லவா?'' என்றேன். ''இருக்கலாம். இது அதிகப் பிரயாணம் நடைபெறும் பாதை. ஏராளமான பிரயாணிகள் வருகிறார்கள்'' என்று உற்சாகமில்லாமல் பதிலளித்தார். ''உங்கள் பெண் தூன்யா எப்படி இருக்கிறாள்?'' என்று கேட்டேன். அவர் முகத்தைச் சுளித்தார். ''கடவுளுக்குத்தான் தெரியும்'' என்றார். ''அப்படியானால் அவளுக்குத் திருமணமாகி விட்டதா?'' என்று தொடர்ந்து கேட்டேன். என்னுடைய கேள்வி காதில் விழவில்லை என்பது போல அவர் பாசாங்கு செய்து கொண்டு என்னுடைய உத்தரவை முணுமுணுத்தபடியே படிக்க ஆரம்பித்தார். நான் கேள்விகளை நிறுத்திக் கொண்டு தேநீருக்கு ஏற்பாடு செய்யுங்கள் என்று சொன்னேன். ஆனால் என்னுடைய ஆர்வம் மிகவும் அதிகமாயிற்று. அந்தப் பழைய நண்பர் மதுவருந்திய பிறகு தம்முடைய கதையைச் சொல்ல முன்வருவார் என்று எதிர்பார்த்தேன்.

என்னுடைய நம்பிக்கை வீணாகவில்லை. ஒரு டம்ளரில் மதுவை ஊற்றிக் கொடுத்த பொழுது அவர் வேண்டாமென்று மறுக்கவில்லை. மதுவைக் குடித்ததும் அவருடைய முகபாவம் மாறியது; கவலை மறைந்தது. இரண்டாவது டம்ளர் குடித்ததும் அவர் அதிகமாகப் பேச ஆரம்பித்தார். நான் யார் என்பது அவருக்கு ஞாபகம் வந்து விட்டதாகச் சொன்னார்; அல்லது ஞாபகம் வந்து விட்டதாகப் பாசாங்கு செய்தார். அப்பொழுது அவர் கூறிய சுவாரசியமான கதை என் மனதை மிகவும் உருக்கியது; என்னை விசித்திரமான உணர்ச்சிகளுக்கு உட்படுத்தியது.

''என் மகள் தூன்யாவை உங்களுக்குத் தெரியுமல்லவா?'' என்று ஆரம்பித்தார். ''அவளைத் தெரியாதவர்கள் யார்? தூன்யா! தூன்யா! எப்படிப்பட்ட பெண்! இங்கே வந்த ஒவ்வொருவரும் அவளைப் பாராட்டினார்கள். அவளை யாரும்

ஒரு வார்த்தை கூட குறைவாகச் சொன்னதில்லை. சீமாட்டி கள் அவளுக்கு ஏதாவது ஒரு அன்பளிப்பு—சதுரத் துணியோ அல்லது காதணிகளோ—கொடுத்துவிட்டுத்தான் புறப்படுவார்கள். கனவான்கள் அஞ்சல் நிலையத்துக்கு வந்து வேண்டுமென்றே தங்குவார்கள். பகல் உணவு அல்லது இரவு உணவு சாப்பிட வேண்டும் என்று அவர்கள் சொன்ன போதி லும் உண்மையில் அவளை இன்னும் சிறிது நேரம் பார்த்துக் கொண்டிருக்கும் ஆசையில் இங்கே தங்குவார்கள். ஒருவர் எவ்வளவு கோபமாக வந்தாலும் அவளைப் பார்த்தவுடன் கோபம் தணிந்து விடும். என்னிடம் அன்பாகப் பேசுவார் கள். நீங்கள் நம்புகிறீர்களோ என்னவோ அரசாங்கக் கடிதங்களை எடுத்துச் செல்லும் முக்கியமான ஊழியர்கள் கூட இங்கே உட்கார்ந்து அவளிடம் அரை மணி நேரமாவது பேசிவிட்டுத்தான் புறப்படுவார்கள். இந்த வீட்டில் அவள் தான் எல்லாற்றையும் கவனித்துக் கொண்டாள். வீட்டைப் பெருக்குவதற்கும்,* சமையல் செய்வதற்கும் எல்லா வேலை களையும் கவனிப்பதற்கும் அவளுக்கு மட்டும் எப்படியோ நேரமிருந்தது. இந்தக் கிழட்டு மூடனுக்கு அவளைப் பார்க் காமல் ஒரு நிமிடம் கூட இருக்க முடியாது. ஏனென்றால் அவளைப் பார்த்த மாத்திரத்தில் எனக்கு அவ்வளவு மகிழ்ச்சி ஏற்படும். நான் என்னுடைய துான்யாவை நேசிக்கவில்லையா? என்னுடைய குழந்தையை நான் கவனிக்கவில்லையா? அவ ளுடைய வாழ்க்கை என்ன கஷ்டமாகவா இருந்தது? ஹூம். ஆபத்து வரும் பொழுது பிரார்த்தனையால் தடுத்துவிட முடியுமா? விதியிலிருந்து தப்ப முடியுமா?'' இப்படிச் சொன்ன பிறகு அவர் தம்முடைய துயரக் கதையை என் னிடம் விவரித்தார்.

மூன்று வருடங்களுக்கு முன்பு குளிர் காலத்தில் மாலை நேரத்தின் போது அவர் புதிய கணக்குப் பேரேட்டில் கோடு போட்டுக் கொண்டிருந்தார். தடுப்புக்குப் பின்னால் அவருடைய மகள் உட்கார்ந்து ஒரு புதிய உடையைத் தயாரித்துக் கொண்டிருந்தாள். வீட்டுக்கு முன்னால் ஒரு டிரோய்கா வண்டி வந்து நின்றது. ஒரு பிரயாணி ராணுவ மேல்கோட் டும் சர்க்கேஸியத் தொப்பியும் கழுத்தைச் சுற்றிக் கனத்த மப்ளரும் அணிந்து கொண்டு வீட்டுக்குள் வந்து குதிரை கள் உடனே வேண்டும் என்றார். எல்லாக் குதிரைகளுமே

வண்டிகளில் பூட்டி அனுப்பப்பட்டிருந்தன. இதைச் சொன்னதும் அவர் தம்முடைய குரலை உயர்த்தியது மட்டுமல்லாமல் குதிரைச் சவுக்கையும் உயர்த்தினார். ஆனால் இத்தகைய நிகழ்ச்சிகளை அடிக்கடி பார்த்திருக்கும் தூன்யா தடுப்புக்குப் பின்னாலிருந்து வேகமாக ஓடி வந்தாள். அந்தப் பிரயாணியைப் பார்த்து மிகவும் மரியாதையோடு, ஏதாவது சாப்பிடுகிறீர்களா என்று கேட்டாள். தூன்யாவின் வருகை வழக்கமான விளைவை ஏற்படுத்தியது. அந்தப் பிரயாணியின் கோபம் மறைந்தது. அவர் காத்திருக்க ஒத்துக்கொண்டதோடு இரவு உணவு தயாரிக்குமாறு உத்தரவிட்டார். அவர் நனைந்து போன உரோமத் தொப்பியைத் தலையிலிருந்து எடுத்து மப்ளரை அவிழ்த்தார். இராணுவ மேல் கோட்டை நீக்கிய பொழுது அவர் ஹுஸார் படைப் பிரிவைச் சேர்ந்த ஒல்லியான இளம் அதிகாரி என்பது தெரிந்தது. அவர் முகத்தில் சிறிய, கறுப்பு மீசை இருந்தது. அஞ்சல் நிலைய அதிகாரியின் வீட்டில் வசதியாக அமர்ந்து கொண்டு, வெகு சீக்கிரத்தில் அவரோடும் அவர் மகளோடும் வேடிக்கையாகப் பேசிக் கொண்டிருந்தார். இரவு உணவு முடிந்தது. இதற்கிடையில் வெளியூர்களுக்கு அனுப்பப்பட்ட குதிரைகள் திரும்பி வந்தன. அவற்றுக்குத் தீனி வைக்காமல் உடனே அந்தப் பிரயாணியின் வண்டியில் பூட்டுமாறு அஞ்சல் நிலைய அதிகாரி உத்தரவிட்டார். ஆனால் அவர் அறைக்குத் திரும்பிய பொழுது அந்த இளம் அதிகாரி பெஞ்சின் மீது சற்று மயங்கிய நிலையில் கிடப்பதைப் பார்த்தார். அவருக்குத் தலை வலி; உடல்நிலை சரியில்லை; பிரயாணம் செய்யக் கூடிய நிலையில் அவர் இல்லை... இனி என்ன செய்ய முடியும்? அஞ்சல் நிலைய அதிகாரி தம்முடைய படுக்கையை அவருக்குக் கொடுத்தார். அவருடைய உடல் நிலையை மறு நாள் வரை பார்ப்பதென்றும் அதன் பிறகும் குணமடையவில்லை என்றால் ஸ... என்ற நகரத்திலுள்ள மருத்துவரை உடனே வரச் சொல்லுவதென்றும் முடிவு செய்யப்பட்டது.

மறு நாள் அந்த ஹுஸாரின் உடல்நிலை இன்னும் மோசமாயிற்று. அவருடைய வேலைக்காரன் மருத்துவரைக் கூப்பிடுவதற்காகப் பக்கத்து நகரத்துக்குப் போனான். தூன்யா காடியில் நனைத்த கைக் குட்டையை அவருடைய தலையில்

சுற்றினுள். அவர் படுக்கையின் அருகிலேயே உட்கார்ந்து தையல் வேலை செய்து கொண்டிருந்தாள். அஞ்சல் நிலைய அதிகாரி வரும் பொழுது நோயாளி முனகிக் கொண் டிருந்தார்; அவரால் ஒன்றும் பேச முடியவில்லை. எனினும் இரண்டு கோப்பை காப்பியைக் குடித்துவிட்டு பகல் உணவு தயாரிக்க உத்தரவிட்டார். தூன்யா அவருடைய படுக்கையை விட்டுச் சிறிது கூட தள்ளிப் போகவில்லை. அவர் தனக்குத் தாகமாயிருக்கிறதென்று அடிக்கடி சைகை காட்டுவார். உடனே தூன்யா தானே தயாரித்த எலுமிச்சைப் பானத் தைக் கொண்டுவந்து தருவாள். நோயாளி தன்னுடைய உதடுகளை நனைத்துக் கொண்டு அந்தக் கோப்பையைத் திருப்பிக் கொடுக்கும் பொழுது, தன்னுடைய நன்றியைக் காட்டுவதற்காக, தூன்யாவின் கைகளைத் தன்னுடைய மெலிந்த கரங்களால் அழுத்திப் பிடிப்பார். பகல் உணவு நேரத்தின் போது மருத்துவர் அங்கே வந்து சேர்ந்தார். அவர் நோயாளியின் நாடியைப் பிடித்துப் பார்த்துவிட்டு அவரிடம் ஜெர்மன் மொழியில் பேசினுர். பிறகு ருஷ்ய மொழியில் அவருக்கு ஓய்வு மிகவும் அவசியம் என்று கூறினுர். இரண்டொரு நாட்களுக்குப் பிறகுதான் அவர் பிரயாணத் தைத் தொடர முடியும் என்ருர். அந்த ஹுஸார் அவர் வந்ததற்காக இருபத்தைந்து ரூபிள்களை அவரிடம் கொடுத்து விட்டு, தம்மோடு உணவருந்திச் செல்லுமாறு அழைத் தார். அவரும் ஒத்துக் கொண்டார். பிறகு இருவரும் நன் ருகச் சாப்பிட்டதோடு ஒரு பாட்டில் ஒயினையும் காலி செய் தார்கள். அவர்கள் சிரித்துப் பேசிக் கொண்டிருந்த பிறகு பிரிந்தார்கள்.

இன்னெரு நாள் கழிந்தது. அந்த ஹுஸார் பூரணமாக குணமடைந்து விட்டார். அவர் இப்பொழுது மிகவும் சந் தோஷமாக இருந்தார். அவ்வப்பொழுது தூன்யாவோடு அல் லது அவளுடைய தகப்பனுரோடு வேடிக்கையாகப் பேசிக் கொண்டிருந்தார்; ஒரு பாட்டைச் சீட்டியடித்தார். அங்கே வந்த பிரயாணிகளோடு உரையாடினுர். அவர்களுடைய விவரங்களைப் பேரேட்டில் பதிவு செய்தார். அஞ்சல் நிலைய அதிகாரிக்கு அவர் மீது மிகவும் பிரியமேற்பட்டது. எனவே மூன்ருவது நாள் காலையில் அந்த இனிய சுபாவமுள்ள பிர யாணி நகரத்துக்குப் புறப்பட்ட பொழுது அவரால் பிரி

வைத் தாங்கிக் கொள்ள முடியவில்லை. அன்று ஞாயிற்றுக் கிழமை என்பதால் தூன்யா மாதாகோவிலுக்குப் புறப் பட்டுக் கொண்டிருந்தாள். அந்த ஹுஸாரின் வண்டி வீட்டு வாசலில் நின்றது. தம்முடைய சாப்பாடு மற்ற செலவு களுக்காக அஞ்சல் நிலைய அதிகாரியிடம் அவர் தாராள மாகப் பணம் கொடுத்தார். தூன்யாவிடம் விடை பெற்றுக் கொள்ளும் பொழுது அந்த கிராமத்தின் எல்லையிலிருந்த மாதாகோவில் வரை தம்முடைய வண்டியில் வருமாறு அழைத்தார். தூண்யாவுக்கு என்ன பதில் சொல்வதென்று தெரியவில்லை.... "நீ ஏன் பயப்படுகிருய்?" என்று அவ ளுடைய தகப்பனுர் கேட்டார். "மதிப்புக்குரிய சீமான் அவர் கள் ஓர் ஓநாய் அல்ல; அவர் உன்னைக் கடித்துவிட மாட்டார். வண்டியில் அவரோடு மாதாகோவில் வரை போ" என்ருர். தூன்யா வண்டியில் ஏறி அந்த ஹுஸாருக்குப் பக்கத்தில் உட் கார்ந்தாள். வேலைக்காரன் முன்புறத்தில் தாவி ஏறினுன். வண்டிக்காரன் ஒலியெழுப்பியதும் குதிரைகள் வேகமாக ஓடின.

திடீரென்று அந்த ஹுஸாரோடு போவதற்குத் தன் மகள் தூன்யாவை எப்படி அனுமதித்தார் என்பது அந்தப் பரிதாபத்துக்குரிய அஞ்சல் நிலைய அதிகாரிக்குப் புரியவில்லை. அவ்வளவு குருட்டுத்தனமாக நடந்து கொண்டது ஏன்? அந்த நேரத்தில் தன்னை எந்தப் பேய் பிடித்துக் கொண்டது என்று அவர் இன்னும் யோசிக்கிருர். அவர்கள் போய் அரை மணி நேரமானதும் அவர் மனதில் கலக்கம் ஏற்பட்டது. கவலை அதிகமானதும் அவரால் உட்கார்ந்திருக்க முடியவில்லை. எனவே அவளைத் தேடி மாதாகோவிலுக்குப் புறப்பட்டார். மாதாகோவிலை நெருங்கிய பொழுது எல்லொரும் அங் கிருந்து திரும்பிக் கொண்டிருப்பதைப் பார்த்தார். ஆனுல் அந்தக் கூட்டத்தில் தூன்யாவைக் காணவில்லை. அவர் கவலை யோடு மாதாகோவிலுக்குள் வேகமாக நுழைந்தார். வழி பாட்டு இடத்தைவிட்டு மதகுரு கீழே இறங்கி விட்டார். மாதாகோவில் அலுவலர் மெழுகு வத்திகளை அணைத்துக் கொண்டிருந்தார். இரண்டு கிழவிகள் மட்டும் ஒரு மூலை யில் பிரார்த்தித்துக் கொண்டிருந்தனர். ஆனுல் தூன்யாவை எங்கும் காணும். அவர் அலுவலரைப் பார்த்து பிரார்த் தனையின் போது தூன்யா வந்திருந்தாளா என்று வேதனை

யோடு கேட்டார். அவள் வரவில்லையென்று அலுவலர் பதில் சொன்னார். அஞ்சல் நிலைய அதிகாரி நடைப் பிணமாக வீட்டுக்குத் திரும்பினார். அவர் மனதில் ஒரே ஒரு நம்பிக்கை மட்டும் எஞ்சி நின்றது. அடுத்த ஊரில் தூன்யாவின் ஞானத் தாய் வசித்து வருகிறாள். தூன்யா கவலைகளை அறியாத இளம் பெண்தானே. ஒருவேளை அந்த ஊருக்குப் போயிருக்கலாம் என்று நினைத்தார். குதிரைகள் திரும்பி வந்ததும் தகவல் கிடைக்கும் என்ற நம்பிக்கையில் பரபரப்பும் வேதனையும் ஒருங்கே மேலிட அவர் காத்திருந்தார். அன்றைய பொழுது முடிந்தது. ஆனால் வண்டிக்காரன் வரவில்லை. இரவு வெகுநேரமாகிய பிறகு அவன் தனியாகத் திரும்பினான். அதிகமாகக் குடித்த மயக்கத்தில் அவன் அந்தத் துயரமான செய்தியைத் தெரிவித்தான்: ''தூன்யா அந்த ஹுஸாரோடு அடுத்த அஞ்சல் நிலையத்திலிருந்து போய் விட்டாள்.''

அந்த வயோதிகரால் இந்தத் துன்பத்தைத் தாங்கிக் கொள்ள முடியவில்லை. அன்று மாலையிலேயே அவர் நோயில் விழுந்தார். அந்த இளம் பாசாங்குக்காரன் முந்திய நாளன்று படுத்துச் சதி செய்த அதே படுக்கையில் அவர் விழுந்தார். நடந்த சம்பவங்களை அவர் நினைத்துப் பார்த்தார். அந்த இளம் இராணுவ அதிகாரி நோயில் விழுந்தது போல நடித்துத் தன்னை ஏமாற்றி விட்டார் என்பதை அவர் உணர்ந்தார். அவருக்கு அதிகமான காய்ச்சல் ஏற்படவே அவரை ஸ... என்ற நகரத்துக்குக் கொண்டுபோனார்கள். அவருக்குப் பதிலாக வேறொருவர் தற்காலிகமாக அஞ்சல் நிலைய அதிகாரியாகப் பொறுப்பேற்றுக் கொண்டார். அன்று ஹுஸாரைப் பார்க்க வந்த அதே மருத்துவர்தான் இவருக்கும் சிகிச்சை செய்தார். அந்த இளைஞனுடைய உடம்புக்கு ஒன்றுமில்லை; அவனுடைய கெட்ட நோக்கம் எனக்குப் புரிந்தது; ஆனால் அவனுடைய குதிரைச் சவுக்குக்குப் பயந்து போய் பேசாமலிருந்து விட்டேன் என்று அந்த மருத்துவர் இப்பொழுது அந்த நோயாளியிடம் கூறினார். அந்த ஜெர்மன் மருத்துவர் உண்மையைச் சொன்னாரா அல்லது தமது கெட்டிக்காரத்தனத்தைக் காட்டிக் கொள்ள விரும்பினாரா என்பது தெரியவில்லை. ஆனால் அவருடைய பேச்சு அந்த வயோதிக நோயாளிக்குச் சிறிதும் ஆறுதலளிக்கவில்லை. அவருடைய

உடம்பு ஓரளவு குணமடைந்தவுடன் அவர் உடனே இரண்டு மாத விடுமுறைக்கு மனுச் செய்துவிட்டு, மற்றவர்களிடம் ஒரு வார்த்தை கூடச் சொல்லாமல் தன் மகளைத் தேடிக் கால்நடையாகப் புறப்பட்டார். அஞ்சல் நிலையப் பேரேடு களிலிருந்து காப்டன் மீன்ஸ்கி ஸ்மலேன்ஸ்க் நகரத்திலி ருந்து பீட்டர்ஸ்பர்க் வரை பிரயாணம் செய்தார் என்பதைத் தெரிந்து கொண்டார். மேலும் அவரோடு கூடச் சென்ற போதிலும் தூன்யா வழி நெடுக அழுது கொண்டே சென் றாள் என்பதை வண்டிக்காரன் மூலமாகத் தெரிந்து கொண்டார். ''வழி தவறிப் போன ஆட்டுக் குட்டியை வீட்டுக்குக் கொண்டுவருவேன். கடவுள் உதவி செய்வார்'' என்று அஞ்சல் நிலைய அதிகாரி உறுதி கொண்டார். இந்த எண்ணத்தோடு அவர் பீட்டர்ஸ்பர்க் நகரத்துக்கு வந் தார். அவர் முன்பு இராணுவ சேவையிலிருந்த பொழுது நெருங்கிப் பழகிய தோழரும் இப்பொழுது ஓய்வு பெற்ற கீழ்நிலை அதிகாரியுமான ஒருவருடைய வீட்டில் தங்கினார். அந்த வீடு இஸ்மாய்லவ்ஸ்கி படைப் பிரிவின் போர்வீரர் குடியிருப்பில் அமைந்திருந்தது. அங்கேயிருந்து கொண்டு தன் மகளைத் தேட ஆரம்பித்தார். காப்டன் மீன்ஸ்கி பீட் டர்ஸ்பர்க் நகரத்தில் தெமூத்தவ் விடுதியில் தங்கி யிருக்கிறார் என்பதை வெகு சீக்கிரமாகக் கண்டு பிடித் தார். அந்த இளைஞனைப் பார்ப்பதென்று முடிவு செய் தார்.

ஒரு நாள் அதிகாலையில் அந்த ஹுஸாரின் வீட்டுக்குப் போனார். ஒரு வயதான படைவீரர் அவரைப் பார்க்க வந் திருப்பதாகத் தெரிவிக்குமாறு வேலைக்காரனிடம் சொன்னார் அவன் பூட்சுகளைப் பளபளவெனத் தேய்த்துக் கொண்டிருந் தான். தன்னுடைய எஜமானர் தூங்கிக் கொண்டிருக்கிறார்; பதினொரு மணிக்கு முன்பாக யாருக்கும் பேட்டியளிப்பது கிடையாது என்று வேலைக்காரன் பதிலளித்தான். அஞ்சல் நிலைய அதிகாரி போய்விட்டு மறுபடியும் குறிப்பிட்ட நேரத்திற்கு அங்கே வந்தார். மீன்ஸ்கி இரவு உடையணிந்து, தலையில் சிகப்பு நிறக் கம்பளித் தொப்பியோடு வெளியே வந்து அவரைப் பார்த்தார். ''சகோதரரே! உமக்கு என்ன உதவி வேண்டும்?'' என்று கேட்டார். அந்த வயோதிகர் மனதில் கடுங்கோபம் ஏற்பட்டது. அவருடைய கண்களில்

கண்ணீர் பெருகியது. அவரால் பேச முடியவில்லை. ''மேன்மை தங்கிய கனவான் அவர்களே!.. தயவு செய்து!..'' என்று நாக்குளற முணுமுணுத்தார். மீன்ஸ்கி அவரைப் பார்த்தார். அவர் முகம் இரத்தச் சிவப்பாக மாறியது. அவருடைய கையைப் பிடித்துத் தமது படிப்பறைக்குள் கொண்டு போனார். உடனே அந்த அறையின் கதவை உள்ளே தாளிட்டார். ''கனவான் அவர்களே! என் தூன்யா இழந்ததை இனி பெற முடியாது. ஆனால் அவளையாவது என்னிடம் ஒப்படையுங்கள். அவளை ஆனந்தமாக அனுபவித்து விட்டீர்கள். ஆனால் அவளைச் சீரழித்து விடாதீர்கள்'' என்றார் முதியவன். அந்த இளம் அதிகாரி சற்று உணர்ச்சி வசப்பட்டார் என்பது தெரிந்தது. ''நடந்து போனவற்றை இனிமேல் மாற்ற முடியாது. ஆனால் நான் உங்களுக்குத் தீங்கிழைத்து விட்டேன். அதற்காக மன்னிப்புக் கேட்கத் தயாராக இருக்கிறேன். ஆனால் தூன்யாவை நான் கைவிடுவேன் என்று நீங்கள் நினைக்க வேண்டாம். அவளை சந்தோஷமாக வைத்திருப்பேன். இது சத்தியம். அவளை எதற்காக உங்களோடு அனுப்ப வேண்டுமெனக் கேட்கிறீர்கள்? அவள் என்னை நேசிக்கிறாள். அவளுடைய வாழ்க்கை மாறி விட்டது. முன்பு உங்களோடு இருந்ததைப் போலஅவள்இருக்க முடியாது.அவளோ,நீங்களோ நடந்ததை மாற்ற முடியுமா? அல்லது மறக்க முடியுமா?'' இப்படிச் சொல்லிவிட்டு அவர் அஞ்சல் நிலைய அதிகாரியின் சட்டைப் பையில் எதையோ திணித்துக் கதவைத் திறந்தார். சில விநாடிகளுக்குப் பிறகு அந்த வயோதிகர் தெருவில் நின்று கொண்டிருந்தார். அங்கே எப்படி வந்தார் என்பது அவருக்கே தெரியவில்லை.

அவர் அசைவில்லாமல் வெகு நேரம் நின்று கொண்டிருந்தார். கடைசியில் தன்னுடைய சட்டைப் பையிலிருந்து துருத்திக் கொண்டிருக்கும் நோட்டுக் கத்தையைக் கவனித்தார். அதை வெளியே எடுத்துப் பார்த்த பொழுது அதில் கசங்கிப் போன பத்து ரூபிள், ஐந்து ரூபிள் நோட்டுக்கள் நிறைய இருப்பதைப் பார்த்தார். அவர் கண்களில் மறுபடியும் கண்ணீர் மல்கியது. ஆனால் இப்பொழுது அவருடைய கோபம் கண்களிலிருந்து சுடுநீராக வெளி வந்தது! அவர் அந்த நோட்டுக்களை ஒரு பந்தாகச் சுருட்டி, அதைத் தரை

யிலே போட்டுக் காலால் மிதித்தார். பிறகு நடந்தார்.... சிறிது தூரம் நடந்த பிறகு அவர் அப்படியே நின்று யோசித்தார்... வந்த வழியில் திரும்பி நடந்தார்.... ஆனால் அந்த நோட்டுக் கத்தை மறைந்து விட்டது. நன்கு உடை யணிந்த ஓர் இளைஞன் அவரைப் பார்த்ததும், வேகமாக ஓடி ஒரு வண்டியிலேறிக் கொண்டு ''உடனே புறப்படு!..'' என்று அவசரப்படுத்தினான். அஞ்சல் நிலைய அதிகாரிக்கு அவனை ஓடிப் பிடிக்க விருப்பமில்லை. அவர் தன்னுடைய ஊருக்குத் திரும்ப விரும்பினார். ஆனால் அதற்கு முன்பாக தூன்யாவைப் பார்க்க, ஒரு முறையாவது பார்க்க விரும் பினார். எனவே இரண்டு நாட்களுக்குப் பிறகு மறுபடியும் மீன்ஸ்கியின் இருப்பிடத்துக்குப் போனார். ஆனால் அங்கே யிருந்த இராணுவப் பிரிவைச் சேர்ந்த வேலைக்காரன் அவரை வெளியே போகுமாறு விரட்டிக் கதவைச் சாத்தி விட்டான். அவர் வெளியிலே சிறிது நேரம் நின்றார். பிறகு போய் விட்டார்.

அன்று மாலையில் மாதாகோவிலில் பிரார்த்தனையில் கலந்துகொண்டுவிட்டு லித்தேய்னி வீதி வழியாக அவர் வந்து கொண்டிருந்தார். ஓர் அழகான குதிரை வண்டி அவரைக் கடந்து சென்றது. அதில் மீன்ஸ்கி உட்கார்ந் திருப்பது தற்செயலாக அவருக்குத் தெரிந்தது. அந்த வண்டி ஒரு மூன்று மாடி வீட்டுக்கு முன்னால் நின்றது. மீன்ஸ்கி வண்டியிலிருந்து குதித்து வீட்டுக்குள் வேகமாக நுழைந் தார். அஞ்சல் நிலைய அதிகாரியின் மனதில் திடீரென்று ஓர் எண்ணம் ஏற்பட்டது. அவர் அந்த வண்டியின் அருகில் சென்று வண்டிக்காரனிடம் பேச ஆரம்பித்தார். ''சகோ தரனே! இது யாருடைய வண்டி? மீன்ஸ்கியினுடையதா?'' என்று கேட்டார். ''ஆமாம்! என்ன விஷயம்?'' என்றான் அவன். ''உன்னுடைய எஜமானர் அந்த தூன்யா என்ற பெண்ணிடம் கொடுக்குமாறு என்னிடம் ஒரு கடிதத்தைக் கொடுத்தார். அவள் வீட்டு விலாசம் எனக்கு மறந்து போய் விட்டது. உனக்குத் தெரியுமா?'' என்று கேட்டார். ''அவள் இந்த வீட்டில்தான் இருக்கிறாள். இரண்டாவது மாடியில். ஆனால் நீ ரொம்பத் தாமதமாக வந்திருக்கிறாய், சகோதரனே! என்னுடைய எஜமானர் இப்பொழுது அவளுடன் பேசிக் கொண்டிருப்பார்'' என்றான். இதைக் கேட்ட பொழுது

அஞ்சல் நிலைய அதிகாரியின் இதயம் துடிதுடித்தது. ''உன்னுடைய தகவலுக்கு நன்றி. தாமதமாகிவிட்டாலும் என்னுடைய கடமையை நிறைவேற்ற வேண்டும்'' என்று சொல்லிவிட்டு அஞ்சல் நிலைய அதிகாரி அந்த வீட்டின் படிகளில் ஏறினார்.

அந்த வீடு பூட்டப்பட்டிருந்தது. அவர் மணியை அழுத்திவிட்டு சில நிமிடங்கள் பலவிதமான எண்ணங்களில் தவித்துப் போனார். வீட்டுக்குள் சாவியால் கதவைத் திறக்கும் சத்தம் கேட்டது. பிறகு கதவு திறக்கப்பட்டது.''அவ்தோத்யா சம்சோனவ்னு என்ற பெண் இங்கே இருக்கிறாளா?'' என்று கதவைத் திறந்த வேலைக்காரியிடம் கேட்டார். ''ஆமாம். உங்களுக்கு என்ன வேண்டும்?'' என்று அவள் கேட்டாள். அவர் பதில் சொல்லாமல் வீட்டுக்குள் வேகமாக நுழைந்தார். ''நீங்கள் உள்ளே போகக் கூடாது! அவ்தோத்யா சம்சோனவ்னுவைப் பார்ப்பதற்கு எஜமான் வந்திருக்கிறார்'' என்று அவள் உரக்கக் கத்தினாள். ஆனால் அவர் அதைப் பொருட்படுத்தாமல் இருட்டாக இருந்த முதல் இரண்டு அறைகளைக் கடந்தார். மூன்றுவது அறையில் மட்டும் வெளிச்சம் தெரிந்தது; அந்த அறையின் கதவுகள் திறந்திருந்தன. அவர் வேகமாக உள்ளே நுழைந்துவிட்டுத் திடீரென்று நின்றார். படாடோபமாக அலங்கரிக்கப்பட்டிருந்த அறையில் மீன்ஸ்கி சிந்தனையில் மூழ்கி உட்கார்ந்திருந்தார். தூன்யா அன்றைய நாகரிகத்தில் மிகவும் உயர்வானதாகக் கருதப்படும் பாணியில் உடையணிந்திருந்தாள். அவருடைய நாற்காலியின் கைப்பிடியில், ஆங்கில பாணியில் குதிரைச் சவாரி செய்பவர்களைப் போல, அவள் உட்கார்ந்து கொண்டு மீன்ஸ்கியை அன்பு ததும்பப் பார்ப்பதும் அவருடைய தலைமயிரைத் தன்னுடைய விரல்களால் கோதி விடுவதுமாக இருந்தாள். அந்த விரல்களில் ஆபரணங்கள் ஜொலித்தன. அந்தோ! பரிதாபத்துக்குரிய அஞ்சல் நிலைய அதிகாரி! தன்னுடைய மகள் இத்தகைய அழகோடு என்றுமே தோன்றியதில்லை என்று அவரே நினைத்தார்; தன்னையறியாமலேயே அவளைப் பெருமித உணர்ச்சியோடு பார்த்தார். ''யார் அங்கே?'' என்று தலையை உயர்த்தாமலே அவள் கேட்டாள். அவர் அமைதியாக நின்றார். பதில் இல்லாததால் தூன்யா தலையை உயர்த்திப் பார்த்

நாள்.... உடனே அவள் அலறியபடியே கம்பளத்தின் மீது விழுந்தாள். மீன்ஸ்கி பயமடைந்தவராக அவளைத் தூக்கு வதற்குப் பாய்ந்தார். ஆனுல் கதவின் அருகே அஞ்சல் நிலைய அதிகாரி நிற்பதைப் பார்த்ததும் அவளை விட்டுவிட்டு, கோபத்தால் உடல் பதற அவரிடம் வந்தார். பற்களை நறநற வெனக் கடித்தபடியே, ''உனக்கு என்ன வேண்டும்?'' என்று கேட்டார். ''என்னை ஏன் இப்படித் திருடனைப் போல தொடர்ந்து வருகிருய்? என்னைக் கொல்லப் போகிருயா? சீ! வெளியே போ!'' அந்த வயோதிகருடைய கோட்டைப் பிடித்து வெளியே இழுத்து வந்து படிகளில் உருட்டித் தள் ளினுர்.

இந்த சம்பவத்துக்குப் பிறகு வயோதிகர் தள்ளாடிக் கொண்டு தன்னுடைய தங்குமிடத்துக்குப் போனுர். மீன்ஸ்கி மீது புகார் செய்யுமாறு அவருடைய நண்பர் ஆலோசனை கூறினுர். ஆனுல் அவர் நன்கு யோசித்த பிறகு அந்த ஆலோசனையை ஏற்றுக் கொள்ளவில்லை. நடந்தபடி நடக்கட் டும் என்று முடிவு செய்தார். இரண்டு நாட்களுக்குப் பிறகு அவர் பீட்டர்ஸ்பர்க் நகரத்தை விட்டுத் தம்முடைய ஊருக் குப் புறப்பட்டுச் சென்றுர். தம்முடைய பழைய பதவியில் மீண்டும் சேர்ந்தார். ''தூன்யா இல்லாமல், அவளைப் பற்றி ஒரு தகவல் கூடத் தெரியாமல் நான் கடந்த மூன்று வருடங்களாக வாழ்ந்து கொண்டிருக்கிறேன்'' என்று அவர் கூறினுர். ''அவள் உயிரோடிருக்கிருளா, செத்துப் போய் விட்டாளா என்பது கடவுளுக்குத்தான் தெரியும். எதுவும் நடந்திருக்கலாம். பணக்காரர்கள் இப்படிப் பெண்களைக் கெடுத்து விடுகிருர்கள். முதலில் ஆசைநாயகிகளாக வைத்துக் கொண்டாலும் வெகு சீக்கிரத்தில் அவர்களைக் கைவிட்டு விடுவார்கள். தூன்யா இப்படிக் கெடுக்கப்பட்ட முதல் பெண் அல்ல; அவள் கடைசிப் பெண்ணுகவும் இருக்கப் போவதில்லை. அவளைப் போன்று இளம் முட்டாள்கள் பலர் பீட்டர்ஸ்பர்க் நகரத்தில் இருக்கிருர்கள். இன்று அவர்கள் ஸாட்டின், வெல்வெட் போன்ற விலையுயர்ந்த துணிகளில் உடைகளை அணிந்து கொண்டு மினுக்கித் திரிகிருர்கள். ஆனுல் நாளையே அவர்கள் இழிபிறவிகளோடு சேர்ந்து முச்சந்திகளைக் கூட்டிப் பிழைக்க நேரும். சில சமயங்களில் தூன்யாவுக்கு அத்தகைய நிலை ஏற்பட்டிருக்குமோ என்று

நான் பயப்படுவதுண்டு. அதற்கு அவள் செத்துப் போனால் கூடத் தேவலை என்று நினைக்கிறேன். அப்படி நினைப்பது தவறுதான். ஆனால் எனக்கு வேறு வழியில்லை....'' என்றார்.

எனது பழைய நண்பரான அஞ்சல் நிலைய அதிகாரி இக்கதையைச் சொல்லிக் கொண்டிருக்கும் பொழுது, அவருடைய கண்களில் கண்ணீர் வழிந்து கொண்டிருந்தது. அப்பொழுது அவர் தம்முடைய கோட்டின் ஓரத்துணியால் கண்களைத் துடைத்துக் கொண்டார். இக்கதையைச் சொல்லி முடிப்பதற்குள் அவர் ஐந்து டம்ளர் மது அருந்தினார். அவர் வடித்த கண்ணீருக்கு அவர் குடித்த மதுவும் ஓரளவுக்குக் காரணமாக இருந்தாலும் அவருடைய துயரக் கதை என் மனதை உருக்கி விட்டது. நான் அவரை விட்டுப் பிரிந்து வெகு காலமான பிறகும் அந்தக் கிழ அஞ்சல் நிலைய அதிகாரியையோ, பரிதாபத்துக்குரிய தூன்யாவையோ என்னால் மறக்க முடியவில்லை....

சமீபத்தில் க...* என்ற ஊர் வழியாகப் போக வேண்டிய அவசியம் எனக்கு ஏற்பட்டது. என்னுடைய பழைய நண்பருடைய நினைவு எனக்கு ஏற்பட்டது. அவர் பணியாற்றிய அஞ்சல் நிலையம் இப்பொழுது கிடையாது என்று கேள்விப்பட்டேன். ''அந்த அஞ்சல் நிலைய அதிகாரி இன்னும் உயிரோடு இருக்கிறாரா?'' என்று நான் பலரையும் கேட்டேன். ஆனால் ஒருவராவது எனக்குத் திருப்திகரமான பதில் தரவில்லை. அங்கே போக வேண்டும் என்ற ஆர்வம் எனக்கு அதிகமானதால் குதிரைகளை அமர்த்திக் கொண்டு ந... என்ற கிராமத்துக்குப் போனேன்.

அப்பொழுது இலையுதிர் காலம். வானத்தைப் பழுப்பு நிறமுடைய மேகங்கள் மூடியிருந்தன. அறுவடை செய்யப் பட்ட வயல்களிலிருந்து வீசிய குளிர்ந்த காற்று சிகப்பும் மஞ்சளுமான இலைகளை அள்ளி வீசியது. சூரியன் மறைவதற்குச் சற்று முன்பாக அந்த ஊருக்கு வந்து அஞ்சல் நிலைய அதிகாரியின் வீட்டுக்கு முன்பாகக் குதிரைகளை நிறுத்தினேன். ஒரு பருமனான பெண் வீட்டின் முன்புற வாயிலுக்கு (பரிதாபத்துக்குரிய தூன்யா அந்த இடத்தில்தான் ஒரு காலத்தில் என்னை முத்தமிட்டாள்) வந்தாள். பழைய அஞ்சல் நிலைய அதிகாரி இறந்து ஒரு வருடமாகி விட்டது; அந்த வீட்டை மது பானம் தயாரிப்பவர் வாங்கியிருக்கிறார்; அவ

டைய மனைவி நான் என்று என்னுடைய கேள்விகளுக்குப் பதிலளித்தாள். பிரயாணம் வீணுகி விட்டதையும் அந்தப் பிரயாணத்துக்கு ஏழு ரூபிள்கள் செலவழித்த முட்டாள் தனத்தையும் நினைத்து நான் வருத்தமடைந்தேன். ''அவர் எப்படி மரணமடைந்தார்?'' என்று நான் கேட்டேன். ''அதிகமாகக் குடித்ததனுல் செத்துப் போனுர்.'' ''அவர் உடலை எங்கே புதைத்தார்கள்?'' ''ஊருக்கு வெளியில் அவருடைய மனைவியின் சமாதிக்கு அருகில்தான் புதைத்தார்கள்.'' ''அந்த சமாதியைக் காட்டுவதற்கு யாரும் வருவார்களா?'' ''தாராளமாக வருவார்கள். ஏய்! வான்யா! அந்தப் பூனையை விட்டு ஓடிவா! இவரைப் புதைகுழிக்குக் கூட்டிக் கொண்டு போ! அங்கே அஞ்சல் நிலைய அதிகாரியின் சமாதியைக் காட்டு!''

கிழிந்து போன உடைகளை அணிந்து கொண்டு, சிகப்புத் தலைமுடியும் ஒற்றைக் கண் பார்வையும் உள்ள ஒரு சிறுவன் ஓடி வந்தான். அவன் ஊருக்கு வெளியே என்னைக் கூட்டிக் கொண்டு போனுன்.

''உனக்கு அந்த அஞ்சல் நிலைய அதிகாரியைத் தெரியுமா?'' என்று போகும் வழியில் அவனைக் கேட்டேன்.

''ஓ! நன்ருகத் தெரியுமே! அவர்தான் எனக்குப் புல்லாங்குழலுக்குத் துளைபோடக் கற்றுக் கொடுத்தார். அவர் மதுக்கடையிலிருந்து வருகிற பொழுது (அவருடைய ஆன்மா சாந்தியடையட்டும்!) நாங்கள் அவருக்குப் பின்னுலேயே ஓடுவோம். 'மாமா! மாமா! இனிப்புகள் கொடுங்கள்' என்று கேட்போம். எங்களைக் கடைக்குக் கூட்டிக் கொண்டு போய் இனிப்புகள் வாங்கிக் கொடுப்பார். அவர் எங்களோடு நன்ருக விளையாடுவார்'' என்ருன்.

''இங்கு வருகின்ற பிரயாணிகள் யாரும் அவரைப் பற்றி விசாரிப்பதுண்டா?''

''இங்கே முன்பு போல அதிகமான பிரயாணிகள் வருவதில்லை. எப்பொழுதாவது ஒரு நீதிபதி வருவார். அவர் செத்துப் போனவர்களைப் பற்றி ஒருபோதும் நினைக்கப் போவதில்லை. ஆனுல் இந்த வருடத்தில் கோடை காலத்தின் போது ஒரு சீமாட்டி இங்கு வந்தாள். அவள் அஞ்சல் நிலைய அதிகாரியைப் பற்றி விசாரித்ததோடு அவருடைய சமாதியைப் போய்ப் பார்த்துவிட்டு வந்தாள்.''

''சீமாட்டியா? அவள் எப்படி இருந்தாள்?'' என்று நான் ஆர்வத்தோடு கேட்டேன்.

''மிகவும் அழகாக இருந்தாள். ஆறு குதிரைகள் பூட்டிய வண்டியில், மூன்று குழந்தைகள், தாதி, ஒரு கறுப்பு நாய்க் குட்டி சகிதம் வந்தாள். வயதான அஞ்சல் நிலைய அதிகாரி செத்துப் போய் விட்டார் என்று நாங்கள் சொன்ன பொழுது அவள் கதறி அழுதாள். பிறகு குழந்தைகளைப் பார்த்து 'நான் சமாதியைப் பார்க்கப் போகிறேன். நீங்கள் சமர்த்தாக இங்கேயே இருக்க வேண்டும்' என்று சொன்னாள். நான் வழி காட்டுவதாகச் சொன்னேன். ஆனால் 'எனக்குப் பாதை தெரியும்' என்று அவள் சொல்லி விட்டாள். எனக்கு ஐந்து கோபெக் வெள்ளிக் காசு கொடுத்தாள். அவள் மிகவும் அன்போடு நடந்து கொண்டாள்!''... என்று கூறினான்.

நாங்கள் பேசிக் கொண்டே புதைகுழியை அடைந்தோம். அது வெற்று இடம்; சுற்றிலும் வேலியே இல்லை. எங்கும் மரத்தால் செய்யப்பட்ட சிலுவைகள் ஊன்றப்பட்டிருந்தன. அங்கே ஒரு மரம் கூடக் கிடையாது. என்னுடைய வாழ்க்கையில் அவ்வளவு மோசமான நிலையில் இருந்த புதைகுழியை நான் பார்த்ததில்லை.

''இதுதான் அந்த அஞ்சல் நிலைய அதிகாரியின் சமாதி'' என்று அந்தப் பையன் ஒரு சமாதியைச் சுட்டிக் காட்டி விட்டு, அந்த மணல் மேட்டின் மீது ஏறி நின்றான். ஒரு கறுப்புச் சிலுவை மரம் அங்கே நிறுத்தப்பட்டிருந்தது. அதில் பித்தளையில் செய்யப்பட்ட தெய்வப் படம் தொங்கியது.

''அந்தச் சீமாட்டி இந்த இடத்தைக் கண்டு பிடித்தாளா?'' என்று நான் கேட்டேன்.

''ஆமாம். நான் தூரத்திலிருந்து அவளைப் பார்த்துக் கொண்டிருந்தேன். அவள் இங்கே விழுந்து கும்பிட்டாள்; வெகு நேரம் வரை எழுந்திருக்காமலே இருந்தாள். பிறகு அவள் எழுந்து கிராமத்துக்குள் வந்தாள். மத குருவைக் கூட்டிக் கொண்டு வருமாறு சொன்னாள். அவரிடம் எதற்கோ பணம் கொடுத்தாள். எனக்கு ஐந்து கோபெக் வெள்ளிக் காசு கொடுத்தாள். நல்ல சீமாட்டி!'' என்றான்.

நானும் அவனிடம் ஒரு ஐந்து கோபெக் நாணயத்தை எடுத்துக் கொடுத்தேன். என்னுடைய பிரயாணத்தையோ, எனக்கு ஏற்பட்ட ஏழு ரூபிள் செலவையோ நினைத்து நான் சிறிதும் வருந்தவில்லை.

## சீமாட்டியின் மாறுவேடம்

*எந்த உடையணிந்தாலும்*
*என் அன்பே! நீயே எழிலரசி*
**பக்தனேவிச்**[22]

*இவான் பெத்ரோவிச் பேரெஸ்தவ் அவர்களுடைய பண்ணை வெகு தூரத்துக்கு அப்பாலுள்ள நமது மாநிலங் களில் ஒன்றிலிருந்தது. இவான் பெத்ரோவிச் தமது இளமைப் பருவத்தில் இராணுவத்தில் சேர்ந்தார்; பிறகு 1797ம் வருடத்தின் ஆரம்பத்தில் அதிலிருந்து விலகி*[23] *தம்முடைய பண்ணைக்குப் போய் அங்கேயே தங்கி விட்டார். நல்ல குடும் பத்தில் பிறந்த ஆனால் ஏழையான ஒரு பெண்ணை அவர் திருமணம் செய்து கொண்டார். ஒரு சமயத்தில் அவர் வெகு தூரத்துக்கு அப்பால் வேட்டைக்குச் சென்றிருந்த பொழுது அவருடைய மனைவி பிரசவத்தின் போது மரணமடைந்தாள். இந்த சோக நிகழ்ச்சிக்குப் பிறகு அவர் தமது மன அமைதிக் காகப் பண்ணை நிர்வாகத்தில் மிகத் தீவிரமாக ஈடுபட் டார். அவர் தாமே தயாரித்த வரைபடத்தின் படி தமக் கொரு வீடு கட்டிக் கொண்டார்; பண்ணையில் ஒரு துணி ஆலையையும் ஏற்படுத்தினார். இதனால் அவருடைய வருமா னம் அதிகரித்தது. அந்த மாவட்டத்திலேயே தன்னைப் போன்ற அறிவாளி வேறு யாருமில்லை என்று அவர் உறுதி யாக நம்பினார். அவருடைய வீட்டுக்குத் தமது குடும்பத் தினர், வேட்டை நாய்கள் சகிதமாக வாரந்தோறும் வந்து அதிக நாட்கள் தங்கிப் போகும் பழக்கமுடைய அண்டை வீட்டுக்காரர்கள் அந்த நம்பிக்கை சரியல்ல என்று சொல்ல முன்வரவில்லை. வாரநாட்களில் அவர் வெல்வெட் துணி யாலான சட்டையை அணிந்திருப்பார். விடுமுறை நாட் களில் அவர் கைநெசவுத் துணியாலான கோட்டை அணிந் திருப்பார். எல்லாவிதமான வரவு செலவு கணக்குகளையும் அவரே எழுதினார்.* **ஆட்சிப்பேரவையின் அலுவல் அறிக்கையைத்** *தவிர வேறு எந்த நூலையும் அவர் படிக்க மாட்டார்.*

பொதுவில் அவரை கர்வம் பிடித்தவர் என்று சொன்னு லும் எல்லோருக்கும் அவரைப் பிடித்திருந்தது. அவருக்குப் பக்கத்திலிருந்த பண்ணையின் சொந்தக்காரரான கிரிகோரி இவானவிச் மூரம்ஸ்கி என்பவருக்கு மட்டுமே அவரைப் பிடிக்கவில்லை. அவர் நம் நாட்டின் பழைய தலை முறை யைச் சேர்ந்த உண்மையான கனவான். தமது சொத் தில் பெரும் பகுதியை மாஸ்கோவில் ஊதாரித்தனமாகச் செலவிட்டு, மனைவியையும் இழந்த பிறகு, தமக்கு எஞ்சி யிருந்த ஒரே கிராமத்தில் குடியிருக்க வந்தார். அங்கும் முன்பு போலவே ஆனுல் வேறு வழிகளில் பணத்தைவீணுகச் செலவழித்துக் கொண்டிருந்தார். ஆங்கில நாட்டுப் பழக்கப்படி ஒரு தோட்டம் அமைப்பதில் அநேகமாகத் தம்மிடமிருந்த பணம் முழுவதையும் செலவழித்தார். அவ ருடைய குதிரைகளைக் கவனித்துக் கொள்ளும் சிப்பந்திகள் இங்கிலாந்தில் குதிரை ஓட்டுபவர்களைப் போல உடைகள் அணிந்துகொண்டிருப்பார்கள். அவருடைய ஒரே மகளுக்குப் பாடம் சொல்லிக் கொடுப்பதற்கு ஓர் ஆங்கிலப் பெண் மணியை ஏற்பாடு செய்திருந்தார். அவருடைய வயல்களி லும் கூட ஆங்கில நாட்டு முறைப்படியே பயிர் செய்து வந்தார்.

ஆனுல் ருஷ்யச் செடிகள்
அந்நியப்பாத்திகளில் வளர்வதில்லை.[24]

மேலும் பலவிதமான செலவுகளையும் குறைத்த பிறகும் அவருடைய வருமானம் அதிகரிக்கவில்லை. கிராமத்தில் வசித்த போதிலும் அவருடைய கடன் மேலும் அதிகரித் தது. எனினும் அவரைத் திறமைசாலி என்றுதான் மற்ற வர்கள் கருதினுர்கள். ஏனென்முல் தமது பண்ணையை நீதிமன்றத்தில் ஒத்தி வைத்துக் கடன் வாங்கிய முதல் நிலச் சுவான்தார் அந்த மாவட்டத்திலேயே அவர்தான். அப்படிக் கடன் வாங்குவது அந்த நாட்களில் மிகச் சிக்கலானது, துணிச் சல் நிறைந்தது. அவரைக் குறை சொல்பவர்கள் பலர் இருந்த போதிலும், பேரெஸ்தவ் மட்டுமே அவரை அதிக மாகவே கண்டனம் செய்து வந்தார். புதிய முறைகளைக் கண்டாலே அவருக்குப் பிடிக்காது. அவருடைய ஆங்கில மோகம் இவருக்குப் பிடிக்காது; எனவே எப்பொழுது பார்த்

தாலும் அவரைக் குறைவாகவே பேசி வந்தார். தம்முடைய பண்ணையைப் பார்க்க வருபவர்கள் அவருடைய பண்ணை யின் நிர்வாகத்தைப் பாராட்டிச் சொல்லும் பொழுது அவர் கிண்டலாகப் பேசுவார். ''ஆமாம். என் பக்கத்தார் கிரி கோரி இவானவிச் மாதிரி நிர்வாகம் செய்ய எனக்குத் தெரியாது. ஆங்கில முறைப்படி நம்மை அழித்துக் கொள்ள வேண்டாம்! நமது ருஷ்ய முறையையே பின்பற்றுவோம். கிடைப்பது போதும்'' என்பார். இது போன்று அவர் அவ்வப் பொழுது சொல்லும் கருத்துக்களை அவற்றைக் கேட்ட நண் பர்கள் உடனே மிகுந்த உற்சாகத்தோடு கிரிகோரி இவான விச்சிடம் அவற்றின் சுவை சிறிதும் குறையாதபடி எடுத்துச் செல்லுவார்கள். நம்முடைய எழுத்தாளர்களால் விமர் சனத்தைத் தாங்கிக் கொள்ள முடியாது. அது போலவே அந்த ஆங்கில அபிமானியாலும் முடியாது. எனவே அவர் மிகவும் ஆத்திரப்படுவார். பேரெஸ்தவ் பற்றிப் பேசும் பொழுது அவர் சுத்த பட்டிக்காட்டான், கரடி என்பார்.

இரண்டு பண்ணைகளின் உரிமையாளர்களும் இப்படிப் பட்ட உறவில் வாழ்ந்து கொண்டிருக்கும் காலத்தில், பேரெஸ்தவின் மகன் தன் தகப்பனுரைப் பார்ப்பதற்கு வந் தான். பல்கலைக்கழகத்தில் படித்து பிறகு அவன் இராணு வத்தில் சேர்வதற்கு விரும்பினுன். ஆனுல் அவனுடைய தகப் பனுர் அதற்கு அனுமதி தரவில்லை. அரசாங்க உத்தியோகம் தனக்கு முற்றிலும் பொருத்தமானதல்ல என்று அவன் கரு தினுன். இரண்டு பேர்களும் விட்டுக் கொடுக்க விரும்பாத தால் இளைஞனை அலெக்சேய் வேலை இல்லாத கனவானைப் போல வீணுகப் பொழுதுபோக்கிக் கொண்டிருந்தான். எந்த நெருக்கடியாவது ஏற்பட்டால் உதவியாக இருக்குமென்று தன் மீசையை அழகாக வளர்த்திருந்தான்.[25]

அலெக்சேய் நல்ல தோற்றமுடைய இளைஞன். அவ னுடைய வாட்டசாட்டமான உருவம் இராணுவ உடையில் மிடுக்காகத் தோன்றப் போவதில்லை என்பது உண்மை யிலேயே வருத்தப்பட வேண்டிய ஒன்றுகும். கம்பீரமாகக் குதிரையில் போய்க் கொண்டிருப்பதற்குப் பதிலாக, அர சாங்க ஆவணங்களைப் பார்த்துக் கொண்டிருப்பதில் அவ னுடைய இளமைப்பருவத்தைக் கழிப்பதென்றுல், அதற்கு வருத்தப்பட வேண்டியதுதான். வேட்டையாடும் பொழுது,

எத்தகைய தடைகளைப் பற்றியும் கவலைப்படாமல் முன்னணியில் குதிரையில் விரைந்து போவது அவனுடைய பழக்கம். அதைப் பார்த்தவர்கள் அவன் அரசாங்க ஊழியத்துக்குத் தகுந்தவனல்ல என்று ஏகமனதாக முடிவு செய்தார்கள். இளம் சீமாட்டிகள் அவனை ஆர்வத்தோடு பார்த்தார்கள்; அந்தப் பார்வைகளில் அதிகமான ஏக்கமும் காணப்பட்டது. ஆனால் அலெக்சேய் அந்தப் பார்வைகளைச் சிறிதும் இலட்சியம் செய்யவில்லை. எனவே அவனுடைய அலட்சியத்துக்குக் காரணம் பழைய காதல் தொடர்பு என்று அவர்கள் பலவாருகப் பேச ஆரம்பித்தார்கள். இதற்குச் சான்ருக அவன் எழுதிய கடிதத்தில் காணப்பட்ட ஒரு முகவரி எழுதியிருந்த காகிதம் பலரிடமும் சுற்றிவந்தது: **அக்குலீனு பெத்ரோவ்னு கூரச்கினு, மேற்பார்வை பாத்திரத் தொழிலாளி ஸவேலியெவ், புனித அலெக்ஸி மடாலயத்துக்கு எதிரிலுள்ள வீடு, மாஸ்கோ (இக்கடிதத்தை அ. நி. ர... விடம் கொடுக்குமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறது).**

இந்த நாட்டுப்புறச் சீமாட்டிகளின் விசித்திரமான குணங்களை கிராமங்களில் வசித்திராத வாசகர்கள் புரிந்து கொள்வது மிகவும் கடினம்! சுத்தமான காற்றைச் சுவாசித்துக் கொண்டு ஆப்பிள் தோட்டங்களின் நிழல்களில் வளர்ந்திருக்கின்ற இந்தச் சீமாட்டிகள் நகரங்களில் பணக்காரர்களின் வாழ்க்கையைப் பற்றிப் புத்தகங்களிலிருந்து மட்டுமே தெரிந்து வைத்திருக்கிருர்கள். அவர்களுக்கிருக்கும் தனிமையும், சுதந்திரமும், புத்தகப் படிப்பும் நகரங்களிலுள்ள சொகுசு ராணிகளிடம் இல்லாத உணர்ச்சிகளையும் வேட்கைகளையும் அவர்களிடம் ஏற்படுத்தி விடுகின்றன. நாட்டுப்புறச் சீமாட்டிகளுக்கு வண்டியின் மணியோசையைக் கேட்பதே ஒரு சாகஸச் செயலாகும்; பக்கத்து ஊருக்குப் போவது ஒரு மறக்க முடியாத அனுபவம், கிராமத்துக்கு யாரும் வந்துவிட்டுப் போனல் அவர்களைப் பற்றிய நினைவுகளை நெடுங்கலத்துக்கு—ஏன்?—வாழ்நாள் முழுவதும் கூட நினைத்துக் கொண்டிருக்கிருர்கள். அவர்களுடைய சில விசித்திரமான குணங்களைப் பற்றி மற்றவர்கள் கேலியாகப் பேசலாம்; ஆனல் இப்படி மேலெழுந்த வாரியாகச் சிந்தித்து நகைப்பதால் மட்டும் அவர்களுடைய வாழ்க்கையின் ஆதார சுருதியைச் சிதைத்துவிட முடியாது. ஏனென்ருல் குணச்

சிறப்பு அதன் பிரதான அம்சமாகும். அந்தத் தனித்தன்மை (individualité) மட்டும் இல்லையென்றால் மூான்-போல்[26] சொல்லுவது போல எந்த மனிதப் பிறவிக்கும் சிறப்பு ஏற்பட முடியாது. ஒருவேளை முக்கியமான தலைநகரங்களில் பெண்களுக்கு சிறந்த முறையில் கல்வி கற்பிக்கப்படலாம். ஆனால் அவர்களுடைய சமுதாய வாழ்க்கை, அதாவது உல்லாச வாழ்க்கை வெகு சீக்கிரத்தில் அவர்களுடைய குணச் சிறப்பைக் கீழே இழுத்துக் கொண்டு வந்து விடுகிறது. அவர்கள் தலையில் அணிகின்ற தொப்பிகளைப் போலவே அவர்களுடைய மூளையும் ஒரே மாதிரியாக மாறி விடுகிறது. அவர்களைப் பற்றிக் குறை சொல்லுவதோ அல்லது தீர்ப்புக் கூறுவதோ என்னுடைய நோக்கமல்ல; எனினும் ஒரு பழைய எழுத்தாளர் சொல்லுவதைப் போல nota nostra manet.*

இந்த இளம் சீமாட்டிகளின் மனங்களில் அலெக்சேய் ஏற்படுத்திய உணர்ச்சிக் குமுறல்களை நாம் எளிதில் ஊகிக்கலாம். அவன் வாழ்க்கையில் ஏமாற்றமடைந்து வேதனைகளைத் தாங்கிக் கொண்டிருப்பதாக அவர்கள் கற்பனை செய்து கொண்டார்கள். உல்லாசமாகப் பொழுது போக்கி விட்டு வாழ்க்கையைப் பலியிட்டவனாக அவனைக் கருதினார்கள். இந்த ரகத்தில் அவர்கள் சந்தித்த முதல் இளைஞன் அவன்தான். இத்தகைய எண்ணங்களை வளர்ப்பதைப் போல அவன் மண்டை ஓட்டின் படம் பதிப்பிக்கப்பட்ட கறுப்பு மோதிரத்தை விரலில் அணிந்திருந்தான். அந்தப் பகுதிக்கே இது புதியதாக இருந்தது. அந்த இளம் பெண்கள் அவனைப் பற்றி சதா பேசிக் கொண்டிருந்தார்கள்.

எனினும், ஆங்கில அபிமானியின் மகளான லீஸா (அல்லது அவளுடைய தகப்பனார் வழக்கமாகக் கூப்பிடுவதை போல பெத்ஸி) அவனைப் பற்றி சிந்தித்த அளவுக்கு மற்ற பெண்கள் சிந்திக்கவில்லை. அவர்களுடைய பெற்றோர்களிடையே சுமுகமான உறவு இல்லாததால், அலெக்சேயைப் பார்க்கின்ற சந்தர்ப்பம் அவளுக்கு இன்னும் கிடைக்கவில்லை. ஆனால் அந்த வட்டாரத்திலிருந்த மற்ற இளம் பெண்கள் எல்லோரும் அவனைப் பற்றியே பேசிப் பரவசமடைந்து

---

* இந்தக் கருத்தை அன்பர்கள் ஆராயட்டும்.—ப-ர்.

கொண்டிருந்தனர். லீஸாவுக்குப் பதினேழு வயதாகிறது. அவளுடைய கறுப்பு நிறக் கண்கள் இரண்டும் ஒலிவப் பழம் போன்ற அவளுடைய அழமான முகத்தைப் பிரகாசிக்கச் செய்தன. தகப்பனுருக்கு ஒரே குழந்தை என்ற காரணத் தால் ஆரம்பத்திலிருந்தே அவளுக்குச் செல்லம் அதிகம். அவளுடைய இடைவிடாத குறும்புத்தனமும் சுறுசுறுப்பும் அளளுடைய தகப்பனுருக்கு ஆனந்தத்தைக் கொடுத்த போதி லும், அவளுடைய ஆசிரியை செல்வி ஜாக்ஸனுக்குப் பெரும் தொந்தரவாக இருந்தன. நாற்பது வயதாகியும் திருமண மாகாத செல்வி ஜாக்ஸன் கண்களில் மை தீட்டிக் கொண்டு கன்னங்கள் பளபளவென்று தோன்றும்படி முகப்பவுடரைப் பூசிக் கொள்வாள்; ஆறு மாதங்களுக்கு ஒரு முறை பமெலா என்ற நாவலை[27] ஆரம்பம் முதல் கடைசி வரை படிப்பாள் இந்தப் பணிகளுக்காக அவளுக்கு வருடத்துக்கு இரண் டாயிரம் ரூபிள் ஊதியம் கொடுக்கப்பட்டது. காட்டு மிராண்டி ருஷ்ய நாட்டில் அவளுக்கு வாழ்க்கை மிகவும் சலித்தது.

லீஸாவின் பணிப்பெண்ணுகிய நாஸ்தியா அவளைக் காட்டி லும் சிறிது வயதானவள்; ஆனால் தன்னுடைய இளம் எஜ மானியைப் போலவே குறும்பானவள். லீஸாவுக்கு அவள் மீது அதிகப் பிரியம்; தன்னுடைய எல்லா இரகசியங்களையும் அவ ளிடம் சொல்லி விடுவாள்; இருவரும் சேர்ந்து திட்டமிட்டு வேடிக்கைகளைச் செய்வதுண்டு. சுருக்கமாகச் சொல்வதென் ருல், பிரெஞ்சு மொழியில் எழுதப்பட்ட துன்பியல் நாட கங்களில் வருகின்ற அந்தரங்க நண்பர்களைக் காட்டிலும் அதிக முக்கியமான நபராக அந்த ப்ரிலூச்சினே கிராமத்தில் நாஸ்தியா விளங்கினுள்.

''நான் இன்று வெளியே போய் வரலாமா?'' என்று ஒரு நாள் காலையில் நாஸ்தியா தன்னுடைய எஜமானிக்கு உடைகள் அணிவிக்கும் பொழுது கேட்டாள்.

''தாராளமாகப் போய்வா. எங்கே போகிருய்?''

''துகிலவோவில் பேரெஸ்தவ் வீட்டுக்குப் போக வேண் டும். அவர்களுடைய சமையற்காரன் மனைவிக்குப் பெயர் சூட்டிய ஆண்டுவிழா. நேற்று வந்து விருந்துக்கு வருமாறு அழைத்துவிட்டுப் போனுள்.''

''அப்படியா! எஜமானர்களிடையே பேச்சுவார்த்தை இல்லை. ஆனுல் அவர்களுடைய வேலைக்காரர்கள் ஒருவருக்

கொருவர் விருந்து கொடுக்கிறார்களாக்கும்'' என்றாள் லீஸா.

''எங்களுடைய எஜமானர்களுக்கிடையே உள்ள சச்சரவு களைப் பற்றி நாங்கள் கவலைப்பட முடியாது'' என்றாள் நாஸ் தியா. ''அதோடு நான் உங்களுக்கு வேலைக்காரியே தவிர உங்களுடைய அப்பாவுக்கு அல்ல. உங்களுக்கும் இளம் பேரெஸ்தவுக்கும் சண்டை இல்லையே. வயதானவர்கள் முடிந்த வரை சண்டை போட்டுக் கொள்ளட்டும். நமக் கென்ன?'' என்றாள்.

''அலெக்சேய் பேரெஸ்தவை நீ எப்படியாவது பார்த்து விட்டு வா. அவருடைய தோற்றத்தையும் குணத்தையும் அப்படியே எனக்குத் தெரிவிக்க வேண்டும்'' என்றாள் லீஸா.

நாஸ்தியாவும் சரியென்று சொல்லிவிட்டு விருந்துக்குச் சென்ஸ்ள். அவள் வரவை ஆவலோடு எதிர்பார்த்து லீஸா நாள் முழுவதும் காத்திருந்தாள். கடைசியில் மாலை நேரத் தில் நாஸ்தியா திரும்பினாள்.

''லிஸவேத்தா கிரிகோரியெவ்னா! நான் இளம் பேரெஸ் தவை நன்றாகப் பார்த்தேன். இன்று முழுவதும் நாங்கள் ஒன்றாகத்தான் இருந்தோம்'' என்று அறைக்குள் நுழைந்த வுடன் அவள் லீஸாவிடம் கூறினாள்.

''அப்படியா! முதலிலிருந்து எல்லாவற்றையும் சொல்.''

''சொல்கிறேன். நான், அனீசியா யெகோரவ்னா, தூன்யா, நெனீலா எல்லோரும் அங்கே போனோம்....''

''சீக்கிரமாகச் சொல் அப்புறம்....''

''முதலில் நடந்ததைச் சொல்ல வேண்டாமா? நாங்கள் எல்லோரும் சாப்பாட்டு நேரத்துக்குப் போய்ச் சேர்ந்தோம். ஏற்கெனவே நிறையப் பேர்கள் அங்கே இருந்தார்கள். கோல்பின் குடும்ப வேலைக்காரர்கள், ஸஹாரியெவ் குடும்ப வேலைக்காரர்கள், மேலாளர் மனைவியும் பெண்களும், ஹ்லூ பின் குடும்ப வேலைக்காரர்கள் வந்திருந்தார்கள்....''

''பேரெஸ்தவைப் பற்றிச் சொல்.''

''சற்றுப் பொறுங்கள். நாங்கள் விருந்துக்கு உட்கார்ந் தோம். விருந்தளிப்பவரின் மனைவிக்குப் பக்கத்தில் மேலாளர் மனைவி, அவளுக்கு அடுத்தபடியாக நான் உட்கார்ந்தேன்... அந்தப் பெண்கள் உதட்டைப் பிதுக்கினார்கள். அதைப் பற்றி என்க்கென்ன?''

''நாஸ்தியா! இந்த விவரங்களையெல்லாம் விட்டுத் தொலை. எனக்குச் சலிப்பாக இருக்கிறது.''

''ஏன் அவசரப்படுகிறீர்கள்? விருந்து முடிய மூன்று மணி நேரமாயிற்று. பிரமாதமான சாப்பாடு. ஏராளமான கேக் வகைகள்... பிறகு நாங்கள் தோட்டத்துக்குப் போய் ஓடிப் பிடித்து விளையாடினோம். இளம் எஜமானர் அங்கே வந்தார்.''

''அவர் மிகவும் அழகானவர் என்று சொல்கிறார்களே அது உண்மையா?''

''உண்மையாகவே நல்ல அழகுடையவர். வசீகரமான தோற்றம். ஒல்லியான உடல், நல்ல உயரம், சிவப்பான கன்னங்கள்....''

''அப்படியா? அவர் வெளுப்பாக இருப்பார் என்றல்லவா நான் நினைத்துக் கொண்டிருந்தேன். அப்புறம்? அவரைப் பற்றி என்ன நினைக்கிறாய்? அவர் முகத்தில் கவலை, மனச்சோர்வு தெரிந்ததா?''

''அப்படிச் சிறிது கூட இல்லை. அப்படிக் கலகலப்பான சுபாவமுள்ள ஒரு இளைஞரை என் வாழ்க்கையில் பார்த்ததில்லை. அவர் தோட்டத்தில் எங்களோடு ஓடிப்பிடித்து விளையாடினார்.''

''அவர் உங்களோடு விளையாடினாரா? உண்மையாகவா?''

''ஆமாம். அது மட்டுமல்ல! எங்களில் யாரையாவது பிடித்து விட்டார் என்றால் உடனே அவளுக்கு முத்தம் கொடுப்பார்.''

''நாஸ்தியா! நீ பொய் சொல்கிறாய்.''

''இல்லை. அத்தனையும் உண்மை. அவரை விட்டுப் பிரிவதற்கு எனக்கு மனமில்லை. அவர் எங்களோடு பகல் முழுவதும் விளையாடினார்.''

''அவர் யாரையோ காதலிக்கிறார்; அதனால் எந்தப் பெண்ணையும் பார்ப்பது இல்லை என்று சொல்கிறார்களே?''

''அது என்னவோ எனக்குத் தெரியாது. ஆனால் அவர் என்னையும் மேலாளர் மகள் தான்யாவையும் நன்றாகவே பார்த்தார். ஏன்? கோல்பின் குடும்பப் பணிப்பெண் பாஷாவையும் விடவில்லை. சொல்லப் போனால் அவர் யாரையும் விடவில்லை. கெட்ட போக்கிரி!''

''ஆச்சரியமாக இருக்கிறதே! அங்கே அவரைப் பற்றி என்ன பேசிக் கொள்கிறார்கள்?''

''அவர் நல்ல கனவான்; எப்பொழுதும் அன்பாகவும் இனிமையாகவும் நடந்து கொள்வார் என்று சொல்கிருர்கள். பெண்களைச் சுற்றுவதுதான் அவரிடமுள்ள ஒரே ஒரு கெட்ட பழக்கம் என்கிருர்கள். ஆனுல் அது அவ்வளவு மோசமானதாக எனக்குத் தெரியவில்லை. போகப் போக சரியாகிவிடும்.''

''அவரைப் பார்க்க வேண்டும் என்று எனக்கு ஒரே ஆசை'' என்று லீஸா பெருமூச்செறிந்தாள்.

''அது கஷ்டமானதல்ல. தகீலவோ இங்கிருந்து வெகு தூரத்தில் இல்லையே—மூன்று வெர்ஸ்டாக்கள் தூரத்தில் தானே இருக்கிறது. நடந்து போகலாம். அல்லது குதிரையில் ஏறிப் போகலாம். அவர் ஒவ்வொரு நாளும் காலையில் வேட்டைக்குப் போவதால், நிச்சயமாகப் பார்க்கலாம்.''

''சே. அது சரியல்ல. நான் அவரைத் தேடி வருவதாக அவர் நினைத்துக் கொள்வார். பெரியவர்கள் பேச்சுவார்த்தை இல்லாமலிருப்பதால், நான் அவரைப் பார்க்கவோ பேசவோ முடியாது.... ஓ! நாஸ்தியா! ஒரு யோசனை. விவசாயப் பெண்ணைப் போல மாறுவேடம் போட்டுக் கொண்டு அவரை சந்திக்கப் போகிறேன்!''

''சரியான யோசனை. கைநெசவுச் சட்டையும் விவசாயப் பெண்களின் உடையும் அணிந்து கொண்டு தைரியமாக துகீலவோவுக்குப் போங்கள். பேரெஸ்தவ் உங்களை விடப் போவதில்லை. இது உறுதி.''

''நான் விவசாயப் பெண்களைப் போலவே நன்ருகப் பேசுவேன்! ஓ! நாஸ்தியா! அன்பான நாஸ்தியா! என்ன அற்புதமான யோசனை!'' என்று லீஸா உற்பாகமாகச் சொன்ருள். இந்த வேடிக்கையான திட்டத்தைக் கண்டிப்பாக நிறைவேற்றும் உறுதியோடு லீஸா தூங்குவதற்குச் சென்ருள்.

மறு நாள் அந்தத் திட்டம் அமுலாக்கப்பட்டது. முரட்டுக் கைநெசவுத் துணி, நீல நிறத்தில் மேலாடை, பித்தளைப் பொத்தான்கள் முதலியவற்றை வாங்கி வருமாறு லீஸா சந்தைக்கு ஆளனுப்பினுள். நாஸ்தியாவின் உதவியோடு அந்தத் துணியில் சட்டையும் மேலாடையும் வெட்டி, வேலைக்காரப் பெண்களிடம் கொடுத்துத் தைக்குமாறு சொன்னுள். அன்று மாலையிலேயே உடை தயாராகி விட்டது. லீஸா அந்த உடையை அணிந்து கொண்டு நிலைக்

கண்ணாடியின் முன்னால் நின்றாள். தன்னுடைய தோற்றம் மிகவும் அழகாக இருப்பதாக அவளுக்குத் தோன்றியது. இந்தப் புதிய வேடத்துக்குத் தகுந்தபடி நடக்க வேண்டும் என்பதற்காக அவள் இடுப்பை வளைத்துத் தலையை ஆட்டுகின்ற பூனை பொம்மையைப் போல, இரண்டு பக்கத்திலும் தலையை மாற்றி ஆட்டிக் கொண்டு நடந்து பழகினாள். மேலும் விவசாயிகளைப் போல பேசுவதற்கும், சட்டைக் கையால் வாயை மூடிக் கொண்டு சிரிப்பதற்கும் அவள் பயிற்சி செய்து நாஸ்தியாவின் பாராட்டைப் பெற்றாள். காலணியில்லாமல் நடப்பதுதான் அவளுக்குக் கஷ்டமாக இருந்தது. ஏனென்றால் கொல்லைப்புறத்தில் பரப்பியிருந்த கற்களும் மணலும் அவளுடைய மென்மையான பாதங்களைக் குத்திப் புண்படுத்தின. இந்த விஷயத்திலும் நாஸ்தியா அவளுக்கு உதவி செய்தாள். அவள் லீஸாவின் கால் அளவுகளை எடுத்துக் கொண்டு ஆடு மேய்க்கும் திரஃபீமைத் தேடி வயலுக்குச் சென்று ஒரு ஜோடி மரக்கட்டைச் செருப்புகள் வேண்டும் என்று சொன்னாள். மது நாள் பொழுது புலர்வதற்கு முன்பே, வீட்டில் மற்றவர்களெல்லாம் தூங்கிக் கொண்டிருக்கும் பொழுது லீஸா விழிவ்துக்கொண்டாள். தெருக்கோடியில் ஆடு மேய்ப்பவன் எப்பொழுது வருவான் என்று நாஸ்தியா காத்துக் கொண்டிருந்தாள். சங்கு ஒலித்தது; நிலச்சுவான்தார் வீட்டுக்கு முன்னாலுள்ள பாதை வழியாக ஆட்டு மந்தை மெதுவாக வந்து கொண்டிருந்தது. மந்தைக்கு முன்பாக வந்து கொண்டிருந்த திரஃபீம் நாஸ்தியாவிடம் சிறியதான, வர்ணம் பூசப்பட்ட ஒரு ஜோடி மரக் கட்டைச் செருப்புகளைக் கொடுத்தான். அவள் அவனிடம் கூலியாக ஐம்பது கோபெக்கு காசுவைக் கொடுத்தாள். லீஸா விவசாயப் பெண்ணின் உடையை அணிந்து கொண்டாள், செல்வி ஜாக்ஸன் தன்னைத் தேடினால் என்னசொல்ல வேண்டும் என்று நாஸ்தியாவிடம் காதோடு காதாகச் சொன்னாள். பிறகு கொல்லைவாசல் வழியாக வீட்டிலிருந்து வெளியே வந்து காய்கறித் தோட்டத்தைக் கடந்து வயல் வெளியை நோக்கி ஓடினாள்.

கீழ்வானம் வெளுத்தது. சூரியனின் வருகையை எதிர்பார்த்து மேகங்கள் பொன்னிறத்தில் வரிசையாக மிதந்தன. அது ஜாரின் வருகையை எதிர்பார்த்து அரண்மனைப் பிர

முகர்கள் வரிசையாக நிற்கும் காட்சியை நினைவூட்டியது. நிர்மலமான வானமும் பனித்துளியும் காலையிளங்காற்றும் பறவைகளின் இசையும் லீஸாவின் இதயத்தில் குதூகலத்தை ஏற்படுத்தின. தெரிந்தவர்கள் யாரும் வந்து விடுவார்களோ என்ற பயத்தில் அவள் நடக்கவில்லை—பறந்து போனுள் என்று தான் சொல்ல வேண்டும். அவள் தகப்பனுருடைய பண்ணையின் எல்லையில் ஒரு காடு இருக்கிறது. அங்கே வந்தவுடன் அவள் தன்னுடைய வேகத்தைக் குறைத்துக் கொண்டாள். அந்த இடத்தில்தான் அவள் அலெக்செய்க்காகக் காத்திருக்க வேண்டும். அவளுடைய இதயம் பலமாகத் துடித்தது. ஏன் அப்படித் துடித்ததென்று அவளுக்குத் தெரியாது. இளம் வயதில் நாம் குறும்புத்தனங்களில் ஈடுபடும் பொழுது திடீரென்று ஏற்படுகின்ற பயம் அந்தக் குறும்புச் செயல்களுக்குத் தனிக்கவர்ச்சியைத் தருகிறது என்பது உண்மையல்லவா? லீஸா அந்தக் காட்டுக்குள் நுழைந்தாள். அந்தக் காட்டின் மையப்பகுதியிலிருந்து பல விதமான சத்தங்கள் கேட்டதும் அவளுடைய குதூகலம் குறைந்தது. சிறிது சிறிதாக அவள் இன்பமான கற்பனைகளில் மூழ்கினுள். அவள் சிந்தனையில்... வசந்த காலத்தில் காலைப் பொழுதில் ஐந்து முதல் ஆறு மணிக்குள் பதினேழு வயதான பெண் காட்டில் தனியாக நின்று கொண்டு எதைப் பற்றி சிந்திப்பாள் என்று யாரால் சொல்ல முடியும்? இரு மருங்கிலும் உயரமான மரங்கள் நின்று மொண்டிருக்கும் பாதையில், அந்த மரங்களின் நிழலில் அவள் ஏதோ சிந்தனையில் லயித்தவாறு போய்க் கொண்டிருந்தாள். அந்த நேரத்தில் திடீரென்று ஒரு வேட்டை நாய் குரைத்துக் கொண்டு அவளை நோக்கி ஓடி வந்தது. லீஸா மிகுந்த பயத்தோடு அலறினுள். "Tout beau, Sbogar, ici!" * என்ற சத்தம் அதே சமயத்தில் கேட்டது. உடனே புதர்களுக்குப் பின்னுலிருந்து ஒரு இளம் வயதுடைய வேட்டைக்காரன் வெளியே வந்தான். ''அழகான நங்கையே! பயப்பட வேண்டாம். என்னுடைய நாய் கறிக்காது'' என்று கூறினுன். லீஸாவுக்கு முதலில் ஏற்பட்ட பயம் மறைந்ததும் அவள் சந்தர்ப்பத்தைத் தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ள விரும்பினுள். ''ஆனுல் எனக்குப் பயமாக இருக்கிறது,

* ஸ்பகார், உஸ்! நில்!—ப-ர்.

ஐயா!'' என்று போலியான அச்சமும் நாணமும் கலந்த குரலில் கூறினாள். ''என்ன பயங்கரமான நாய்! இதோ என் மீது பாயப் போகிறது'' என்றாள். அலெக்சேய் (வாசகர் களுக்கு அந்த இளைஞன் யாரென்பது தெரிந்திருக்கும்) அந்த இளம் விவசாயப் பெண்ணை உற்றுப் பார்த்தான். ''உனக்குப் பயமாக இருந்தால் நான் உன்னோடு நடந்து வருகிறேன். நான் கூட வரலாமா?'' என்று அவன் கேட்டான். ''பாதை எல்லோருக்கும் பொதுவானது. உங்களைத் தடுக்க நான் யார்?'' என்றாள். ''நீ எங்கிருந்து வருகிறாய்?'' ''நான் ப்ரி லூச்சினோவிலிருந்து வருகிறேன்; கொல்லன் வசீலியின் மகள் நான். காளான்களைப் பொறுக்குவதற்காக இங்கே வந்தேன் (கையில் தொங்கிக் கொண்டிருந்த கூடையை ஆட்டிய படியே லீஸா பேசினாள்). நீங்கள் யார்? துகீலவோவிலிருந்து வருகிறீர்களா?'' ''ஆமாம். அந்த இளம் எஜமானிரின் உதவி யாள் நான்'' என்றான். அலெக்சேய் அவளுக்குச் சமமான வனாகத் தன்னைக் காட்டிக் கொள்ள நினைத்தான். ஆனால் லீஸா அவனை உற்றுப் பார்த்துவிட்டுச் சிரித்தாள். ''இல்லை. என்னை ஏய்க்க முடியாது. நீங்கள்தான் அந்த இளம் எஜமானர்'' என்றாள். ''நீ ஏன் அப்படி நினைக்கிறாய்?'' ''உங்களைப் பார்த்தாலே தெரிகிறதே.'' ''எப்படித் தெரி கிறது?'' ''எஜமானருக்கும் உதவியாளுக்கும் வித்தியாசம் கண்டு பிடிக்க முடியாதா என்ன? உங்களுடைய உடையும் பேச்சும்தான் உண்மையில் நீங்கள் யார் என்பதைக் காட்டு கிறதே. எங்களைப் போலவா நீங்கள் நாயைக் கூப்பிடுகிறீர் கள்?'' என்றாள். லீஸாவின் அழகும் பேச்சும் அலெக்சேய் மனதைக் கவர்ந்தது. கிராமத்திலுள்ள அழகான பெண் களிடம் இஷ்டம் போல நடந்து கொள்வது அவனுடைய பழக்கம். அந்த எண்ணத்தில் அவளை இடுப்பைச் சேர்த்துப் பிடித்தான். ஆனால் லீஸா உடனே துள்ளிக் குதித்தாள். அவள் முகத்தைக் கடுகடுப்பாக வைத்துக் கொண்டாள். அவளைப் பார்க்க அவனுக்கு வேடிக்கையாக இருந்த போதி லும் அவளை மீண்டும் தொடுவதற்குப் பயப்பட்டான். ''நீங்கள் என்னோடு பழக விரும்பினால், இப்படித் தவறாக நடந்து கொள்ளக் கூடாது'' என்று கடுகடுப்பான முகத் தோடு அவனை எச்சரித்தாள். ''இப்படிப் பேச உனக்குக் கற்றுக் கொடுத்தது யார்? உன்னுடைய எஜமானியின் பணிப்

பெண்ணும் எனது சிநேகிதியுமான நாஸ்தியாவா?'' என்று அவன் சிரித்தபடியே கேட்டான். ''கல்வி வளர்ச்சியினால் ஏற்படும் தீமை இதுதான்'' என்றான். தன்னுடைய வேஷத்துக்குப் பொருத்தமில்லாதபடிப் பேசி விட்டதை லீஸா உணர்ந்து உடனே தன்னைத் திருத்திக் கொண்டாள். ''அதென்ன அப்படிச் சொல்லி விட்டீர்கள்? நான் பிரபுவின் வீட்டுக்குப் போவதில்லை என்று நினைத்தீர்களா? அங்கே நடப்பது, பேசுவதெல்லாம் எனக்கு நன்றாகத் தெரியும். அது சரி. ஆனால் இங்கே நின்று கொண்டு உங்களோடு பேசிக் கொண்டிருந்தால், காளான்களை எப்படிச் சேகரிப்பேன்? ஐயா! நீங்கள் புறப்படுங்கள். நான் என்னுடைய வேலையைக் கவனிக்க வேண்டும். வணக்கம், ஐயா!'' இப்படிச் சொன்ன பிறகு லீஸா புறப்பட முயற்சித்தாள். ஆனால் அலெக்சேய் அவளுடைய கையைப் பிடித்து நிறுத்தினான். ''அழகான பெண்ணே! உன்னுடைய பெயரைச் சொல்'' என்றான். ''அக்குலீனா'' என்று சொல்லிவிட்டு அவன் பிடியிலிருந்து தன் விரல்களை விடுவிக்க முயற்சி செய்தாள். ''என்னை விடுங்கள், ஐயா! நேரமாகி விட்டது. நான் வீட்டுக்குப் போக வேண்டும்'' என்றாள். ''அக்குலீனா! உன்னுடைய தகப்பனார் கொல்லன் வசீலியைப் பார்க்க நிச்சயமாக வருவேன்'' என்றான் அலெக்சேய். ''என்ன?'' என்று கத்தினாள் லீஸா. ''அது மட்டும் கூடாது.'' ''காட்டில் தன்னந்தனியாக ஒரு கனவானோடு பேசிக் கொண்டிருந்த விஷயம் என் வீட்டுக்குத் தெரிந்தால், எனக்கு ஆபத்து. என் தகப்பனார் கொல்லன் வசீலி என்னைக் கொன்று விடுவார்'' என்றாள். ''நான் உன்னை மறுபடியும் பார்க்க வேண்டும்.'' ''நான் காளான்களைப் பொறுக்குவதற்கு இங்கேதான் வருவேன்.'' ''எப்பொழுது வருவாய்?'' ''ஒருவேளை நாளைக்கு வந்தாலும் வருவேன்.'' ''அன்பே! அக்குலீனா! உன்னை முத்திமிட வேண்டும் போல இருக்கிறது. நாளைக்கு இதே நேரத்தில் இந்த இடத்துக்கு வர வேண்டும்—மறக்கக் கூடாது.'' ''சரி. வருகிறேன்.'' ''ஏமாற்ற மாட்டாயே?'' ''இல்லை. நிச்சயமாக உங்களை ஏமாற்ற மாட்டேன்.'' ''ஏமாற்ற மாட்டேன் என்று சத்தியம் செய்ய வேண்டும்.'' ''புனிதமான சிலுவையின் மீது சத்தியமாக நான் உங்களை ஏமாற்ற மாட்டேன் நிச்சயமாக வருவேன்.''

இதற்குப் பிறகு அவர்கள் பிரிந்தனர். லீஸா காட்டிலிருந்து வெளியேறி வயல்களைக் கடந்து தன் வீட்டுத் தோட்டத்துக்குள் நுழைந்தாள். அங்கே நாஸ்தியா அவளுக்காகக் காத்துக் கொண்டிருந்த மாட்டுத் தொழுவத்துக்கு ஓடினாள். லீஸா தன்னுடைய மாறுவேடத்தைக் களைந்துவிட்டு வழக்கமான உடைகளை அணிந்து கொண்டாள். நாஸ்தியா மிகுந்த ஆர்வத்தோடு கேட்ட கேள்விகளுக்குக் கவனமில்லாமல் பதில் சொல்லிவிட்டு, வீட்டுக்குள்ளே நுழைந்தாள். அங்கே காலைச் சிற்றுண்டி தயாராக வைக்கப்பட்டிருந்தது. செல்வி ஜாக்ஸன் அந்தக் காலை நேரத்திலும் முகத்தில் பவுடரை அப்பிக் கொண்டு ரொட்டியை சிறு சிறு துண்டங்களாக நறுக்கிக் கொண்டிருந்தாள். லீஸாவின் தகப்பனார் அவள் காலையில் எழுந்து வெளியே போய்விட்டு வந்திருப்பதைப் பாராட்டினார். ''அதிகாலையில் எழுந்திருப்பதைக் காட்டிலும் ஆரோக்கியமான பழக்கம் வேறு கிடையாது'' என்றார். அதிக காலம் வாழ்ந்த பலரைப் பற்றி ஆங்கிலப் பத்திரிகைகளில் எழுதப்பட்டிருந்த செய்திகளை அவர் எடுத்துக் கூறினார். நூறு வயதுக்கு மேல் உயிரோடிருப்பவர்கள் எல்லோரும் வோட்கா மதுவை அருந்தியிருக்க மாட்டார்கள்; கோடையிலும் குளிரிலும் அதிகாலையில் எழுகின்ற பழக்கத்தை உடையவர்களாக இருப்பார்கள் என்றும் சொன்னார். லீஸாவின் காதுகளில் அவர் சொன்னது சிறிதும் விழவில்லை. அன்று காலையில் ஏற்பட்ட அபூர்வமான சந்திப்பை, அக்குலீனாவுக்கும் இளம் வேட்டைக்காரனுக்கும் நடைபெற்ற உரையாடலை அவள் மனதில் நினைத்துக் கொண்டிருந்தாள். அவளுடைய மனச்சாட்சி அவளைத் துன்புறுத்தியது. அந்தச் சந்திப்பிலும் உரையாடலிலும் கண்ணியக் குறைவாக ஒன்றுமில்லை; அவளுடைய குறும்புத்தனத்தால் ஆபத்தான விளைவுகள் ஏற்படப் போவதில்லை என்று அவள் தனக்குள்ளாகவே வீணாகச் சொல்லிக் கொண்டாள். பாவம்! அவளுடைய பகுத்தறிவை உணர்ச்சிகள் வென்று விட்டன. மறு நாள் காலையில் சந்திப்பதாக சத்தியம் செய்திருக்கிறோமே என்ன செய்வது என்று அவள் கவலைப்பட்டுக் கொண்டிருந்தாள். அநேகமாக வாக்கை நிறைவேற்ற முடியாத நிலை. ஆனால் மறுநாள் அலெக்சேய் அக்குலீனாவுக்காக வீணாகக் காத்திருந்துவிட்டு கொல்லன் வசீலியின் மகளைத் தேடி கிராமத்துக்குள்

சென்று அம்மைத் தழும்புகளும் பருமனான உடலுமுள்ள உண்மையான அக்குலீனுவைச் சந்தித்தால், உண்மை வெளியாகி, லீஸா அகப்பட்டுக்கொள்வாள். இதை நினைக்கும் பொழுதே அவளுக்குப் பயமேற்பட்டது. மறு நாளும் அக்குலீனுவின் மாறுவேடத்தில் காட்டுக்குச் செல்வதென்று முடிவு செய்தாள்.

அலெக்சேய் அன்று முழுவதும் காலையில் சந்தித்த பெண்ணைப் பற்றியே நினைத்துக் கொண்டு ஆனந்தப் பரவசத்திலிருந்தான். அன்றிரவில் தூங்கும் பொழுதும் அவனுடைய கனவுகளில் அந்த மங்கலான நிற அழகி வந்து இன்பக் கிளர்ச்சியூட்டினுள். மறு நாள் அதிகாலையில் எழுந்து உடையணிந்து கொண்டான். அவனுடைய துப்பாக்கியில் வெடி மருந்தைக் கெட்டிப்பதற்குக் கூடக் காத்திராமல், தன்னுடைய விசுவாசமான நாய் ஸ்பகார் பின்தொடர, அந்தச் சந்திக்குமிடத்துக்கு வேகமாகச் சென்றுன். அரை மணி நேரம் அங்கே காத்திருந்த பொழுது ஏற்பட்ட வேதனையை அவனுல் தாங்க முடியவில்லை. கடைசியில் ஒரு நீல மேலாடையணிந்த பெண் வருவதைப் புதர்களினூடே பார்த்தான். உடனே அக்குலீனுவைச் சந்திப்பதற்காக வேகமாக முன்னே சென்றுன். அவளை உற்சாகத்தோடு அவன் வரவேற்ற போதிலும் அவள் முகத்தில் புன்சிரிப்புத் தவழ்ந்தாலும், அவள் மனதில் அச்சமும் கவலையும் நிறைந்திருப்பதை அவன் உடனே உணர்ந்தான். அதற்கென்ன காரணம் என்று அவளைக் கேட்டான். தான் அவனைச் சந்தித்ததும் பேசியதும் சரியல்ல என்று கருதுவதாகவும், அதற்காக வருத்தப்படுவதாகவும், கொடுத்த வாக்கை மீற முடியாமல் தான் வந்திருப்பதாகவும், இதுதான் தங்களுடைய கடைசிச் சந்திப்பாக இருக்குமென்றும் அவள் கூறினுள். தங்களுடைய நட்புத் தொடர்வதால் இருவருக்கும் எத்தகைய நன்மையும் விளையப் போவதில்லை என்றும் எடுத்துக் கூறினுள். இவ்வளவையும் அவள் விவசாயப் பெண்களின் கொச்சையான மொழியில் சொன்னுள். ஆனுல் ஒரு சாதாரணப் பெண்ணிடம் இவ்வளவு உயர்வான உணர்ச்சிகளும் சிந்தனைகளும் இருப்பதை நினைத்து அலெக்சேய் வியப்படைந்தான். அக்குலீனு தன்னுடைய முடிவை மாற்றிக் கொள்ள வேண்டுமென்று அவன் தன்னுடைய முழுத்திறமையையும் பயன்படுத்தி வாதாடினுன். தன்னிடம் கெட்ட நோக்கங்கள் எதுவும் இல்லை

யென்றும், அவள் வருத்தப்படும்படி என்றைக்கும் நடந்து கொள்ளப் போவதில்லையென்றும் உறுதியாகச் சொன்னான். அவள் சொல்கிறபடி நடப்பதாகவும், ஆனால் அவளைத் தனியே சந்திப்பதன் மூலம் ஏற்படுகின்ற மகிழ்ச்சியை இல்லாமற் செய்துவிட வேண்டாமென்றும் கேட்டுக்கொண்டான். இரண்டு நாட்களுக்கு ஒரு முறையாவது அல்லது வாரத்துக்கு இரண்டு முறையாவது அவளைச் சந்திக்க வேண்டும் என்று மன்றாடினான். அவன் உண்மையான உணர்ச்சியோடு பேசும் பொழுது தான் காதல் வயப்பட்டிருப்பதைப் போல உணர்ந் தான். அவன் சொல்வதை லீஸா அமைதியாகக் கேட்டுக் கொண்டிருந்தாள். ''கிராமத்தில் என் பெயரைச் சொல்லித் தேட மாட்டேன்; என்னைப் பற்றி எவ்விதத்திலும் விசாரிக்க மாட்டேன் என்று சத்தியம் செய்து கொடுங்கள்'' என்று அவள் கடைசியில் கேட்டாள். ''தான் ஏற்பாடு செய்கிற சந்திப்புக்களைத் தவிர வேறு எவ்விதத்திலும் சந்திக்க முயல மாட்டேன் என்று உறுதி கொடுங்கள்'' என்று அவள் வற்புறுத் தினாள். அலெக்சேய் புனித சிலுவையின் மீது சத்தியம் செய்து கொடுக்கத் தயாராக இருந்தான். ஆனால் லீஸா புன்சிரிப் போடு அவனைத் தடுத்தாள். ''சத்தியம் செய்ய வேண்டாம். உங்கள் வார்த்தையே எனக்குப் போதும்'' என்றாள். பிறகு அவர்களிருவரும் அந்தக் காட்டில் நடந்தபடியே அன்போடு பேசிக் கொண்டிருந்தார்கள். சிறிது நேரத்துக்குப் பிறகு லீஸா ''எனக்கு நேரமாகி விட்டது. நான் போய் வருகிறேன்'' என்று சொல்லி விட்டுப் பிரிந்து சென்றாள். அலெக்சேய் தனியாக நின்று கொண்டு ஒரு சாதாரணமான கிராமப் புறத்துப் பெண் இரண்டு சந்திப்புக்களிலேயே தன்னிடம் இவ்வளவு பாதிப்பு ஏற்படுத்தியது எப்படி என்பதைச் சிந் தித்தான். அக்குலீனாவுடன் ஏற்பட்ட பழக்கத்தில் ஒரு வகை யான புதுமையும் அதற்குரிய கவர்ச்சியுமிருப்பதை அவன் உணர்ந்தான். அந்த விசித்திரமான விவசாயப் பெண்ணின் கட்டளைகள் கஷ்டமானவையாகத் தோன்றிய போதிலும், அவளிடம் கொடுத்த வாக்கை மீற வேண்டும் என்ற எண் ணமே அவனுக்கு ஏற்படவில்லை. உண்மையைச் சொல்வ தென்றால், அலெக்சேய் பயங்கரமான மோதிரத்தை அணிந் திருக்கலாம், மர்மமான கடிதத் தொடர்புகள் வைத்திருக் கலாம், வாழ்க்கையில் வெறுப்படைந்தவனைப் போலத்

தோன்றலாம்—ஆனால் உண்மையில் அவன் தூய்மையான இன்பங்களை அனுபவிக்கத் துடிக்கின்ற இளைஞன். நல்ல மனமும், எழுச்சியான இளமையும், கறைபடாத வாழ்க்கையும் கொண்ட இளைஞன்.

நான் இந்தக் கதையை எனக்காக மட்டும் எழுதுவதென்றால் அந்த இளம் காதலர்களின் இனிமையான சந்திப்புக்களை, அவர்களிடம் பரஸ்பர அன்பும் நம்பிக்கையும் மென்மேலும் அதிகரித்ததை, அவர்களுடைய பொழுதுபோக்குகளை, உரையாடல்களை நிச்சயமாக விரிவாக வர்ணித்துக் கொண்டிருப்பேன். ஆனால் பெரும்பாலான வாசகர்கள் அதை விரும்புவதில்லை என்பது எனக்குத் தெரியும். எனவே அத்தகைய சுவாரசியமில்லாத செய்திகளை எழுதி நேரத்தை வீணாக்காமல், இரண்டு மாதங்கள் முடிவதற்குள்ளாக அலெக்சேய் அவளைத் தீவிரமாகக் காதலித்தான் என்பதை மட்டும் இங்கே குறிப்பிடுகிறேன். அதிகமாகப் பேசாவிட்டாலும் லீஸாவும் அநேகமாக அதே நிலையில்தான் இருந்தாள். அவர்கள் இருவரும் தங்களுடைய நிகழ்காலத்தை இன்பமாகக் கழித்தனர்; எதிர்காலத்தைப் பற்றிச் சிந்திக்கவில்லை.

அவர்களிருவரும் திருமணத்தைப் பற்றி அவ்வப்பொழுது நினைப்பதுண்டு. எனினும் அவர்கள் ஒருபோதும் அதைப் பற்றிப் பேசவில்லை. அது இயற்கையே. அலெக்சேய் தன்னுடைய அன்புமிக்க அக்குலீனாவைத் தீவிரமாகக் காதலித்த போதிலும் தனக்கும் ஒரு ஏழை விவசாயப் பெண்ணுக்கும் உள்ள சமூக ஏற்றத்தாழ்வு அவனுக்கு நன்றாகத் தெரியும். லீஸாவும் தங்களுடைய பெற்றோர்களுக்கிடையே உள்ள விரோதத்தை அறிந்தவளாதலால் அவர்கள் மனம் மாறுவார்கள் என்ற நம்பிக்கை அவளுக்கு இல்லை. இது தவிர துகீலவோ பண்ணையின் வாரிசான இளைஞன் ப்ரிலூச்சினோ கிராமத்துக் கொல்லன் மகளின் காலடியில் காதலுக்காகத் தவம் கிடப்பது அவளுடைய மனதில் இரகசியமான திருப்தியைத் தந்தது என்றும் கருதலாம். எப்படி இருந்த போதிலும் அவர்களை மிகவும் பாதிக்கக் கூடிய சம்பவம் விரைவில் நடைபெற்றது.

ஒரு நாள், தெளிவான, குளிர்ந்த காலைப் பொழுதில் (ருஷ்யாவில் இலையுதிர் காலத்தின் போது அடிக்கடி ஏற்படு

வது) இவான் பெத்ரோவிச் பேரெஸ்தவ் தமது உதவியாள், பண்ணை அடிமைகளின் குடும்பங்களைச் சேர்ந்த சில பையன் கள் (அவர்கள் சத்தம் செய்யும் கருவிகளோடு வந்தார்கள்), ஐந்து வில்லது ஆறு வேட்டை நாய்கள் சகிதமாகக் குதிரை மீதேறிப் புறப்பட்டார். அதே நேரத்தில் காலைப் பொழுது இதமாக இருந்தபடியால் கிரிகோரி இவானவிச் மூரம்ஸ்கி யும் ஆங்கில பாணியில் அமைக்கப்பட்டிருக்கும் தம்முடைய பண்ணையைச் சுற்றிப் பார்ப்பதற்காகக் குதிரை மீது புறப் பட்டார். காட்டின் அருகே அவர் சென்ற பொழுது தமது அடுத்த பண்ணையின் சொந்தக்காரரான பேரெஸ்தவ் குதிரை மீது உட்கார்ந்து முயல் வரட்டும் என்று காத்துக் கொண் டிருப்பதைப் பார்த்தார். அவர் உள்ளே நரித் தோல் வைக்கப்பட்ட கோட்டு அணிந்திருந்தார். அவருடைய வேலைக் காரப் பையன்கள் புதருக்குள் ஒளிந்து கொண்ட முயலை வெளியே விரட்டுவதற்காகப் பெருஞ்சத்தம் ஏற்படுத்திக் கொண்டிருந்தார்கள். மூரம்ஸ்கி இந்த சந்திப்பை எதிர் பார்க்கவில்லை; எதிர்பார்த்திருந்தால் அவர் குதிரையை வேறு திசையில் திருப்பிக் கொண்டு போயிருப்பார். இப் பொழுது அவர் எதிர்பாராதவிதமாக எதிரில் பேரெஸ்த வைப் பார்த்து விட்டார். அவர்களுக்கிடையே துப்பாக்கிக் குண்டு பாயும் தூரமே இடைவெளி இருந்தது. இனி அவரிடம் பேசுவதைத் தவிர வேறு வழியில்லை. எனவே ஐரோப்பிய நாகரிகத்தில் ஊறிய மூரம்ஸ்கி தமது எதிரியின் அருகே சென்று பண்போடு அவரை வணங்கிக் காலை வாழ்த்துக் கூறினார். பேரெஸ்தவும் அவரைத் திருப்பி வணங்கினார். ஆனால் அது கரடி வித்தைக்காரன் **கனவான்களைக்** கும்பிடு என்று சொன்னவுடன் அந்தக் கரடி குனிவதைப் போலவே இருந்தது. அந்த சமயத்தில் முயல் புதருக்குள்ளேயிருந்து வெளியே பாய்ந்து வயல்களை நோக்கி ஓடியது. அவ்வளவு தான் பேரெஸ்தவும் அவருடைய உதவியாட்களும் உரத்த குரலில் சத்தம் போட்டார்கள்; வேட்டை நாய்களை ஏவி விட்டு அவர்களும் அந்த முயலைப் பிடிக்க முழு வேகத்தில் விரைந்தார்கள். மூரம்ஸ்கியின் குதிரைக்கு வேட்டைப் பழக் கம் கிடையாது. எனவே அந்தக் குதிரை பயமடைந்து தலை தெறிக்க ஓடியது. நன்கு குதிரை ஓட்டக் கூடியவர் என்று தன்னைக் கருதிய மூரம்ஸ்கி, வேண்டாத சந்திப்பி

லிருந்து தப்பித்துக் கொள்வதற்காகக் குதிரையின் லகானைத் தளர்த்தி அதை ஓட விட்டார். அந்தக் குதிரை சிறிது தூரம் வேகமாக ஓடிய பிறகு திடீரென்று ஒரு பள்ளத்தைப் பார்த்ததும் சட்டென்று நின்றது. மூரம்ஸ்கி தூக்கி எறியப் பட்டார். உறைபனி விழுந்து கெட்டியாகிப் போன பூமியில் அவர் விழுந்ததால் அவருக்கு அதிர்ச்சியும் வலியும் அதிக மாகவே அவர் சற்று நேரம் வரை எழுந்திருக்காமல் அங்கேயே தம்முடைய குதிரையைச் சபித்துக் கொண்டு கிடந்தார். தன் முதுகில் இப்பொழுது அவர் உட்கார்ந்திருக்க வில்லை என்பதை உணர்ந்ததும் அந்தக் குதிரையும் நின்றது. பேரெஸ்தவ் தமது குதிரையைத் திருப்பிக் கொண்டு அங்கே வந்து மூரம்ஸ்கியிடம் பலமான அடியா என்று விசாரித்துக் கொண்டிருந்தார். இதற்கிடையில் அவருடைய உதவியாள் குற்றம் செய்த குதிரையைப் பிடித்துக் கொண்டு வந்தான். அங்கே அதன் கடிவாளத்தைப் பிடித்துக் கொண்டு நின்றான். அவனுடைய உதவியோடு மூரம்ஸ்கி மீண்டும் குதிரை மீது ஏறி உட்கார்ந்தார். பேரெஸ்தவ் அவரைத் தன்னுடைய வீட்டுக்கு வந்து சிறிது நேரம் தங்கிவிட்டுப் போகுமாறு அழைத்தார். மூரம்ஸ்கியும் வேறு வழியில்லாமல் அழைப்பை ஏற்றுக் கொண்டு அவரோடு சென்றார். ஆகவே பேரெஸ்தவ் முயலைப் பிடித்ததோடு நிற்காமல் தமது எதிரியையும் காயம் பட்ட நிலையில் யுத்தக் கைதியைக் கூட்டி வருவது போல வீட்டுக்குக் கூட்டிக் கொண்டு வெற்றி வீரராகத் திரும்பினார்.

அவர்களிருவரும் நண்பர்களைப் போல சுமுகமாகப் பேசிக் கொண்டு சிற்றுண்டி அருந்தினர். மூரம்ஸ்கி உடல் வலி காரணமாகத் தன்னால் குதிரையின் மீது உட்கார்ந்து போக முடியாதென்றும் வண்டியைக் கொடுத்துதவுமாறும் பேரெஸ்தவிடம் கேட்டுக் கொண்டார். அவர் வீட்டுக்குப் புறப்பட்ட பொழுது பேரெஸ்தவ் வாசல் வரை வந்து அவரை வழியனுப்பினார். மூரம்ஸ்கியும் மறு நாள் (அலெக் சேய் இவானவிச்சுடன்) அவர் வீட்டில் நண்பகல் விருந்துக்கு வருவதாக பேரெஸ்தவ் உறுதியளிக்கின்ற வரை புறப்பட வில்லை. ஆகவே ஒரு குதிரை பயந்து ஓடியதன் விளைவாக அவர்களுக்கிடையே நெடுங்காலமாக நிலவி வந்த தீவிர மான பகைமை முடிவுக்கு வருவதற்கான அறிகுறிகள் தென் பட்டன.

மூரம்ஸ்கி வீட்டுக்குத் திரும்பிய பொழுது அவரைச் சந்திக்க லீஸா ஓடி வந்தாள். "என்ன நடந்தது, அப்பா?" என்று ஆச்சரியத்தோடு கேட்டாள். "நீங்கள் ஏன் நொண்டு கிறீர்கள்! உங்களது குதிரை எங்கே இருக்கிறது? அது யாருடைய வண்டி?" "நான் சொல்லப் போவதை நீ நம்ப மாட்டாய், my dear*" என்று சொன்னார் மூரம்ஸ்கி. காலையில் நடைபெற்ற எல்லா சம்பவங்களையும் அவளிடம் விவரித்தார். லீஸா மிகவும் ஆச்சரியமடைந்து அது உண்மைதானா என்று கூட சந்தேகப்பட்டாள். அவளுடைய ஆச்சரியம் மறைவதற்கு முன்பாக நாளைக்கு நண்பகலில் பேரெஸ்தவும் அவர் மகனும் விருந்துக்கு அங்கே வருகிறார்கள் என்று சொன்னார். "என்ன சொல்கிறீர்கள்?" என்று அவள் கேட்ட பொழுது அவளுடைய முகம் வெளுத்திருந்தது. "பேரெஸ்தவும் அவர் மகனுமா? நாளைக்கு இங்கே விருந்துக்கு வருவார்களா? அப்பா! நீங்கள் என்ன வேண்டுமானாலும் செய்யுங்கள். ஆனால் நான் கலந்து கொள்ள மாட்டேன்" என்றாள். "உனக்குப் பைத்தியம் பிடித்திருக்கிறதா?" என்று மூரம்ஸ்கி கேட்டார். "திடீரென்று உனக்கு நாணம் ஏற்பட்டு விட்டதா? அல்லது காதல் மயமான நாவலில் வரும் கதாநாயகியைப் போல, தகப்பனுருக்குப் பிறகு மகள் என்ற முறைப்படி, அந்தக் குடும்பத்தை நீயும் வெறுக்கிறாயா? இந்த மாதிரி அசட்டுத் தனம் கூடாது...." என்றார். "இல்லை அப்பா! நீங்கள் எவ்வளவு சொன்னாலும் அவர்களுக்கு முன்பாக நான் வரப் போவதில்லை" என்று லீஸா உறுதியாகச் சொன்னாள். அவள் நினைத்ததைச் சாதிக்கக் கூடியவள் என்பது கிரிகோரி இவானவிச்சுக்கு நன்றாகத் தெரியும். எனவே அவர் தன்னுடைய இரு தோளையும் குலுக்கினார்; பேச்சை நிறுத்தி விட்டு, தன்னுடைய மறக்க முடியாத குதிரைச் சவாரிக்குப் பிறகு ஓய்வு எடுக்கச் சென்றார்.

லிஸவேத்தா கிரிகோர்யெவ்னா தன்னுடைய அறைக்குச் சென்று நாஸ்தியாவைக் கூப்பிட்டாள். மறு நாள் வரப் போகின்ற விருந்தினர்களைப் பற்றி அவர்களிருவரும் நெடு நேரம் கலந்து பேசினார்கள். அக்குலீனா வேடத்தில் வந்தது நல்ல பழக்க வழக்கங்களை உடைய இளம் சீமாட்டி லீஸா

---

* என் அன்பே.—ப-ர்.

என்று தெரிந்தவுடன் அலெக்செய் என்ன நினைப்பார்? அவ ளுடைய நடத்தை, குணம், கொள்கைகளைப் பற்றி எத்த கைய முடிவுக்கு வருவார்? அதே சமயத்தில் இப்படிப் பட்ட எதிர்பாராத சந்திப்பின் போது அலெக்சேய் எப்படி நடந்து கொள்வார் என்பதைப் பார்க்க வேண்டுமென்ற ஆசையும் அவளுக்கு அதிகமாக ஏற்பட்டது.... திடீரென்று ஒரு நல்ல யோசனை அவளுக்குத் தோன்றியது. அவள் உடனே அதை நாஸ்தியாவிடம் சொன்னாள். இருவரும் அது சரியான வழி என்று முடிவு செய்து அதை எப்படியாவது நிறைவேற்ற வேண்டுமென்று உறுதி கொண்டனர்.

மறு நாள் காலைச் சிற்றுண்டியின் பொழுது கிரிகோரி இவானவிச் தன் மகளிடம் ''பேரெஸ்தவும் அவருடைய மகனும் வரும் பொழுது நீ மறைந்து கொள்ளப் போகிறாயா?'' என்று கேட்டார். ''அப்பா, உங்களுக்காக வேண்டுமானால் நான் அவர்களை வரவேற்கிறேன். ஆனால் ஒரு நிபந்தனை: அவர்கள் முன்பாக நான் எந்த வேஷத்தில் தோன்றினாலும், எப்படி நடந்து கொண்டாலும் நீங்கள் என்னைக் கோபித்துக் கொள்ளக் கூடாது. அது மட்டுமல்ல. ஆச்சரியமோ, அதிருப்தியோ சிறிதும் காட்டக் கூடாது, சரியா?'' என்றாள். கிரிகோரி இவானவிச் சிரித்துக் கொண்டே ''உன்னுடைய குறும்புத்தனம் போகாது. சரி. நீ என்ன செய்தாலும் சரி. பைத்தியக்காரப் பெண்ணே!'' என்றார். இப்படிச் சொன்ன பிறகு அவர் அவளுடைய நெற்றியின் மீது முத்தமிட்டார். லீஸா தன்னுடைய தயாரிப்புகளைச் செய் வதற்காக வேகமாகப் போனாள்.

பிற்பகலில் சரியாக இரண்டு மணிக்கு ஆறு குதிரைகள் பூட்டப்பட்ட வண்டி அவர்கள் வீட்டு வாசலுக்குள் நுழைந்து, பச்சைப் பசேல் என்றிருந்த வட்டவடிமான புல் வெளியை ஒரு சுற்றுச் சுற்றி வீட்டுக்கு முன்னால் வந்து நின் றது. வயோதிகரான பேரெஸ்தவ், மூரம்ஸ்கியின் சீருடை அணிந்த பணியாட்கள் இருவர் இரண்டு பக்கத்திலும் அவ ரைத் தாங்கிக் கொள்ள, படிகளில் ஏறி வந்தார். வண்டியின் பின்னால் குதிரை மீது வந்து கொண்டிருந்த அவருடைய மகனும் அவருடன் சேர்ந்து கொள்ள, இருவருமாக உணவு அறைக்குள் நுழைந்தார்கள். அங்கே தட்டுக்களில் உணவு வகைகள் தயாராகப் பரிமாறப்பட்டிருந்தன. மூரம்ஸ்கி

தமது அண்டை வீட்டுக்காரர்களை மிகுந்த அன்புடன் வர வேற்ருர்; விருந்துக்கு முன்பு தன்னுடைய தோட்டத்தையும் வீட்டில் வளர்க்கப்படும் மிருகங்களையும் பார்த்துவிட்டு வரு வோம் என்று நன்கு சுத்தம் செய்யப்பட்ட பாதைகளின் வழியாகக் கூட்டிக் கொண்டு சென்ருர். இப்படிப்பட்ட பொழுது போக்குகளால் எந்த விதமான பயனுமில்லை; மேலும் அவற்ருல் நம்முடைய பணமும் நேரமும் வீணுகிறது என்று வயோதிகரான பேரெஸ்தவ் மனதுக்குள் நினைத்துக் கொண்டார். எனினும் மரியாதை காரணமாக வெளியில் சொல்லவில்லை. அவர் மகன் சிக்கனக்காரரான தகப்பஞரின் அதிருப்தி அல்லது மற்றவர்களைப் பற்றிக் கவலைப்படாத ஆங்கில அபிமானியின் உற்சாகம்—இரண்டிலுமே அக்கறை கொள்ளாமலிருந்தான். விருந்தளிப்பவரின் மகள் எப்பொ ழுது வருவாள் என்று ஆவலோடு எதிர்பார்த்துக் கொண் டிருந்தான். ஏனென்ருல் அந்தப் பெண்ணைப் பற்றி அவன் அதிகமாகக் கேள்விப்பட்டிருக்கிருன். அவன் வேருெரு பெண்ணிடம் மனதைப் பறிகொடுத்தவன் என்பது நமக்குத் தெரியும். எனினும் அழகைப் போற்றும் இளைஞன் என்ற முறையில் மூரம்ஸ்கியின் மகளைப் பார்க்க வேண்டுமென்று அவன் துடித்தான்.

மூவரும் வரவேற்பு அறைக்கு வந்து உட்கார்ந்தனர். இரண்டு பெரியவர்களும் தங்களுடைய இராணுவ வாழ்க் கையில் நடைபெற்ற சுவையான சம்பவங்களைச் சொல்லிக் கொண்டிருந்தார்கள்; கடந்த காலத்தை நினைவு கூர்ந்தார் கள். அந்த நேரத்தில் அலெக்சேய் லீஸா அறைக்குள் வரும் பொழுது எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்று யோசித் துக் கொண்டிருந்தான். அவளை அகம்பாவத்தோடு பார்த்து மிகவும் அலட்சியத்தோடு பேசுவதுதான் பொருத்தமாக இருக்குமென்று முடிவு செய்து அதற்குத் தயாராஞன். திடீ ரென்று கதவு திறந்தது. அவன் மிகுந்த அலட்சியத்தோடும் அக்கறையில்லாமலும் தலையைத் திருப்பி உள்ளே வந்த நபரைப் பார்த்தான். காதல் விவகாரங்களில் அனுபவ முள்ள எந்தப் பெண்ணும் அந்தப் பார்வையைக் கண்டு இதயம் துடித்திருப்பாள் என்பதில் சந்தேகமில்லை. ஆனுல் துரதிருஷ்டவசமாக அறைக்குள் வந்தது லீஸா அல்ல; முகப் பவுடர் பூசி இறுக்கமான மார்புக் கச்சு அணிந்து செல்வி

ஜாக்ஸன் உள்ளே வந்து அங்கிருந்த விருந்தினர்களிடம் கண்களைத் தாழ்த்தி வணக்கம் தெரிவித்தாள். அலெக்சேய் மிகுந்த கவனத்தோடு தயாரித்த இராணுவத் திட்டம் தோல்வியடைந்தது. அவன் தன்னைச் சமாளித்துக் கொண்டு அடுத்த தாக்குதலுக்குத் தயாராவதற்குள் மறுபடியும் கதவு திறந்தது. லீஸா அறைக்குள் நுழைந்தாள். எல்லோரும் எழுந்து நின்றனர். மூரம்ஸ்கி தன்னுடைய மகளை விருந்தினர்களுக்கு அறிமுகம் செய்வதற்காக வாயைத் திறந்தார். ஆனால் உடனே வேகமாக உதட்டைக் கடித்தார்.... லீஸா, மங்கலான நிறமுடைய அவருடைய லீஸா, செல்வி ஜாக்ஸனையும் தோற்கடிக்கும் வகையில் காது வரை முகப்பவுடரை அப்பியிருந்தாள்; கண்களில் மை தீட்டியிருந்தாள். பதினான்காம் லுயீயின் பொய்த்தலை முடியிலிருந்த சுருள்களைக் காட்டிலும் அதிகமான பொய்ச் சுருள்கள்—அவளுடைய சொந்தத் தலை முடியைக் காட்டிலும் அதிகமான வெளிர்நிறம் உடையவை—அவளுடைய தலையிலிருந்தன. பொம்பதூர் சீமாட்டியின்[28] ஸ்கர்ட்டைப் போல புஸ்ஸென்று தொங்கியது. வாரினால் இடையை இறுக்கிக் கட்டி X என்ற எழுத்தின் வடிவத்தைப் போன்று தோன்றினாள். அவளுடைய தாயாரின் வைரங்களில், அடகு வைக்கப்பட்டவை போக மிச்சமிருந்தவை அவளுடைய கழுத்தில், காதுகளில், விரல்களில் ஜொலித்தன. அவளுடைய தோற்றம் ஆடம்பரமாக, ஆனால் நகைப்புக்கு இடமளிப்பதாக இருந்தது. அவள் தான் அக்குலீனா என்று அலெக்சேய் நிச்சயமாகக் கண்டு பிடிக்க முடியாது. அவனுடைய தகப்பனார் அவள் கையை முத்தமிட்டார். அவனும் விருப்பமில்லாமலே அவர் உதாரணத்தைப் பின்பற்றினான். அவளுடைய வெண்மையான மெல்லிய விரல்களில் அவன் முத்தமிட்ட பொழுது அவற்றில் ஏதோ ஒரு நடுக்கம் ஏற்பட்டது போல அவனுக்குத் தோன்றியது. அதே சமயத்தில் லீஸா அவளுடைய அலங்காரமான காலணியைக் காட்டுவதற்காக காலைத் தூக்கி முன்னே வைத்த பொழுது அவளுடைய அழகான காலையும் பார்த்தான். அவளுடைய உடை இப்பொழுது அவனுக்கு அவ்வளவு விசித்திரமாகத் தெரியவில்லை. அந்த அப்பாவி அவள் முகத்தில் அப்பியிருந்த முகப்பவுடரையும் வர்ணத்தையும் சந்தேகிக்கவில்லை; அது அவளுடைய இயற்கை நிறம் என்றே

நினைத்துக் கொண்டான் என்பதை இங்கே குறிப்பிடுவது அவசியம். கிரிகோரி இவானவிச் தமது மகளிடம் கொடுத்த வாக்கை நினைத்துக் கொண்டு மனதில் ஏற்பட்ட ஆச்சரியத்தை வெளிக்காட்டவில்லை. ஆனாலும் தன் மகளின் குறும்பை நினைத்த பொழுது ஏற்பட்ட சிரிப்பை மிகவும் சிரமப்பட்டுத் தான் அடக்கிக் கொண்டார். ஆனல் செல்வி ஜாக்ஸன் கதை வேறு. முகப்பவுடரும் வர்ணமும் தன்னுடைய ஒப்பனைப் பெட்டியிலிருந்துதான் எடுக்கப்பட்டிருக்க வேண்டும் என்பதை நினைத்ததும் அவளுக்குக் கோபமேற்பட்டது. அவளுடைய செயற்கையான வெளிர் நிறக் கன்னங்களில் சிவப்பேறியது. அவள் அந்தப் போக்கிரிப் பெண்ணை ஆத்திரமாகப் பார்த்தாள். ஆனல் லீஸா பிறகு சமாதானம் சொல்கிற நோக்கத்தில் அதைக் கவனிக்காதது போலப் பாசாங்கு செய்தாள்.

அவர்கள் உணவருந்த உட்கார்ந்தனர். அலெக்சேய் பழைய திட்டப்படி பலவிதமான நினைவுகளில் மூழ்கியவனாக மனச் சோர்வுடன் உட்கார்ந்திருந்தான். லீஸா பற்களை மூடியபடி சலிப்பூட்டும் சந்தம் வாய்ந்த குரலில் பேசிக் கொண்டிருந்தாள்; அதிலும் பிரெஞ்சு மொழியில் பேசிக் கொண்டிருந்தாள். அவள் இப்படி நடந்து கொள்வதன் நோக்கம் புரியாமல் மூரம்ஸ்கி ஒவ்வொரு நிமிடமும் அவளையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார். ஆனல் அந்த வேடிக்கையை அவர் மிகவும் ரசித்தார். செல்வி ஜாக்ஸனுக்கு அடக்க முடியாத கோபம் ஏற்பட்ட போதிலும் பேசாமல் உட்கார்ந்திருந்தாள். அங்கே நிலவிய சூழ்நிலையில் இயல்பாக நடந்து கொண்டது இவான் பெத்ரோவிச் ஒருவர்தான். இரண்டு நபர்கள் சாப்பிடக் கூடிய உணவை அவர் சாப்பிட்டார்; வழக்கம் போல நிறையக் குடித்தார்; வேடிக்கையான கதைகளைச் சொன்னர்; பிறகு தானே சிரித்துக் கொண்டார்; மொத்தத்தில் மென்மேலும் அதிகரிக்கும் நட்புணர்ச்சியோடு பேசிக் கொண்டு சிரித்தார்.

கடைசியில் விருந்து முடிந்தது. விருந்தினர்கள் விடைபெற்றுச் சென்றனர். பிறகுதான் கிரிகோரி இவானவிச் தன் மகளிடம் விசாரிக்கவும், சிரிக்கவும் நேரம் கிடைத்தது. ''அவர்களைக் முட்டாளாக்க நினைத்தாயா?'' என்று லீஸாவைக் கேட்டார். ''போகட்டும். முகப்பவுடர் பூசுவது உனக்கு

உண்மையில் நன்றாகவே இருக்கிறது. பெண்கள் ஒப்பனையைப் பற்றிய ரகசியங்கள் எனக்குத் தெரியாது. ஆனால் நீ முகப்பவுடர் பூசிக் கொள்வது நல்லதே—அதிகமாக இல்லாமல் அளவோடு பூச வேண்டும்'' என்று கூறினார். தன்னுடைய திட்டம் வெற்றியடைந்ததில் லீஸாவுக்கு அதிகமான மகிழ்ச்சி ஏற்பட்டுத் தன் தகப்பனாருடைய கழுத்தைக் கட்டிக் கொண்டாள். அவருடைய யோசனையைக் கவனமாகச் சிந்திப்பதாகச் சொல்லிவிட்டு ஆத்திரமடைந்த செல்வி ஜாக்ஸனை சமாதானப்படுத்துவதற்காக ஓடினாள். அந்த ஆங்கிலப் பெண்மணியைக் கதவைத் திறக்க வைப்பதற்கும் சமாதானப்படுத்துவதற்கும் நெடுநேரமாயிற்று. விருந்தினர்கள் முன்னிலையில் தன்னுடைய மங்கலான நிறத்தில் தோன்றுவதற்குத் தனக்கு வெட்கமாக இருந்ததென்றும்... அனுமதி கேட்க அச்சமாக இருந்ததென்றும்... செல்வி ஜாக்ஸன் கோபித்துக் கொள்ள மாட்டார் என நம்பியதாகவும், இப்படிப் பலவாறாக சமாதானம் சொன்னாள். லீஸா தன்னைக் கிண்டல் செய்ததாக நினைத்துக் கொண்டிருந்த செல்வி ஜாக்ஸனுக்கு, அப்படி இல்லையென்று தெரிந்ததும் நிம்மதி ஏற்பட்டது. அவள் லீஸாவை முத்தமிட்டு சமரசம் செய்து கொண்டு, ஒரு ஆங்கில முகப்பவுடர் டப்பியையும் தன்னுடைய அன்பளிப்பாகக் கொடுத்தாள். லீஸாவும் மனப்பூர்வமான நன்றியுடன் அதைப் பெற்றுக் கொண்டாள்.

காதலர்கள் வழக்கமாகச் சந்திக்கும் இடத்திற்கு மறுநாள் காலையில் லீஸா நிச்சயமாக வந்திருப்பாள் என்பதை வாசகர்கள் எளிதாக ஊகிக்கலாம். ''நேற்று எங்கள் கனவானையும் சீமாட்டியையும் பார்க்கப் போயிருந்தீர்களாக்கும்'' என்று அலெக்சேய் அங்கே வந்தவுடன் கேட்டாள். ''இளம் சீமாட்டியைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?'' அவளைச் சரியாகப் பார்க்கவில்லை என்று அலெக்சேய் பதிலளித்தான். ''அடப் பாவமே!'' என்று லீஸா அவனைக் கேலி செய்தாள். ''ஏன் அப்படிச் சொல்கிறாய்?'' என்று அவன் கேட்டான். ''ஏனென்றால் எல்லோரும் சொல்கிறார்களே அது உண்மையா என்று தெரிந்து கொள்வதற்காகக் கேட்டேன்.'' ''எல்லோரும் என்ன சொல்கிறார்கள்?'' ''அதாவது, நான் அவள் மாதிரியே இருக்கிறேன் என்று சொல்கிறார்களே. அது உண்மையா?'' ''சீ! என்ன பிதற்றல்! உன்னோடு ஒப்பிட்

டால் அவள் எந்த மூலைக்கு?'' என்றான். ''இல்லை, ஐயா? நீங்கள் சொல்வது சரியல்ல. எங்கள் இளம் சீமாட்டி அழகான வள்; நாகரிகமான தோற்றமுடையவள்! அவளோடு என்னை ஒப்பிடமுடியுமா?'' என்றாள். உலகத்திலுள்ள அத்தனை சீமாட்டி களைக் காட்டிலும் அக்குலீனாவே மிகவும் அழகானவள் என்று அலெக்சேய் சத்தியம் செய்து சொன்னான். பிறகு அவள் நம்ப வேண்டுமென்பதற்காக அந்த இளம் சீமாட்டியை அங்கம் அங்கமாகக் கேலி செய்தான். இதைக் கேட்ட லீஸா குலுங்கக் குலுங்கச் சிரித்தாள். ''எங்களுடைய இளம் சீமாட்டியைக் கேலி செய்வது கிடக்கட்டும். ஆனால் அவர் களோடு ஒப்பிடும் பொழுது நான் ஒரு மடச்சிதானே!'' என்று பெருமூச்சோடு சொன்னாள். ''ஓ! அதற்குத்தான் கவலைப்படுகிறாயா? வேண்டுமென்றால் இப்பொழுதே உனக்கு எழுதப் படிக்கச் சொல்லித் தருகிறேன்'' என்றான் அலெக் சேய். ''ஆமாம்! நான் ஏன் கற்றுக் கொள்ளக் கூடாது?'' என்றாள். ''அன்பே! நீ விரும்பினால் இப்பொழுதே ஆரம்பிக் கலாமே'' என்று சொன்னான். அவர்களிருவரும் கீழே உட் கார்ந்தார்கள். அலெக்சேய் பையிலிருந்து ஒரு நோட்டுப் புத் தகத்தையும் பென்சிலையும் எடுத்தான். அக்குலீனா எழுத்துக் களை வெகு சீக்கிரத்தில் கற்றுக் கொண்டாள். இதைக் கண்டு அலெக்சேய் மிகவும் ஆச்சரியப்பட்டான். மறு நாள் காலையில் அவள் எழுதுவதற்குப் பழகினாள். முதலில் பென்சிலை எப்படி உபயோகிப்பதென்பது அவளுக்குத் தெரியவில்லை. ஆனால் சில நிமிடங்களிலேயே அவள் நன்றாக எழுதிக் காட்டினாள். ''என்ன ஆச்சரியம்! லங்காஸ்டர் முறையின் படிக்[29] கற்றுக் கொள்வதைப் காட்டிலும் நீ வேகமாகக் கற்று விட்டாயே!'' என்றான். உண்மையிலேயே, மூன்றாவது பாடத்தின் போது **நிலப்பிரபுவின் மகளான நத்தாலியா** என்ற கதையை[30] அக்குலீனா எழுத்துக் கூட்டிப் படிக்க ஆரம்பித்தாள். அதைப் படித்துக் கொண்டிருக்கும் பொழுது அவள் கேட்ட கேள்விகள் அலெக்சேயைத் திகைப்படையச் செய்தன. மேலும், அந்தக் கதையிலிருந்து பொறுக்கி யெடுக்கப்பட்ட முதுமொழிகளை அவள் ஒரு தாளில் எழுதிக் காட்டினாள்.

ஒரு வாரம் முடிந்த பிறகு அவர்கள் கடிதங்கள் எழுதிக் கொள்ள ஆரம்பித்தார்கள். அங்கே ஒரு பழைய ஓக் மரத்

தில் இருந்த பொந்து அவர்களுக்குத் தபால் பெட்டியைப் போல உதவியது. தபால்காரன் வேலையை நாஸ்தியா ரகசியமாகச் செய்து வந்தாள். அலெக்சேய் பெரிய எழுத்தில் தன்னுடைய கடிதங்களை எழுதி அங்கு கொண்டுவருவான். அந்தப் பொந்தில் மட்டமான நீலக் காகிதத்தில் அவனுடைய காதலியின் கோணலான கையெழுத்தில் எழுதப்பட்ட கடிதங்கள் வைக்கப்பட்டிருக்கும். ஒவ்வொரு கடிதத்துக்குப் பிறகும் அக்குலீனாவின் கையெழுத்தில் முன்னேற்றம் காணப்பட்டது; அவளுடைய சிந்தனையும் நன்கு உருப்பெற்று வளர்ச்சி அடைந்தது.

இதற்கிடையில் இவான் பெத்ரோவிச் பேரெஸ்தவுக்கும் கிரிகோரி இவானவிச் மூரம்ஸ்கிக்கும் சமீபத்தில் ஏற்பட்ட உறவுகள் தொடர்ந்து அபிவிருத்தியடைந்தன. கீழ்க்கண்ட சம்பவங்களின் காரணமாக அது உறுதியான நட்பாக வளர்ந்தது. இவான் பெத்ரோவிச்சின் மரணத்துக்குப் பிறகு அவருடைய சொத்துக்கள் அனைத்தும் அலெக்சேய் இவானவிச்சுக்குக் கிடைக்கும் பொழுது, அந்த இளைஞன் மாவட்டத்திலேயே பெரும் பணக்காரனுக இருப்பான்; அப்படியானுல் அவன் லீஸாவைத் திருமணம் செய்து கொள்வது நல்லது என்று மூரம்ஸ்கி அடிக்கடி சிந்தித்தார். வயோதிகரான பேரெஸ்தவும், தன்னுடைய பக்கத்துப் பண்ணைக்காரரிடம் சில விசித்திரமான பண்புகள் (அதாவது அவருடைய வார்த்தைகளில் சொல்வதென்ருல், ஆங்கில அபிமானம்) இருந்தபோதிலும் அவரிடம் பல உயர்ந்த குணங்கள் (அதில் அவருடைய மதிநுட்பத்தையும் சேர்த்துக் கொள்ள வேண்டும்) இருக்கின்றன என்ற முடிவுக்கு வந்தார். புரோன்ஸ்கி பிரபு அதிகமான செல்வாக்கும் அதிகாரமும் உடையவர். அவர் கிரிகோரி இவானவிச்சுக்கு நெருங்கிய சொந்தக்காரர். அலெக்சேயின் எதிர்கால வாழ்க்கைக்கு அந்தப் பிரபு நிறைய உதவிகளைச் செய்ய முடியும். எனவே தன்னுடைய மகனுக்குப் பெண்ணைக் கொடுப்பது மூரம்ஸ்கிக்கும் நல்லதாயிற்றே என்று சிந்தித்தார் இவான் பெத்ரோவிச். ஆரம்பத்தில் இரண்டு வயோதிகர்களும் இதை வெளியே சொல்லவில்லை. ஆனுல் ஒரு நாள் அவர்களிருவரும் மனம் திறந்து பேசினுர்கள்; பிறகு ஒருவரையொருவர் தழுவிக் கொண்டு நன்கு சிந்தித்து முடிவு செய்வதாகக் கூறிவிட்டுப் பிரிந்து

சென்ருர்கள். இது நிறைவேறுவதற்காக இருவரும் தத்தம் வழிகளில் பாடுபட்டார்கள். மூரம்ஸ்கி ஒரு சிக்கலே எதிர் பார்த்தார். அது லீஸாவையும் அலெக்சேயையும் எப்படி சந்திக்கச் செய்வது என்பதுதான். அந்த மறக்க முடியாத விருந்துக்குப் பிறகு அவர்களிருவரும் சந்தித்துக் கொள்ள வில்லே. அவர்களிடையே எந்த விதமான ஈடுபாடும் ஏற் படவில்லே என்று தோன்றியது. ஏனென்ருல் அலெக்சேய் மறு படியும் ப்ரிலூச்சிஞேவுக்கு வரவில்லே; இவான் பெத்ரோவிச் அங்கே வந்து சிறப்பித்த பொழுதெல்லாம் லீஸா தன் னுடைய அறைக்குப் போய்விடுகிற பழக்கத்தைப் பின்பற்றி ஞள். ''ஆனுல் அலெக்சேய் தினமும் இங்கே வந்தால் லீஸா நிச்சயமாக அவனேக் காதலிப்பாள். அது இயற்கைதானே! பொறுத்துப் பார்க்கலாம்'' என்று நினேத்தார் கிரிகோரி இவானவிச்.

இவான் பெத்ரோவிச் தமது திட்டத்தின் முடிவு பற்றி சிறிதும் தைரியப்படவில்லே. அன்று மாலேயில் தமது படிப் பறைக்குள் மகனேக் கூப்பிட்டார். தமது புகைக் குழாயைப் பற்ற வைத்துக் கொண்டு சிறிது நேரம் மௌனமாக இருந்த பிறகு மகனிடம் பேச ஆரம்பித்தார். ''அலெக்சேய்! முன்பு இராணுவத்தில் சேர வேண்டும் என்று ஆசைப்பட்டாய். இப்பொழுது ஒன்றும் சொல்வதில்லேயே. ஏன்? ஹுஸார் படைப் பிரிவின் இராணுவ உடையை அணிய வேண்டுமென்று இப்பொழுது ஆசைப்படவில்லேயா?'' என்று கேட்டார். ''இல்லே, ஐயா!'' என்று அலெக்சேய் பணிவோடு பதிலளித் தான். ''நான் இராணுவத்தில் சேருவதை நீங்கள் விரும்ப வில்லே என்பது எனக்குத் தெரியும். உங்கள் விருப்பத்துக்குக் கீழ்ப்படிவது என்னுடைய கடமை'' என்ருன். ''நல்லது. நீ கடமையை மறக்கவில்லே என்பதை அறிய எனக்கு ஆறுதல் ஏற்படுகிறது. நானும் உன்னே அரசாங்க வேலேயில் சேரு மாறு... இப்போது... வற்புறுத்தப் போவதில்லே. உனக்குத் திருமண ஏற்பாடுகளேச் செய்யலாமென நினேக்கிறேன்'' என்ருர்.

''நான் யாரைத் திருமணம் செய்ய வேண்டுமென விரும்புகிறீர்கள், ஐயா?'' என்று அலெக்சேய் ஆச்சரியத் தோடு கேட்டான்.

''லிஸவேத்தா கிரிகோர்யெவ்ஞ மூரம்ஸ்கயா. உனக்குத்

தகுந்த பெண் அவள்தான் என்று எனக்குத் தோன்றுகிறது, அல்லவா?'' என்று இவான் பெத்ரோவிச் பதிலளித்தார்.

''ஐயா! நான் திருமணத்தைப் பற்றி நினைக்கவில்லையே.''

''நீ நினைக்கவில்லை. அதனால் அதைப் பற்றி நான் நினைத்து ஒரு முடிவு செய்திருக்கிறேன்.''

''ஆனால் லீஸா மூரம்ஸ்கயாவை எனக்கு முற்றிலும் பிடிக்கவில்லை.''

''திருமணத்துக்குப் பிறகு பிடிக்கும். பழக்கத்தில் ஏற்படுவதுதானே காதல்.''

''அவளை மகிழ்ச்சியோடு வைத்திருக்க என்னால் முடியாது.''

''அவளுடைய மகிழ்ச்சியைப் பற்றி நீ ஏன் கவலைப்பட வேண்டும்? அது சரி. உன் தகப்பனுருக்கு நீ தருகிற மரியாதை இதுதானா? என்ன அவமானம்!'' என்றார்.

''எனக்குத் திருமணம் செய்து கொள்ள விருப்பமில்லை; திருமணம் செய்து கொள்ளப் போவதுமில்லை. நீங்கள் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் இதுதான் என்னுடைய முடிவு.''

''நீ அவளைத் திருமணம் செய்து கொள்ள வேண்டும். இல்லாவிட்டால் நான் உன்னை விலக்கி வைப்பேன். என்னுடைய சொத்துக்களை விற்று அந்தப் பணத்தை வீணாகச் செலவழிப்பேன். உனக்கு ஒரு காசு கூடக் கிடைக்காது—இது சத்தியம். உனக்கு மூன்று நாள் அவகாசம் கொடுக்கிறேன். நன்றாக சிந்தித்துப் பார். அது வரை என் முன்னால் வர வேண்டாம்'' என்று ஆத்திரத்தோடு கூறினார்.

பேரெஸ்தவ் மனதில் ஒரு யோசனை தோன்றுமானால் அதை ஒருபோதும் கைவிட மாட்டார் என்று அலெக்சேய் தெரிந்து கொண்டான். தராஸ் ஸ்கொதீனின் சொன்னதைப் போல்[31] ஆணியால் அடித்தாலும் அதை வெளியேற்ற முடியாது. ஆனால் அப்பாவுக்குப் பிள்ளை தப்பவில்லை. அலெக்சேய் ஒரு முடிவு செய்து விட்டானென்றால் மற்றவர்கள் அதை மாற்றுவது எளிதான காரியமல்ல. அவன் தன்னுடைய அறைக்குச் சென்று தகப்பனாரின் பயமுறுத்தலையும், லிஸவேத்தாவின் அழகையும், தகப்பனாரின் விருப்பத்துக்கு இசையாவிட்டால் தனக்கு ஒரு காசு கூடக் கொடுக்காமல் பிச்சைக்காரனைப் போல ஆக்குவேன் மிரட்டியிருப்

பதையும் பற்றி வெகு நேரம் சிந்தித்தான். கடைசியில் அவனுடைய சிந்தனைகள் அக்குலீனுவிடம் வந்து முடிந்தன. தான் அவளை மனதாரக் காதலிப்பதை அவன் முதல் முறையாகத் தெளிவாக உணர்ந்தான். ஒரு எளிய விவசாயப் பெண்ணை மணந்து கொண்டு, தன்னுடைய உழைப்பைக் கொண்டு குடும்பம் நடத்துவதைப் பற்றி நினைத்தான். இந்தப் புனைவியல் கருத்தைப் பற்றி மேலும் சிந்திக்கும் பொழுது அது முற்றிலும் பொருத்தமானதாகவும் நியாயமானதாகவும் அவனுக்குத் தோன்றியது. மழைக் காலம் ஆரம்பமாகிவிட்டபடியால், காட்டில் காதலர்கள் சந்திப்பு நின்று விட்டது. அவன் அக்குலீனுவுக்கு ஒரு கடிதம் எழுதினன். அவனுடைய உணர்ச்சித் துடிப்புக்கும் தெளிவான கையெழுத்துக்கும் மாதிரியாக விளங்கிய அந்தக் கடிதத்தில், தங்களுடைய மகிழ்ச்சிக்கு ஏற்பட்டிருக்கும் ஆபத்தைக் குறிப்பிட்டு என்ன நேர்ந்த போதிலும் அவளைத் திருமணம் செய்து கொள்ளத் தயார் என்று எழுதியிருந்தான். அந்தக் கடிதத்தை உடனே ஓக் மரப் பொந்தில் கொண்டுபோய் வைத்துவிட்டு நிம்மதியாக உறங்கச் சென்றான்.

மறு நாள் காலையில் அலெக்சேய் உறுதியான முடிவோடு மூரம்ஸ்கியைப் பார்க்கச் சென்றான். அவரிடம் மனந்திறந்து பேச வேண்டுமென்பது அவனுடைய விருப்பம். அவர் பெருந்தன்மையானவர்; அவர் தனக்கு உதவி செய்ய முன்வருவார் என்று எதிர்பார்த்தான். ப்ரிலூச்சினே பண்ணையின் வீட்டு வாயிலுக்கு முன்னல் தன் குதிரையின் லகானை இழுத்து நிறுத்திக் கொண்டு, ''கிரிகோரி இவானவிச் வீட்டிலிருக்கிறாரா?'' என்று அலெக்சேய் விசாரித்தான். ''இல்லை, ஐயா! கிரிகோரி இவானவிச் அதிகாலையில் வெளியில் போய்விட்டார்'' என்று வேலைக்காரன் பதிலளித்தான். ''அட! துரதிருஷ்டமே!'' என்று அவன் மனதுக்குள் நினைத்துக் கொண்டான். ''லிஸவேத்தா கிரிகோர்யெவ்னு வீட்டில் இருக்கிறார்களா?'' என்று கேட்டான். ''ஆமாம், ஐயா!'' என்று வேலைக்காரன் பதிலளித்தான். உடனே அலெக்சேய் குதிரையிலிருந்து கீழே குதித்து, லகானை வேலைக்காரன் கையில் கொடுத்துவிட்டு அவன் வருகை அறிவிக்கப்படாதிருக்கும் பொழுதே வீட்டுக்குள் வேகமாகச் சென்றான்.

*''அந்தப் பெண்ணிடமே பேசி விட்டால் சரியாகிவிடும். இன்றே இந்தச் சிக்கலுக்கு முடிவு ஏற்பட்டு விடும்'' என்று நினைத்து வரவேற்பு அறைக்குள் நுழைந்தான். அங்கே அவனுக்குப் பெரும் அதிர்ச்சி ஏற்பட்டது. லீஸா... இல்லை, அக்குலீனு, அவனுடைய அன்புக் காதலி, மங்கலான சருமம் கொண்ட அக்குலீனு உட்கார்ந்திருந்தாள். அவள் கிராமப் பெண்களின் கைநெசவுச் சட்டை அணியவில்லை. காலை நேரத்தில் அணிகின்ற வெள்ளை உடை அணிந்து கொண்டு, சன்னலுக்குப் பக்கத்தில் உட்கார்ந்து அவன் எழுதிய கடிதத்தைப் படித்துக் கொண்டிருந்தாள். அவளுடைய முழு கவனமும் கடிதத்தைப் படிப்பதில் இருந்ததால், அவன் உள்ளே நுழைந்ததை அவள் கவனிக்கவில்லை. அலெக்சே யால் தன்னுடைய மகிழ்ச்சியை அடக்கிக் கொள்ள முடிய வில்லை. உற்சாகமிகுதியில் அவளைக் கூப்பிட்டான். லீஸா திடுக்கிட்டுத் திரும்பினுள்; அவனைப் பார்த்தாள்; உடனே ஓடிப் போக முயற்சித்தாள். அவனே அவளைத் தடுத்து நிறுத்துவதற்குத் தன் பலத்தைப் பிரயோகித்தான். ''அக்குலீனு! அக்குலீனு!'' என்ருன். லீஸா அவன் பிடியிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்வதற்குப் பாடுபட்டாள்....* "Mais laissez-moi donc, monsieur; mais êtes-vous fou?" * *என்று பிரெஞ்சு மொழியில் கெஞ்சினுள். ''அக்குலீனு! என் அன்பே!'' என்று திரும்பத்திரும்பச் சொல்லிக் கொண்டே அவன் அவளுடைய கைகளில் முத்தங்களைப் பொழிந்தான். அங்கே இருந்த செல்வி ஜாக்ஸனுக்கு என்ன நடக்கிறதென்று புரியவில்லை. அந்த நேரத்தில் கதவு திறந்தது. கிரிகோரி இவானவிச் உள்ளே நுழைந்தார்.*

*''ஓ! எல்லாவற்றையும் நீங்களே முடிவு செய்து விட் டீர்களா?...'' என்ருர் மூரம்ஸ்கி.*

*இந்தக் கதையின் முடிவை விவரிக்கும் அவசியமற்ற வேலையை வாசகர்கள் எனக்குத் தர மாட்டார்கள் என்று நினைக்கிறேன்.*

***1830***

**(இ.பெ. பெல்கின் கதைகள் முடிவடைந்தன.)**

---

** ஐயா, என்னை விடுங்கள்; உங்களுக்குப் பைத்தியம் பிடித்து விட்டதா?—* ப-ர்.

ஸ்பேடுகளின் ராணி
இரகசியமான பகையைக் குறிக்கும்.

**புதிய ஜோசியப் புத்தகம்**

*1*

*குளிர் காலத்தில் ஓர்நாள்*
*இளைஞர்கள் சீட்டாடினர்*
*புகைபிடித்தபடியே;*
*அவர்கள் பந்தயப் பணத்தைக்*
*கவலையில்லாமல் அதிகமாக வைத்தனர்*
*சிரித்தபடியே;*
*வெற்றி அடைந்த தொகையை*
*சாக்குக் கட்டியால் எழுதினர்*
*கொடுத்தபடியே;*
*இவ்விதமாகவே எத்தனையோ*
*நாட்களை வீணுக்கினர்*
*சீட்டாடியபடியே.*

ஒரு நாள் குதிரைப் படையைச் சேர்ந்த நருமவ் என்ற அதிகாரியின் வீட்டில் சீட்டாட்டம் நடந்து கொண்டிருந்தது. குளிர் காலத்தின் நீண்ட இரவு நேரம் முடிந்து கொண்டிருப் பதை ஒருவரும் கவனிக்கவில்லை. அவர்கள் காலையில் ஐந்து மணிக்குத்தான் இரவு உணவு சாப்பிட உட்கார்ந்தனர். சீட்டாட்டத்தில் வெற்றியடைந்தவர்கள் ஆவலோடு சாப் பிட்டனர்; மற்றவர்கள் தங்களுக்கு முன்பு வைக்கப்பட் டிருந்த காலித் தட்டுகளை ஏதோ ஒரு ஞாபகத்தில் பார்த்துக் கொண்டிருந்தனர். ஆனுல் மேசையின் மீது ஷாம்பேன் மது வைக்கப்பட்டிருந்தது; பேச்சு சுவாரசியமாக ஆரம்பமான பொழுது எல்லோரும் பங்கு கொண்டார்கள்.

''சூரின்! உனக்கு வெற்றியா? தோல்வியா?'' என்று நருமவ் கேட்டார்.

''வழக்கம் போல தோல்விதான். எனக்கு அதிருஷ்ட மில்லை என்பதை ஒத்துக் கொள்ள வேண்டும். நான் குறை வான பந்தயத் தொகைக்கு சீட்டாடுகிறேன். நான் உணர்ச்சி வசப்படுவதில்லை. எப்பொழுதும் நிதானமாகவே விளையாடு கிறேன். இருந்தாலும் எனக்கு எப்பொழுதும் தோல்வியே ஏற்படுகிறது!''

''பந்தயத் தொகையை அதிகமாக வைக்க வேண்டும் என்ற ஆசை உனக்கு ஒருபோதும் ஏற்படுவதில்லையா?... உன்னுடைய உறுதி எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது.''

''ஹேர்மனைப் பாருங்கள்'' என்று பொறி இயலாளர் படைப் பிரிவைச் சேர்ந்த ஒரு இளம் அதிகாரியைச் சுட்டிக் காட்டி விருந்தினர்களில் ஒருவர் கூறினர். ''அவர் வாழ்க்கையில் ஒரு தடவை கூட சீட்டுக் கட்டைத் தொட்டது கிடையாது; பந்தயத் தொகையை இரண்டு மடங்காக அதிகப் படுத்தியதில்லை. இருந்தாலும் அதிகாலை ஐந்து மணி வரை நம்மோடு உட்கார்ந்து நமது விளையாட்டைப் பார்த்துக் கொண்டிருக்கிறார்!'' என்றார்.

''எனக்குச் சீட்டு விளையாட்டில் அதிகமான ஆர்வம் உண்டு. ஆனால் தேவையில்லாததைப் பெற முடியும் என்ற நம்பிக்கையில் தேவையானதை இழக்கக் கூடிய நிலையில் நான் இல்லை'' என்றார் ஹேர்மன்.

''ஹேர்மன் ஒரு* ஜெர்மானியர். எனவே மிகவும் ஜாக்கிரதையாக நடந்து கொள்கிறார்—அவ்வளவுதான்! என்னுடைய பாட்டி சீமாட்டி ஆன்னா ஃபெதோத்தவ்னாவை எடுத்துக் கொள்ளுங்கள். அவள் ஒரு புதிர்—அப்படி ஒன்று இருக்குமானால்'' என்றார் தோம்ஸ்கி.

''என்ன? அது என்ன?'' என்று எல்லா விருந்தினர்களும் ஒரே குரலில் கேட்டார்கள்.

''என்னுடைய பாட்டி ஒருபோதும் சீட்டாடுவதில்லை! அதுதான் எனக்குப் புரியவில்லை'' என்றார் தோம்ஸ்கி.

''எண்பது வயதான ஒரு கிழவி சீட்டாடாமல் இருப்பதில் ஏதேனும் ஆச்சரியமுண்டா?'' என்று கேட்டார் நருமவ்.

''அப்படியானால் என்னுடைய பாட்டியைப் பற்றி உங்களுக்கு ஒன்றுமே தெரியாதா?''

''உண்மையாகச் சொல்கிறேன்—ஒன்றுமே தெரியாது!''

''அப்படியானால் நான் சொல்கிறேன்'' என்று தோம்ஸ்கி தொடங்கினர்.

''என்னுடைய பாட்டி அறுபது வருடங்களுக்கு முன்பு பாரிஸ் நகரத்துக்குச் சென்ற பொழுது நவநாகரிகத்தின் சின்னமாகத் திகழ்ந்தாள். La Vénus Moscovite* பார்க்க

---

* மாஸ்கோ வீனஸ்.—ப-ர்.

வேண்டும் என்பதற்காக, அவள் எங்கு சென்றாலும் மக்கள் பின்தொடர்ந்தார்கள். ரிஷெலியே அவளைக் காதலித்தார். தன்னுடைய அலட்சியத்தினால்தான் அவர் தற்கொலை செய்து கொள்கின்ற அளவுக்குப் போனார் என்று என்னுடைய பாட்டி உறுதியாகச் சொல்கிறாள்.

''அந்தக் காலத்தில் சீமாட்டிகள் பணம் வைத்துச் சீட்டு விளையாடுவதுண்டு. ஒரு நாள் அரண்மனையில் அவ்வாறு சீட்டு விளையாடிய பொழுது ஆர்லீன்ஸ் பிரபுவிடம் பெருந் தொகையை இழந்தாள். அவரிடம் கடன் சொல்லிவிட்டு வீட்டுக்குத் திரும்பினாள். வீட்டுக்கு வந்த பிறகு முகத்தில் ஒட்டி வைத்த செயற்கை மருக்களை நீக்கிவிட்டு உடையை மாற்றிக் கொண்டிருக்கும் பொழுது என்னுடைய தாத்தா விடம் சூதாட்டத்தில் தனக்கேற்பட்ட நஷ்டத்தைத் தெரி வித்தாள். அந்தப் பணத்தை உடனே கொடுத்து விடுமாறு தாத்தாவுக்கு உத்தரவிட்டாள்.

''என்னுடைய காலஞ்சென்ற தாத்தா, என்னுடைய பாட்டிக்கு ஒரு வேலைக்காரரைப் போல இருந்தார் என்பது என்னுடைய ஞாபகம். அவளைக் கண்டால் அவருக்கு அதிக மான பயம். ஆனால் இவ்வளவு பெரிய தொகை சூதாட்டத் தில் நஷ்டப்பட்டிருக்கிறாள் என்று தெரிந்ததும் அவருக்குக் கடுங்கோபம் ஏற்பட்டது. உடனே கணக்கைப் பார்த்து கடந்த ஆறு மாதங்களில் மட்டும் ஐந்து லட்சம் செலவாகி யிருக்கிறது என்று எடுத்துக் கூறினார். பாரிஸ் நகரத்துக்குப் பக்கத்தில் தங்களுடைய மாஸ்கோ அல்லது ஸராத்தவ் பண்ணைகள் இல்லை என்று சொல்லிவிட்டு பணம் தர முடியாது என்று ஓரேயடியாகச் சொல்லி விட்டார். என் பாட்டி அவருடைய கன்னத்தில் ஓங்கி அறைந்துவிட்டு, தன்னுடைய வெறுப்பைக் காட்டுவதற்காக அவரைத் தன்னுடைய படுக் கையறைக்குள் நுழையக் கூடாதென்று உத்தரவிட்டாள்.

''இந்தத் தண்டனையினால் சாதகமான விளைவு ஏற்பட் டிருக்குமென்ற நம்பிக்கையில் மறு நாள் தன்னுடைய கண வனைக் கூப்பிட்டாள். ஆனால் அவர் பிடிவாதமாக இருந் தார். தன்னுடைய கோரிக்கையை அவர் ஏன் நிறைவேற்ற வேண்டும் என்பதற்கு அவள் விரிவான விளக்கம் கொடுத் தாள்—அவர்களுடைய திருமண வாழ்க்கையில் இதற்கு முன்பு எந்த சந்தர்ப்பத்திலும் இப்படி விளக்கம் கொடுத்த

தில்லை. கடன்களில் எத்தனையோ வகைகள் இருக்கின்றன; ஒரு இளவரசர் வண்டிக்காரனைப் போல நடந்து கொள்ள முடியாது என்று எடுத்துச் சொன்னாள். சுருக்கமாகச் சொல்வதென்றால் இது ஒரு கௌரவப் பிரச்சினை என்றாள். என்ன சொல்லியும் பயனில்லை! என் தாத்தா கண்டிப்பாக மறுத்தார். பணம் கொடுக்க முடியாது என்று உறுதியாகச் சொல்லி விட்டார். என் பாட்டிக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை.

''அவளுடைய நெருங்கிய நண்பர்களில் ஒருவர் மிகவும் குறிப்பிடத்தக்கவர். சென்-ஜெர்மென் பிரபு[33] என்று நீங்கள் கேள்விப்பட்டிருக்கலாம். அவரைப் பற்றி பல அதிசயமான கதைகள் சொல்லப்படுவதுண்டு. அவர் தன்னை மரணமில்லாத யூதர் என்பார்; வாழ்க்கையை நீட்டிக்கின்ற சஞ்சீவி மருந்தைக் கண்டுபிடித்ததாகச் சொல்வார்; மண்ணைப் பொன்னாக்கும் ரஸவாதமும் தெரியும் என்பார் என்று உங்களுக்குத் தெரியும். எல்லோரும் அவரைப் பாசாங்குக்காரன் என்றார்கள். கஸனோவா[34] தன்னுடைய குறிப்புகளில் அவரை ஒரு ஒற்றன் என்று எழுதியிருக்கிறார். இப்படிப் பலவிதமான கெட்ட பெயர்கள் ஏற்பட்டிருந்த போதிலும் சென்-ஜெர்மென் பிரபு கண்ணியமான தோற்றமும் நாகரிகமான பழக்க வழக்கங்களும் உள்ளவர். என்னுடைய பாட்டி இன்னும் அவர் மீது பேரன்பு கொண்டிருக்கிறாள். யாரும் அவரை அவமதிப்பாகப் பேச அனுமதிக்க மாட்டாள். சென்-ஜெர்மென் பிரபுவிடம் ஏராளமான பணம் இருந்தது அவளுக்குத் தெரியும். எனவே அவருடைய உதவியைப் பெறுவதற்கு விரும்பினாள். தன்னை உடனே பார்க்க வருமாறு அவருக்குக் கடிதம் அனுப்பினாள்.

''அந்த விசித்திரமான கிழவர் என்னுடைய பாட்டியைப் பார்ப்பதற்கு உடனே புறப்பட்டு வந்த பொழுது அவள் தாங்க முடியாத சோகத்தில் மூழ்கியிருப்பதைப் பார்த்தார். தன்னுடைய கணவர் மிகவும் குரூரமாக நடந்து கொள்வதாக மிகைப்படுத்திச் சொன்னாள். அவருடைய நட்பும் பெருந்தன்மையுமே தன்னுடைய ஒரே நம்பிக்கை என்று முடித்தாள்.

''சென்-ஜெர்மென் பிரபு சற்று நேரம் சிந்தித்தார்.

''உங்களுக்குத் தேவைப்படும் தொகையை நான்

கொடுத்து உதவக் கூடும். ஆனால் அந்தத் தொகையை எனக்குத் திருப்பிக் கொடுக்கும் வரை உங்கள் மனதில் நிம்மதி இருக்காது என்பது எனக்குத் தெரியும். எனவே உங்களுக்குப் புதிய கவலைகளைக் கொடுக்க நான் விரும்பவில்லை. வேறு வழி இருக்கிறது—அதன் மூலம் சீட்டாட்டத்தில் நீங்கள் ஜெயிக்கலாம்' என்றார் அவர். 'அன்புமிக்க பிரபு அவர்களே! எங்களிடம் பணம் முற்றிலும் இல்லை என்று இப்பொழுது தானே சொன்னேன்' என்று என் பாட்டி கூறினாள். 'இதற்குப் பணம் தேவையில்லை. நான் சொல்வதைக் கவனமாகக் கேளுங்கள்' என்று சொல்லி விட்டு அந்தப் பிரபு சீட்டாட்டத்தில் ஒரு ரகசியத்தை அவர்களிடம் தெரிவித்தார். அது மட்டும் நமக்குத் தெரிந்தால்....''

சீட்டுப் புலிகளான அந்த இளைஞர்கள் இரண்டு மடங்கு கவனத்தோடு கேட்க ஆரம்பித்தனர். தோம்ஸ்கி புகைக் குழாயைப் பற்ற வைத்துப் புகையை உள்ளே இழுத்தார். பிறகு மேலும் தொடர்ந்தார்.

''அன்றிரவே என்னுடைய பாட்டி au jeu de la Reine* வெர்சேய் அரண்மனைக்குப் போனாள். ஆர்லீன்ஸ் பிரபு சீட்டைப் பிரித்துப் போட்டுக் கொண்டிருந்தார். கடன் தொகையைக் கொண்டுவராததற்கு ஏதோ சாதாரணமான ஒரு காரணத்தைச் சொல்லி, அதற்கு ஆதரவாக ஒரு கற்பனைக் கதையும் சொன்னாள். பிறகு அவரோடு உட்கார்ந்து சீட்டாட ஆரம்பித்தாள். அவள் மூன்று சீட்டுகளைப் பொறுக்கினாள்; அவற்றை ஒன்றன் பின் ஒன்றாக விளையாடினாள்— மூன்றும் வெற்றிச் சீட்டுகள். முந்திய இரவில் இழந்த பணம் முழுவதையும் அவள் ஜெயித்தாள்.''

''ஏதோ அதிருஷ்டம்!'' என்றார் விருந்தினர்களில் ஒருவர்.

''கட்டுக் கதை!'' என்றார் ஹேர்மன்.

''ஒருவேளை அந்தச் சீட்டுகளில் ஏதாவது குறி இருந்திருக்கும்'' என்றார் மற்றொருவர்.

''இல்லை, நிச்சயமாக இல்லை'' என்று கம்பீரமாகச் சொன்னார் தோம்ஸ்கி.

''தொடர்ந்தாற்போல மூன்று முறை வெற்றி அடையக் கூடிய சீட்டுகளைப் பற்றி உன்னுடைய பாட்டிக்குத் தெரியும். அப்படியானால் அந்தச் சித்துவிளையாட்டின் ரகசியத்தை நீ

* அரசியோடு சீட்டாடுவதற்கு.—ப-ர்.

ஏன் இன்னும் தெரிந்து கொள்ளாமல் இருக்கிறாய்?'' என்று நருமவ் அதிசயித்தார்.

''என்ன செய்வது? அது ஒன்றும் எளிதான காரியமல்ல!'' என்றார் தோம்ஸ்கி. ''அவளுக்கு நான்கு குமாரர்கள்; அதில் ஒருவர்தான் என்னுடைய தகப்பனார். நான்கு பேர்களுமே சீட்டாட்ட வெறி பிடித்தவர்கள். ஆனால் ஒருவரிடம் கூட அவள் அந்த ரகசியத்தைச் சொல்லவில்லை. அப்படிச் சொல்லியிருந்தால் அவர்களுக்கு அல்லது எனக்குமே எவ்வளவோ உதவியாக இருந்திருக்கும். ஆனால் என்னுடைய மாமாவான இவான் இலீச் பிரபு ஒரு நிகழ்ச்சியை, தம்முடைய கண்ணியத்தின் மீது உறுதியாக என்னிடம் தெரிவித்தார். காலஞ்சென்ற சப்லீத்ஸ்கி, கோடிக் கணக்கில் பணத்தை விரயம் செய்துவிட்டு கடைசியில் ஏழ்மையில் மடிந்தாரே, அதே சப்லீத்ஸ்கி, தமது இளமைப்பருவத்தில் ஒரு தடவை மூன்று லட்சம் ரூபிள்களைத் தோற்றார்—ஸோரிச் என்பவரிடம் தோற்றார் என்று ஞாபகம். என்ன செய்வதென்று தெரியாமல் திகைத்துப் போனார். இளைஞர்களின் விளையாட்டுப் போக்கை என் பாட்டி எப்பொழுதுமே வன்மையாகக் கண்டிப்பார். எப்படியோ அவளுக்கு சப்லீத்ஸ்கி மீது அனுதாபம் ஏற்பட்டது. அவரிடம் மூன்று சீட்டுகளைச் சொல்லி அவற்றை அடுத்தடுத்தாற்போல விளையாடுமாறு சொன்னார். ஆனால் இனி எக்காலத்திலும் சூதாடுவதில்லை என்ற வாக்குறுதியை அவருடைய கண்ணியத்தின் மீது உறுதியாகப் பெற்றுக் கொண்டாள். சப்லீத்ஸ்கி தனது எதிரியின் வீட்டுக்குச் சென்றார். இருவரும் சீட்டாட உட்கார்ந்தனர். சப்லீத்ஸ்கி முதல் ஆட்டத்தில் ஐம்பதாயிரம் பந்தயம் வைத்து வெற்றி பெற்றார்; மறு தடவையில் பந்தயத் தொகையை இரண்டு மடங்காக உயர்த்தினார்; பிறகு அந்தத் தொகையையும் இரட்டிப்பாக்கினார். சென்ற தடவை தாம் இழந்த தொகையைப் பெற்றதோடு அதற்கு மேல் மிச்சமாகவும் ஒரு பெருந்தொகை அவருக்குக் கிடைத்தது....

''ஆனால் இப்பொழுது மணி சரியாக ஐந்தே முக்கால் ஆகி விட்டது. தூங்க வேண்டிய நேரம் வந்து விட்டது.''

உண்மையில், அறைக்கு வெளியே கீழ்வானம் வெளுக்க ஆரம்பித்திருந்தது. அங்கேயிருந்த இளைஞர்கள் டம்ளர்களில் மிச்சமிருந்த மதுவைக் குடித்துவிட்டு வெளியே சென்றார்கள்.

2

—Il paraît que monsieur est
dêcidément pour les suivantes.
—Que voulez-vous, madame?
Elles sont plus fraîches.*

பேச்சு

வயது முதிர்ந்த சீமாட்டி தமது தனியறையில் நிலைக் கண்ணாடியின் முன்பாக உட்கார்ந்திருந்தாள். மூன்று பணிப் பெண்கள் அவளைச் சுற்றிலும் நின்று கொண்டிருந்தார்கள். ஒரு பெண் ரூஜ் குப்பியையும் மற்றொரு பெண் கொண்டை ஊசி டப்பியையும் கையிலே வைத்துக் கொண்டு நின்றார்கள். மூன்றாவது பெண் சிகப்பு நாடாக்கள் தொங்கிய உயரமான தொப்பியைக் கையிலே பிடித்தபடி நின்று கொண்டிருந்தாள். அந்தச் சீமாட்டியின் அழகு எப்பொழுதோ மறைந்து விட்டது. இப்பொழுது அவளிடம் சிறிது கூட அழகு என்பதே இல்லை. ஆனால் அவள் தன்னுடைய இளமைக்காலப் பழக்கங் கள் எல்லாவற்றையும் பின்பற்றி வந்தாள். பதினெட்டாம் நூற்றாண்டின் எழுபதுக்களில் நவநாகரிகமாகக் கருதப்பட்ட அலங்காரத்தை இன்னும் உறுதியாகக் கடைப்பிடித்தாள். எனவே அறுபது வருடங்களுக்கு முன்பு தன்னுடைய ஒப் பனைக்குச் செலவிட்ட அதே நேரத்தையும் உழைப்பையும் இப்பொழுதும் செலவிட்டுக் கொண்டிருந்தாள். சித்திர வேலைக்குரிய வட்டமான சட்டத்தைக் கையில் வைத்துக் கொண்டு ஒரு இளம் பெண் சன்னலின் அருகே உட்கார்ந் திருந்தாள். அவள்தான் சீமாட்டியின் உடன் செல்லும் பெண்.

---

* —நீங்கள் சீமாட்டிகளின் பணிப்பெண்களைத்தான் விரும்புகிறீர்கள் என்று தோன்றுகிறது.

—நான் என்ன செய்வேன்? அவர்கள்தான் அதிக இளமை யோடிருக்கிறார்கள்.—ப-ர்.

"Grand' maman,* காலை வணக்கம்'' என்று அறைக்குள் நுழைந்த இளம் அதிகாரி அவளிடம் சொன்னார். "Bon jour, mademoiselle Lise.** Grand' maman, நான் உங்களிடம் ஓர் உதவிக்காக வந்திருக்கிறேன்'' என்றார்.

''Paul!*** உனக்கு என்ன உதவி வேண்டும்? சொல்.''

''எனது நண்பன் ஒருவனை உங்களுக்கு அறிமுகம் செய்ய அனுமதிக்க வேண்டும். வெள்ளிக் கிழமையன்று நீங்கள் நடத்தப் போகின்ற நடனத்துக்கும் கூட்டிவருவதற்கு உங்கள் அனுமதி தேவை.''

''நடனத்துக்குக் கூட்டிக் கொண்டுவா. அங்கே அவனை எனக்கு அறிமுகம் செய்யலாம். நேற்று அ... அவர்களைப் பார்க்கப் போயிருந்தாயா?''

''ஆமாம்! உற்சாகமான நிகழ்ச்சி. ஐந்து மணி வரை நடனமாடினோம். எலேத்ஸ்கயா அற்புதமான அழகிதான்!''

''ஹூம். அவளிடம் என்ன இருக்கிறது? அவளுடைய பாட்டி இளவரசி தரீர்யா பெத்ரோவ்னாவை அந்தக் காலத்தில் நீ பார்த்திருக்க வேண்டும்.... இப்பொழுது அவளுக்கு மிகவும் வயதாகியிருக்கும் என்று நினைக்கிறேன்.''

''வயதாகியிருக்குமா? அவள் செத்துப் போய் ஏழு வருஷமாகி விட்டது'' என்று தோம்ஸ்கி மறந்து போய் சொல்லி விட்டார்.

சன்னலின் அருகே உட்கார்ந்து கொண்டிருந்த இளம் பெண் தலையை உயர்த்தி அந்த இளைஞரைப் பார்த்து சமிக்கை செய்தாள். அந்த வயது முதிர்ந்த சீமாட்டியின் சமகாலத்தவர்கள் மரணமடைந்தால் அவளிடம் அதைத் தெரிவிப்பதில்லை என்பது அவருக்கு ஞாபகம் வந்ததும், தன்னுடைய உதட்டைக் கடித்தார். ஆனால் சீமாட்டி அந்தப் புதிய தகவலை மிகுந்த அலட்சியமாகக் கேட்டாள்.

''செத்துப் போய் விட்டாளா?'' என்று அதையே திருப்பிச் சொன்னாள். ''என்னிடம் யாரும் சொல்லவில்லையே! நாங்களிருவரும் ஒரே சமயத்தில் அரசியாரின் பணிப்பெண்களானோம். எங்களை அறிமுகம் செய்த பொழுது அரசியார்....''

* பாட்டியார் அவர்களே.— ப-ர்.
** வணக்கம், லீஸா.— ப-ர்.
*** போல்!—ப-ர்.

சீமாட்டி அந்தக் கதையைத் தமது பேரனிடம் நூறுவது தடவையாகக் கூறினாள்.

"Paul" என்று பிறகு அவனைக் கூப்பிட்டாள். ''இப்பொழுது நான் எழுந்து நிற்க உதவி செய். லீஸா, என்னுடைய மூக்குப்பொடி டப்பி எங்கே?''

சீமாட்டி தன்னுடைய பணிப்பெண்களோடு திரைக்குப் பின்னால் தமது ஒப்பனையைப் பூர்த்தி செய்வதற்காகச் சென்றாள். தோம்ஸ்கி அந்த இளம் பெண்ணோடு பேசிக் கொண்டிருந்தார்.

''சீமாட்டியிடம் யாரை அறிமுகம் செய்து வைக்கப் போகிறீர்கள்?'' என்று லிஸவேத்தா இவானவ்னு தணிந்த குரலில் கேட்டாள்.

''நருமவ். அவரை உங்களுக்குத் தெரியுமா?''

''இல்லை. அவர் இராணுவத்திலிருக்கிறாரா? அல்லது அரசாங்க அதிகாரியா?''

''இராணுவத்திலிருக்கிறார்.''

''எஞ்ஜினீயரா?''

''இல்லை. குதிரைப் படைப் பிரிவில் இருக்கிறார். அவர் எஞ்ஜினீயராக இருக்கலாம் என்று ஏன் நினைத்தீர்கள்?''

அந்தப் பெண் லேசாகச் சிரித்தாள். ஆனால் இந்தக் கேள்விக்குப் பதிலளிக்கவில்லை.

"Paul!" சீமாட்டி திரைக்குப் பின்னாலிருந்து கத்தினாள். ''ஏதாவது புதிய நாவல் புத்தகம் அனுப்பு. ஆனால் தற்காலத்தில் எழுதப்பட்டது வேண்டாம்'' என்றாள்.

"Grand' maman, ஏன் அப்படிச் சொல்கிறீர்கள்?''

''நாவலின் கதாநாயகன் தன்னுடைய தகப்பனாரையோ, தாயாரையோ கொலை செய்யக் கூடாது; யாரும் தண்ணீரில் விழுந்து சாகக் கூடாது. தண்ணீரில் மிதக்கும் பிரேதங்களைப் பற்றிப் படிப்பதென்றாலே எனக்குப் பெரிய பயமாக இருக்கிறது!''

''அப்படி நாவல்கள் இப்பொழுது கிடையாது. ஒருவேளை நீங்கள் ருஷ்ய நாவலைப் படிக்க விரும்புகிறீர்களா?''

''ருஷ்ய நாவல்கள் ஏதேனும் உண்டா?... இருந்தால் ஒரு புத்தகத்தைக் கொடுத்தனுப்பு. தாராளமாகக் கொடுத்தனுப்பு!''

"Grand' maman, எனக்கு நேரமாகி விட்டது. நான் போய்

வருகிறேன். லிஸவேத்தா இவானவ்ஞ, போய்வருகிறேன். நருமவ் எஞ்ஜினீயராக இருக்கலாம் என்று ஏன் நினைத்தீர்கள்?''

இதற்குப் பிறகு தோம்ஸ்கி சீமாட்டியின் தனியறையை விட்டுப் புறப்பட்டார்.

லிஸவேத்தா இவானவ்ஞ அந்த அறையில் தனியாக உட்கார்ந்திருந்தாள். துணியில் சித்திர வேலை செய்து கொண்டிருந்ததை நிறுத்திவிட்டு, சன்னல் வழியாக வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தாள். விரைவில் அவளுக்கு எதிர்ப்புறத்தில் தெருக்கோடியில் ஒரு இளம் அதிகாரி வந்து கொண்டிருப்பது தெரிந்தது. அவளுடைய கன்னங்களில் நாணம் தவழ்ந்தது. அவள் மறுபடியும் தலையைக் குனிந்து கொண்டு சித்திர வேலை செய்ய ஆரம்பித்தாள். அப்பொழுது சீமாட்டி நன்கு உடையணிந்து கொண்டு அறைக்குள் வந்தாள்.

''லீஸா! வண்டியைக் கொண்டுவரச் சொல். சற்று நேரம் வெளியே போய்விட்டு வருவோம்.''

லீஸா கையிலிருந்த மரச் சட்டத்தையும் துணியையும் அப்படியே வைத்துவிட்டு எழுந்தாள்.

''பெண்ணே! உனக்குக் காது செவிடா?'' என்று சீமாட்டி கத்தினுள். ''உடனே வண்டியைக் கோண்டுவரச் சொல்.''

''இதோ கொண்டுவரச் சொல்கிறேன்'' என்று அந்தப் பெண் மென்மையான குரலில் சொல்லிவிட்டு வேகமாக வெளியே சென்றுள்.

இளவரசர் பாவெல் அலெக்சாந்தரவிச் சீமாட்டிக்குக் கொடுத்தனுப்பிய புத்தகங்களோடு ஒரு வேலைக்காரன் உள்ளே நுழைந்தான்.

''மிக்க மகிழ்ச்சி. என்னுடைய நன்றியை அவரிடம் தெரிவித்துவிடு'' என்றுர் சீமாட்டி. ''லீஸா, லீஸா! நீ எங்கே போகிறுய்?''

''உடை மாற்றிக் கொள்ளப் போகிறேன்.''

''குழந்தாய்! இன்னும் நிறைய நேரமிருக்கிறது. இங்கே வா. இந்தப் புத்தகத்தின் முதல் பகுதியை எடுத்துப் படி....''

அந்தப் பெண் புத்தகத்தை எடுத்து சில வரிகளைப் படித்தாள்.

''பலமாகப் படி!'' என்றுள் சீமாட்டி. ''உனக்கு என்ன

வந்தது? உன் தொண்டை கட்டியிருக்கிறதா?... ஒரு நிமிஷம் பொறு. காலை நீட்டிக் கொள்ள முக்காலியை எடுத்துப் போடு. அதை இப்படிக் கொண்டு வா!''

லிஸவேத்தா இவானவ்னு மேலும் இரண்டு பக்கங்களைப் படித்தாள். சீமாட்டி வாயைத் திறந்து கொட்டாவி விட்டாள்.

''இப்புத்தகத்தை மூடிவை'' என்றுள் சீமாட்டி. ''வெறும் பிதற்றல்! இளவரசர் பாவெலுக்கு என் நன்றியைச் சொல்லி புத்தகத்தைத் திருப்பிக் கொடுக்குமாறு சொல்.... சரி, வண்டி எங்கே?''

''வண்டி தயாராக இருக்கிறது'' என்று லிஸவேத்தா இவானவ்னு சன்னல் வழியாகப் பார்த்துவிட்டுச் சொன்னுள்.

''நீ ஏன் இன்னும் உடை மாற்றிக் கொள்ளவில்லை? எப்போதுமே உன்னுல் எனக்குத் தாமதமாகிறது! மோசம்!'' என்று சீமாட்டி கடிந்து கொண்டாள்.

லீஸா வேகமாகத் தன்னுடைய அறைக்கு ஓடினுள். அவள் போய் இரண்டு நிமிஷமாவதற்குள் சீமாட்டி தன்னுடைய முழு பலத்தோடு மணியை அடித்தாள். மூன்று பணிப்பெண்களும் ஒரு கதவு வழியாக அறைக்குள் ஓடி வந்தார்கள். மறு கதவு வழியாக வேலைக்காரன் ஓடி வந்தான்.

''உங்களைக் கூப்பிடும் பொழுது வருவதற்கென்ன? நான் காத்துக் கொண்டிருக்கிறேன் என்று லிஸவேத்தா இவானவ்னுவிடம் சொல்லுங்கள்'' என்றுள் சீமாட்டி.

லிஸவேத்தா இவானவ்னு மேலங்கியும் தொப்பியும் அணிந்து கொண்டு அறைக்குள் வந்தாள்.

''இவ்வளவு நேரமாயிற்று?'' என்று கேட்டாள் சீமாட்டி. ''ஏன் இப்படி அலங்காரம் செய்திருக்கிருய்?... எதற்காக? யாரைக் கவர்வதாக உத்தேசம்?... பருவநிலை எப்படி இருக்கிறது? காற்று அதிகமாக இருக்கும் போலத் தோன்றுகிறதே'' என்றுள்.

''மேன்மை தங்கிய சீமாட்டி அவர்களே! வெளியில் காற்று அடிக்கவில்லை'' என்று வேலைக்காரன் பதிலளித்தான்.

''எதையாவது சொல்லாதே! பலகணியைத் திறந்து விடு. பார்த்தாயா?—காற்றடிக்கிறதென்று நினைத்தேன்! அதிலும் மிகவும் குளிர்ந்த காற்று அடிக்கிறது! வண்டியை

அனுப்பு! லீஸா! நாம் வெளியே போகவில்லை. நீ இவ்வளவு அலங்காரம் செய்திருக்க வேண்டாம்'' என்றாள் சீமாட்டி.

''சீ! என்ன வாழ்க்கை'' என்று அலுத்துக் கொண்டாள் லிஸவேத்தா இவானவ்னா.

லிஸவேத்தா இவானவ்னா வாழ்க்கையில் மகிழ்ச்சி இல்லாதிருந்தாள் என்பது உண்மையே. அடுத்தவருடைய உதவியில் வாழ்வது பெருந்துன்பம்; அந்நியருடைய வீட்டின் வாயிற்படிகள் மிக உயரமாக இருக்கின்றன என்றார் தாந்தே. ஒரு வயோதிகச் சீமாட்டியின் உதவியால் வாழ்ந்து கொண்டிருக்கும் ஒரு ஏழைப் பெண்ணைக் காட்டிலும் யார் அந்தத் துன்பத்தை அதிகமாக உணர்ந்திருக்க முடியும்? அந்தச் சீமாட்டி உண்மையிலேயே மோசமான குணம் உடையவளல்ல; ஆனால் மற்ற எல்லாப் பெண்களையும் போல ஏறுமாறானவள். தங்களுடைய நீண்ட வாழ்க்கைக் காலத்தில் மென்மையான உணர்ச்சிகளையெல்லாம் பூரணமாகச் செலவிட்ட பிறகு, நிகழ்காலத்தில் தங்களுக்கு எந்த பந்தமும் இல்லை என்று நினைக்கின்ற எல்லாக் கிழடுகளையும் போல, அவள் சுய நலத்தில் ஊறிப்போனவள். மற்றவர்களுக்கு எத்தகைய உதவியும் செய்ய விரும்பாதவள். சமூகத்தின் மேல் தட்டைச் சேர்ந்தவர்கள் படாடோபமாக நடத்துகின்ற எல்லா நிகழ்ச்சிகளுக்கும் அவள் தவறாமல் சென்று வருவாள். எந்த நடன நிகழ்ச்சிக்கும் அவள் போகாமலிருந்து விட மாட்டாள். அங்கே, சென்ற காலத்திய நாகரிக பாணியில் உடையணிந்து, முகத்தில் ரூஜ் பூசிக் கொண்டு ஒரு மூலையில் உட்கார்ந்திருப்பாள். அந்த நடன மண்டபத்தின் அவலட்சணமான ஆனால் அவசியமான பாத்திரமாக உட்கார்ந்திருப்பாள். மண்டபத்துக்குள் வரும் ஒவ்வொரு விருந்தினரும் ஏதோ ஒரு சடங்கை நிறைவேற்றுவது போல அவளருகில் சென்று குனிந்து தங்கள் வணக்கத்தைத் தெரிவிப்பார்கள். அதன் பிறகு யாரும் அவளைப் பற்றி நினைக்க மாட்டார்கள். அவளுடைய வீட்டில் நகரத்தில் உள்ள எல்லோரையும் ஒழுங்குமுறையைத் தவறாமல் பின்பற்றி வரவேற்று உபசரிப்பாள்; ஆனால் அந்த விருந்தினர்களில் ஒரு நபரைக் கூட அவளுக்கு இப்பொழுது அடையாளம் தெரியாது. அவளுடைய வீட்டிலிருக்கும் எண்ணற்ற வேலைக்காரர்கள் விரும்பியபடி உண்டு கொழுத்து, மனம் போனபடி நடந்து கொள்வ

தோடு, ஒருவரோடொருவர் போட்டி போட்டு, அந்தக் கிழவியின் சொத்துக்களை அவளுடைய அந்திம காலத்தில் கொள்ளையடித்து வந்தார்கள். லிஸவேத்தா இவானவ்னுவை அந்த வீட்டிலிருக்கும் தியாகி என்று தான் சொல்ல வேண்டும். அவள் தேநீர் கலந்தால், சீனியை வீணுக்குவதாகத் திட்டுக் கிடைக்கும்; அவள் நாவல்களை உரக்கப் படித்துக் காட்டும் பொழுது அந்த எழுத்தாளர்களின் எல்லாக் குற்றங் குறைகளுக்கும் அவளே பொறுப்பு என்பது போல வசவைப் பெறுவாள். சீமாட்டி வெளியே போகும் பொழுது துணையாகச் செல்கின்ற சமயங்களில் பருவநிலைக்கும் பாதையிலுள்ள குறைகளுக்கும் அவள்தான் பழிக்கப்படுவாள். அவளுக்குப் பெயரளவில் சம்பளமுண்டு. ஆனால் அந்தப் பணத்தை அவள் மொத்தமாக ஒரு காலத்திலும் வாங்கியதில்லை. எனினும் எல்லோரையும் போல அவள் உடையணிந்திருக்க வேண்டும்—அதாவது வெகு சிலரைப் போல நல்ல உடைகளை அணிந்திருக்க வேண்டும். முக்கியமான நிகழ்ச்சிகளின் போது அவளுடைய நிலை மிகவும் பரிதாபமாக இருக்கும். எல்லோருக்கும் அவளைத் தெரியும், ஆனால் ஒருவரும் அவளைப் பற்றி அக்கறை எடுத்துக்கொள்ள மாட்டார்கள். நடனநிகழ்ச்சிகளின் போது vis-á-vis* தேவைப்படும் பொழுது மட்டுமே அவளுக்கு அழைப்புக் கிடைக்கும். நடனத்துக்கு இடையே சீமாட்டிகள் தங்களுடைய ஒப்பனையைச் சரி செய்து கொள்வதற்காக அறைக்குள் போகும் பொழுது அவளுடைய உதவியை நாடுவார்கள். அவள் கூருணர்வு படைத்தவள் என்பதால் தன்னுடைய பரிதாபமான நிலையைப் புரிந்து கொண்டு தன்னைத் திருமணம் செய்து கொண்டு காப்பாற்றுவதற்கு ஒரு இளைஞன் வர மாட்டானு என்று ஆசையோடு காத்துக் கொண்டிருந்தாள். ஆனால் அகம்பாவமும் பணத்தாசையும் கொண்ட இளைஞர்களோ கர்வம் பிடித்த இளம் சீமாட்டிகளைத்தான் சுற்றி வந்தார்கள். இந்த இளம் சீமாட்டிகளைக் காட்டிலும் லிஸவேத்தா இவானவ்னு பன்மடங்கு அழகாக இருந்த போதிலும் இளைஞர்கள் அவளைக் கவனிக்கவில்லை. அந்த வீட்டின் சொகுசான ஆனால் எழுச்சியைத் தராத வரவேற்பு அறையிலிருந்து

---

* யாருக்காவது துணை.—ப-ர்.

அவள் ஒருவருக்கும் சொல்லாமல் தன்னுடைய அறைக்குச் சென்று கண்ணீர் வடித்த சந்தர்ப்பங்கள் ஏராளம். அவளுடைய எளிமையான அறையில் காகிதத் திரை, அலமாரி, சிறு நிலைக்கண்ணாடி, கட்டில், பித்தளைக் கூட்டில் மங்கலாக எரிந்து கொண்டிருக்கும் மெழுகுவத்தி—இவை மட்டுமே இருந்தன!

ஒரு நாள்—இந்தக் கதையின் முதல் அத்தியாயத்தில் விவரிக்கப்பட்ட மாலை நேர உரையாடல் நடைபெற்ற இரண்டொரு தினங்களுக்குப் பிறகு, இப்பொழுது நடைபெற்ற நிகழ்ச்சிகளுக்கு ஒரு வாரத்துக்கு முன்பு—சன்னல் அருகே உட்கார்ந்து சித்திர வேலை செய்து கொண்டிருந்த விஸ வேத்தா இவானவ்னு தற்செயலாகத் தெருவைப் பார்த்தாள். ராணுவ என்ஜினீயர் படைப் பிரிவின் உடையணிந்த ஒரு இளைஞன் எதிர்ப்பக்கத்தில் சிறிதும் அசையாமல் நின்று கொண்டு தான் உட்கார்ந்திருக்கும் சன்னலைப் பார்த்துக் கொண்டிருப்பதைக் *கவனித்தாள். அவள் உடனே தலையைக் குனிந்து கொண்டு தன்னுடைய சித்திரத் தையல் வேலையில் கவனம் செலுத்தினுள். ஐந்து நிமிடங்களுக்குப் பிறகு அவள் மீண்டும் சன்னலுக்கு வெளியே பார்த்தாள்—அந்த இளைஞன் அங்கேயே நின்றுகொண்டிருந்தான். தெருவில் போகின்ற நபர்களோடு விளையாட்டுக் காதல் செய்யும் பழக்கம் அவளுக்குக் கிடையாது. எனவே அவள் தலையைத் திருப்பிக் கொண்டாள். அங்கே உட்கார்ந்து சுமார் இரண்டு மணிநேரம் சித்திரத் தையலைச் செய்து கொண்டிருந்த போதிலும், தலையை உயர்த்தி சன்னலுக்கு வெளியே பார்க்க வில்லை. உணவு சாப்பிடும் நேரம் வந்ததும் அவள் மரச் சட்டத்தைக் கீழே வைத்துவிட்டு எழுந்தாள். தற்செயலாக சன்னல் வழியாகப் பார்த்த பொழுது அந்த அதிகாரி இன்னும் அந்த இடத்திலேயே நின்று கொண்டிருப்பதைக் கண்டாள். இது அவளுக்கு மிகவும் ஆச்சரியமாக இருந்தது. உணவருந்திய பிறகு அவள் சிறிது மனக் கலக்கத்தோடு சன்னலருகே சென்று பார்த்தாள். அந்த அதிகாரியைக் காண வில்லை. அதோடு அந்த நபரை மறந்து விட்டாள்....

இரண்டு நாட்களுக்குப் பிறகு சீமாட்டியோடு வெளியே வந்தாள். வண்டியில் ஏறும் சமயத்தில் அந்த நபரை மறு படியும் பார்த்தாள். அவன் வீட்டின் வாயிலில் நின்று கொண்

டிருந்தான். அவனுடைய மேலங்கியின் உயரமான கழுத்துப் பட்டை மேலே தூக்கி விட்டிருந்ததால் அது முகத்தை மறைத்துக் கொண்டிருந்தது. அவனுடைய தொப்பியின் கீழ் கறுப்பு நிறத்தில் இரண்டு கண்கள் பிரகாசித்தன. லிஸ வேத்தா இவானவ்னுவின் மனதில் விவரிக்க முடியாத பயம் ஏற்பட்டது. அவள் விளக்க முடியாத நடுக்கத்தோடு வண்டியில் ஏறி உட்கார்ந்தாள்.

வீட்டுக்குத் திரும்பியதும் அவள் சன்னலருகே ஓடிச் சென்று பார்த்தாள். அந்த அதிகாரி வழக்கமான இடத்தில் நின்றுகொண்டு அவளேயே உற்றுப் பார்த்துக் கொண்டிருந் தான். அவள் மனதில் ஒரே சமயத்தில் ஆவலும் அச்சமும் ஏற்பட்டு அவள் அந்த இடத்தை விட்டு விலகிப் போனுள். அந்த உணர்ச்சிகளும் அனுபவமும் அவளுக்குப் புதுமையாக இருந்தன.

அன்று முதல் ஒவ்வொரு நாளும் அந்த இளேஞன் குறிப் பிட்ட நேரத்தில் சன்னலுக்கு எதிரில் வந்து நிற்க ஆரம்பித் தான். அவர்கள் இருவருக்குமிடையில் ஒரு விஞேதமான உறவு வளர்ந்தது. அவள் உட்கார்ந்தபடியே சித்திர வேலே செய்து கொண்டிருந்த போதிலும் அவன் அங்கே வந்து நிற் கிறுன் என்பதை எப்படியோ உணர்ந்து தலேயை உயர்த்திப் பார்ப்பாள். அவள் அவனேப் பார்க்கும் நேரம் நாள்தோறும் அதிகரித்தது. அதற்காக அந்த இளேஞன் அவளுக்கு நன்றி செலுத்துவது போலவும் அவளுக்குத் தோன்றியது. அவர் களுடைய கண்கள் சந்திக்கும் பொழுது அந்த இளேஞனின் வெளிறிய முகத்தில் உடனே நாணம் பரவுவதை அவளுடைய கூர்மையான இளம் கண்கள் கண்டுபிடித்தன. ஒரு வாரத் துக்குப் பிறகு அவள் அவனேப் பார்த்துச் சிரிக்க ஆரம்பித் தாள்....

தோம்ஸ்கி சீமாட்டியிடம் தன்னுடைய நண்பனே அறி முகம் செய்து வைக்க அனுமதி கேட்ட பொழுது அந்த ஏழைப் பெண்ணின் இதயம் படபடத்தது. ஆனுல் நருமவ் என்ஜினீயர் அல்ல, குதிரைப் படைப் பிரிவைச் சேர்ந்தவர் என்று தெரிந்த பொழுது அவள் அவசரமாகக் கேள்வி கேட்டு வாயாடியான தோம்ஸ்கியிடம் தன்னுடைய இரக சியத்தை வெளியிட்டுவிட்டதற்காக வருத்தமடைந்தாள்.

ஹேர்மன் ருஷ்யாவில் நெடுங்காலம் வாழ்ந்த ஒரு ஜெர்

மானியரின் மகன். அவர் இறந்த பொழுது அவனுக்கு அதிக மான சொத்துக்களை விட்டுச் செல்லவில்லை. ஹேர்மன் தன்னுடைய சுதந்திரமான வாழ்க்கையைக் கவனமாகப் பாதுகாக்க விரும்பிய காரணத்தால் அந்தச் சொத்துக்களி லிருந்து கிடைத்த வட்டியைக் கூட செலவழிக்காமல், தன் னுடைய ஊதியத்தை மட்டுமே ஆதாரமாகக் கொண்டு வாழ்க்கை நடத்தினான். வீணாக எந்தச் செலவும் செய்வ தில்லை. அவனுக்கு ஆசைகள் நிறைய உண்டு; ஆனால் மற்ற வர்களிடம் கலகலப்பாகப் பழக மாட்டான். எனினும் அவ னுடைய தோழர்கள் அவனுடைய கருமித்தனத்தைச் சுட்டிக் காட்டிக் கேலி செய்வதில்லை. அவனிடம் வீரமான கற்பனைகளும் தீவிரமான உணர்ச்சிகளும் இருந்தன. எனி னும் தனது உறுதியான மனோவலிமையினால் இளைஞர் களுக்கு வழக்கமான தீய பழக்கங்கள் தன்னை அணுகாது காத்துக் கொண்டான். உதாரணமாக, அவன் இயல்பாகவே சூதாட்டக்காரன் என்ற போதிலும் சீட்டாடுவது கிடையாது. தன்னுடைய சொத்துக்கள் குறைவானவை என்ற காரணத் தால் (அவனுடைய வார்த்தைகளில்) தேவையில்லாததைப் பெறுவதற்காக தேவையானதை இழக்கக் கூடிய நிலையில் தான் இல்லை என்று திடமான முடிவு செய்திருந்தான். எனி னும் சீட்டாட்டம் நடைபெறும் பொழுது, இரவு முழு வதும் பக்கத்திலேயே உட்கார்ந்து கொண்டு அந்த விளை யாட்டின் ஏற்ற இறக்கங்களைப் பரபரப்போடு கவனித்துக் கொண்டிருப்பான்.

தோம்ஸ்கி மூன்று சீட்டுகள் பற்றிச் சொன்ன சம்பவம் அவனுடைய கற்பனையைப் பலமாகத் தூண்டியது. அவன் இரவு முழுவதும் அதையே நினைத்துக் கொண்டிருந்தான். அவன் மறு நாளிரவில் பீட்டர்ஸ்பர்க் நகரத்தின் வீதிகளில் அதை நினைத்தபடியே சுற்றிக் கொண்டிருந்தான். ''வயது முதிர்ந்த சீமாட்டி அந்த ரகசியத்தை எனக்குத் தெரிவித் தால்?... நிச்சயமாக ஜெயிக்கின்ற அந்த மூன்று சீட்டுகளை யும் எனக்குத் தெரிவித்தால்?.... நான் ஏன் அதைத் தெரிந்து கொள்ள முயற்சிக்கக் கூடாது? அந்த சீமாட்டியிடம் அறி முகமாக வேண்டும். அவளுடைய பிரியத்தைப் பெறுவது— வேண்டுமென்றால் அவளுடைய காதலனாக நடிப்பது—ஆனால் இதற்கு அதிகக் காலமாகுமே! அவளுக்கு வயது எண்பத்

தேழு. அவள் அடுத்த வாரமே செத்துப் போகலாம். ஏன்? நாளைக்கு மறு நாளே செத்துப் போகலாம்!... அந்தக் கதை—அது உண்மைதானு?... இல்லை! ஜாக்கிரதை, நிதானம், கவனம்—இவைதான் என்னுடைய நம்பிக்கையான மூன்று சீட்டுகள். இவற்றைக் கொண்டு என்னுடைய சொத்தை மும்மடங்கு, ஏழு மடங்காகப் பெருக்குவேன்; அந்தஸ்தையும் சுதந்திரத்தையும் அடைவேன்!''

ஹேர்மன் இப்படி யோசித்துக் கொண்டே நடந்த பொழுது பீட்டர்ஸ்பர்க் நகரத்தின் முக்கியமான வீதிகளில் ஒன்றில் ஒரு மிகப் பழமையான கட்டிட அமைப்பைக் கொண்ட பெரிய வீட்டுக்கு முன்பு வந்து சேர்ந்தான். அந்த வீதி முழுவதும் வண்டிகள் நின்று கொண்டிருந்தன; பிரகாசமான விளக்குகள் எரிந்து கொண்டிருந்த வீட்டின் வாயிலுக்குள் வண்டிகள் ஒவ்வொன்ருகப் போய்க் கொண்டிருந்தன. வண்டிகளிலிருந்து இறங்கியவர்களின் கால்களை மட்டுமே அவன் பார்க்க முடிந்தது. இளம் பெண்ணின் ஒல்லியான கால்; இராணுவ பூட்ஸ்கால்; ஒரு தூதுவரின் கோடு போட்ட காலுறையும் செருப்பும்—இப்படிப் பலவிதமான காலணிகள். அங்கே கம்பீரமாக நின்று கொண்டிருந்த காவலாளியைக் கடந்து உரோமத்திலான கோட்டுகளும் மேலங்கிகளும் அணிந்து பலர் உள்ளே போய்க் கொண்டிருந்தனர். ஹேர்மன் அங்கே அசையாமல் நின்ருன்.

''இது யாருடைய வீடு?'' என்று ஹேர்மன் அங்கே நின்ற போலீஸ்காரரைக் கேட்டான்.

''சீமாட்டி ஆன்ஞ ஃபெதோத்தவ்ஞவின் வீடு'' என்று பதில் கிடைத்தது.

ஹேர்மன் அப்படியே திடுக்கிட்டுப் போஞன். அந்த விசித்திரமான கதை அவனுடைய மனக் கண்ணில் படத்தைப் போல விரிந்தது. அந்த வீட்டின் சீமாட்டியையும் அவளுடைய அதிசயமான சக்தியையும் நினைத்தபடியே அங்கே முன்னும் பின்னும் நடந்து கொண்டிருந்தான். இரவில் வெகு நேரமாகிய பிறகுதான் அவன் தன்னுடைய எளிமையான அறைக்குத் திரும்பிஞன். படுக்கையில் படுத்து வெகு நேரத்துக்குப் பிறகு அவன் தூங்க ஆரம்பித்த பொழுது ஒரு கனவு கண்டான். அந்தக் கனவில் பச்சைக் கம்பளித் துணி விரிக்கப்பட்ட மேசை, சீட்டுக் கட்டுகள், நோட்டுக் கத்தைகள்,

குவியலாகத் தங்க நாணயங்கள் வந்தன. அவன் சீட்டாட்டத்தில் சிறிதும் கவலையில்லாமல் பந்தயத் தொகையைப் பெருக்கிக் கொண்டே போகிருன். வெற்றி மேல் வெற்றி கிடைக்கிறது. நோட்டுக் கத்தைகளை அள்ளிக்கொண்டு, தங்க நாணயங்களை தன் பக்கமாக வழிக்கிருன். கடைசியில் விடிந்து வெகு நேரமான பிறகு அவன் விழித்துக் கொண்டு, அவ்வளவு பணமும் தங்கமும் போய்விட்டதே என்று பெருமூச்சு விட்டான். பிறகு வழக்கம் போல நகரத்தைச் சுற்றுவதற்குப் புறப்பட்டான். மீண்டும் சீமாட்டியின் வீட்டுக்கு முன்பாக வந்து நின்ருன். ஏதோ ஒரு அதிசய சக்தி அவனை அங்கே இழுத்து வருவது போல அவனுக்குத் தோன்றியது. அந்த இடத்தில் அசையாமல் நின்றபடியே சன்னல்களைப் பார்த்துக் கொண்டிருந்தான். ஒரு சன்னலுக்குப் பின்ஞல், புத்தகத்தில் அல்லது ஏதோ வேலையில் மூழ்கியிருக்கும் பெண்ணின் கறுப்பு முடி உடைய தலை தெரிந்தது. அவள் தலையை உயர்த்திஞள். ஹேர்மன் ஒரு இளம் பெண்ணின் முகத்தையும், கறுப்பு விழிகளையும் பார்த்தான். அந்தக் கணத்தில் அவன் ஒரு முடிவுக்கு வந்தான்.

## 3

> Vous m'écrivez, mon ange, des lettres de quatre pages plus vite que je ne puis les lire*.

**கடிதப் போக்குவரத்து**

லிஸவேத்தா இவானவ்ஞ தன்னுடைய அறைக்குச் சென்று மேலங்கியையும் தொப்பியையும் அப்பொழுதுதான் கழற்றி வைத்தாள். பாவம்! சீமாட்டி உடனே அவளைக் கூப்பிட்டுக் கத்திஞள். வண்டியை மறுபடியும் கொண்டுவருமாறு உத்தரவிட்டாள். அவர்களிருவரும் வண்டியில் ஏறுவதற்காக வெளியில் வந்தனர். இரண்டு வேலைக்காரர்கள் அந்த வயோதிகச் சீமாட்டியைக் கதவின் வழியாக வண்டிக்குள் தூக்கி வைக்கவும் திணிக்கவும் முயற்சி செய்து கொண்டிருந்த நேரத்தில் வண்டிச் சக்கரத்தின் அருகில் அந்த எஞ்ஜினீயர் நின்று கொண்டிருப்பதை லிஸவேத்தா இவானவ்ஞ கவனித்தாள். அவன் திடீரென்று அவள் கையைத் தொட்டான். அவளுக்குப் பகீரென்றது. உடனே அந்த இளைஞன் மறைந்து விட்டான். அவள் கையில் ஒரு கடிதம் இருந்தது. அந்தக் கடிதத்தை அவள் தனது கையுறைக்குள் மறைத்துக் கொண்டாள். வண்டி போய்க் கொண்டிருந்த நேரம் முழுவதும் அவளால் எதையும் பார்க்க முடியவில்லை; ஒன்றையும் கேட்க முடியவில்லை. வண்டியில் போகும் பொழுது அடுக்கடுக்காகக் கேள்விகளைக் கேட்டுக் கொண்டிருப்பது சீமாட்டியின் பழக்கம். ''நம்மைக் கடந்து போஞரே, அவர் யார்? அந்தப் பாலத்தின் பெயர் என்ன? அந்த அறிவிப்புப்

---

* என் அன்பே, உங்களுடைய நான்கு பக்கக் கடிதங்களைப் படிப்பதற்கு நான் எடுத்துக் கொள்ளும் நேரத்தைக் காட்டிலும் குறைந்த நேரத்தில் நீங்கள் அவைகளை எழுதி விடுகிறீர்களே.—ப-ர்.

பலகையில் என்ன எழுதியிருக்கிறது?'' இப்படியே கேட்டுக் கொண்டிருப்பாள். இந்தத் தடவை லிஸவேத்தா இவானவ்ஞ கவனமின்றி ஏதாவது பதிலளித்தாள். அவளுடைய பொருத்த மில்லாத பதில்கள் சீமாட்டிக்கு ஆத்திரத்தைக் கொடுத் தன.

''உனக்கு என்ன ஏற்பட்டது? நான் கேட்பது காதில் விழவில்லையா அல்லது நான் சொல்வது புரியவில்லையா?... நான் ஒன்றும் மழலை பேசவில்லையே! கடவுள் புண்ணியத் தால் நான் இன்னும் நல்ல அறிவுடன்தான் இருக்கிறேன்!'' என்ருள்.

லிஸவேத்தா இவானவ்ஞ சீமாட்டி சொன்னதைக் கேட்க வும் இல்லை. வீட்டுக்குத் திரும்பியதும் உடனே தன்னுடைய அறைக்குச் சென்று கையுறைக்குள் மறைத்த கடிதத்தை வெளியே எடுத்தாள். அந்தக் கடிதம் ஒட்டி முத்திரையிடப் படவில்லை. லிஸவேத்தா இவானவ்ஞ இதைப் படித்தாள். அது ஒரு காதல் கடிதம். அன்பும் மரியாதையும் தொனிக்கு மாறு எழுதப்பட்டிருந்த அந்தக் கடிதம் ஜெர்மன் நாவ லிலிருந்து எழுத்துக்கு எழுத்து பிரதிசெய்யப்பட்டிருந்தது. ஆனுல் லிஸவேத்தா இவானவ்ஞவுக்கு ஜெர்மன் மொழி தெரியாது. எனவே அந்தக் கடிதத்தைப் படித்துப் புளகாங் கிதமடைந்தாள்.

எனினும் அந்தக் கடிதம் அவளுக்கு மிகவும் படபடப்பை ஏற்படுத்தியது. அவளுடைய வாழ்க்கையில் முதல் முறை யாக ஓர் இளைஞேடு ரகசியமான, நெருக்கமான உறவு ஏற்பட்டிருக்கிறது. அவனுடைய துணிச்சல் அவளுக்குத் திகைப்பைத் தந்தது. தன்னுடைய நடத்தையில் தவறு இருக்கிறது என்று கருதியதனுல் அவள் தன்னைக் குறை கூறிக் கொண்டாள். இனிமேல் என்ன செய்வதென்று அவ ளுக்குப் புரியவில்லை. சன்னலுக்குப் பக்கத்தில் உட்காரு வதை நிறுத்திவிட்டு, அந்த அதிகாரியை அலட்சியம் செய் வதன் மூலம், இந்தத் தொடர்பை வெட்டிவிட முடியுமா? இந்தக் கடித்ததை அவனுக்குத் திருப்பி அனுப்பலாமா அல்லது இது முறையல்ல என்று கண்டிப்பாகவும் இரக்கமில் லாமலும் பதில் எழுதிவிடலாமா? அவளுக்கு நண்பர்கள் கிடையாது; ஆலோசகர்களும் இல்லை. எனவே இதைப் பற்றி யாரிடமும் கலந்து கொள்ள வழியில்லை. கடைசியில் அந்தக்

கடிதத்துக்குப் பதில் எழுதுவதென்று லிஸவேத்தா இவா னவ்ஞ முடிவு செய்தாள்.

அவள் பேஞவையும் காகிதத்தையும் எடுத்துக் கொண்டு தன்னுடைய மேசைக்கு முன்பாக உட்கார்ந்தாள். என்ன எழுதலாமென்று சற்று நேரம் சிந்தித்தாள். பல தடவை கடிதத்தை எழுத ஆரம்பித்து பிறகு திருப்தியில்லாமல் அவற்றைக் கிழித்தெறிந்தாள்—அவளுடைய வார்த்தைகள் மிகவும் இணக்கமாகவோ, அல்லது கண்டிப்பாகவோ இருப் பதாக அவளுக்குத் தோன்றியது. கடைசியில் அவளுக்குத் திருப்தி அளிக்கின்ற வகையில் சில வரிகளை எழுதி முடித் தாள்: ''உங்களுடைய நோக்கம் கௌரவமானது என்றும் சிந்திக்காமல் எதையாவது செய்வதன் மூலம் என்னை அவ மானப்படுத்துவது உங்களுடைய நோக்கமல்ல என்றும் நம்பு கிறேன். எனினும் நம்முடைய நட்பு இப்படிப்பட்ட வழியில் ஆரம்பமாகக் கூடாது. உங்கள் கடிதத்தைத் திருப்பி அனுப்பியிருக்கிறேன். எனக்கு அவமதிப்பைத் தருகின்ற இத்தகைய கடிதங்களை இனிமேல் எழுத மாட்டீர்கள் என்று நம்புகிறேன்.''

மறு நாள் ஹேர்மன் வந்து கொண்டிருப்பதைப் பார்த் ததும் லிஸவேத்தா இவானவ்ஞ மரச் சட்டத்தைக் கீழே வைத்துவிட்டு எழுந்தாள். பக்கத்து அறைக்குச் சென்று பல கணியைத் திறந்து, அந்த இளம் அதிகாரியின் திறமையில் நம்பிக்கையோடு தான் எழுதிய கடிதத்தை வீசி எறிந்தாள். ஹேர்மன் கடிதம் விழுந்த இடத்தை நோக்கி ஓடி அதைப் பொறுக்கி எடுத்துக் கொண்டு பக்கத்திலிருந்த ரொட்டிக் கடைக்குள் நுழைந்தான். முத்திரையை உடைத்துப் பார்த்தான்—அதில் அவனுடைய கடிதமும் லிஸவேத்தா இவானவ்ஞவின் பதிலும் உள்ளே இருந்தன. அது அவன் எதிர்பார்த்ததுதான். எனவே தன்னுடைய சூழ்ச்சியைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டு வீட்டுக்குத் திரும்பினுன்.

மூன்று நாட்களுக்குப் பிறகு பெண்களுடைய தொப்பி களைத் தயாரிக்கும் கடையில் வேலை செய்கின்ற ஒரு கெட்டிக் காரச் சிறுமி லிஸவேத்தா இவானவ்ஞவிடம் ஒரு கடிதத்தைக் கொண்டுவந்து கொடுத்தாள்.

லிஸவேத்தா இவானவ்ஞவின் மனதில் யாராவது கடன் பாக்கியைக் கேட்டுக் கடிதம் எழுதியிருக்கிறுர்களோ என்று

பயம் ஏற்பட்டது. ஆனால் அதைத் திறந்து உடனே ஹேர்மனின் கையெழுத்தைப் பார்த்ததும் அவள் நிம்மதியடைந்தாள்.

"சிறுமியே! இந்தக் கடிதம் எனக்கு எழுதப்பட்டதல்ல. நீ ஏதோ தவறு செய்து விட்டாய்" என்றாள்.

"உங்களுக்குத்தான். உங்களுக்கு எழுதப்பட்ட கடிதம் தான்!" என்று அந்தத் துணிச்சல் மிக்க சிறுமி சூழ்ச்சியாகச் சிரித்துக் கொண்டே சொன்னாள். "தயவு செய்து, படித்துப் பாருங்கள்" என்று வற்புறுத்தினாள்.

லிஸவேத்தா இவானவ்னா கடிதத்தை மேலோட்டமாகப் படித்தாள். அவளைச் சந்திக்க வேண்டும் என்று ஹேர்மன் எழுதியிருந்தான்.

ஹேர்மனின் துணிச்சலான கோரிக்கையும், கடிதத்தைக் கொடுப்பதற்கு அவன் கையாண்ட வழியும் அவளுக்குப் பயத்தை ஏற்படுத்தின. "சிறுமியே? நீ இக்கடிதத்தைத் தவறாக என்னிடம் கொண்டுவந்திருக்கிறாய். இது எனக்கு எழுதப்பட்ட கடிதமல்ல" என்று சொல்லிவிட்டு அந்தக் கடிதத்தைச் சுக்குச் சுக்காகக் கிழித்தெறிந்தாள்.

"கடிதம் உங்களுக்கில்லையென்றால், அதை ஏன் கிழித்தெறிந்தீர்கள்? அதைக் கொடுத்தனுப்பியவரிடம் கொண்டு போய்க் கொடுத்திருப்பேனே" என்று வாதாடினாள் அந்தச் சிறுமி.

சிறுமியின் பேச்சால் அச்சமடைந்த லிஸவேத்தா இவானவ்னாவின் முகம் சிவப்பாக மாறியது. "சிறுமியே, தயவு செய்து, இனி எந்தக் காலத்திலும் இம்மாதிரியான கடிதங்களை என்னிடம் கொண்டுவராதே" என்றாள். "உன்னிடம் இந்தக் கடிதத்தைக் கொடுத்தனுப்பியவரிடம் அவருக்கு வெட்கமில்லையா என்று கேட்டதாகச் சொல்...."

எனினும் ஹேர்மன் தன்னுடைய முயற்சிகளைக் கைவிடவில்லை. லிஸவேத்தா இவானவ்னாவுக்கு நாள்தோறும் பல விதமான வழிகளில் அவனிடமிருந்து கடிதங்கள் வந்து கொண்டிருந்தன. அவன் இப்பொழுது ஜெர்மன் மொழிப் புத்தகங்களிலிருந்து மொழிபெயர்த்து எழுதவில்லை. உணர்ச்சி வேகத்தில் அவனே அந்தக் கடிதங்களைத் தனக்கு இயல்பான நடையில் எழுதினான். அக்கடிதங்கள் அவனுடைய

கட்டுப்பாடில்லாத கற்பனையையும் குன்றாத ஆசையையும் வெளிப்படுத்தின. லிஸவேத்தா இவானவ்னா இப்பொழுது அந்தக் கடிதங்களைத் திருப்பி அனுப்புவதில்லை. அவள் அந்தக் கடிதங்களை ரசித்துப் படிக்க ஆரம்பித்தாள். பிறகு தானும் பதில் எழுதினாள். போகப் போக அவளுடைய கடிதங்களின் நீளம் அதிகரித்தது; அன்பு பெருகி வழிந்தது. கடைசியில் ஒரு நாள் அவள் கீழ்க் கண்ட கடிதத்தை எழுதி சன்னல் வழியாக அவனிடம் போட்டாள்:

''இன்றிரவில் தூதரகத்தில் ஒரு நடனநிகழ்ச்சி இருக்கிறது. சீமாட்டி அங்கே போகிறாள். நாங்கள் இரண்டு மணி வரை அங்கே இருப்போம். என்னைத் தனியாகச் சந்திப்பதற்கு இன்று பொருத்தமான சந்தர்ப்பம் ஏற்படும். சீமாட்டி போனவுடன் அவளுடைய பணியாட்கள் போய் விடுவார்கள். உள் வாசலிலிருக்கும் காவலாள் பெரும்பாலும் தன்னுடைய சிறு அறைக்குள் போய் விடுவான். பதினொன்றரை மணிக்கு நீங்கள் உள்ளே வர வேண்டும். வந்ததும் படிகளில் ஏறி மேலே போக வேண்டும். ஹாலில் யாரையாவது பார்த்தால் சீமாட்டி வீட்டில் இருக்கிறார்களா என்று விசாரியுங்கள். சீமாட்டி வீட்டில் இல்லை என்று சொன்னதும் நீங்கள் வெளியே போய்விட வேண்டும். அநேகமாக ஹாலில் ஒருவரும் இருக்க மாட்டார்கள். எல்லாப் பணிப்பெண்களும் தங்களுடைய அறைக்குள்தான் ஒன்றாக இருப்பார்கள். ஹாலிலிருந்து இடது பக்கமாகத் திரும்பி நேராக நடந்து சென்று சீமாட்டியின் படுக்கையறைக்குள் செல்லுங்கள். அங்கே இரண்டு சிறு கதவுகளுக்கு முன்பாக ஒரு திரையைப் பார்க்கலாம். வலது புறத்தில் படிப்பறை இருக்கிறது. சீமாட்டி அங்கே ஒருபோதும் நுழைவதில்லை. இடது பக்கக் கதவைத் திறந்தால் குறுகலான சுழல் படிகளிருக்கும். அதன் வழியாக என்னுடைய அறைக்கு வரலாம். என் அறையில் நான் வரும் வரை காத்திருங்கள்.''

கடிதத்தில் குறிப்பிடப்பட்ட நேரம் எப்பொழுது வருமென்று ஹேர்மன் பாய்வதற்குத் தயாராயிருக்கும் புலியைப் போலக் காய்த்திருந்தான். பத்து மணிக்கெல்லாம் சீமாட்டியின் வீட்டுக்கு முன்பாகச் சென்று வழக்கமான இடத்தில் காத்துக்கொண்டிருந்தான். பருவநிலை மிகவும் மோசமாக இருந்தது. காற்று ஊளையிட்டது. சுற்றிலும் பனி ஈரத்

துணுக்காக விழுந்து கொண்டிருந்தது. விளக்குகள் மங்கலாக எரிந்து கொண்டிருந்தன. தெருவில் சிறிது கூட நட மாட்டம் இல்லை. ஏதாவது ஒரு கடைசிப் பிரயாணி ஏற மாட்டாரா என்ற நம்பிக்கையில், மெலிந்து போன குதிரை பூட்டியுள்ள வண்டிகள் அவ்வப்பொழுது வந்தன. ஹேர்மன் உள்கோட்டு மட்டுமே அணிந்து கொண்டிருந்தான். காற்றையும் பனியையும் அவன் இலட்சியம் செய்யவில்லை. கடைசியில் சீமாட்டியின் வண்டி வீட்டின் முன்பாக வந்து நின்றது. சீமாட்டி கம்பளி மேலங்கியை அணிந்து கொண்டு வந்தாள். அவளுடைய கூனிப் போன உடம்பை இரண்டு வேலைக்காரர்கள் இரண்டு பக்கத்திலும் தாங்கித் தூக்கிக் கொண்டுவந்ததை ஹேர்மன் பார்த்தான். பக்கத்தில் லேசான மேலங்கியணிந்த இளம் பெண் தலையில் மலர்களைச் சூடிக் கொண்டு நின்றாள். வண்டியின் கதவு படீரென்று சாத்தப்பட்டது. பாதையில் சிதறிக் கிடந்த பனி மீது வண்டி தடதடவென்று ஓடியது. காவலாளி வீட்டின் கதவைச் சாத்தி விட்டான். விளக்குகள் அணைக்கப்பட்டன. சன்னல்களும் இருண்டன. ஒருவருமில்லாத வீட்டுக்கு முன்பாக ஹேர்மன் முன்னும் பின்னும் நடந்து கொண்டிருந்தான். தெரு விளக்கின் அருகே வந்ததும் கையில் அணிந்திருந்த கடிகாரத்தைப் பார்த்தான். பதினொரு மணி முடிந்து இருபது நிமிடங்கள் ஆகியிருந்தன. குறிப்பிட்ட நேரம் வரட்டும் என்று அவன் விளக்கு வெளிச்சத்தின் கீழ் கடிகார முட்களைப் பார்த்தபடியே நின்று கொண்டிருந்தான். மணி சரியாகப் பதினொன்றரை ஆனவுடன் ஹேர்மன் சீமாட்டியின் வீட்டின் படிகளில் ஏறி வாயிலுக்குள் நுழைந்தான். காவலாளி அங்கே இல்லை. பிரகாசமான விளக்குகள் மட்டும் எரிந்து கொண்டிருந்தன. ஹேர்மன் படிகளில் ஏறிச் சென்று ஹாலுக்குள் நுழையும் கதவைத் திறந்தான். உள்ளே விளக்கின் கீழ் மிகவும் பழமையான சாய்வு நாற்காலி ஒன்றில் தூங்கிக் கொண்டிருந்த ஒரு வேலைக்காரனைக் கண்டான். ஹேர்மன் மெதுவாக சப்தமில்லாமல் நடந்து சென்றான். வரவேற்பு அறையும் நடனமாடும் அறையும் இருளில் மூழ்கியிருந்தன. ஹாலில் எரிந்து கொண்டிருந்த விளக்கிலிருந்து வந்த லேசான வெளிச்சம் அந்த அறைகளின் மீது விழுந்தது. ஹேர்மன் படுக்கையறைக்குள் நுழைந்தான். அங்கே பழமையான தெய்வப் படங்களைத்

தொங்கவிடும் சட்டத்துக்கு முன்னுல் ஒரு தங்க விளக்கு மங்கலாக எரிந்து கொண்டிருந்தது. பட்டுத் துணி வைத்துத் தைக்கப்பட்ட பழங்கால சாய்வு நாற்காலிகள், மெல்லிய இறகுகள் அடைக்கப்பட்ட சோபாக்கள், சீனக் காகிதம் ஒட்டப்பட்டிருந்த சுவரோரமாக வரிசையாகப் போடப் பட்டிருந்தன. பாரிஸ் நகரத்தில் m-me Lebrun*வரைந்த இரண்டு ஓவியங்கள் சுவர்களில் தொங்கவிடப்பட்டிருந்தன. ஒரு படத்தில் சிவப்புக் கன்னங்களும் பருமனை உடலும் கொண்ட சுமார் நாற்பது வயது மனிதர் காணப்பட்டார். அவர் பிரகாசமான பச்சை நிறத்தில் இராணுவ உடை அணிந்திருந்தார். அவருடைய மார்பில் ஒரு நட்சத்திரப் பதக்கம் தொங்கியது. அடுத்த படத்தில் கூர்மையான மூக்குடைய ஓர் அழகான இளம் பெண் காணப்பட்டாள். அவள் தலைமுடி இழுத்துப் பின்னப்பட்டு ஒரு ரோஜா மலர் அலங்காரமாகச் சொருகப்பட்டிருந்தது. ஒவ்வொரு மூலையிலும் பீங்கானுல் செய்யப்பட்ட ஆடு மேய்க்கும் பெண்கள், சிறந்த Leroy** கடிகாரங்கள், பெட்டிகள், விசிறிகள், இன்னும் சென்ற நூற்ருண்டின் இறுதியில் சீமாட்டிகளின் பொழுது போக்குக்காகத் தயாரிக்கப்பட்ட பொம்மைகள் முதலியன வைக்கப்பட்டிருந்தன. ஹேர்மன் திரைக்குப் பின்னுல் சென்ருன். அங்கே ஒரு சிறிய இரும்புக் கட்டில் வைக்கப் பட்டிருந்தது. வலது புறத்தில் படிப்பறைக்குச் செல்லும் கதவு; இடது புறத்தில் படிகளுக்குச் செல்லும் வழி. ஹேர்மன் இடது புறக் கதவைத் திறந்து அந்த இளம் பெண்ணின் அறைக்குச் செல்லும் குறுகலான சுழல் படிகளைப் பார்த்தான்.... ஆனுல் ஹேர்மன் திரும்பி இருண்ட படிப் பறைக்குள் நுழைந்தான்.

நேரம் மெதுவாகப் போய்க் கொண்டிருந்தது. எங்கும் ஒரே நிசப்தம். வரவேற்பு அறையிலிருந்த கடிகாரம் பனிரெண்டு மணி அடித்தது. மற்ற அறைகளிலிருந்த கடிகாரங்களும் ஒன்றுக்குப் பின் ஒன்ருக மணியடித்து ஓய்ந்தன. மறுபடியும் ஒரே நிசப்தம். ஹேர்மன் குளிர்ந்திருந்த கணப்பின் மீது சாய்ந்து கொண்டு நிதானமாக நின்ருன். ஆபத்து மிகுந்த ஆனுல் அவசியமான காரியத்தில் ஈடுபடுகின்றவருக்கு

* திருவாட்டி லெப்ரான்.[35]—ப-ர்.
** லெரோய்.—ப-ர்.

ஏற்படுவதைப் போல அவனுடைய இருதயம் சீராக அடித்துக் கொண்டிருந்தது. கடிகாரம் ஒரு மணி அடித்தது; பிறகு இரண்டு மணி அடித்தது. வண்டி தூரத்தில் வருகின்ற சத்தம் கேட்டது. அவனுக்குப் படபடப்பு ஏற்பட்டது. வண்டி வீட்டின் முன்பாக வந்து நின்றது. வண்டியில் படிகளை எடுத்து வைக்கும் சத்தம் காதில் விழுந்தது. வீட்டில் பரபரப்பு ஏற்பட்டது. வேலைக்காரர்கள் ஓடி வருவதும், பலமாகப் பேசுவதும் தெளிவாகக் கேட்டது. விளக்குகள் எரிய ஆரம்பித்தன. மூன்று உயரமான பணிப்பெண்கள் படுக்கையறைக்குள் வேகமாக நுழைந்தனர். சீமாட்டி மிகவும் களைத்துப் போய் உள்ளே வந்து நாற்காலியில் பொத்தென்று விழுந்தாள். ஹேர்மன் கதவு இடுக்கில் ஒரு துவாரத்தின் வழியாகப் பார்த்தான்: லிஸவேத்தா இவானவ்ஞ அவனருகில் நடந்து சென்ருள். அவள் வேகமாகப் படிகளில் இறங்கிச் செல்லும் சத்தம் கேட்டது. ஹேர்மன் மனதில் அவள் மீது பச்சாத்தாப உணர்ச்சி ஏற்பட்டது; ஆனுல் அது உடனே மறைந்து விட்டது. அவன் சிலையைப் போல அங்கே நின்று கொண்டிருந்தான்.

சீமாட்டி நிலைக்கண்ணுடிக்கு முன்ஞல் நின்றபடியே உடைகளை மாற்றிக் கொண்டிருந்தாள். அவளுடைய பணிப்பெண்கள் அவள் தலையிலிருந்து ரோஜா மலர்களால் அலங்கரிக்கப்பட்டிருந்த தொப்பியை எடுத்துவிட்டு, அவளுடைய குட்டையான நரைத்த தலைமுடி மீது வைக்கப்பட்டிருந்த பொய்த்தலை முடியை நீக்கிஞர்கள். அவளைச் சுற்றி ஊசிகள் மழை போலக் கொட்டின. வெள்ளியில் பூவேலை செய்யப்பட்ட மஞ்சள் நிற உடை உடலிலிருந்து நழுவி, அவளுடைய வீங்கிப் போன கால்களின் அருகில் கிடந்தது. அவளுடைய ஒப்பனையின் பயங்கரமான ரகசியங்களை ஹேர்மன் பார்த்தான். கடைசியில் சீமாட்டி இரவு மேலாடையும் இரவுத் தொப்பியும் மட்டுமே அணிந்திருந்தாள். அவளுடைய முதிர்ந்த வயதுக்குப் பொருத்தமான அந்த உடையில் அவளுடைய தோற்றம் முன்மாதிரி பயங்கரமாகவும் அருவருப்பாகவும் இல்லை.

வயது முதிர்ந்த எல்லோரையும் போல சீமாட்டிக்கும் சுலபமாகத் தூக்கம் வராது. பணிப்பெண்கள் அவளுடைய உடையைக் கழற்றிய பிறகு நாற்காலியில் சன்னலுக்கு

அருகே அவள் உட்கார்ந்து கொண்டு பணிப்பெண்களைப் போகச் சொன்னாள். மெழுகுவத்தி விளக்குகளைக் கொண்டு போய் விட்டார்கள். தெய்வப் படங்களுக்குப் பக்கத்தில் எரிந்து கொண்டிருந்த விளக்கிலிருந்து மட்டும் சிறிதளவு வெளிச்சம் மறுபடியும் வந்து கொண்டிருந்தது. அவள் முகம் பித்தமஞ்சள் நிறத்திலிருந்தது. வளைந்த உதடுகள் துடிக்க சீமாட்டி இடப் புறமும் வலப் புறமும் நாற்காலியில் ஆடிக் கொண்டிருந்தாள். அவளிடம் எந்த சிந்தனையும் இல்லை என்பதை மங்கலான கண்கள் காட்டின. அந்தப் பயங்கர மான கிழவியைப் பார்க்கும் பொழுது, அவள் இடப் புறமும் வலப் புறமும் தானாகவே ஆடியதாகத் தோன்றவில்லை; ஏதோ ஒரு இடத்தில் மறைந்திருக்கும் சக்தி அவளை இயக்கிக் கொண்டிருப்பது போலத் தோன்றியது.

சீமாட்டியின் பிரேதக்களை கொண்ட முகத்தில் திடீ ரென்று விவரிக்க முடியாத ஒரு மாற்றம் ஏற்பட்டது. அவ ளுடைய உதடுகளின் துடிப்பு நின்றது. கண்களில் ஒரு பிரகாசம் ஏற்பட்டது. சீமாட்டிக்கு முன்னால் ஒரு அந்நியன் நின்று கொண்டிருந்ததுதான் அதற்குக் காரணமாகும்.

''பயப்படாதீர்கள்! கடவுள் சாட்சியாக பயப்பட வேண் டாம்! என்னால் எந்த ஆபத்துமில்லை. உங்களிடம் ஒரு உத வியைக் கெஞ்சிக் கேட்பதற்காகவே நான் வந்திருக்கிறேன்'' என்று அவன் தணிந்த குரலில் ஆனால் சீமாட்டி தெளிவாகக் கேட்கும்படிச் சொன்னான்.

அந்த மூதாட்டி அவனை மௌனமாகப் பார்த்தாள். அவன் பேச்சை அவள் கேட்கவில்லை என்று தோன்றியது. ஒருவேளை அவள் செவிடாக இருக்கலாம் என்ற எண்ணத்தில் ஹேர்மன் குனிந்து அவள் காதுக்குள் தான் சொன்னதையே திருப்பிச் சொன்னான். மூதாட்டி முன் போலவே மௌன மாக இருந்தாள்.

''என்னுடைய வாழ்க்கை முழுவதும் மகிழ்ச்சியை ஏற் படுத்த உங்களால் முடியும். அது உங்களுக்கு மிகவும் சுலபமே'' என்று ஹேர்மன் தொடர்ந்து பேசினான். ''சீட் டாட்டத்தில் வெற்றியைத் தரக் கூடிய மூன்று சீட்டுகளை நீங்கள் சரியாகச் சொல்லக் கூடும் என்று எனக்குத் தெரி யும்....''

ஹேர்மன் பேச்சை இடையில் நிறுத்தினான். அவன்

பேச்சை சீமாட்டி புரிந்து கொண்டது போலவும் அவனுக்குப் பதிலளிக்க முயற்சிப்பது போலவும் தோன்றியது.

''அது ஒரு வேடிக்கை'' என்று அவள் கடைசியில் சொன்னாள். ''சத்தியமாகச் சொல்கிறேன்! அது வெறும் வேடிக்கையே!'' என்றாள்.

''இது வேடிக்கையான விஷயமல்ல'' என்று ஹேர்மன் கடுகடுப்பான குரலில் சொன்னான். ''சீட்டாட்டத்தில் இழந்த தொகையைப் பெற நீங்கள் உதவி செய்த சப்லீத்ஸ்கியை நினைத்துப் பாருங்கள்.''

சீமாட்டியின் மனதில் திகைப்பு ஏற்பட்டது போலத் தோன்றியது. அவள் முகத்தில் ஏதோ ஒரு உணர்ச்சி அழுத்தமாகத் தோன்றியது. ஆனால் வெகு சீக்கிரத்தில் பழையபடி அக்கறையில்லாமல் அவனைப் பார்த்தாள்.

''நிச்சயமாக வெற்றியைத் தருகின்ற அந்த மூன்று சீட்டு களையும் என்னிடம் சொல்ல நீங்கள் முடியுமா?'' என்று ஹேர்மன் தொடர்ந்து பேசினான்.

சீமாட்டி மௌனமாக இருந்தாள். ஹேர்மன் தொடர்ந்து பேசினான்:

''யாருக்காக அந்த ரகசியத்தை மூடிவைத்திருக்கிறீர் கள்? உங்களுடைய பேரர்களுக்காகவா? அவர்கள் இப் பொழுதே பணக்காரர்கள்தானே; மேலும் அவர்களுக்குப் பணத்தின் மதிப்புத் தெரியாது. அந்த மூன்று சீட்டுகளையும் ஒரு ஊதாரியிடம் சொல்லுவதால் பயனுண்டா? தகப்பனார் விட்டுச் செல்லும் சொத்துக்களைக் காப்பாற்றத் தெரியாத வன், யார், எப்படி உதவி செய்த போதிலும், ஏழ்மையில் தான் மடிவான். நான் ஊதாரியல்ல; எனக்குப் பணத்தின் மதிப்புத் தெரியும். என்னிடம் அந்த இரகசியத்தைச் சொன் னால் அது வீணாகாது. சொல்லுங்கள்!...''

அவன் பேச்சை நிறுத்திவிட்டு அவள் பதிலுக்காகக் கவலை யோடு காத்திருந்தான். சீமாட்டி மௌனமாக இருந்தாள். ஹேர்மன் அவள் காலடியில் விழுந்தான்.

''உங்களிடம் அன்பு என்ற உணர்ச்சி ஒருமுறையாவது ஏற்பட்டிருந்தால், அதன் ஆனந்த பரவசத்தை நீங்கள் அனுபவித்திருந்தால், பிறந்த குழந்தையின் அழு குரலை ஒரு தடவையாவது கேட்டு மெய்சிலிர்த்திருந்தால், உங்களு டைய உடலில் ஏதாவது மனித உணர்ச்சி இருந்தால் உங்

களிடம் மன்றாடிக் கேட்கிறேன்—வாழ்க்கையிலேயே மிகவும் புனிதமானவற்றின் பெயரால் உங்களைக் கேட்கிறேன்! தாய், மனைவி, ஆசைநாயகி என்று எந்த உறவு முறையாக வேண்டுமானாலும் இருக்கட்டும். என்னுடைய வேண்டுகோளை மறுக்க வேண்டாம்! உங்களுடைய இரகசியத்தை என்னிடம் சொல்லுங்கள்! இனிமேல் அதனால் உங்களுக்குப் பயனுண்டா? ஒருவேளை அந்த இரகசியம் பயங்கரமான ஒரு பாவச்செயலோடு சம்பந்தப்பட்டதாக, பேரின்பத்தின் இழப்போடு சம்பந்தப்பட்டதாக, பேயோடு நீங்கள் செய்த உடன்படிக்கையாக இருக்கலாம்.... கொஞ்சம் எண்ணிப் பாருங்கள். உங்களுக்கு வயதாகி விட்டது, இன்னும் அதிக நாட்கள் நீங்கள் உயிரோடிருக்கப் போவதில்லை. உங்களுடைய பாவங்களை நான் ஏற்றுக் கொள்கிறேன். உங்களுடைய இரகசியத்தை மட்டும் என்னிடம் சொல்லுங்கள். ஒரு மனிதப் பிறவியின் ஆனந்தமான வாழ்க்கை உங்கள் கையிலிருப்பதாக நினைத்துக் கொள்ளுங்கள். நான் மட்டுமல்ல, என்னுடைய மக்கள், பேரர்கள், இன்னும் அவர்களுக்குப் பிறகு வரப் போகின்றவர்கள் ஆகிய எல்லோரும் உங்கள் நினைவைப் போற்றுவார்கள்; உங்களைப் புனிதமாகக் கருதி வழிபடுவார்கள்....''

அந்த மூதாட்டி எதுவும் பேசவில்லை.

ஹேர்மன் எழுந்திருந்தான்.

''கிழட்டுப் பிசாசே!'' என்று பற்களைக் கடித்துக் கொண்டு கத்தினான். ''உன்னை பதில் சொல்ல வைப்பேன்....''

இப்படிச் சொல்லிவிட்டுப் பையிலிருந்து ஒரு கைத்துப்பாக்கியை உருவினான்.

கைத்துப்பாக்கியைப் பார்த்ததும் சீமாட்டியின் முகத்தில் மீண்டும் அழுத்தமான உணர்ச்சிகள் தோன்றின. அவள் தலையைக் குலுக்கினாள்; துப்பாக்கி குண்டைத் தடுப்பது போல் கையைத் தூக்கினாள்.... பிறகு நாற்காலியில் விழுந்தாள்... அப்படியே அசையாமல் கிடந்தாள்.

''நீ என்ன குழந்தையா? சொல்'' என்று ஹேர்மன் அவள் கையைப் பிடித்துக் கொண்டு சொன்னான். ''கடைசித் தடவையாகக் கேட்கிறேன்: அந்த மூன்று சீட்டுகளை என்னிடம் சொல்லப் போகிறாயா, இல்லையா? உண்டா? இல்லையா?''

சீமாட்டியிடமிருந்து பதில் வரவில்லை. அவள் செத்துப் போய் விட்டாள் என்பதை ஹேர்மன் கண்டான்.

## 4

7 Mai 18...
Homme sans moeurs
et sans religion.*
**கடிதப் போக்குவரத்து**

லிஸவேத்தா இவானவ்னு நடனத்துக்குச் சென்ற போது அணிந்து கொண்டிருந்த உடைகளை இன்னும் மாற்றுமல் தன்னுடைய அறையில் தீவிரமான சிந்தனைகளில் மூழ்கியிருந்தாள். அவள் வீட்டுக்குத் திரும்பியதும், தூக்கக் கலக்கத்தோடு விருப்பமில்லாமல் தனக்கு உதவி செய்ய வந்த பணிப்பெண்ணிடம் வேண்டாம், நானே உடையை மாற்றிக் கொள்கிறேன் என்று சொன்னுள். பிறகு அவளுடைய இதயம் துடிதுடிக்க வேகமாகத் தன்னுடைய அறைக்குத் திரும்பினுள். ஹேர்மன் அங்கே இருப்பான் என்று அவள் நம்பியபோதிலும் அவன் இல்லாதிருப்பதையே விரும்பினுள். உள்ளே நுழைந்ததும் அவன் இல்லை என்பதை உடனே கண்டதும் தங்களுடைய அந்தரங்கமான சந்திப்பு நடைபெறுமல் செய்த கடவுளுக்கு நன்றி சொன்னுள். அவள் உடையை மாற்றுமல் உட்கார்ந்தபடியே, கடந்த சிறிது காலத்தில் தன்னுடைய வாழ்க்கையில் நடைபெற்றிருக்கும் எல்லா நிகழ்ச்சிகளையும் பற்றி மனதில் சிந்தித்துக் கொண்டிருந்தாள். சன்னலுக்கு வெளியே அந்த இளைஞனை முதல் தடவையாகப் பார்த்து மூன்று வாரங்கள் கூட முடியவில்லை. அதற்குள் அவர்களுக்கிடையே கடிதத் தொடர்பு, இரவில் அவனைத் தனியே சந்திக்க ஏற்பாடு—இப்படி முன்னேறி விட்டாள். சில கடிதங்களில் அவன் கையெழுத்திட்டிருந்ததனுல்தான் அவன் பெயராவது அவளுக்குத் தெரியும். அவள்

---

* 18... வருடம், மே மாதம், ஏழாந்தேதி. தார்மிக நியதிகள் எதுவும் இல்லாத, எதையும் புனிதமாக நினைக்காத மனிதன்.—ப-ர்.

இது வரை அவனிடம் பேசியதில்லை; அவன் குரலைக் கேட்டதில்லை; அன்றைய மாலை வரை.... அவனைப் பற்றி எதுவும் கேள்விப்பட்டதுமில்லை. அது அவள் சற்றும் எதிர்பாராமல் நடைபெற்றது. அன்று மாலையில் நடனத்தின் போது இளவரசி பலீனு மீது தோம்ஸ்கிக்குக் கோபம். அன்று அவள் விளையாட்டாக வேறொருவரோடு நடனமாடியதுதான் காரணம். எனவே பழிக்குப் பழியாக அவளை அலட்சியம் செய்வதாகக் காட்ட விரும்பினார். எனவே தன்னோடு நடனமாடுவதற்கு லிஸவேத்தா இவானவ்னுவை அழைத்தார்; மஸூர்க்கா நடனத்தின் முடிவில்லாத வலைப்பின்னலில் இருவரும் இணைந்து நடனமாடினர். அவளுக்கு இராணுவ என்ஜினீயர்களைத்தான் பிடிக்குமா என்று தோம்ஸ்கி சதா கேலி செய்ததோடு அவளைப் பற்றி தனக்கு எவ்வளவு தெரியும் என்பதை அவள் கற்பனை செய்யக் கூட முடியாது என்றார். சில சமயங்களில் அவருடைய கிண்டல் அவளுடைய மனதில் சுரீர் என்று தைத்தது. எப்படியோ தன்னுடைய இரகசியத்தை அவர் கண்டுபிடித்து விட்டார் என்று லிஸவேத்தா இவானவ்னு சந்தேகிக்கும்படியாக அவருடைய பேச்சு இருந்தது.

''இதை உங்களிடம் சொன்னது யார்?'' என்று சிரித்துக் கொண்டே அவள் கேட்டாள்.

''உங்களுக்குத் தெரிந்த ஒரு நபரின் நண்பன் என்னிடம் கூறினன்'' என்றார் தோம்ஸ்கி. ''குறிப்பிடத்தக்க நபர் தான்!''

''யார் இந்தக் குறிப்பிடத்தக்க நபர்?'' என்று அவள் கேட்டாள்.

''அவனுடைய பெயர் ஹேர்மன்'' என்றார்.

லிஸவேத்தா இவானவ்னுவால் ஒன்றும் பேச முடியவில்லை. ஆனல் அவளுடைய கைகளும் கால்களும் பனிக்கட்டியைப் போலக் குளிர்ந்து விட்டன....

''இந்த ஹேர்மன் அதிகமான கற்பனைகள் உள்ளவன்: நெப்போலியனின் முகத் தோற்றமும் மெபிஸ்தாபிலிஸின் ஆன்மாவும் கொண்டவன். அவன் குறைந்தது மூன்று பெருங் குற்றங்களைச் செய்திருப்பதாக எனக்கு ஞாபகம். உங்களது முகம் ஏன் இப்படி வெளுத்துப் போய் விட்டது?...''

''எனக்குத் தலையை வலிக்கிறது.... அந்த நபர்.... அவர்

பெயரென்ன? ஹேர்மன். அவர் உங்களிடம் என்ன சொன்ஞர்?...''

''ஹேர்மனுக்குத் தன்னுடைய நண்பனைப் பற்றி அதிகமான அதிருப்தி. தாஞக இருந்தால் வேறுவிதமாக நடந்து கொண்டிருப்பேன் என்றும் சொல்கிருராம்.... ஹேர்மனுக்கு உங்களை மிகவும் பிடித்திருக்கிறது என்று நினைக்கிறேன். ஏனென்ருல் அந்த நண்பன் உங்களைப் பாராட்டும் பொழுதெல்லாம் மிக உற்சாகமாகக் கேட்டுக் கொண்டிருக்கிருன்.''

''ஆஞல் அவர் என்னை எங்கே பார்த்திருக்க முடியும்?''

''மாதாகோவிலில் அல்லது சீமாட்டியோடு வெளியே போகும் பொழுது பார்த்திருக்கலாம்.... எங்கே பார்த்தான் என்பது கடவுளுக்குத்தான் தெரியும்! உங்களுடைய அறையிலேயே நீங்கள் தூங்கிக் கொண்டிருக்கும் பொழுது பார்த்திருக்கலாம். அவன் எதையும் செய்யக் கூடியவன்....''

மூன்று சீமாட்டிகள் அருகே வந்தனர். ''Oubli ou regret?"* என்று அவரிடம் கேட்டனர். உடனே லிஸவேத்தா இவானவ்ஞ மிகுந்த ஆர்வத்தோடும் வேதனையோடும் கேட்டுக் கொண்டிருந்த உரையாடல் தடைப்பட்டது.

தோம்ஸ்கி நடனஜோடியாக இளவரசியைத் தேர்ந்தெடுத்தார். இருவரும் நடன அரங்கை ஒரு சுற்றுச் சுற்றியதும் அவர்களிடையே சமாதானம் ஏற்பட்டது. அந்த நடனம் முடிந்த பொழுது தோம்ஸ்கிக்கு ஹேர்மனைப் பற்றியோ லிஸவேத்தா இவானவ்ஞவைப் பற்றியோ எந்த அக்கறையும் இல்லை. அவள் நின்று போன உரையாடலைத் தொடர்வதற்கு விரும்பிஞள். ஆஞல் மஸூர்க்கா முடிவடைந்தது. சற்று நேரத்துக்குப் பிறகு முதிய சீமாட்டி அங்கிருந்து புறப்பட்டாள்.

தோம்ஸ்கி சொன்னது நடன அரங்கில் வழக்கமாகப் பேசப்படும் கிசுகிசுப் பேச்சே. ஆஞல் காதல் வயப்பட்ட அந்த இளம் பெண்ணின் மனதில் அது ஆழமாகப் பதிந்தது. ஹேர்மனைப் பற்றிய தோம்ஸ்கியின் வருணனை அவள் மனதில் தாஞகவே உருவாக்கிய சித்திரத்துக்குப் பொருத்தமாக இருந்தது. சமீபத்தில் வெளியான நாவல்களில் அத்தகைய நபர்களைப் பற்றி விரிவாக எழுதப்பட்ட காரணத்தால்,

---

* எது வேண்டும், மறதியா அல்லது வருத்தமா?—ப-ர்.

அவள் மனதில் ஒரே சமயத்தில் கவலையும் ஏற்பட்டது; கற்பனைகளும் பெருகின. அவள் மேல்சட்டையில்லாமல் கைகளை மடக்கியபடி உட்கார்ந்திருந்தாள். இன்னும் மலர்கள் சூடிய அவளுடைய தலையில் பாதி வெளியே தெரிந்த மார்பின் மீது கவிந்திருந்தது.... திடீரென்று கதவு திறந்தது. ஹேர்மன் உள்ளே நுழைந்தான். அவள் உடலெங்கும் உணர்ச்சி பொங்கியது....

''நீங்கள் எங்கே இருந்தீர்கள்?'' என்று மெதுவான குரலில் பயத்தோடு கேட்டாள்.

''முதிய சீமாட்டியின் படுக்கை அறையில் இருந்தேன். இப்பொழுது அங்கிருந்துதான் வருகிறேன். சீமாட்டி மரண மடைந்து விட்டாள்'' என்றான் ஹேர்மன்.

''அட கடவுளே!...உண்மையாகச் சொல்கிறீர்களா?...''

''அவளுடைய மரணத்துக்கு நானே காரணம் என்று நினைக்கிறேன்'' என்று ஹேர்மன் தொடர்ந்து சொன்னான்.

லிஸவேத்தா இவானவ்னு அவனை கவனமாகப் பார்த்தாள். அவன் குறைந்தது மூன்று பெருங்குற்றங்களைச் செய்திருப்பதாக ஞாபகம் என்று தோம்ஸ்கி அவனைப் பற்றிச் சொன்னதை அவள் திரும்பத் திரும்ப நினைத்துக் கொண்டாள். ஹேர்மன் அவளருகிலுள்ள சன்னலின் விளிம்பில் உட்கார்ந்து கொண்டு நடந்தது எல்லாவற்றையும் சொன்னான்.

லிஸவேத்தா இவானவ்னு அவன் சொன்னதை மிகுந்த வெறுப்போடு கேட்டுக் கொண்டிருந்தாள். அப்படியானால் அவன் எழுதிய உணர்ச்சி மயமான இந்தக் கடிதங்கள், தீவிர மான இந்த வேண்டுகோள்கள், துணிச்சலோடு தன்னை விடாப்பிடியாகத் தொடர்ந்தது—இவையனைத்தும் பொய் தானா? பணம்—அவனுடைய ஆன்மா அதைத்தான் தேடுகிறது! அவனுடைய விருப்பங்களைப் பூர்த்தி செய்ய, அவனை மகிழ்ச்சியோடு வைத்திருக்க அவளால் நிச்சயமாக முடியாது! அவள் தன்னையறியாமல் ஒரு குற்றவாளியின் கூட்டாளியாக; தனக்கு ஆதரவு கொடுத்த முதிய சீமாட்டியைக் கொலை செய்தவனுக்குக் கூட்டாளியாக இருந்திருக்கிறாள்!... அவள் தன்னுடைய தவறுகளுக்குப் பரிகாரம் தேடுவது போல விம்மிவிம்மியழுதாள். ஹேர்மன் மௌனமாக அவளைப் பார்த்துக் கொண்டிருந்தான். அவனுடைய

மனதிலும் வேதனை ஏற்பட்டிருந்தது. ஆனால் அந்த ஏழைப் பெண் வடித்த கண்ணீருக்காக அவன் வேதனைப்படவில்லை. அவளுடைய சோகத்தின் நயமான அழகு அவனுடைய இதயத்தைத் தொடவில்லை. மரணமடைந்த வயோதிகச் சீமாட்டியைப் பற்றியும் அவன் சிறிதும் கவலைப்படவில்லை. ஒரே ஒரு விஷயம் அவனுக்கு அதிர்ச்சியாக இருந்தது: எந்த இரகசியம் தன்னைப் பெரும் பணக்காரனாக மாற்றும் என்று நினைத்தானோ, அந்த இரகசியம் இனி திரும்பக் கிடைக்க முடியாதபடிப் போய்விட்டதை நினைக்கும் பொழுது அவன் மிகவும் வேதனைப்பட்டான்.

''நீ ஒரு கொடியவன்!'' என்று கடைசியாகக் கூறினாள் லிஸவேத்தா இவானவ்னா.

''அவள் மரணத்தை நான் எதிர்பார்க்கவில்லை. இத் தனைக்கும் என்னுடைய கைத்துப்பாக்கியில் குண்டு இல்லை'' என்றான் ஹேர்மன்.

அவர்கள் இருவரும் மௌனமாக இருந்தனர்.

பொழுது புலர்ந்து கொண்டிருந்தது. லிஸவேத்தா இவானவ்னா மெழுகுவத்தியை அணைத்தாள். மங்கலான வெளிச்சம் அவளுடைய அறைக்குள் நுழைந்தது. அவள் அழுது சிவந்து போயிருந்த தன்னுடைய கண்களை ஹேர் மனின் முகத்தை நோக்கி உயர்த்தினாள். அவன் கை களைக் கட்டிக் கொண்டு, முகத்தைச் சுளித்துக் கொண்டு பயமுறுத்துவதைப் போல சன்னல் விளிம்பில் உட்கார்ந் திருந்தான். அவனைப் பார்க்கும் பொழுது நெப்போலியனின் தோற்றம் நினைவுக்கு வந்தது. லிஸவேத்தா இவானவ்னா கூட அந்த ஒற்றுமையைக் கண்டு வியப்படைந்தாள்.

''வீட்டிலிருந்து எப்படி வெளியே போவீர்கள்?'' என்று சிறிது நேர மௌனத்துக்குப் பிறகு அவள் கேட்டாள். ''மறைவான படிக்கட்டின் வழியாக உங்களைக் கூட்டிக் கொண்டு போக நினைத்திருந்தேன். ஆனால் அப்படிப் போவ தென்றால் அந்தப் படுக்கையறையின் வழியாகப் போக வேண்டும். எனக்குப் பயமாக இருக்கிறது'' என்றாள்.

''அந்த மறைவான படிக்கட்டுகள் எங்கே இருக்கின்றன என்று சொல்லுங்கள். நான் தனியாகப் போய் விடுவேன்'' என்றான் ஹேர்மன்.

லிஸவேத்தா இவானவ்னா எழுந்து போய் அலமாரியைத்

திறந்து ஒரு சாவியை எடுத்துக் கொண்டு வந்தாள். ஹேர் மனிடம் அதைக் கொடுத்து எப்படிப் போக வேண்டும் என்று விவரமாக விளக்கினாள். ஹேர்மன் குளிர்ந்து உயிர்த் துடிப்பில்லாதிருந்த அவளுடைய கையை அழுத்தி அவ ளுடைய குனிந்த தலையில் முத்தமிட்டு விட்டுப் புறப் பட்டான்.

அவன் அந்தச் சுழல் படிக்கட்டுகளின் வழியாக மீண்டும் சீமாட்டியின் படுக்கையறைக்குள் வந்தான். அந்த மூதாட்டி சிலையாக மாறிவிட்டது போல உட்கார்ந்திருந்தாள். அவ ளுடைய முகத்தில் ஆழ்ந்த அமைதி நிலவியது. ஹேர்மன் அவளுடைய மரணம் உண்மைதான் என்று தனக்குள் உறுதி செய்து கொள்பவனைப் போல அவள் முன்பாக வெகு நேரம் நின்று கொண்டு பார்த்தான். கடைசியில் அவன் படிப் பறைக்குள் சென்று சுவரைத் தடவிப் பார்த்து அந்த மறைவான படிக்கட்டுகளைக் கண்டுபிடித்தான். அந்த இருண்ட படிக்கட்டுகளின் வழியாக இறங்கிய பொழுது விசித்திரமான உணர்ச்சிகளுக்கு அவன் ஆளானான். ஒருவேளை அறுபது வருடங்களுக்கு முன்பு இதே நேரத்தில் ஒரு இளம் அதிருஷ்டக்காரன், சித்திர வேலை செய்யப்பட்ட நீண்ட கோட்டு அணிந்து, மும்முனைத் தொப்பியை நெஞ்சோடு சேர்த்து அணைத்தவாறு தன்னுடைய இளம் காதலியைப் பார்க்க இந்த ரகசியப் படிக்கட்டுகளின் வழியாக வந்திருப் பான்; அவனுடைய உடல் சமாதியின் கீழ் நெடுங்காலத் துக்கு முன்பே அழிந்து போயிருக்கும்; அவனுடைய முதிய காதலியின் மூச்சு இன்று நின்று விட்டது.... என்று ஹேர்மன் நினைத்தான்.

படிக்கட்டுகள் முடிவடைகின்ற இடத்தில் ஒரு கதவு இருந்தது. ஹேர்மன் அந்தக் கதவை அதே சாவியால் திறந்து எதிரிலிருந்த பாதை வழியாகத் தெருவுக்கு வந்து சேர்ந் தான்.

## 5

*இன்றிரவில் காலஞ்சென்ற சீமாட்டி வி... என் கனவில் தோன்றினாள். வெள்ளை உடையில் என்னிடம் சொன்னாள்: ''பிரிவி கவுன்சிலரே, வணக்கம்!''*

**ஸ்வெதென்பர்க்[36]**

*சீமாட்டி மரணமடைந்த மூன்றாவது நாளன்று காலை ஒன்பது மணிக்கு துறவி மடத்தில் அவளுக்கு நடைபெற்ற நினைவுப் பிரார்த்தனைக்கு ஹேர்மன் போனான். அவன் மனதில் தன்னுடைய செயலுக்காக அதிகமான வருத்தமோ கழிவிரக்கமோ ஏற்படவில்லை என்ற போதிலும் மனச்சாட்சி அவனை உறுத்தியது; அந்தக் கிழவியை நீதான் கொலை செய்தாய் என்று குற்றம் சாட்டியது. அவனிடம் உண்மையான மதப்பற்று இல்லை; ஆனால் பல மூடநம்பிக்கைகள் குடிகொண்டிருந்தன. காலஞ்சென்ற சீமாட்டி தன்னுடைய எதிர்கால வாழ்க்கையைச் சிதைத்து விடலாம் என்று நம்பினான். எனவே அவளிடம் மன்னிப்புக் கோருவதற்காக இறுதிச் சடங்குகளுக்குப் போக முடிவு செய்தான்.*

*மாதாகோவிலில் அதிகமான கூட்டம் இருந்தது. பெருங் கூட்டத்தினரிடையே ஹேர்மன் சிரமத்தோடு முண்டியடித்துக் கொண்டு போனான். வெல்வெட் துணியாலான பிணச் சீலையின் மேல் ஆடம்பரமான சவப்பெட்டி வைக்கப் பட்டிருந்தது. செத்துப் போன முதியவளுக்கு வெள்ளை ஸாட்டின் துணியாலான உடை அணிவிக்கப்பட்டிருந்தது. தலையில் பின்னல் வேலை செய்யப்பட்ட தொப்பி இருந்தது. அவளுடைய கைகளை மார்பின் மீது மடித்து வைத்திருந்தனர். சவப்பெட்டியைச் சுற்றிலும் அவளுடைய குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் நின்று கொண்டிருந்தார்கள்: கறுப்பு உடையணிந்த வேலைக்காரர்கள், தோளிலே நாடா*

அணிந்து மெழுகுவத்தி விளக்குகளைப் பிடித்துக் கொண்டு நின்ருர்கள்; அவளுடைய மக்கள், பேரர்கள், கொள்ளுப் பேரர்கள் ஆழ்ந்த துக்கத்தோடு அங்கே நின்ருர்கள். அந்த இடத்தில் கண்ணீர் வடிப்பது une affectation* கருதப் படுமாதலால் ஒருவரும் கண்ணீர் வடிக்கவில்லை. சீமாட்டிக்கு மிகவும் அதிகமான வயதாகிவிட்டபடியால் அவளுடைய திடீர் மரணத்தைப் பற்றி யாரும் ஆச்சரியப்படவில்லை. மேலும் அவள் முன்பே மரணமடைந்திருக்க வேண்டும் என்று பல உறவினர்கள் நினைத்ததுமுண்டு. ஓர் இளம் மதபோதகர் நினைவுப் பிரார்த்தனையை உருக்கமாக நடத்திஞர். அந்த சீமாட்டியின் தெய்வ நம்பிக்கையையும் அவளுடைய அமைதியான மரணத்தையும் எளிமையான சொற்களில் ஆனுல் உள்ளத்தைத் தொடும்படியாக எடுத்துச் சொன்ஞர். அவளுடைய நீண்ட வாழ்க்கையானது கிறிஸ்தவ சமயத்தின் படி அமைந்திருக்கும் மரணத்துக்கு ஒரு அமைதியான தயாரிப்பாகவே இருந்தது என்ருர். ''மரணத்தின் தூதுவன் தோன்றிய நேரத்தில், நடுநிசியில் வருகின்ற அந்த மணமகனை எதிர்பார்த்துக் கொண்டு அவள் விழித்திருந்தாள்; தெய்விகமான சிந்தனைகளில் மூழ்கியிருந்தாள்'' என்ருர். இறுதிப் பிரார்த்தனை அதற்குரிய சோகமான சம்பிரதாயங்களுடன் நிறைவு பெற்றது. அவளுடைய உடலுக்கு விடை கொடுப்பதற்கு முதலில் உறவினர்கள் சவப்பெட்டியின் அருகில் சென்ருர்கள். அவர்களுக்குப் பிறகு தங்களுடைய வீணை ஆரவாரக் கேளிக்கைகளில் நெடுங்காலமாகத் தவருது பங்கு கொண்டிருந்த மூதாட்டிக்கு விடை கொடுப்பதற்கு அங்கே வந்திருந்த எண்ணற்ற நண்பர்கள் சென்ருர்கள். பிறகு வீட்டில் பணியாற்றிய பலவிதமான அலுவலர்கள் எல்லோரும் சென்ருர்கள். கடைசியாக, அந்த சீமாட்டியின் வீட்டில் நெடுங்காலமாகப் பணியாற்றி வருகின்ற ஒரு வேலைக்காரக் கிழவி வந்தாள். அவளுக்கு அந்த சீமாட்டியின் வயது இருக்கும். இரண்டு இளம் பணிப்பெண்கள் அவளை இரு பக்கத்திலும் தூக்கி நிறுத்திஞர்கள். தரையில் முழந்தாளிடுவதற்கு அவள் உடலில் வலுவில்லை. அவள் சீமாட்டியின் குளிர்ந்து போன கரத்தை முத்தமிட்ட

* பாசாங்கு செய்வதாக.—ப-ர்.

பொழுது அவள் கண்களிலிருந்து மட்டுமே கண்ணீர் வடிந்தது. பிறகு ஹேர்மன் சவப்பெட்டியின் அருகில் போகத் துணிந்தான். அவன் குனிந்து வணங்கினன்; பிர் மரத்தின் கிளைகள் சிதறிக் கிடந்த அந்தக் குளிர்ந்த பூமியில் சில விஞடிகள் குப்புறப் படுத்து தன்னுடைய மரியாதையைச் செலுத்தினன். கடைசியில், அந்தப் பிரேதத்தைப் போலவே வெளுத்த நிறத்தில் தோன்றிய ஹேர்மன் எழுந்து பாடையை நோக்கிப் படிகளில் ஏறினன். பிறகு குனிந்து சீமாட்டியின் உடலைப் பார்த்தான்.... அந்த நேரத்தில் செத்துப் போன மூதாட்டி அவனை விநோதமாகப் பார்ப்பது போலவும் கண்ணைச் சிமிட்டுவது போலவும் அவனுக்குத் தோன்றியது. அவன் உடனே வேகமாகப் பின்வாங்கிய பொழுது, படிதவறிக் குப்புற விழுந்தான். அங்கேயிருந்தவர்கள் அவனைத் தூக்கினர்கள். அதே நேரத்தில் லிஸவேத்தா இவானவ்ன மயக்கமடைந்ததால் அவளை மாதா கோவிலுக்கு வெளியே தூக்கிக் கொண்டு போனர்கள். இந்த சம்பவம் சோகம் நிறைந்த இறுதிச் சடங்கின் கம்பீரத்தைச் சில நிமிடங்களுக்குக் குலைத்தது. கூட்டத்திலிருந்து கசமுசவென்று பேச்சுச் சத்தம் கேட்டது. சீமாட்டியின் நெருங்கிய சொந்தக்காரரான ஒரு ஒல்லியான நபர் தம் அருகில் நின்றுகொண்டிருந்த ஆங்கிலேயரின் காதில், ''அந்த இளம் அதிகாரி சீமாட்டியின் தவறுன உறவில் பிறந்த மகன்'' என்று சொன்னர். அதைக் கேட்ட ஆங்கிலேயர் தமது வறண்ட குரலில் "Oh?"* என்றுர்.

ஹேர்மன் அன்று முழுவதும் மிகுந்த படபடப்போடு இருந்தான். நெடுந்தொலைவிலிருந்த ஒரு தனியான விடுதிக்குச் சென்று உணவருந்தினன். பிறகு கவலையை மறக்க வேண்டும் என்ற எண்ணத்தில் வழக்கத்துக்கு மாருக அதிகமாக மதுவருந்தினன். ஆனல் மது அவனுடைய வீணன கற்பனையை மேலும் அதிகப்படுத்தியது. அவன் தன்னுடைய வீட்டுக்குத் திரும்பியதும் உடைகளை மாற்றுமல், படுக்கையில் அப்படியே படுத்துத் தூங்கினன்.

அவன் விழித்துக் கொண்ட பொழுது இரவு நெடு நேரமாகியிருந்தது. நிலவின் வெளிச்சத்தில் அவனுடைய அறை

---

* அப்படியா?—ப-ர்.

பிரகாசமாக இருந்தது. அவன் கடிகாரத்தைப் பார்த்தான்: அப்பொழுது மணி இரண்டே முக்கால். அவன் மேலும் தூங்க விரும்பாததால், படுக்கையில் உட்கார்ந்து கொண்டு, வயோதிகச் சீமாட்டியின் இறுதிச் சடங்கைப் பற்றி நினைத்துக் கொண்டிருந்தான்.

அப்பொழுது தெருவிலிருந்து யாரோ சன்னல் வழியாக அவனை எட்டிப் பார்த்துவிட்டு உடனே பின்வாங்கிக் கொண்டார். ஹேர்மன் அதைப் பற்றிக் கவலைப்படவில்லை. ஒரு நிமிடத்துக்குப் பிறகு முன்புறக் கதவு திறக்கப்படும் சத்தம் கேட்டது. தனது பணியாள் இரவு நேரக் களியாட்டத்துக்குப் பிறகு வழக்கம் போலக் குடிமயக்கத்தில் வந்து கதவைத் திறப்பதாக நினைத்துக் கொண்டான். ஆனால் சிறிது வித்தியாசமான காலடிச் சத்தங்கள் கேட்டன; யாரோ செருப்புக்காலில் மெதுவாக நடந்து வருவதை உணர்ந்தான். அவனுடைய அறைக் கதவு திறந்தது. வெள்ளை உடையணிந்த ஒரு கிழவி உள்ளே நுழைந்தாள். தன்னை ஒரு காலத்தில் வளர்த்து இப்பொழுது வயதாகிவிட்ட செவிலித்தாய் வந்திருக்கிறாள் என்று ஹேர்மன் நினைத்தான். ஆனால் இந்த இரவு நேரத்தில் அவள் வருவதற்குக் காரணமென்ன என்று ஆச்சரியப்பட்டான். ஆனால் அந்த வெள்ளை உடையணிந்த கிழவி திடீரென்று அவனுக்கு மிகச் சமீபத்தில் வந்தாள். செத்துப்போன சீமாட்டி வந்திருக்கிறாள் என்பதை ஹேர்மன் உணர்ந்தான்.

"உன்னைப் பார்க்க நான் விரும்பாவிட்டாலும், உன்னுடைய வேண்டுகோளை நிறைவேற்றுமாறு எனக்கு உத்தரவு கிடைத்திருக்கிறது" என்று அவள் உறுதியான குரலில் பேசினாள். "மூன்று, ஏழு, ஆஸ்— இவை மூன்றும் அடுத்தடுத்து உனக்கு வெற்றியைத் தரக் கூடிய சீட்டுகள். ஆனால் நீ ஒரு நாளைக்கு ஒரு முறையே பந்தயம் கட்டி விளையாட வேண்டும். பிறகு உன் வாழ்க்கையில் என்றுமே சீட்டாடக் கூடாது. நீ என்னுடைய வளர்ப்புப் பெண் லிஸவேத்தா இவானவ்னாவைத் திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்ற நிபந்தனையின் பேரில் என்னுடைய மரணத்துக்கு நீ காரணமாயிருந்ததை மன்னிக்கிறேன்...."

இதைச் சொன்னதும் அவள் மெதுவாகக் கதவை நோக்கித் திரும்பினாள்; பிறகு மறைந்து விட்டாள். வீட்டின்

முன்கதவு சாத்தப்படும் சத்தம் கேட்டது. மறுபடியும் சன்னல் வழியாக யாரோ அவனை உற்றுப் பார்ப்பது ஹேர் மனுக்குத் தெரிந்தது.

ஹேர்மன் வெகு நேரத்துக்குப் பிறகே சுய உணர்வைப் பெற்றான். அவன் அடுத்த அறைக்குள் போன பொழுது பணியாள் தரையில் படுத்துத் தூங்கிக் கொண்டிருப்பதைப் பார்த்தான். அவனை மிகவும் சிரமப்பட்டு எழுப்பினான். அவன் வழக்கம் போலக் குடிமயக்கத்திலிருந்ததனால் ஹேர் மனால் எந்தத் தகவலையும் பெறுவதற்கு முடியவில்லை. வாசல் கதவு உட்புறத்தில் தாளிடப்பட்டிருந்தது. ஹேர்மன் தன்னுடைய அறைக்குத் திரும்பி, மெழுகுவத்தி விளக்கை ஏற்றினான். தன்னுடைய விசித்திரமான அனுபவத்தை எழுதி வைத்துக் கொண்டான்.

6

— கவனம்!

— என்னைப் பார்த்து கவனம் என்று சொல்ல உனக்கு அவ்வளவு தைரியமா?

—மேன்மை தங்கிய பிரபு அவர்களே! கவனித்துப் போங்கள் என்றுதானே சொன்னேன்.

பௌதிக உலகத்தில் இரண்டு சடப்பொருள்கள் ஒரே இடத்தில் இருக்க முடியாததைப் போல நமது தார்மிக உலகத்திலும் இரண்டு நிலையான கருத்துக்கள் ஒன்றுசேர்ந் திருக்க முடியாது. மூன்று, ஏழு, ஆஸ் என்ற மூன்று சீட்டு களும் ஹேர்மனின் மனதில் இறந்து போன மூதாட்டியின் நினைவுகளை விரைவில் அழித்து விட்டன. மூன்று, ஏழு, ஆஸ் என்ற சிந்தனை அவன் மனதிலும் உதட்டிலும் எப்போது மிருந்தது. ஓர் இளம் பெண்ணைப் பார்த்தால் அவன் உடனே ''ஆடுதன் மூன்றைப் போல எவ்வளவு அழகாக இருக்கிறாள்!'' என்று சொன்னான். ''மணி என்ன'' என்று யாரும் கேட்டால் ''ஏழுக்கு ஐந்து நிமிடம் இருக்கிறது'' என்று சொல்வான். பெருத்த வயிறுடன் யாரும் வந்தால் ஆஸ் மாதிரி இருக்கிறார் என்று நினைத்துக் கொள்வான். மூன்று, ஏழு, ஆஸ் பலவிதமான வடிவங்களில் அவனுடைய கனவு களில் திரும்பத் திரும்ப வந்து கொண்டிருந்தன. திடீரென்று மூன்று ஒரு பெரிய பூவைப் போல பெரிதாக மலர்ந்தது; ஏழு கோத்திக் கட்டிடத் தூண்களைப் போலத் தோன்றியது; ஆஸ் ஒரு பெரிய சிலந்திப் பூச்சியாக வடிவமெடுத்தது. எந்த இரகசியத்தைத் தெரிந்து கொள்வதற்காக அவன் அதிகமான துன்பங்களை ஏற்றுக் கொண்டானோ, அந்த இரக சியத்தைப் பயன்படுத்திப் பணத்தைக் குவிக்க வேண்டு மென்ற ஒரே எண்ணம்தான் இப்பொழுது அவனுக்கு ஏற் பட்டிருந்தது. இராணுவத்திலிருந்து விலகிக் கொண்டு வெளி

நாடுகளுக்குப் போக விரும்பினுன். பாரிஸ் மாநகரத்தின் சூதாட்ட விடுதிகளுக்குப் போய் அதிருஷ்ட தேவதையின் கரங்களிலிருந்து பொற்குவியலைப் பறிக்க வேண்டும் என்ற வேட்கை அவனிடம் ஏற்பட்டது. எதிர்பாராதபடி ஒரு நல்ல சந்தர்ப்பம் அவனுக்கு ஏற்பட்டது.

மாஸ்கோவில் அப்பொழுது பெரும் பணக்காரர்கள் சூதாடுவதற்கென்று செகலீன்ஸ்கி என்ற புகழ்பெற்ற ஒருவரின் தலைமையில் ஒரு குழு இயங்கி வந்தது. அவர் தம்முடைய வாழ்க்கை முழுவதையுமே சீட்டாட்டத்தில் கழித்திருக்கிறார். லட்சக் கணக்கில் அவர் சம்பாதித்திருக்கிறார் அதாவது, கடன் பத்திரங்களை; ஆனுல் அவர் இழந்ததென்னவோ ரொக்கப் பணம்தான். அவருடைய அறிவும் அனுபவமும் அவருக்கு ஏராளமான நண்பர்களை ஏற்படுத்தின. அவருடைய அன்பும், உற்சாகமும், விருந்தோம்பலும், அவருடைய சமையற்காரனின் புகழும் மக்களின் மரியாதையைப் பெற்றுக் கொடுத்திருந்தன. அவர் பீட்டர்ஸ்பர்குக்கு வந்தார். இளைஞர்கள் அவரிடம் ஓடி வந்தார்கள். நடனத்தின் கவர்ச்சியைக் காட்டிலும் சீட்டாட்டத்தின் ஈர்ப்பு அவர்களிடம் அதிகமாயிருந்தது. அழகான பெண்களிடம் தங்கள் மனதைப் பறிகொடுப்பதற்குப் பதிலாக அவர்கள் சீட்டாட்டத்தில் தம்மை மறந்தனர். ஒரு நாள் நருமவ் ஹேர்மனை அங்கே கூட்டிக் கொண்டு வந்தார்.

அவர்கள் இருவரும் வரிசை வரிசையாக இருந்த பல அழகான அறைகளையும் அவற்றுக்கு வெளியே பணிவோடு நின்று கொண்டிருந்த வேலைக்காரர்களையும் கடந்து சீட்டாட்டம் நடைபெற்றுக் கொண்டிருந்த அறைக்கு வந்தனர். அங்கே சில ஜெனரல்களும் அரசாங்கத்தின் மிகப் பெரிய அதிகாரிகளும் சூதாடிக் கொண்டிருந்தனர். பட்டுத் துணி போர்த்திய சோபாக்களில் இளைஞர்கள் சாய்ந்து உட்கார்ந்து கொண்டு ஐஸ்கிரீமைச் சுவைத்துக் கொண்டிருந்தார்கள்; சிலர் குழாயில் புகை பிடித்துக் கொண்டிருந்தார்கள். செகலீன்ஸ்கி ஒரு நீண்ட மேசையின் முன்னுல் உட்கார்ந்து கொண்டு சீட்டுகளைக் கலைத்துப் போட்டுக் கொண்டிருந்தார். அந்த மேசையைச் சுற்றி சுமார் இருபது சூதாட்டக்காரர்கள் நெருக்கியடித்துக் கொண்டு நின்றனர். கண்ணியமான தோற்றம் கொண்ட அவருக்கு வயது அறுபது

இருக்கலாம். அவருடைய தலைமுடி வெள்ளியைப் போல நரைத்திருந்தது. அவருடைய மொத்தையான முகமும் மலர்ச்சியான தோற்றமும் அவர் உல்லாசப் பிரியர் என்பதை எடுத்துக் காட்டியது. அவருடைய எப்போதும் சிரித்த முகத்தில் பிரகாசமான கண்கள் தெரிந்தன. நருமவ் ஹேர்மனை அவரிடம் அறிமுகப்படுத்தினுர். செகலீன்ஸ்கி அவன் கையை அன்போடு அழுத்திய பிறகு இங்கே புதியவைரப் போல கூச்சப்பட வேண்டாம் என்று சொன்னுர். பிறகு அவர் தன்னுடைய விளையாட்டில் மும்முரமாக ஈடுபட்டார்.

அந்த சீட்டாட்டம் வெகு நேரம் நடைபெற்றது. மேசையின் மீது முப்பதுக்கு மேற்பட்ட சீட்டுகள் கிடந்தன.

ஒவ்வொரு தடவை சீட்டுகளைக் கலைத்துப் போட்ட பிறகும் செகலீன்ஸ்கி, சீட்டுகளை எடுத்தவர்கள் அவற்றை நன்கு கவனித்துக் கொள்வதற்கு நேரம் கொடுப்பார். நஷ்டத்தை அவர் குறித்துக் கொள்வார். யார் என்ன சொன்னுலும் கவனமாகக் கேட்பார். ஏதாவது ஒரு சீட்டின் முனை வளைந்து போயிருந்தால் அதையும் மிகுந்த கவனத்தோடு சரி செய்வார். கடைசியில் அந்த ஆட்டம் முடிவடைந்தது. செகலீன்ஸ்கி சீட்டுகளைக் கலைப்பதும் ஒன்றுசேர்ப்பதுமாக அடுத்த ஆட்டத்துக்குத் தயாராகிக் கொண்டிருந்தார்.

''நான் ஒரு தொகையைச் சொல்லலாமா?'' என்று ஹேர்மன் ஒரு பருமனுன கனவானின் முதுகுக்குப் பின்னுலிருந்து கையை நீட்டிக் கொண்டு சொன்னுன். ஹேர்மனுக்கு அனுமதி கொடுத்தது போல செகலீன்ஸ்கி சிரித்தபடியே குனிந்தார். நெடுங்காலமாகக் கொண்டிருந்த உறுதியைக் கைவிட்டு சூதாட ஆரம்பித்திருக்கின்ற ஹேர்மனை நருமவ் சிரித்துக் கொண்டே பாராட்டினுர்; தமது நல்வாழ்த்துக்களையும் தெரிவித்தார்.

''நான் தயார்'' என்று சொல்லிவிட்டு ஹேர்மன் சீட்டுக்கு மேலே ஒரு தொகையை எழுதிக் காட்டினுன்.

செகலீன்ஸ்கி கண்களைச் சுருக்கிக் கொண்டு அவன் எழுதியதைப் படிக்க முயன்றுர். ''தொகை என்ன? மன்னியுங்கள். நான் பார்த்தது சரியான தொகையா என்று தெரியவில்லையே'' என்றுர்.

''நாற்பத்து ஏழாயிரம்'' என்று ஹேர்மன் பதில் சொன்னுன்.

இந்தப் பதிலைக் கேட்டதும் அங்கேயிருந்த எல்லோரும் தங்கள் தலைகளைத் திருப்பி ஹேர்மனைக் கவனமாகப் பார்த்தார்கள். ''அவனுக்குப் பைத்தியம் பிடித்து விட்டதா?'' என்று நினைத்தார் நருமவ்.

''உங்களுடைய பந்தயத் தொகை சற்று அதிகம் என்பதைச் சொல்ல விரும்புகிறேன்'' என்று செகலீன்ஸ்கி வழக்கம் போல சிரித்துக் கொண்டே பேசினார். ''சின்னதில் இருநூற்று எழுபத்தைந்துக்கு மேல் இங்கே யாரும் பந்தயம் கட்டியதில்லை'' என்றார்.

''சரி. இந்தத் தொகைக்கு ஆரம்பிக்கலாமா?'' என்றான் ஹேர்மன்.

செகலீன்ஸ்கி வழக்கமான அடக்கத்தோடு தலையை அசைத்தார்.

''இங்கேயுள்ள நண்பர்களின் நம்பிக்கைக்கு நான் பொறுப்பு என்ற காரணத்தால் இதைச் சொல்ல விரும்பினேன். மேலும் இங்கே ரொக்கத்துக்குத்தான் விளையாடுகிறோம். எனக்கு உங்கள் மீது நம்பிக்கை இருந்தாலும், சம்பிரதாயத்துக்காக—அதிலும் பிறகு மனஸ்தாபம் ஏற்பட்டு விடக் கூடாதென்பதற்காக — இதைச் சொல்கிறேன். பந்தயத் தொகையை மேசை மீது வைக்க வேண்டும்'' என்றார்.

ஹேர்மன் தன்னுடைய பையிலிருந்து ஒரு வங்கிப் பத்திரத்தை எடுத்து செகலீன்ஸ்கியிடம் கொடுத்தான். அவர் அதை வேகமாகப் பார்த்துவிட்டு ஹேர்மனுடைய சீட்டின் மீது வைத்தார்.

அவர் கலைத்துப் போட்டார். வலது பக்கத்தில் ஒன்பது; இடது பக்கத்தில் மூன்று.

''வெற்றி!'' என்று சொல்லி ஹேர்மன் தன்னுடைய சீட்டைப் போட்டான். விளையாடிக் கொண்டிருந்தவர்கள் முணுமுணுத்தனர். செகலீன்ஸ்கி முகத்தைச் சுளித்தார். ஆனால் உடனே முகபாவத்தை மாற்றிக் கொண்டு சிரித்தார்.

''இப்பொழுதே வேண்டுமா?'' என்று ஹேர்மனைக் கேட்டார்.

''அதனால் சிரமமில்லையே'' என்றான் ஹேர்மன்.

செகலீன்ஸ்கி பையிலிருந்து சில வங்கிப் பத்திரங்களை எடுத்து அந்தக் குறிப்பிட்ட தொகையை எண்ணி உடனே

அவனிடம் நீட்டினார். ஹேர்மன் வெற்றி பெற்ற பணத்தை எடுத்துக் கொண்டு அந்த மேசையை விட்டு நகர்ந்தான். அவனுடைய அதிருஷ்டத்தை நினைத்து நருமவ் மிகவும் ஆச்சரியமடைந்தார். ஆனால் ஹேர்மன் ஒரு கிளாஸ் எலு மிச்சைப் பானத்தைக் குடித்துவிட்டு வீட்டுக்குத் திரும் பினான்.

மறு நாள் மாலையில் அவன் மறுபடியும் செகலீன்ஸ்கியின் வீட்டுக்குச் சென்றான். அவர் சீட்டுக் கட்டைக் கலைத்துப் போட்டுக் கொண்டிருந்தார். ஹேர்மன் மேசையின் அருகே சென்றதும் மற்றவர்கள் உடனே அவனுக்கு இடம் கொடுத்துவிட்டு விலகிக் கொண்டார்கள். செகலீன்ஸ்கி அவனைப் பார்த்ததும் பண்பு நயத்தோடு வரவேற்றார்.

ஹேர்மன் அடுத்த முறை சீட்டைக் கலைக்கும் வரை காத் திருந்தான். பிறகு தன்னுடைய நாற்பத்தேழாயிரத்தையும் முந்திய நாள் வெற்றி பெற்ற தொகையையும் சேர்த்து ஒரு சீட்டின் மேல் கட்டினான்.

செகலீன்ஸ்கி சீட்டைக் கலைத்துப் போட்டார். வலது புறத்தில் ` ஜாக்கியும் இடது புறத்தில் ஏழும் விழுந்தது.

ஹேர்மன் தன்னுடைய சீட்டைப் போட்டான். அந்தச் சீட்டின் எண் ஏழு.

அதைப் பார்த்துக் கொண்டிருந்தவர்களுக்கு மூச்சு நின்று விட்டது. செகலீன்ஸ்கியின் முகத்தோற்றம் பரிதாப மாக இருந்தது. அவர் தொண்ணூற்று நாலாயிரத்துக்கு நோட்டுக்களை எண்ணி ஹேர்மனிடம் கொடுத்தார். அவன் அந்தத் தொகையை மிகச் சாதாரணமாக வாங்கிக் கொண்டு உடனே அங்கிருந்து புறப்பட்டான்.

மறு நாள் மாலையிலும் ஹேர்மன் அங்கே மறுபடியும் வந்தான். எல்லோரும் அவனை எதிர்பார்த்துக் கொண்டிருந் தார்கள். ஜெனரல்களும் அரசாங்கத்தின் மிகப் பெரிய அதி காரிகளும் தங்களுடைய விளையாட்டை நிறுத்திவிட்டு, ஹேர்மனுடைய அசாதாரணமான விளையாட்டைக் கவனிப் ப தற்காக அங்கே குழுமினார்கள். சோபாக்களில் உட்கார்ந்து கொண்டிருந்த இளம் அதிகாரிகள் துள்ளி எழுந்தார்கள். வீட்டு வேலைக்காரர்கள் கூட அங்கே குழுமி விட்டார்கள். எல்லோரும் ஹேர்மனை நெருக்கிக் கொண்டு நின்றனர். அங்கேயிருந்த மற்ற சீட்டாட்டக்காரர்கள் தங்களுடைய

பந்தயத் தொகையைச் சொல்லாமல், விளையாட்டு எப்படி ஆரம்பமாகுமோ என்று ஆவலோடு காத்திருந்தார்கள். செகலீன்ஸ்கியின் முகம் வெளுத்துப் போன போதிலும் அவர் வழக்கம் போலச் சிரித்துக் கொண்டிருந்தார். ஹேர்மன் மட்டுமே அவருக்கு எதிராக விளையாடுவதற்குத் தயாராக மேசையின் முன்பு நின்று கொண்டிருந்தான். ஒவ்வொரு வரும் ஒரு புது சீட்டுக் கட்டை எடுத்தார்கள். செகலீன்ஸ்கி கலைத்து மேசை மீது வைத்தார். ஹேர்மன் அதை வெட்டினான். தன்னுடைய சீட்டின் மீது வங்கிப் பத்திரங்களைக் குவியலாகக் கொட்டினான். அது ஒரு சண்டை போலத் தோன்றியது. அங்கே ஆழ்ந்த மௌனம் நிலவியது.

செகலீன்ஸ்கி சீட்டைப் பிரித்துப் போட்டார். அவர் கை நடுங்கியது. வலது புறத்தில் ராணி, இடது புறத்தில் ஆஸ் விழுந்தன.

''ஆஸுக்கு வெற்றி!'' என்று சொல்லிக் கொண்டு ஹேர்மன் தன்னுடைய சீட்டை எடுத்துக் காட்டினான்.

''உங்களுடைய ராணியைக் காட்டிலும் அதிக மதிப்புள்ள சீட்டைப் போடுகிறேன்'' என்று செகலீன்ஸ்கி பண்போடு சொன்னார்.

ஹேர்மன் திடுக்கிட்டான்: அவர் சொன்னது உண்மையே. அங்கே ஆஸுக்குப் பதிலாக ஸ்பேடு ராணிச் சீட்டு கிடந்தது. தன்னுடைய கண்களை அவனால் நம்ப முடியவில்லை. அவ்வளவு பெரிய தவறை எப்படிச் செய்தேன் என்று திகைப்படைந்தான்.

திடீரென்று அந்தச் சீட்டிலிருந்த ஸ்பேடு ராணி தன்னுடைய கண்களைக் குறுக்கி அவனைப் பார்த்துச் சிரிப்பது போல அவனுக்குத் தோன்றியது. அந்த உருவம் அவனுக்கு யாரையோ நினைவுபடுத்தியது....

''கிழட்டுப் பிணம்!'' என்று அவன் ஆத்திரத்தில் கத்தினான்.

செகலீன்ஸ்கி மேசை மீது வைக்கப்பட்டிருந்த, தான் வெற்றிபெற்ற தொகையைத் தன் பக்கமாக இழுத்தார். ஹேர்மன் அசைவில்லாமல் நின்றான். அங்கிருந்து அவன் போன பிறகுதான் எல்லோரும் பலமாகப் பேச ஆரம்பித்தார்கள். ''மறக்க முடியாத விளையாட்டு!'' என்று சீட்டாட்டக்காரர்கள் கூறினார்கள். செகலீன்ஸ்கி மறுபடியும்

சீட்டுகளைக் கலைத்தார்; வழக்கம் போல சீட்டாட்டம் தொடர்ந்தது.

## முடிவு

ஹேர்மனுக்குப் பைத்தியம் பிடித்து விட்டது. ஓபுஹவ் மருத்துவ நிலையத்தில் பதினேழாம் வார்டில் வைக்கப்பட்டிருக்கிறான். என்ன கேட்டாலும் அவன் பதில் சொல்வதில்லை. ''மூன்று, ஏழு, ஆஸ்... மூன்று, ஏழு, ராணி!...'' என்று எப்பொழுது பார்த்தாலும் மிக வேகமாக முணுமுணுத்துக் கொண்டேயிருக்கிறான்.

லிஸவேத்தா இவானவ்னா நல்ல திறமை சாலியான ஓர் இளைஞனைத் திருமணம் செய்து கொண்டாள். அந்த இளைஞனுக்கு அதிகமான சொத்து உண்டு. மேலும் அவன் அரசாங்கத்தில் நல்ல உத்தியோகத்திலிருக்கிறான். அவன் செத்துப் போன சீமாட்டியின் முன்னாள் மேற்பார்வையாளரின் மகன். லிஸவேத்தா இவானவ்னா தனக்குச் சொந்தக்காரியான ஓர் ஏழைப் பெண்ணை உதவிக்கு வீட்டில் வைத்திருக்கிறாள்.

தோம்ஸ்கி காப்டனாகப் பதவி உயர்வடைந்திருக்கிறார்; விரைவில் இளவரசி பலீனாவைத் திருமணம் செய்து கொள்ளப் போகிறார்.

***1833***

உங்களுடைய கௌரவத்தை
இளமைப் பருவத்திலிருந்து
காத்துக் கொள்ளுங்கள்.

**பழமொழி**

## அத்தியாயம் ஒன்று

### காவலர் படையின் சார்ஜென்ட்

—காவலர் படையில் அவன்
சீக்கிரமே காப்டனாகி விடுவான்.
—அதனாலென்ன? படைவீரனின்
உணவைச் சாப்பிட்டுப் பழகட்டும்.
—ஆமாம், சரியாகச் சொன்னாய்;
படைவீரனின் துன்பங்களையும்
பகிர்ந்து கொள்ளட்டும்....
. . . . . . . . . . .
அவன் தகப்பனார் யார்?

**கினியாழ்னின்**[38]

என்னுடைய தகப்பனாரான அந்திரேய் பெத்ரோவிச் கிரின்யோவ் தமது இளமைப் பருவத்தில் மினிஹ் பிரபுவின் கீழ்[39] இராணுவத்தில் பணியாற்றி 17...ம் வருடத்தில் மேஜராக ஓய்வு பெற்றவர். பிறகு அவர் தமது ஸிம்பீர்ஸ்க் பண்ணைக்குப் போன பொழுது அவ்தோத்யா வசீலியெவ்னா யு... என்ற அந்த வட்டாரத்தைச் சேர்ந்த ஏழைக் கனவானின் மகளைத் திருமணம் செய்து கொண்டார். என் தகப்பனாருக்கு ஒன்பது குழந்தைகள் பிறந்தன. என்னைத் தவிர என்னுடைய சகோதர, சகோதரிகள் அனைவரும் சிறு வயதிலேயே இறந்து விட்டனர்.

நான் என்னுடைய தாயாரின் கருப்பையில் இருக்கும் பொழுதே செமியோனவ்ஸ்கி படைப் பிரிவில் சார்ஜென்டாகப் பதிவு செய்து கொள்ளப்பட்டேன். எங்களது நெருங்கிய உறவினரும் காவலர் படையின் மேஜருமான இளவரசர் பி...யின் உதவியினால் இது சாத்தியமாயிற்று. என் தாயாருக்குப் பெண் குழந்தை பிறந்திருந்தால் என் பெற்றோர்களின் நம்பிக்கைகள் தகர்ந்து போயிருக்கும். ஆனால் அப்போது என் தகப்பனாரும் சார்ஜென்ட் இறந்து போய்விட்ட

தாகத் தகவல் அனுப்பியிருப்பார். அந்த விஷயமும் அத்தோடு முடிந்திருக்கும். என்னுடைய பள்ளிப்படிப்பு முடிகின்ற வரை நான் இராணுவத்திலிருந்து விடுமுறை எடுத்திருப்பதாகக் கருதப்பட்டது. அந்தக் காலத்துக் கல்வி இன்றிருப்பது போல இருக்கவில்லை. எங்கள் வீட்டிலிருந்த ஸவேலிச் என்ற வேலைக்காரனிடம் குடிப் பழக்கம் இல்லாதபடியால் அவன் என்னை மேற்பார்வையிடுபவனாக உயர்த்தப்பட்டான். ஐந்து வயதான பொழுது அவனிடம் என்னை ஒப்படைத்தார்கள். பனிரெண்டு வயது வரை அவனிடம் என்னுடைய தாய்மொழியை எழுதவும் படிக்கவும் கற்றுக்கொண்டேன்; மற்றும் வேட்டை நாய்களைப் பற்றியும் நான் நிறையத் தெரிந்து வைத்திருந்தேன். அப்போது என் தகப்பனார் திருவாளர் பப்ரே என்ற பிரெஞ்சுக்காரரை எனக்குப் பாடங்களைக் கற்றுக் கொடுக்க நியமித்தார். எங்கள் குடும்பத்துக்கு ஒரு வருஷத்துக்குப் போதுமான ஒயின், ஒலிவ எண்ணெய் முதலியவற்றை மாஸ்கோவிலிருந்து வாங்கி வந்த பொழுது அவரையும் வேலைக்குக் கூட்டிக் கொண்டு வந்தார்கள். அவர் வருகை ஸவேலிச்சுக்குச் சிறிதும் பிடிக்கவில்லை. ''ஆண்டவன் புண்ணியத்தால் இது வரை குழந்தையை நல்ல முறையில் குளிப்பாட்டி, தலை வாரி, உணவூட்டி, ஆரோக்கியமாக வளர்த்தோம்'' என்று அவன் முணுமுணுத்தான். ''நம் நாட்டில் தகுந்த ஆட்களில்லாமல் பிரெஞ்சுக்காரனுக்கா பணத்தைக் கொட்டியழ வேண்டும்?'' என்றான்.

பப்ரே தம்முடைய சொந்த நாட்டில் ஒரு நாவிதராக இருந்தவர். பிறகு பிரஷ்ய இராணுவத்தில் சேவை செய்து விட்டு pour être "outchitel"* ருஷ்யாவுக்கு வந்திருக்கிறார். ஆனால் அந்த வார்த்தையின் அர்த்தம் கூட அவருக்குச் சரியாகத் தெரியாது. அவர் நல்ல சுபாவம் உடையவர் தான்; ஆனால் சமயங்களில் அளவுக்கு மீறிக் குடித்து விட்டுத் தவறாக நடந்து கொள்ளக் கூடியவர். அவருக்குப் பெண்ணாசை அதிகம். அதன் விளைவாக அடிக்கடி உதை வாங்குவதும், வலி தாங்காமல் பல நாட்களுக்கு முனகுவதும் அவருடைய இயல்பு. மேலும் (அவரே சொல்வது போல)

---

* ஆசிரியராவதற்காக. "Outchitel" — ஆசிரியர்; பிரெஞ்சில் எழுதப்பட்டிருக்கும் ருஷ்யச் சொல்.—ப-ர்.

அவர் பாட்டிலுக்கு எதிரியல்ல, அதாவது, குடி விஷயத்தில் போதும் என்று நிறுத்தக் கூடியவரல்ல. ஆனால் எங்கள் வீட்டில் இரவு உணவின் போது தான் ஒயின் தருவது வழக்கம். அதிலும் நபருக்கு ஒரு டம்ளர் மட்டுமே தரப்படும். பெரும்பாலும் ஆசிரியருக்கு அதுவும் கிடைக்காது. ஆனால் என்னுடைய திரு. பப்ரே வெகு சீக்கிரத்தில் ருஷ்ய மது வகைகளைக் குடிக்கப் பழகிக் கொண்டார். பிறகு தம்முடைய நாட்டின் ஒயினைக் காட்டிலும் இவற்றை விரும்பிக் குடிக்கலானார். உணவை ஜீரணம் செய்வதற்கு இவை ஏற்றவை என்று கூறுவார். நானும் அவரும் மிகவும் நல்ல முறையில் பழகிக் கொண்டிருந்தோம். ஒப்பந்தத்தின்படி அவர் எனக்கு பிரெஞ்சு, ஜெர்மன் மொழிகளையும் மற்ற எல்லாப் பாடங்களையும் கற்றுத் தர வேண்டும் என்று சொல்லப்பட்டிருந்த போதிலும், எனக்குத் தெரிந்த ருஷ்ய வார்த்தைகளை நான் அவருக்குச் சொல்லிக் கொடுத்தேன் என்றுதான் சொல்ல வேண்டும். பிறகு நாங்களிருவரும் அவரவர் வேலைகளைச் செய்து வந்தோம். எங்களுக்கிடையே சுமுகமான உறவு ஏற்பட்டிருந்தது. அவரைக் காட்டிலும் நல்ல ஆசிரியர் அவசியமென்று நான் நினைக்கவில்லை. ஆனால் சீக்கிரத்தில் விதி எப்படி எங்களைப் பிரித்தது என்பதைச் சொல்கிறேன்.

பருமனான உடலும் அம்மை வடுக்கள் நிறைந்த முகமும் கொண்ட பலாஷ்கா எங்கள் வீட்டில் துணி வெளுத்துக் கொண்டிருந்தாள்; ஒற்றைக் கண் அக்கூல்கா மாடு மேய்ப்பவள். ஒரு நாள் இவர்களிருவரும் என் தாயாரின் காலடியில் விழுந்து தங்களை மன்னிக்க வேண்டும் என்றார்கள். வீட்டிலிருக்கும் ஆசிரியர் தங்களுடைய அறியாமையைப் பயன்படுத்திக் கொண்டார். அதனால் பாவம் செய்து விட்டோம் என்று சமாதானம் சொன்னார்கள். இந்த மாதிரியான விஷயங்களைக் கேட்டால் என்னுடைய தாயாருக்கு மிகவும் கோபம் ஏற்படும். எனவே அவள் என் தகப்பனாரிடம் புகார் செய்தாள். அவர் உடனே பப்ரேயைக் கூப்பிட்டனுப்பினார். அவர் எனக்குப் பாடம் சொல்லித் தருவதாகப் பதில் கிடைத்ததும் என் தகப்பனார் என்னுடைய அறைக்குள் நுழைந்தார். அங்கே திரு. பப்ரே படுக்கையில் படுத்து நிம்மதியாகத் தூங்கிக் கொண்டிருந்தார். நான் விளையாடிக்

கொண்டிருந்தேன். எனக்குப் பாடம் கற்பிப்பதற்காக மாஸ்கோவிலிருந்து ஒரு பெரிய பூகோளப் படம் வரவழைக்கப் பட்டிருந்தது என்று இங்கே சொல்ல வேண்டும். அந்தப் படம் எத்தகைய பயனுமில்லாமல் சுவரில் தொங்கிக் கொண்டிருந்தது. அதனுடைய நீளமும், அது அச்சடிக்கப் பட்டிருந்த உயர்தரமான காகிதமும் அதில் பட்டம் செய்து பறக்க விட வேண்டும் என்ற மாபெரும் ஆசையை நெடுங் காலமாகவே என் மனதில் ஏற்படுத்தியிருந்தன. அன்று பப்ரே தூங்கிக் கொண்டிருந்தபடியால் என்னுடைய ஆசையை நிறைவேற்றிக் கொண்டேன். மரப்பட்டை நாறிஞல் கயிறு செய்து அதை நன்னம்பிக்கை முனேயில் கட்டிக் கொண்டிருந்த பொழுது என் தகப்பனுர் உள்ளே நுழைந் தார். என்னுடைய பூகோள அறிவை மெச்சும் விதத்தில் அவர் என்னுடைய காதைப் பிடித்துத் திருகினுர். பிறகு படுக்கையை நோக்கிச் சென்று திரு. பப்ரேயை அடித்து எழுப்பி, சரமாரியாகத் திட்ட ஆரம்பித்தார். பப்ரே பதறிப் போய் எழுந்திருக்க முயன்ருர். ஆனுல் அவரால் முடியவில்லே. பாவம்! அந்த துரதிருஷ்டசாலியான பிரெஞ்சுக்காரர் அள வுக்கு மீறிக் குடித்திருந்தார். அவருடைய தவறுகள் எல்லா வற்றுக்கும் சேர்த்து மொத்தமாக ஒரு தண்டனே கொடுப் பது அவசியமாயிற்று. அவருடைய கோட்டின் கழுத்துப் பட்டையைப் பிடித்து என் தகப்பனுர் அவரைப் படுக்கை யிலிருந்து தூக்கினுர். பிறகு அந்த அறையிலிருந்து வெளியே பிடித்துத் தள்ளினுர். அன்றைய தினமே எங்கள் வீட்டை விட்டுப் போகுமாறு விரட்டி விட்டார். ஸவேலிச் சொல்ல முடியாத அளவுக்கு சந்தோஷமடைந்தான். என்னுடைய கல்வி இப்படி முடிவுக்கு வந்தது.

நான் புருக்களே வளர்ப்பதிலும் பண்ணேயிலிருந்த சிறுவர்களோடு தவளேப் பாய்ச்சல் விளேயாடுவதிலும் பொழுதைப் போக்கிக் கொண்டு முட்டாளாக வளர்ந்தேன். ஆனுல் எனக்குப் பதினுறு வயது ஆரம்பமான பொழுது என்னுடைய வாழ்க்கையில் முக்கியமான மாற்றம் ஏற்பட் டது.

இலேயுதிர் காலத்தில் ஒரு நாள் என் தாயார் பழங்களேத் தேனில் கொதிக்க வைத்துக் கொண்டிருந்தார்கள். நான் பக்கத்தில் நின்றபடி சட்டியில் கொதித்துக் கொண்டிருந்த

திரவத்தைப் பார்த்து உதட்டைச் சப்பிக் கொண்டிருந் தேன். என் தகப்பனுர் வருடத்துக்கு ஒரு தடவை வெளிவரு கின்ற **அரண்மனை அறிக்கையைப்** படித்துக் கொண்டிருந் தார். அதைப் படிக்கும் பொழுதெல்லாம் அவர் உணர்ச்சி வசப்படுவார். அதைப் படிப்பதில் அவருக்கு ஆர்வம் அதிகம். ஆனுல் அதில் எந்தப் பக்கத்தைப் புரட்டினுலும் அவருக்கு ஆத்திரம் உண்டாகும். அவருடைய எல்லா பழக்க வழக்கங் களும் என்னுடைய தாயாருக்கு மிக நன்ருகத் தெரியுமாத லால் அந்தத் தொல்லையான புத்தகம் தபாலில் வந்தவுடன் அதை எங்காவது ஒரு மூலையில் ஒளித்து வைத்து விடுவாள். அதனுல் சில சமயங்களில் பல மாதங்களுக்குப் பிறகுதான் இப்புத்தகம் அவருடைய கண்ணில் படும். ஆனுல் அதைப் பார்த்தவுடன் உடனே படிக்க ஆரம்பிப்பார்; அதைக் கையில் வைத்துக் கொண்டு பல மணி நேரம் சிந்தித்துக் கொண்டிருப்பார். அன்று என் தகப்பனுர் **அரண்மனை அறிக்கை யைப்** படித்துப் புரட்டியபடியே தோள்களைக் குலுக்கு வதும் முணுமுணுப்பதுமாக இருந்தார்: ''லெப்டினென்ட் -ஜெனரல்!... என்னுடைய படைப் பிரிவில் வெறும் சார்ஜென்டாக இருந்தவன் அவன்!... உயர்தரமான இரண்டு ருஷ்ய இராணுவப் பதக்கங்களும் வாங்கியிருக் கிருன்!... நேற்று நடந்தது போல நானும் அவனும்....'' கடைசியில் **அரண்மனை அறிக்கையை** சோபாவின் மீது வீசி யெறிந்து விட்டு ஆழமான சிந்தனையில் மூழ்கினுர். அது ஆபத்து வரப் போகிறது என்பதற்கு அறிகுறி என்பதை நாங்கள் புரிந்து கொண்டோம்.

திடீரென்று அவர் என்னுடைய தாயாரை நோக்கித் திரும்பினுர். ''அவ்தோத்யா வசீலியெவ்னு! பெத்ருஷாவுக்கு என்ன வயதாகிறது?'' என்று கேட்டார்.

''அவனுக்குப் பதினுறு வயதாகிறது. என் அத்தை நஸ் தாசியா கெராசிமவ்னு ஒரு கண் பார்வையை இழந்த வரு டத்தில் அவன் பிறந்தான்....''

''நல்லது'' என்று என் தகப்பனுர் இடைமறித்தார். ''அவன் இராணுவத்தில் சேர வேண்டிய நேரம் வந்து விட்டது. நெடுங்காலமாக வேலைக்காரப் பெண்களின் அறை களைச் சுற்றிவந்து கொண்டிருக்கிருன்'' என்ருர்.

என் தாயாருக்கு என்னைப் பிரிய வேண்டுமென்பதை

நினைத்தவுடன் அதிகமான துயரம் ஏற்பட்டு, கைத் தவறுதலாகக் கரண்டியை சட்டிக்குள் போட்டு விட்டாள். அவளுடைய கண்களிலிருந்து கண்ணீர் பெருக்கெடுத்தது. எனக்கு சொல்ல முடியாத உற்சாகம் ஏற்பட்டது. என் மனதில் இராணுவ சேவை என்றால் சுதந்திரமான வாழ்க்கை, பீட்டர்ஸ்பர்க் நகரத்தின் உல்லாசங்களை அனுபவிப்பது என்றுதான் நினைத்திருந்தேன். காவல் படையில் ஒரு அதிகாரியாக என்னைக் கற்பனை செய்து கொண்டேன். உலக வாழ்க்கையில் அதுவே மிகப் பெரிய இன்பம் என்று கற்பனை செய்து மகிழ்ந்தேன்.

என் தகப்பனார் தன்னுடைய முடிவுகளை மாற்றக் கூடியவரல்ல; அவற்றை நிறைவேற்றுவதையும் ஒத்திப் போடுபவரல்ல. நான் புறப்பட வேண்டிய நாள் முடிவு செய்யப்பட்டது. புறப்படுவதற்கு முந்திய நாள் என்னுடைய எதிர்கால மேலதிகாரிக்கு ஒரு கடிதம் தருகிறேன்; பேனாவும் காகிதமும் கொண்டுவா என்று என் தகப்பனார் சொன்னார்.

''அந்திரேய் பெத்ரோவிச்! இளவரசர் பி... அவர்களுக்கு என்னுடைய வணக்கத்தைத் தெரிவிக்க மறந்துவிட வேண்டாம்'' என்று என் தாயார் கூறினாள். ''பெத்ருஷாவுக்கு அவர் அன்போடு எல்லா உதவிகளையும் செய்வார் என்று எதிர்பார்க்கிறேன் என்று எழுதுங்கள்'' என்றாள்.

''பிதற்றல்! நான் எதற்காக இளவரசர் பி...க்கு எழுத வேண்டும்?'' என்று என் தகப்பனார் முகத்தைச் சுளித்தவாறு கேட்டார்.

''பெத்ருஷாவின் மேலதிகாரிக்குக் கடிதம் எழுதப் போவதாக நீங்கள்தானே சொன்னீர்கள்?''

''ஆமாம்! அதற்கென்ன?''

''இளவரசர் பி...தானே அவனுடைய மேலதிகாரி. செமியோனவ்ஸ்கி படைப் பிரிவில்தானே பெத்ருஷாவைச் சேர்த்திருக்கிறோம்.''

''ஓ! அது அந்தக் காலத்தில். பெத்ருஷாவை பீட்டர்ஸ்பர்குக்கு அனுப்பவில்லை. அங்கே அவன் எதைக் கற்றுக் கொள்ளப் போகிறான்? குடிப் பழக்கமும் ஊதாரித்தனமுமா? இல்லை, அவன் இராணுவத்தில் சேர்ந்து, பை தூக்கி, வெடிமருந்து நாற்றத்துக்குப் பழக்கப்பட வேண்டும். அவன் போர்வீரனாக வேண்டும்; உல்லாசியாகக் கூடாது.

காவலர் படையில் சேர்ந்து என்ன பயன்? அவனுடைய குடியுரிமைச் சீட்டு எங்கே? கொண்டுவா'' என்றார்.

என் தாயார் எனது குடியுரிமைச் சீட்டை என்னுடைய பெயர் சூட்டுவிழாவின் போது அணிந்த ஆடைகளோடு அவளுடைய பெட்டியில் போட்டு வைத்திருந்தாள். அதைத் தேடி எடுத்து என் தகப்பனாரிடம் கொடுத்த பொழுது அவள் கை நடுங்கியது. அவர் அதைக் கவனமாகப் பார்த்துவிட்டு மேசை மீது வைத்தார். பேனாவை எடுத்துக் கடிதத்தை எழுத ஆரம்பித்தார்.

எனக்கு மிகவும் கவலை ஏற்பட்டது. பீட்டர்ஸ்பர்குக்கு என்னை அனுப்பப் போவதில்லை என்றால் வேறு எந்த ஊருக்கு அனுப்பப் போகிறார்கள்? அந்தக் காகிதத்தில் என் தகப்பனாருடைய பேனா மெதுவாக எழுதிக் கொண்டிருந்த பொழுது நான் அதையே பார்த்துக் கொண்டிருந்தேன். கடைசியில் அவர் கடிதத்தை எழுதி முடித்தார். அதையும் என்னுடைய குடியுரிமைச் சீட்டையும் ஒரு காகித உறையில் வைத்து முத்திரையிட்டார். பிறகு மூக்கிலிருந்த கண்ணாடியைக் கழற்றி வைத்துவிட்டு என்னைக் கூப்பிட்டார். ''என்னுடைய பழைய நண்பரான அந்திரேய் கார்லவிச் ரா...வுக்கு இந்தக் கடிதத்தை எழுதியிருக்கிறேன். நீ ஓரென்புர்குக்குப் போய் அவருடைய படைப் பிரிவில் சேர வேண்டும்'' என்றார்.

என்னுடைய மகத்தான எதிர்காலத்தைப் பற்றிய எல்லாக் கனவுகளும் சிதைந்தன. பீட்டர்ஸ்பர்க் நகரத்தின் உல்லாச வாழ்க்கைக்குப் பதிலாக தொலை தூரத்தில் எங்கோ ஒரு பாழடைந்த மூலையில் சலிப்புத் தருகின்ற வேலையைச் செய்து கொண்டிருக்க வேண்டும். சற்று நேரத்துக்கு முன்பு இராணுவ சேவையைப் பற்றி மிக உற்சாகமாகக் கற்பனை செய்து கொண்டிருந்தேன். இப்பொழுது அது ஒரு கடுஞ் சோதனை என்று தோன்றியது. நான் மறுப்புத் தெரிவிப்பதால் ஒரு பயனும் ஏற்படாது. மறு நாள் காலையில் வீட்டுக்கு முன்பாக சறுக்கு வண்டி நின்றது. என்னுடைய பெட்டியை அதில் வைத்தார்கள். என்னுடைய தாயார் தேநீர் சாப்பிடத் தேவையான பொருள்களையும் இனிப்பான கேக்குகளையும் ரொட்டிகளையும் பெட்டிக்குள் வைத்து மூடினாள். என் தாயார் என்னை வழியனுப்பிய பொழுது கொடுத்த அன்புச் சின்னங்கள் அவை. என்னுடைய பெற்றோர்கள் என்னை ஆசீர்

வதித்தனர். ''போய்வா, பியோத்தர்! எப்பொழுதும் சக்கரவர்த்திக்கு விசுவாசமாகப் பாடுபட வேண்டும். மேலதிகாரிகளிடம் சலுகைகளை எதிர்பார்க்காதே. அவர்களுடைய உத்தரவுகளுக்குக் கீழ்ப்படிந்து நடக்க வேண்டும். யாரும் சொல்லாமல் எந்த வேலையையும் செய்ய வேண்டாம்; கொடுத்த வேலையை நிறைவேற்றுமல் இருக்க வேண்டாம். மேலும், 'கோட்டு புதிதாக இருக்கும் பொழுது சுத்தமாக வைத்திருங்கள்; இளமைப் பருவத்திலிருந்து உங்களுடைய கௌரவத்தைக் காத்துக் கொள்ளுங்கள்' என்ற பழமொழியை மறவாதே'' என்று என் தகப்பனுர் அறிவுரை கூறினுர். என் தாயார் என்னுடைய உடல்நலத்தைக் கவனித்துக் கொள் என்று அழுது கொண்டே கூறினுள். குழந்தையை நன்ருகக் கவனித்துக் கொள் என்று வேலைக்காரன் ஸவேலிச்சிடம் கூறினுள். பதப்படுத்தப்பட்ட முயல் தோலினுல் செய்த கோட்டை அணிந்து கொண்டு அதற்கு மேல் ஓநாய் உரோமம் வைக்கப்பீட்ட துணிக் கோட்டை அணிந்து கொண்டேன். பிறகு அழுது கொண்டே நான் ஸவேலிச்சுடன் சறுக்கு வண்டியில் ஏறி உட்கார்ந்தேன். என்னுடைய பிரயாணம் ஆரம்பமாயிற்று.

மாலை மறைகின்ற நேரத்தில் ஸிம்பீர்ஸ்க் நகரத்துக்கு வந்து சேர்ந்தோம். அங்கே சில சாமான்களை வாங்க வேண்டிய பொறுப்பு ஸவேலிச்சுக்குக் கொடுக்கப்பட்டிருந்தது. எனவே மறு நாள் வரை அங்கே தங்குவது அவசியமாயிற்று. எனவே ஒரு விடுதிக்குச் சென்று தங்கினேம். மறு நாள் காலையில் ஸவேலிச் கடைகளுக்குப் புறப்பட்டான். சன்னல் வழியாகக் குப்பை கூளங்கள் நிறைந்த தெருவைப் பார்த்துச் சலித்துப் போனதால், அந்த விடுதியைச் சுற்றிப் பார்க்கப் புறப்பட்டேன். பில்லியர்ட் விளையாடுகின்ற அறையில் ஓர் உயரமான கனவானைச் சந்தித்தேன். அவருக்கு வயது சுமார் முப்பத்தைந்து இருக்கும்; அவர் முகத்தில் கீழ் நோக்கி வளைகின்ற கறுப்பு மீசை இருந்தது. அவர் நீண்ட மேலங்கி அணிந்து ஒரு கையில் பில்லியர்ட் பந்துகளைத் தட்டுகின்ற நீண்ட கோலும் வாயில் புகைக் குழாயுமாகக் காட்சியளித்தார். அவரும் வேலைக்காரனும் அங்கே விளையாடிக் கொண்டிருந்தார்கள். வேலைக்காரன் வெற்றியடைந்தால் ஒரு டம்ளர் வோட்கா மது கிடைக்கும்;தோல்வி

யடைந்தால் மேசையின் கீழ் கைகளை உபயோகித்துத் தவழ்ந்து ஒரு சுற்றுச் சுற்ற வேண்டும். நான் சிறிது நேரம் அங்கே நின்று விளையாட்டைக் கவனித்தேன். அந்த வேலைக் காரன் மேசையின் கீழ் தவழ்ந்து செல்லுவதைப் பார்த் தேன். அவன் அடிக்கடி தோற்ற படியால் அடிக்கடி தவழ்ந்து விட்டுக் கடைசியில் நிற்க முடியாமல் மேசையின் கீழேயே படுத்து விட்டான். அவனுக்கு சவ அடக்கப் பிரசங்கம் செய்வது போல அந்தக் கனவான் அவனை நன்றாகத் திட்டி விட்டு என்னைப் பார்த்து விளையாட வருகிறீர்களா என்று கேட்டார். எனக்கு விளையாடத் தெரியாத காரணத்தால் மறுத்தேன். அவருக்கு என்னுடைய பதில் புதுமையாக இருந்திருக்க வேண்டும்; அதனால் என்னை விசித்திரமாகப் பார்த்தார். ஆனால் நாங்கள் உரையாடிக் கொண்டிருந் தோம். அவருடைய பெயர் இவான் இவானவிச் ஸுரின்; ஹுஸார் படைப் பிரிவில் காப்டனாக இருக்கிறார் என்பதை யும் தெரிந்து கொண்டேன். ஸிம்பீர்ஸ்க் நகரத்துக்கு இராணுவ சேவைக்கு ஆட்கள் சேர்ப்பதற்காக வந்ததனால் விடுதியில் தங்கியிருக்கிறார் என்பதையும் அறிந்தேன். ஸுரின் என்னை உணவருந்த அழைத்த பொழுது நான் சரி என்றேன். இருவரும் உட்கார்ந்தோம். ஸுரின் அதிகமாகக் குடித்ததோடு என்னுடைய டம்ளரையும் நிரப்பியபடியே இருந்தார். இராணுவ சேவையில் ஈடுபடும் பொழுது அதிக மாகக் குடிப்பது அவசியம் என்றார். இராணுவ வாழ்க்கை யைப் பற்றிய வேடிக்கையான கதைகளைச் சொன்னார். நான் அவற்றை ரசித்து அதிகமாகச் சிரித்ததனால் மூச்சுத் திணறினேன். சாப்பாடு முடிந்த பொழுது நாங்களிருவரும் நெருங்கிய நண்பர்களாகி விட்டோம். பிறகு அவர் எனக்கு பில்லியர்ட் விளையாட்டைச் சொல்லித் தருகிறேன் என்றார். ''நம் போன்ற இராணுவத்தினருக்கு பில்லியர்ட் விளையாடத் தெரிந்திருப்பது மிகவும் அவசியம். உதாரணமாக, ஏதோ ஒரு சிற்றூருக்கு வருகிறீர்கள் என்று வைத்துக் கொள் வோம். அங்கே பொழுது போக்க என்ன இருக்கப் போகிறது? எவ்வளவு நேரம்தான் யூதர்களைப் பிடித்து அடிப்பது? ஏதாவது ஒரு விடுதிக்குப் போய் பில்லியர்ட் விளையாடு வதைத் தவிர வேறு வழியில்லை. அதனால் நீங்கள் அந்த விளையாட்டைக் கற்றுக் கொள்ள வேண்டும்!'' என்றார்.

அவர் சொல்வது சரி என்று எனக்குத் தோன்றியது. எனவே அந்த விளையாட்டின் நுணுக்கங்களைக் கவனமாகக் கற்றுக் கொள்ளத் தயாரானேன். ஸூரின் என்னை மிகவும் உற்சாகப் படுத்தினார். சீக்கிரமாக விளையாட்டைக் கற்றுக் கொள் வதாக என்னை வியந்து பாராட்டினார். நாங்களிருவரும் சற்று நேரம் விளையாடிய பிறகு அவர் மிகவும் குறைந்த பந்தயத் தொகை வைத்து விளையாடலாம்; தொகை முக்கியமல்ல; ஆனால் பந்தயம் இல்லாமல் விளையாடுவது கெட்ட பழக்கம் என்று கூறினார். இதற்கும் நான் ஒத்துக் கொண்டேன். உடனே அவர் மது பானத்தைக் கொண்டுவருமாறு உத்தர விட்டார். மது இல்லாமல் இராணுவ வாழ்க்கை ஏது என்று மறுபடியும் சொல்லி என்னை அதிகமாகக் குடிக்க வைத்தார். இதற்கிடையில் விளையாட்டும் தொடர்ந்து நடைபெற்றது. மது உள்ளே போயிருந்த காரணத்தால் நான் தீரமாக விளை யாடினேன். என்னுடைய பந்துகள் மேசையிலிருந்து எகிறிக் குதித்தன. நான் கௌரபமடைந்து கணக்கு வைக்கத் தெரிய வில்லையென்று அங்கேயிருந்த வேலைக்காரனைத் திட்டினேன். ஆத்திரத்தில் பந்தயத் தொகையை உயர்த்தினேன். மொத் தத்தில் கட்டுப்பாடுகளிலிருந்து விடுதலை பெற்ற ஒரு சிறுவனைப் போல நடந்து கொண்டேன். நேரம் போய்க் கொண்டிருந்தது. ஆனால் நாங்கள் அதைக் கவனிக்காமல் விளையாட்டில் மும்முரமாக இருந்தோம். திடீரென்று ஸூரின் கடிகாரத்தைப் பார்த்தார்; கையிலிருந்த கோலைக் கீழே வைத்தார்; நான் அவரிடம் நூறு ரூபிள்கள் தோற்று விட்டதாகச் சொன்னார். இதைக் கேட்டு நான் கலங்கிப் போனேன். என்னுடைய பணம் ஸவேலிச்சிடம் இருந்தது. எனவே நான் அவரிடம் மன்னிப்புக் கோரினேன். ''அதற் கென்ன? நீங்கள் கவலைப்பட வேண்டாம். நாளைக்கு வாங்கிக் கொள்கிறேன். இப்பொழுது அரீனுஷ்கா வீட்டுக்குப் போய் வரலாம்'' என்று கூப்பிட்டார்.

அங்கே என்ன நடந்ததென்று நினைக்கிறீர்கள்? அங்கும் என்னுடைய முட்டாள்தனம் தொடர்ந்தது. அரீனுஷ்காவின் வீட்டில் நாங்கள் உணவருந்தினோம். ஸூரின் ஒவ்வொரு நிமிடமும் எனக்கு மதுவை ஊற்றிக் கொடுத்தபடியே இருந் தார். இராணுவ சேவைக்கு இது அவசியம் என்றார். என்னால் எழுந்து நிற்க முடியவில்லை. நள்ளிரவில் ஸூரின் என்னைக்

கைத்தாங்கலாக விடுதிக்கு அழைத்துக் கொண்டுவந்தார்.

ஸவேலிச் என்னை வாசலில் சந்தித்தான். இராணுவ சேவையில் நான் தீவிரமாக ஈடுபட்டு விட்டதன் மறைக்க முடியாத அறிகுறிகளைக் கண்டதும் அவன் திகைப்படைந்தான். "என்ன காரியம் செய்து விட்டீர்கள், ஐயா?" என்று பரிதாபக் குரலில் கேட்டான். "எங்கே போய் இப்படிக் குடித்திருக்கிறீர்கள்? அட கடவுளே, கடவுளே! இந்தக் காரியம் செய்யலாமா?" என்றான்.

"வாயை மூடு! சதா தொணதொணப்புத்தானா?" என்று கோபத்தில் கத்தினேன். "நீதான் குடித்திருக்கிறாய். போய்த் தூங்கு...என்னைப் படுக்கைக்குக் கூட்டிப் போ!" என்றேன்.

மறு நாள் காலையில் நான் விழித்த பொழுது தலையை வலித்தது. முந்திய நாள் நடைபெற்ற எல்லா சம்பவங்களும் தெளிவில்லாமல் நினைவுக்கு வந்தன. ஸவேலிச் ஒரு கோப்பை தேநீரைக் கொண்டுவந்து என்னுடைய சிந்தனைகளைக் கலைத்தான். "பியோத்தர் அந்திரேயெவிச்! சீக்கிரமாகவே குடிக்க ஆரம்பித்து விட்டீர்களே!" என்று தலையை ஆட்டிக் கொண்டு சொன்னான். "யாரிடமிருந்து இந்தப் பழக்கம் ஏற்பட்டது? உங்கள் தகப்பனாரோ, தாத்தாவோ குடிகாரர்களல்ல. உங்கள் தாயார் தன்னுடைய வாழ்க்கையில் க்வாஸ் பானத்தைத்* தவிர வேறு எதையும் தொட்டது கூடக் கிடையாது. இது யாரால் ஏற்பட்டது என்று தெரிகிறதா? அந்தப் பாழாய்ப் போன பிரெஞ்சுக்காரன் இதற்குக் காரணம். எப்பொழுது பார்த்தாலும் வீட்டை நிர்வகிக்கும் பெண்மணியிடம் 'அம்மையாரே! Je vous prie,** எனக்கு வோட்கா கொடுங்கள்' என்று கேட்டுக் கொண்டிருப்பான். அந்த வேட்டைநாய் இதைத்தான் உங்களுக்குச் சொல்லிக் கொடுத்திருக்க வேண்டும். கடவுள் நம்பிக்கை இல்லாத ஒருவனை இந்த வேலைக்கு வைத்துக் கொள்ள வேண்டுமா? வீட்டில் வேலைக்காரர்கள் இல்லயா, என்ன?" என்று சொன்னான்.

எனக்கு மிகவும் வெட்கமாக இருந்தது. "ஸவேலிச்! நீ

---

* ரொட்டியிலிருந்து தயாரிக்கப்படுகின்ற பானம்.—மொ-ர்.

** தயவு செய்து.—ப-ர்.

போய்வா. எனக்குத் தேநீர் வேண்டாம்'' என்று முகத்தைத் திருப்பிக் கொண்டேன். ஆனால் ஸவேலிச் அறிவுரை சொல்ல ஆரம்பித்துவிட்டால், அவ்வளவு சுலபமாக அதை நிறுத்த முடியாது. ''பியோத்தர் அந்திரேயெவிச்! குடியினால் வரும் தீமைகளைப் பார்த்தீர்களா! உங்கள் தலை வலிக்கிறது. உங்களால் சாப்பிட முடியவில்லை. குடிகாரன் உருப்பட மாட்டான்.... வெள்ளரிப் பழச் சாறையும் தேனையும் கலந்து சாப்பிட்டால் தான் தலைவலி போகும். அல்லது அரை கிளாஸ் ஒயின் சாப்பிடுங்கள். கொண்டுவரச் சொல்லட்டுமா?'' என்று கேட்டான்.

அந்த நேரத்தில் ஒரு பையன் என்னிடம் வந்து ஸுரின் கொடுத்தனுப்பிய கடிதத்தைக் கொடுத்தான். அதைத் திறந்து பின்வரும் வரிகளைப் படித்தேன்:

''அன்புள்ள பியோத்தர் அந்திரேயெவிச், நேற்று நீங்கள் என்னிடம் தோற்ற *நூறு ரூபிள்களை இந்தப் பையனிடம் கொடுத்தனுப்புமாறு கேட்டுக் கொள்கிறேன். எனக்கு உடனடியாகப் பணம் தேவைப்படுகிறது.

''உங்கள் உண்மையான ஊழியன்,
**இவான் ஸுரின்.''**

கடிதம் வந்து விட்டது. இனி என்ன செய்வது? ''என்னுடைய பணப் பையை வைத்துக் கொண்டு என்னுடைய காரியங்களை நிர்வகித்த''[40] ஸவேலிச்சை நோக்கி அலட்சியத்தோடு திரும்பினேன். அந்தப் பையனிடம் நூறு ரூபிள்களைக் கொடு என்று உத்தரவிட்டேன். ''ஏன்? எதற்காக?'' என்று ஸவேலிச் திகைப்போடு கேட்டான். ''கடன்பாக்கி. அதைக் கொடுத்துவிட வேண்டும்'' என்று மிகவும் நிதானமாகப் பதில் சொன்னேன். ''கடனா? உங்களுக்கு ஏது கடன்?'' என்று ஆச்சரியத்தோடு கேட்டான். ''ஏதோ தவறு நடந்திருக்கிறது. ஐயா! நீங்கள் என்ன சொன்னாலும் சரி. நான் பணத்தைக் கொடுக்க மாட்டேன்'' என்று ஸவேலிச் உறுதியாகச் சொன்னான்.

இந்தப் பிடிவாதமிக்க கிழவனிடம் இந்த நெருக்கடியான நேரத்தில் மிகவும் உறுதியோடு நடந்து கொள்ளாவிட்டால் எதிர்காலத்தில் அவனுடைய வலிமையான ஆதிக்

கத்தை உதறித் தள்ள முடியாது என்று நான் மனதில் நினைத்தேன். எனவே அவனை ஆணவத்தோடு பார்த்தேன். ''நான் உன்னுடைய எஜமான். நீ என்னுடைய வேலைக்காரன். பணம் என்னுடையது. நான் கொடு என்றால் நீ கொடுக்க வேண்டும். நீ ரொம்ப கெட்டிக்காரன் என்று நினைத்துக் கொள்ளாதே'' என்று அவனை அதட்டினேன்.

என்னுடைய வார்த்தைகள் ஸவேலிச்சை மிகவும் புண்படுத்தியிருக்க வேண்டும். அவன் பரிதாபமாகக் கைகளை ஆட்டினான். ''என்ன நின்று கொண்டிருக்கிறாய்?'' என்று அதட்டினேன். ஸவேலிச் விம்மியழுதான். ''பியோத்தர் அந்திரேயெவிச்! எஜமான்! நான் வருந்தி வருந்திச் சாகுமாறு செய்து விடாதீர்கள். என் கண்ணின் ஒளியே! இந்தக் கிழவன் சொல்வதைக் கொஞ்சம் கேளுங்கள். உங்களை ஏமாற்றிய போக்கிரிக்கு ஒரு கடிதம் எழுதுங்கள். நான் வேடிக்கையாகத்தான் பந்தயம் வைத்தேன்; மேலும் என்னிடம் பணமில்லை என்று சொல்லுங்கள். நூறு ரூபிள்! அட கடவுளே! நீங்கள் சூதாடக் கூடாது என்று உங்களுடைய பெற்றோர்கள் எச்சரித்திருப்பதாக எழுதுங்கள்....'' என்று நடுங்கிய குரலில் சொன்னான். ''நிறுத்து! பணத்தைக் கொடுத்துப் பையனை அனுப்பு. இல்லையேல் உன்னை விரட்டி விடுவேன்'' என்று கண்டிப்பான குரலில் சொன்னேன்.

ஸவேலிச் மிகவும் பரிதாபமாக என்னைப் பார்த்துவிட்டு பணத்தை எடுக்கப் போனான். அவனைப் பார்க்க எனக்குப் பாவமாக இருந்தது. ஆனால் நான் சுதந்திரமானவனாக இருக்க விரும்பினேன். நான் இன்னும் குழந்தையல்ல என்பதை அவனுக்கு உணர்த்த வேண்டுமென்று உறுதி கொண்டேன். பணம் ஸூரினுக்கு அனுப்பி வைக்கப்பட்டது. அந்தப் பாழாய்ப் போன விடுதியிலிருந்து என்னை உடனடியாகக் கூட்டிக் கொண்டு போய்விட வேண்டுமென்று ஸவேலிச் முடிவு செய்தான். குதிரைகள் தயாராக நிற்கின்றன என்று என்னிடம் தெரிவித்தான். எனக்கு இராணுவ வாழ்க்கையைக் கற்றுக் கொடுத்த ஆசிரியரிடமிருந்து விடைபெற்றுக் கொள்ளாமல்—இனி அவரைச் சந்திக்க முடியும் என்று எனக்கு நம்பிக்கையில்லை — ஸிம்பீர்ஸ்கிலிருந்து அலை மோதும் உள்ளத்தோடு, ஆனால் அமைதியான கழிவிரக்கத்தோடு நான் புறப்பட்டேன்.

## அத்தியாயம் இரண்டு

### வழிகாட்டி

தூரத்திலிருக்கும் தேசமே!
எனக்கு உன்னைத் தெரியாது.
உன்னைத் தேடி நான்
புறப்படவில்லை.
என் குதிரையும் உன்னிடம்
என்னைக் கொண்டுவரவில்லை.
நான் வீரமிக்க இளைஞன்.
இளமையின் முரட்டுத்தனம்,
காட்டமான மது ஊட்டிய வெறி
என்னை உன்னிடம் கொண்டுவந்தது.

பழம் பாடல்

என்னுடைய பிரயாணச் சிந்தனைகள் மகிழ்ச்சி நிரம்பியவையாக இருக்கவில்லை. நான் இழந்த தொகை—அந்தக் காலத்திய நிலைமைகளின்படி—சற்று அதிகமானதுதான். ஸிம்பீர்ஸ்கிலிருந்த விடுதியில் நான் முட்டாள்தனமாக நடந்து கொண்டது மட்டுமல்லாமல் ஸவேலிச்சையும் கண்டபடி பேசி விட்டேன் என்று மனதில் பட்டது. அதைப் பற்றி நான் வருத்தப்பட்டேன். அந்தக் கிழவன் வண்டியின் முன் புறத்தில் எனக்கு முதுகைக் காட்டிக் கொண்டு வருத்தத்தோடு உட்கார்ந்திருந்தான். அவன் பெரும்பாலும் மௌனமாக இருந்தான்; ஆனால் எப்பொழுதாவது அவனிடமிருந்து உறுமல் சத்தம் கேட்கும். நான் அவனோடு சமாதானம் செய்து கொள்ள விரும்பினேன். ஆனால் எப்படிப் பேசுவது என்று தெரியவில்லை. கடைசியில், ''ஸவேலிச்! இப்படி உம்மென்று எவ்வளவு காலம் இருக்கப் போகிறாய்? சரி! விடு! நாம் சமாதானம் செய்து கொள்வோம். நான் செய்தது தவறுதான். அது எனக்கே நன்றாகத் தெரிகிறது. நேற்று முட்டாளைப் போல நடந்து கொண்டேன். உன்

ஊயும் வீணுகத் திட்டி விட்டேன். இனிமேல் இப்படி நடந்து கொள்ள மாட்டேன்; நீ சொல்வதைக் கேட்கிறேன். இது சத்தியம். கோபத்தை விடு. நமக்குள் ஒத்துப் போவோம்'' என்று சொன்னேன்.

''ஓ! பியோத்தர் அந்திரேயெவிச்! எஜமான்! நான் என் மீதுதான் கோபப்பட்டுக் கொண்டிருக்கிறேன். எல்லாம் என்னுடைய தவறுதான். உங்களை அந்த விடுதியில் தனியே விட்டுப் போயிருக்கக் கூடாது. அங்கே மாதாகோவில் ஊழியனின் மனைவியை எனக்குத் தெரியும். அவளைப் பார்த்து விட்டு வரலாமே என்று போயிருந்தேன். என்ன செய்வது? சில நண்பர்களைச் சந்திக்கப் போனல் கடைசியில் கம்பி எண்ண நேரலாம்? நினைக்கவே பயங்கரமாக இருக்கிறது! என்னுடைய எஜமானையும் எஜமானியையும் நான் எப்படிச் சந்திப்பேன்? தங்கள் குழந்தை குடிக்கிறது, சூதாடுகிறது என்று கேள்விப்பட்டால், அவர்கள் என்னைப் பற்றி என்ன நினைப்பார்கள்?'' என்று ஆழ்ந்த பெருமூச்சோடு சொன்ஞன்.

ஸவேலிச்சை சமாதானப்படுத்துவதற்காக இனி எக் காலத்திலும் அவனுடைய அனுமதியில்லாமல் ஒரு காசு கூடச் செலவழிக்க மாட்டேன் என்று சத்தியம் செய்தேன். அவன் படிப்படியாக நிதானமடைந்தான். எனினும் திடீரென்று தலையை ஆட்டியபடியே முணுமுணுப்பான். ''நூறு ரூபிள்! கொஞ்சப் பணமா!'' என்பான்.

நாங்கள் போக வேண்டிய இடத்தை நெருங்கிக் கொண்டிருந்தோம். எங்களைச் சுற்றி எங்கு பார்த்தாலும் சம வெளிப் பிரதேசம் தெரிந்தது: சிற்சில இடங்களில் மணல் மேடுகளும் கிடங்குகளும் காணப்பட்டன. எங்கும் பனி விழுந்திருந்தது. சூரியன் மேற்குத் திசையில் மறையப் போகும் நேரம். சறுக்கு வண்டி குறுகலான பாதையில், வண்டித் தடத்தின் மீது சென்று கொண்டிருந்தது, திடீரென்று வண்டிக்காரன் ஒரு குறிப்பிட்ட திசையைக் கவலையோடு பார்த்தான். கடைசியில் தன் தலையிலிருந்த தொப்பியை எடுத்துக் கையில் வைத்துக் கொண்டு என்னை நோக்கித் திரும்பினுன். ''ஐயா! வண்டியைத் திருப்பி விடலாமா?'' என்று கேட்டான்.

''எதற்காக?''

''பருவநிலைமை மாறிவிடும் போல இருக்கிறது. காற்று பலமாக அடிக்கிறது. கீழே கிடக்கும் பனியை எப்படி சிதறடித்திருக்கிறது, பாருங்கள்'' என்ருன்.

''அப்படியாஞல் என்ன ஏற்படும்?''

''அதோ! அங்கே பாருங்கள்.'' (வண்டிக்காரன் சவுக்கை உயர்த்தி கிழக்குத் திசையைச் சுட்டிக் காட்டினுன்.)

''வெள்ளை ஸ்டெப்பி நிலமும் தெளிவான ஆகாயமும் தெரிகிறது. வேருென்றும் எனக்குத் தெரியவில்லையே.''

''அங்கே பாருங்கள்—அந்த மேகத்தை.''

அங்கே பார்த்த பொழுது தொடுவானத்தில் ஒரு சிறு வெள்ளை மேகத்தைப் பார்த்தேன். முதலில் அது தூரத்திலிருக்கும் குன்று போலவே எனக்குத் தோன்றியது. அந்த மேகம் புயல் வரப் போவதைச் சுட்டிக் காட்டுகிறது என்று வண்டிக்காரன் விளக்கினுன்.

இந்தப் பகுதிகளில் பனிப்புயல் அடிக்கும் பொழுது, கூட்டமாகச் செல்லும் சறுக்கு வண்டிகள் பனி மூடிவிடுவதுண்டு என்று நான் கேள்விப்பட்டிருக்கிறேன். வண்டிக்காரன் சொல்கிறபடி வண்டியைத் திருப்பி விடுவது நல்லது என்று ஸவேலிச் ஆலோசனை கூறினுன். ஆனுல் காற்று பலமாக அடிப்பதாக எனக்குத் தோன்றவில்லை. எனவே அதற்குள் அடுத்த அஞ்சல் நிலையத்துக்குப் போய்ச் சேர்ந்துவிட முடியும் என்று நினைத்தேன். குதிரைகளை வேகமாக ஓட்டு என்று வண்டிக்காரனுக்கு உத்தரவிட்டேன்.

அவன் கிழக்குத் திசையைத் திரும்பத் திரும்பப் பார்த்துக் கொண்டு குதிரைகளை வேகமாக ஓட்டினுன். அவையும் வேகமாகவே ஓடின. ஆனுல் காற்று மென்மேலும் பலமாக வீச ஆரம்பித்தது. அந்தச் சிறு மேகம் திடீரென்று பெரிதாகி வானத்தை முழுமையாக மூடியது. பனி முதலில் சிறிதாகவும் பிறகு பெரிய கட்டிகளாகவும் விழ ஆரம்பித்தது. காற்று ஊளையிட ஆரம்பித்தது. நாங்கள் பனிப்புயலில் சிக்கிக் கொண்டோம். ஒரு நிமிடத்தில் வானம் இருண்டு போய் பனிக் கடலோடு சங்கமித்தது. நிலத்தின் எல்லைக் குறிகள் மறைந்து விட்டன. ''பார்த்தீர்களா! எஜமான்! பனிப் புயல் வந்து விட்டது. நாம் மாட்டிக் கொண்டோம்....'' என்று புலம்பினுன் வண்டிக்காரன்.

நான் வண்டிக் கூட்டிலிருந்து தலையை வெளியே நீட்டிப்

பார்த்தேன். ஒரே இருட்டு, பயங்கரமான பனிப்புயல். காற்று வெறித்தனமாக ஊளையிட்டதைக் கேட்கும் பொழுது அது திடீரென்று உயிர் பெற்று எழுந்து விட்டது போலத் தோன்றியது. ஸவேலிச் மீதும் என் மீதும் பனி அப்பி விட்டது. குதிரைகள் நடக்க ஆரம்பித்தன; விரைவில் நின்று விட்டன. ''வண்டியை ஏன் நிறுத்தி விட்டாய்?'' என்று பொறுமையில்லாமல் வண்டிக்காரனைக் கேட்டேன். ''என்ன செய்வது? வழி தெரியவில்லையே'' என்று அவன் தன்னுடைய ஆசனத்திலிருந்து கீழே இறங்கியபடி பதிலளித்தான். ''எங்கே இருக்கிறோமென்பதே தெரியவில்லை. பாதை மூடியிருக்கிறது. எல்லாப் பக்கமும் இருட்டு'' என்றான். நான் அவனைத் திட்டிய பொழுது ஸவேலிச் அவனுக்குப் பரிந்து பேசினான். ''அவன் சொன்னதை நீங்கள் கேட்டிருக்க வேண்டும். நாம் விடுதிக்குத் திரும்பி புயல் ஓய்கின்ற வரை தங்கியிருந்திருக்க வேண்டும். சூடாகத் தேநீர் சாப்பிட்டுவிட்டுத் தூங்கி பிறகு புறப்பட்டிருக்கலாம். நமக்கு அவசரமான வேலை எதுவுமில்லையே. கல்யாணத்துக்கா போகிறோம்?'' என்று கோபத்தோடு சொன்னான். ஸவேலிச் சொன்னது உண்மைதான். நாங்கள் ஆபத்தில் சிக்கிக் கொண்டோம். பனி மென்மேலும் அதிகமாக விழுந்து கொண்டிருந்தது. வண்டியைச் சுற்றிலும் அதிகமான பனி தேங்கி நின்றது. குதிரைகள் தலைகளைத் தொங்கவிட்டபடி நின்றன; திடீரென்று சிலிர்த்துக் கொண்டன. வண்டிக்காரன் குதிரைகளைச் சுற்றி நடப்பதும், ஏதாவது செய்ய வேண்டுமென்பதற்காகக் கடிவாளத்தைச் சரி செய்வதுமாக இருந்தான். ஸவேலிச் எதையாவது முணுமுணுத்தான். நான் பாதை தென்படுகிறதா அல்லது உயிருள்ள எந்த ஜீவராசியின் நடமாட்டமாவது தெரிகிறதா என்று எல்லாத் திசைகளிலும் உற்றுப் பார்த்தேன். ஆனால் பனிப்புயலைத் தவிர வேறு எதுவும் என் கண்களுக்குப் புலப்படவில்லை.... திடீரென்று என்னுடைய கண்களில் கறுப்பு நிறத்தில் ஒரு பொருள் தென்பட்டது. உடனே வண்டிக்காரனைக் கூப்பிட்டேன். ''வண்டிக்காரனே! அதோ கறுப்பாகத் தெரிகிறதே, அது என்ன என்று பார்'' என்று சொன்னேன். ''எஜமான்! அது என்ன என்று கடவுளுக்குத்தான் தெரியும்'' என்று சொல்லிவிட்டு அவன் வண்டியில் ஏறி ஆசனத்தில் அமர்ந்தான். ''அதைப் பார்த்

தால் மரமாகவோ, வண்டியாகவோ தெரியவில்லை. அது நகர்வதாகவும் தோன்றுகிறது. அது ஓநாயாக இருக்கும், அல்லது மனிதனாகவும் இருக்கலாம்'' என்றான்.

அந்தப் பொருளை நோக்கி வண்டியை ஓட்டுமாறு அவனுக்கு உத்தரவிட்டேன். அந்தப் பொருள் எங்களை நோக்கி நகர்ந்து வருவது போலவும் தோன்றியது. சில நிமிடங்களில் வண்டி அந்த இடத்தை அடைந்தது. அங்கே ஒரு மனிதன் நின்று கொண்டிருந்தான். ''அடப்பாவி!'' என்று வண்டிக்காரன் சொன்னான். ''பாதை எங்கே இருக்கிற தென்று உனக்குத் தெரியுமா?'' என்று கேட்டான்.

''பாதை இங்கே இருக்கிறது. அதன் மீதுதான் நான் நின்று கொண்டிருக்கிறேன். ஆனால் பாதை தெரிந்தால் மட்டும் போதுமா?'' என்றான் அந்த வழிப்போக்கன்.

''இங்கே பாரப்பா! உனக்கு இந்தப் பகுதியைத் தெரி யுமா? நாங்கள் இரவில் தங்குவதற்குத் தகுந்தபடி ஓர் இடத்துக்கு எங்களைக் கூட்டிக் கொண்டு போவாயா?'' என்று நான் அவனைக் கேட்டேன்.

''எனக்கு இந்தப் பகுதியை நன்றாகத் தெரியும். இந்தக் கடைசியிலிருந்து அந்தக் கடைசி வரை குதிரை மீது போ யிருக்கிறேன்; நடந்து சுற்றியிருக்கிறேன். ஒரு தடவை யல்ல; பல தடவைகள். ஆனால் இந்தப் பனிப்புயலில் எங்கே யும் போகக் கூடாது. இருக்கும் இடத்திலேயே இருப்பது தான் நல்லது. பனிப்புயல் சீக்கிரமாக நின்றுவிடும். பிறகு வானம் வெளுத்துவிடும். அப்போது நட்சத்திரங்களைப் பார்த்துக் கொண்டு பிரயாணத்தைத் தொடர முடியும்'' என்றான்.

அந்த வழிப்போக்கனின் அமைதியான பதில் எனக்கு நம்பிக்கையைத் தந்தது. இன்றிரவை ஸ்டெப்பி நிலத்தின் நடுவே கழிக்க வேண்டியதுதான்; கடவுள்தான் நம்மைக் காப்பாற்ற வேண்டும் என்று முடிவு செய்தேன். ஆனால் அந்த வழிப்போக்கன் திடீரென்று வண்டிக்காரனுக்குப் பக் கத்தில் மிகவும் லாவகமாக ஏறி உட்கார்ந்தான்.

''நல்ல வேளை. பக்கத்திலேயே ஒரு வீடு இருக்கிறது. வண்டியை வலது பக்கம் திருப்பி நேராக ஓட்டு'' என்று வண்டிக்காரனிடம் சொன்னான்.

''வலது பக்கத்தில் ஏன் திருப்ப வேண்டும்? அங்கே

பாதை ஒன்றுமில்லையே. உனக்கென்ன? ஓட்டு என்று நீ பாட்டுக்குச் சொல்லி விட்டாய். அடுத்தவன் வண்டி—அடுத்தவன் குதிரைகள். ஏதேனும் ஆபத்து ஏற்பட்டால் நீயா ஈடு செய்யப் போகிறாய்?'' என்று என்னுடைய வண்டிக்காரன் கோபமாகக் கேட்டான். வண்டிக்காரன் சொல்வது சரி என்று எனக்குப் பட்டது.

''பக்கத்தில் வீடு இருக்கிறதென்று எப்படிச் சொல்கிறாய்?'' என்று அவனைக் கேட்டேன்.

''அந்தத் திசையிலிருந்துதான் காற்றடிக்கிறது. அந்தக் காற்றில் புகையிருப்பதை என் மூக்கு சொல்கிறது. புகையிருந்தால் பக்கத்தில் நிச்சயமாக ஒரு கிராமம் இருக்கிறது'' என்று அவன பதிலளித்தான்.

அவனுடைய அறிவும் கூர்மையான புலன்களும் எனக்கு வியப்பைத் தந்தன. அவன் காட்டும் திசையில் வண்டியை ஓட்டுமாறு உத்தரவிட்டேன். பனி அதிகமாக விழுந்திருந்தபடியால் குதிரைகள் மிகவும் சிரமத்தோடு வண்டியை இழுத்துக் கொண்டு சென்றன. சில சமயங்களில் பனிப் பொந்துகளில் வண்டி சிக்கிக் கொண்டது. கடலில் புயலடிக்கும் பொழுது கப்பல் இங்குமங்கும் ஆடுவதைப் போல வண்டி இரண்டு பக்கத்திலும் மாறிமாறிச் சாய்ந்து மெதுவாகப் போய்க் கொண்டிருந்தது. ஸவேலிச் உறுமியபடியே என் மீது அடிக்கடி சாய்ந்து விழுந்தான். நான் வைக்கோல் திரையை நன்றாக இழுத்து சன்னலை அடைத்தேன். உடலை மூடியிருந்த உரோமக் கோட்டை இழுத்து நன்றாகப் போர்த்திக் கொண்டேன். வண்டி ஆடி அசைந்து போவதால் ஏற்பட்ட சுகத்தில் நான் தூங்க ஆரம்பித்தேன். புயல் காற்றின் ஊளைச் சத்தம் எனக்குத் தாலாட்டுப் பாடியது.

அப்பொழுது நான் கண்ட கனவை என்னால் ஒருபோதும் மறக்க முடியவில்லை. என்னுடைய வாழ்க்கையில் நடந்த பல விசித்திரமான சம்பவங்களை இன்று நினைக்கும் பொழுது அந்தக் கனவு ஒரு வகையில் தீர்க்க தரிசனம் கொண்டது என்று கருதுகிறேன். ஒரு மனிதன் மூட நம்பிக்கைகளை வெறுத்த போதிலும், சந்தர்ப்பம் வரும் பொழுது சுலபமாக மூட நம்பிக்கைகளுக்கு ஆளாகி விடுவான் என்பதை எனது வாசகர்கள் தங்களது அனுபவத்தில் தெரிந்து கொண்டிருக்

கலாம். எனவே என்னை மன்னிக்குமாறு அவர்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

எனக்கு ஏற்பட்ட உடற்களைப்பில் தூக்கம் சொக்கியது. தூக்கத்தின் முதற் கட்டத்தில் யதார்த்த நிலை கனவுகளுக்கு இடம் கொடுத்து பிறகு அவற்றோடு இணைந்து தெளிவற்ற பிம்பங்களாக வெளிப்படும். நான் அந்த நிலையில்தான் இருந்தேன். இன்னும் புயல் அடித்துக் கொண்டிருப்பது போலவும் பனி மூடியிருக்கும் ஸ்டெப்பி நிலத்தின் மீது நாங்கள் அலைந்து கொண்டிருப்பதாகவும் எனக்குத் தோன்றியது.... திடீரென்று எனக்கு முன்னால் ஒரு கதவு தெரிந்தது. வண்டி உள்ளே நுழைந்த பொழுது அது எங்களுடைய வீடு என்று தெரிந்து கொண்டேன். நான் வேகமாக வீட்டுக்குத் திரும்பியிருப்பதை அவருடைய முடிவுக்கு விரோதமாக வேண்டுமென்றே நடந்து கொண்டதாக நினைத்து என் தகப்பனார் ஆத்திரப்படலாம் என்ற எண்ணம்தான் எனக்கு முதலில் தோன்றியது. வண்டியிலிருந்து வேகமாகக் கீழே குதித்தேன். என் தாயார் மிகவும் சோகத்தோடு என்னைச் சந்திக்க வருவதைப் பார்த்தேன். ''உஸ். உன் தகப்பனார் உடல் நிலை மிகவும் மோசமாகியிருக்கிறது—எந்த நேரத்திலும் மரணம் ஏற்படலாம். அவர் உன்னிடம் விடை பெற்றுக் கொள்ள விரும்புகிறார்'' என்றாள். அதைக் கேட்டு நான் அதிகமான பயத்தோடு என் தாயாரைப் பின் தொடர்ந்து படுக்கை அறைக்குச் சென்றேன். அந்த மங்கலான அறையில் ஒரு படுக்கையைச் சுற்றி ஆண்களும் பெண்களும் கவலையோடு நின்று கொண்டிருந்தார்கள். நான் சப்தமில்லாமல் படுக்கையின் அருகே போனேன். என் தாயார் திரையின் ஒரு முனையைத் தூக்கிக் கொண்டு ''அந்திரேய் பெத்ரோவிச், பெத்ருஷா வந்திருக்கிறான். உங்களுக்கு உடம்பு சரியில்லை என்று கேள்விப்பட்டதும் அவன் திரும்பி விட்டான். அவனை ஆசீர்வதியுங்கள்'' என்று கூறினாள். நான் முழந்தாளிட்டுக் கொண்டு நோயாளியைப் பார்த்தேன். எதைப் பார்த்தேன் தெரியுமா? படுக்கையில் என்னுடைய தகப்பனாருக்குப் பதிலாக கறுப்பான தாடியுள்ள ஒரு விவசாயி படுத்திருந்தான். அவன் என்னை உற்சாகமாகப் பார்த்தான். நான் ஒன்றும் புரியாமல் என்னுடைய தாயாரைப் பார்த்தேன். ''இதற்கென்ன அர்த்தம்? இந்த நபர் என்னுடைய தகப்பனு

ரல்ல. ஒரு விவசாயியிடம் நான் எதற்காக ஆசீர்வாதம் பெற வேண்டும்?'' என்று என் தாயாரைக் கேட்டேன். ''பெத் ருஷா! உன் திருமணத்தின் போது உன்னுடைய தகப்பஞ ரின் இடத்தில் இவர்தான் நிற்பார். அவர் கையை முத்த மிடு. அவர் உன்னை ஆசீர்வதிக்கட்டும்....'' என்ருள். நான் அதை விரும்பவில்லை. பிறகு அந்த விவசாயி படுக்கை யிலிருந்து எழுந்து, தன்னுடைய முதுகுப் புறத்திலிருந்து ஒரு கோடாலியை எடுத்துக் கொண்டு எல்லாப் பக்கங்களிலும் அதைச் சுழற்றிஞன். நான் ஓடப் பார்த்தேன்.... ஆனல் முடியவில்லை. அந்த அறை முழுவதும் பிரேதங்கள். நான் அவற்றின் மீது கீழே விழுவது போலத் தடுமாறினேன். என்னுடைய கால்களைச் சுற்றிலும் இரத்தம் தேங்கி நின்றது.... பயங்கரமான தோற்றமுள்ள அந்த விவசாயி என்னை அன்போடு கூப்பிட்டான். ''பயப்படாதே! என்னிடம் வா! உன்னை ஆசீர்வதிக்கிறேன்'' என்ருன். நான் பயந்த படியே நின்றேன்.... திடீரென்று நான் விழித்துக் கொண் டேன். வண்டி நின்று விட்டது. ஸவேலிச் என்னுடைய சட்டைக் கையை இழுத்தபடியே ''ஐயா! எழுந்திருங்கள். வந்து சேர்ந்து விட்டோம்'' என்ருன்.

''வந்து விட்டோமா? எங்கே?'' என்று நான் கண்களைக் கசக்கிக் கொண்டு கேட்டேன்.

''விடுதிக்கு வந்து விட்டோம். கடவுள் கருணையால் வண்டி வேலியில் மோதி நின்றது. ஐயா, சீக்கிரமாக எழுந்து உள்ளே வாருங்கள். கதகதப்பாக இருக்கும்'' என்ருன் ஸவேலிச்.

நான் வண்டியிலிருந்து கீழே குதித்தேன். புயல் வீசிக் கொண்டிருந்த போதிலும் வேகம் குறைந்து விட்டது. எங்கும் இருட்டு. விடுதியின் உரிமையாளர் தம்முடைய கோட்டின் உள்ளே விளக்கை மறைவாக வைத்துக் கொண்டு நுழைவாயிலில் எங்களைச் சந்தித்தார். ஒரு சிறு அறையைத் திறந்து காட்டிஞர். அது அடைசலாக இருந்தாலும் சுத்த மாக இருந்தது. ஒரு சிறு விளக்கு எரிந்து கொண்டிருந்தது சுவரில் ஒரு ரைபிள் துப்பாக்கியும் கஸாக்குகள் அணிகின்ற தொப்பியும் மாட்டப்பட்டிருந்தன.

அந்த விடுதியின் உரிமையாளரான யாயிக் கஸாக்குக்கு அறுபது வயதிருக்கலாம். அவர் நல்ல ஆரோக்கியத்தோடு

சுறுசுறுப்பாக இருந்தார். ஸவேலிச் தேநீர் தயாரிக்கும் பொருள்களோடு உள்ளே நுழைந்து நெருப்பு வேண்டு மென்று கேட்டான். அந்த நேரத்தில் வேறு எதைக் காட்டி லும் தேநீர் மிகவும் அவசியம் என்று எனக்குத் தோன்றியது. விடுதி உரிமையாளர் மற்ற ஏற்பாடுகளைக் கவனிக்கப் போனார்.

''நம்முடைய வழிகாட்டி எங்கே?'' என்று ஸவேலிச்சைக் கேட்டேன்.

''கனவான் அவர்களே!நான் இங்கே இருக்கிறேன்'' என்று தலைக்கு மேலிருந்து சத்தம் கேட்டது.

நான் மேலே இருக்கும் பரணைப் பார்த்தேன். கறுப்பு நிறத்தில் தாடியும் பிரகாசமான இரண்டு கண்களும் தெரிந் தன.

''ரொம்பக் குளிருகிறதா?'' என்று அவனைக் கேட் டேன்.

''இந்தப் பழைய கந்தல் கோட்டை அணிந்திருக்கும் பொழுது குளிராமல் என்ன செய்யும்? நான் ஆட்டு ரோமத் தாலான கோட்டு வைத்திருந்தேன். ஆனால் உண்மை என்ன வென்றால் நேற்றிரவில் மதுக் கடையில் அதை அடகு வைத்து விட்டேன். குளிர் இவ்வளவு அதிகமாக இருக்கும் என்று தெரியாது'' என்று அவன் பதிலளித்தான்.

அப்பொழுது விடுதி உரிமையாளர் கொதிக்கும் சமோ வார் பாத்திரத்தோடு உள்ளே வந்தார். நான் எங்கள் வழிகாட்டியைத் தேநீர் குடிக்குமாறு அழைத்தேன். அவன் பரணிலிருந்து கீழே இறங்கினான். அவனுடைய தோற்றம் குறிப்பிடத்தக்கதாக எனக்குத் தோன்றியது. அவனுக்கு வயது சுமார் நாற்பது இருக்கும். நடுத்தரமான உயரம்; ஒல்லியான உடம்பு; ஆனால் விசாலமான மார்பு. அவனுடைய தாடி கறுப்பாக இருந்தாலும் வெள்ளை உரோமம் அங்கங்கே தலை நீட்டியது; அவனுடைய பெரிய கண்கள் உயிர்த்துடிப் போடு சுழன்று கொண்டிருந்தன. அவனுடைய முகத்தில் கவர்ச்சியான போக்கிரித்தனம் இருந்தது. கஸாக்குகள் மாதிரி தலைமுடி வெட்டப்பட்டிருந்தது. நைந்து கந்தலான கோட்டை அணிந்திருந்தான். கால் சட்டை தார்த்தாரியர் கள் பாணியில் இருந்தது. நான் தேநீர்க் கோப்பையை அவனிடம் நீட்டினேன். அவன் ஒரு வாய் குடித்துவிட்டு

முகத்தைச் சுளித்தான். ''கனவான் அவர்களே! தயவு செய்து, எனக்கு ஓர் உதவி செய்யுங்கள். தேநீர் ஒரு கஸாக்குக்கு ஏற்ற பானமல்ல. ஒரு டம்ளர் மது கொண்டுவரச் சொல்லுங்கள்'' என்றான்.நான் உடனே அவன் விருப்பத்தைப் பூர்த்தி செய்தேன்.விடுதி உரிமையாளர் அலமாரியிலிருந்து ஒரு பாட்டிலையும் டம்ளரையும் எடுத்துக் கொண்டு அவனருகில் வந்தார். அவனை உற்றுப் பார்த்தார். ''ஓ! நீ மறுபடியும் இந்தப் பகுதியில்தான் சுற்றுகிறாயா? என்ன விசேஷம்?'' என்று கேட்டார். எங்களுடைய வழிகாட்டி அவரைப் பார்த்து ஏதோ ஒரு அர்த்தத்தோடு கண்களைச் சிமிட்டிக் கொண்டு விடுகதையைப் போல பேச ஆரம்பித்தான்:

''காய்கறித் தோட்டத்தைச் சுற்றிப் பறந்தேன். சணல் விதைகளைக் கொத்தினேன். காவலிருந்த கிழவி கல்லை விட்டெறிந்தாள். குறி தப்பி விட்டது. சரி. இங்கே உங்கள் கதை என்ன?'' என்றான்.

''எங்கள் கதைதானே?'' என்று விடுதி உரிமையாளர் இழுத்துவிட்டு அதே விடுகதை பாணியில் தொடர்ந்தார். ''மாலைப் பிரார்த்தனைக்கு மணி அடிக்க வேண்டியதுதான். ஆனால் மதகுருவின் மனைவி மாட்டேன் என்கிறாள். ஏனென்றால் மதகுரு எங்கோ போய்விட்டார்; பேய் சுற்றி வருகிறது'' என்றார்.

''கிழவா! நிறுத்து. மழை பெய்தால் காளான் முளைக்கும். காளான் இருந்தால் கூடைகள் வந்து சேரும்'' என்று அந்த வழிப்போக்கன் சொன்னான். பிறகு மீண்டும் கண்களைச் சிமிட்டிக் கொண்டு, ''இப்போது வயிற்றுப் பட்டையில் கோடாலியைச் சொருகு. காவல்காரன் வருகிறான்'' என்றான். உடனே ''கனவான் அவர்களே! உங்களது நலத்துக்காக!'' என்று சொல்லிக் கொண்டு டம்ளரை எடுத்து சிலுவைக் குறியிட்டுவிட்டு, அதிலிருந்த மதுவை ஒரே மடக்காகக் குடித்தான். பிறகு எனக்கு வணக்கம் தெரிவித்துவிட்டுப் பரணில் ஏறிப் படுத்துக் கொண்டான்.

அவர்கள் எதைப் பற்றிப் பேசிக் கொண்டார்கள் என்பது அப்பொழுது எனக்குப் புரியவில்லை. ஆனால் பிறகு அவர்களிருவரும் 1772ம் வருடத்தில் கலகம் செய்து நசுக்கப்பட்ட யாயிக் படைகளைப் பற்றி சங்கேதமாகப் பேசிக் கொண்டார்கள்[41] என்பதை உணர்ந்தேன். ஸவேலிச் அவர்

களுடைய பேச்சை மிகுந்த அதிருப்தியோடு கேட்டுக் கொண்டிருந்தான். விடுதியின் உரிமையாளரையும் வழிகாட்டியையும் சந்தேகத்தோடு மாறி மாறிப் பார்த்துக் கொண்டிருந்தான். அந்த விடுதி பாதையிலிருந்து வெகு தொலைவில், ஸ்டெப்பி நிலத்தின் நடுவில் கிராமங்களிலிருந்து வெகு தூரத்தில் அமைந்திருந்தது. அது திருடர்களுடைய ரகசியத் தங்குமிடமாகவும் இருக்கலாம். ஆனால் எங்களுக்கு வேறு வழி இல்லை. ஏனென்றால் அந்தப் புயலில் நாங்கள் பிரயாணத்தைத் தொடர முடியாது. ஸவேலிச் சங்கடப்பட்டது எனக்கு ஒரு வகையில் ஆனந்தமாக இருந்தது. அங்கே இரவைக் கழிப்பதென்று நான் முடிவு செய்து விட்டேன். அங்கிருந்த பெஞ்சின் மீது காலை நீட்டிப்படுத்தேன். ஸவேலிச் கணப்புக்குப் பக்கத்தில் படுத்தான். விடுதி உரிமையாளர் தரையில் படுத்தார். வெகு சீக்கிரத்தில் எல்லோரும் குறட்டை விட ஆரம்பித்தோம். நான் மரக் கட்டையைப் போல நன்றாகத் தூங்கினேன்.

மறு நாள் காலையில் நான் தாமதமாக விழித்த பொழுது புயல் ஓய்ந்திருந்தது. சூரிய ஒளி பிரகாசமாக இருந்தது. அந்த எல்லையற்ற ஸ்டெப்பி நிலத்தில் பட்டுக் கம்பளத்தை விரித்தது போல பனி பிரகாசித்துக் கொண்டிருந்தது. குதிரைகளை வண்டியில் பூட்டினார்கள். விடுதி உரிமையாளரிடம் கணக்கைக் கேட்டுப் பணத்தைக் கொடுத்தேன். அவர் மிகவும் குறைவான தொகையைத்தான் கேட்டார். ஸவேலிச் வழக்கம் போல் மறுப்புச் சொல்லவோ பேரம் பேசவோ அவசியமில்லை. முந்திய நாளிரவில் அவனுக்கு ஏற்பட்ட சந்தேகம் முற்றிலும் மறைந்து விட்டது. நான் வழிகாட்டியைக் கூப்பிட்டு அவனுடைய உதவிக்கு நன்றி கூறிவிட்டு, அவனிடம் வோட்கா மதுவுக்காக ஐம்பது கோபெக்குகள் கொடுக்குமாறு ஸவேலிச்சிடம் சொன்னேன். ஸவேலிச் முகத்தைச் சுளித்தான். ''மதுவுக்கு ஐம்பது கோபெக்குகளா? எதற்காக? நாம் அவனை வண்டியில் விடுதிக்குக் கூட்டிக் கொண்டு வந்திருக்கிறோம். நீங்கள் எப்படி வேண்டுமானாலும் என்னைத் திட்டுங்கள். ஐம்பது கோபெக்குகளை வீணாக்க வேண்டுமா? மதுவருந்துமாறு எல்லோருக்கும் பணம் கொடுப்பதென்றால் கடைசியில் உங்களுக்கு எதுவும் மிஞ்சாது'' என்றான். அவனோடு விவாதிப்பதற்கு என்னால்

முடியவில்லை. பணத்தை நீயே வைத்திரு என்று நான்தான் அவனிடம் கொடுத்தேன். அந்த வழிகாட்டி எங்களை அழி விலிருந்து காப்பாற்றுவிட்டாலும் ஆபத்தான நிலைமை யிலிருந்து காப்பாற்றியிருக்கிருன். அவனுக்கு எனது நன்றி யைத் தெரிவிக்க முடியவில்லையே என்று வருந்தினேன். ''அப்படியானல் சரி'' என்று நிதானமாகச் சொன்னேன். ''அவனுக்கு ஐம்பது கோபெக்குகள் கொடுக்க நீ விரும்ப வில்லையென்ருல், அவனுக்கு என்னுடைய உடைகளில் ஒன்றைக் கொடு. அவனிடம் குளிருக்கு ஏற்ற உடை இல்லை. முயல் தோலில் தைக்கப்பட்ட என்னுடைய கோட்டை அவனிடம் கொடு'' என்றேன்.

''எஜமான் பியோத்தர் அந்திரேயெவிச்! அவன் அந்தக் கோட்டை அணிந்து கொள்வான் என்று நினைக்கிறீர்களா? மதுக் கடைக்குப் போய் அதை விற்றுவிட்டுக் குடிப்பான்'' என்ருன் ஸவேலிச்.

''கிழட்டுப் பயலே! நான் அதை விற்கிறேன், அல்லது சும்மா இருக்கிறேன். அதைப் பற்றி உனக்கென்ன?'' என்று வழிப்போக்கன் சொன்னன். ''கனவான் தம்முடைய கோட்டை எனக்குத் தர நினைத்தால் அது அவருடைய விருப்பம். உன்னைப் போன்ற அடிமை அவரிடம் விவாதிப் பதா? பேசாமல் சொன்னதைச் செய்'' என்ருன்.

''போக்கிரிப் பயலே! உனக்கு வெட்கமில்லை? அந்தக் குழந்தைக்கு ஒன்றும் தெரியவில்லை. ஏமாளி என்பதால் உடனே அகப்பட்டதைச் சுருட்டப் பார்க்கிருயே? ஒரு கனவானுடைய கோட்டு உனக்கு எதற்கு? உன்னுடைய பாழாய்ப் போன உடலை அதற்குள் நுழைக்க முடியுமா?'' என்று ஸவேலிச் கோபத்தோடு கேட்டான்.

''போதும் நிறுத்து. உடனே போய் அந்தக் கோட்டை எடுத்துக் கொண்டு வா'' என்று நான் என்னுடைய பழைய ஆசிரியரிடம் கூறினேன்.

''அட கடவுளே! அந்த முயல் தோல் கோட்டு புதுசு! ஒரு குடிகார வழிப்போக்கனுக்கு அதைக் கொடுக்கலாமா?'' என்று ஸவேலிச் புலம்பினன்.

ஆனல் ஸவேலிச் முயல் தோல் கோட்டைக் கொண்டு வந்து கொடுத்தான். அந்த வழிப்போக்கன் அதை அங்கேயே போட்டுப் பார்த்தான். அந்த கோட்டு எனக்கே பத்தாது.

அவனுக்கு அது மிகவும் பிடிப்பாக இருந்தது. எனினும் சிரமப்பட்டு அதை மாட்டிக் கொண்டான். அந்த முயற்சியில் சில இடங்களில் தையல் விட்டுப் போனது. தையல் பிய்ந்து போகின்ற சத்தத்தைக் கேட்ட பொழுது ஸவேலிச்சுக்குப் பைத்தியமே பிடித்து விட்டது. என்னுடைய அன்பளிப்பு அந்த வழிப்போக்கனுக்கு அதிகமான மகிழ்ச்சியைத் தந்தது. நாங்கள் புறப்பட்ட பொழுது அவன் வண்டி வரை வந்து பணிவோடு என்னை வணங்கி:

''கனவான் அவர்களே! மிக்க நன்றி! உங்களுடைய நல்ல குணத்துக்கு ஆண்டவனின் வெகுமதி கிடைக்கும். உங்களுடைய அன்பை நான் என் வாழ்க்கை பூராவும் மறக்க மாட்டேன்'' என்றான். அவன் புறப்பட்டான். எங்கள் பயணமும் தொடர்ந்தது. ஸவேலிச்சின் அதிருப்தியை நான் சிறிதும் பொருட்படுத்தவில்லை. நேற்று வீசிய பனிப்புயலையும், ஆபத்தில் உதவிய வழிகாட்டியையும், முயல் தோல் கோட்டையும் சிறிது நேரத்தில் மறந்து விட்டேன்.

ஓரென்புர்க் நகரத்தை அடைந்ததும் நான் ஜெனரலை உடனே போய்ப் பார்த்தேன். அவருடைய உயரமான உடலை வயது இன்னும் அதிகமாக வளைத்திருந்தது. அவருடைய நீண்ட தலைமுடி முழுவதும் நரைத்திருந்தது. அவர் மிகப் பழமையானதும் நிறம் மங்கிப் போனதுமான இராணுவ உடையை அணிந்திருந்தார். அதைப் பார்க்கும் பொழுது அவரை ஆன்னா இயொயானவ்னா காலத்துப் போர்வீரராகவே நினைக்கத் தோன்றும். அதோடு அவர் பேச்சில் ஜெர்மானிய உச்சரிப்பு அழுத்தமாக இருந்தது. என் தகப்பனுருடைய கடிதத்தை அவரிடம் கொடுத்தேன். அவர் பெயரைக் கேட்டதும் அவர் என்னை ஏற இறங்கப் பார்த்தார்.

''அட கடவுளே! நேற்றுத்தான் அந்திரேய் பெத்ரோவிச்சை உன்னைப் போன்ற இளைஞனாகப் பார்த்தது மாதிரி இருக்கிறது. இப்பொழுது பார்! அவன் மகன் வாட்ட சாட்டமான இளைஞனாக வளர்ந்து விட்டான். காலம் எப்படிப் பறக்கிறது!'' என்று சொல்லிக் கொண்டு கடிதத்தைப் பிரித்து மெல்லிய குரலில் படித்தார். அதைப் படிக்கும் பொழுது தம்முடைய கருத்துக்களையும் சொல்லிக் கொண்டே படித்தார். ''' அன்பு மிக்க அந்திரேய் கார்லவிச், மாண்புமிக்க தங்களிடம்....' இந்தப் பட்டமெல்லாம் எதற்கு? சே!

அவனுக்கு வெட்கமாயில்லையா? மரியாதை வேண்டியது தான். ஆனால் பழைய தோழனுக்கு இப்படியா கடிதமெழுது வது?... 'மாண்புமிக்க தங்களிடம்'... ஹூம்... 'காலஞ் சென்ற பீல்டு-மார்ஷல் மின்...[42] படையெடுப்பு... மற்றும் கரலீன்கா....' பலே! அந்தக் காலத்தில் செய்த சேட்டை களை இன்னும் மறக்கவில்லை.... 'சரி. விஷயத்துக்கு வரு வோம்... என்னுடைய இளம் ராஸ்கலை உங்களிடம் அனுப்பியிருக்கிறேன்'... ஹூம்.... 'அவனை முள்ளம் பன்றித் தோல் கையுறைகளால் கவனித்துக் கொள்ளுங் கள்'.... முள்ளம் பன்றித் தோல் கையுறைகள் என்றால் என்ன அர்த்தம்? அது ஒரு ருஷ்யப் பழமொழியா? அப்படி யென்றால் என்னவாக இருக்கும்?'' என்று என்னிடம் கேட் டார்.

''அப்படியென்றால் நீங்கள் என்னை அன்பாக நடத்த வேண்டும்; அதிகமான கட்டுப்பாடு விதிக்கக் கூடாது; எனக்குச் சுதந்திரம் கொடுக்க வேண்டும்; என்னை முள்ளம் பன்றித் தோல் கையுறைகளால் கவனித்துக் கொள்ள வேண் டும் என்று அர்த்தம்'' என்று நான் சாதுவாகச் சொன் னேன்.

''ஹூம், அப்படியா?.. 'அவனைச் சுதந்திரமாக விட வேண்டாம்'... இல்லை, நீ சொல்லும் அர்த்தம் இல்லை போ லிருக்கிறதே....'அவனுடைய குடியுரிமைச் சீட்டையும் வைத் திருக்கிறேன்....' எங்கே? ஓ! இதோ இருக்கிறது... 'செமி யோனவ்ஸ்கி படைப் பிரிவுக்குச் செய்தி அனுப்ப வேண் டும்....' நல்லது... நல்லது... அனுப்பி விடுவோம்.... 'தங் கள் அந்தஸ்தைப் பற்றிக் கவலைப்படாமல் தங்களுடைய பழைய நண்பனும் தோழனுமாகிய நான் தங்களை ஆலிங்கனம் செய்து கொள்கிறேன்'... ஓ! கடைசியாக... இன்னும் சில....'' கடிதத்தைப் படித்த பிறகு அவர் என்னுடைய குடியுரிமைச் சீட்டைத் தனியாக எடுத்து வைத்தார். ''உன் தகப்பனார் கேட்டுக் கொண்டபடிச் செய்து விடுவோம். க... படைப் பிரிவில் உன்னை அதிகாரியாக நியமித்து விடுகிறேன். காலத்தை வீணாக்காமல் நீ நாளையே பெலகோர்ஸ்க் கோட் டைக்குப் புறப்படு. அங்கேயுள்ள காப்டன் மிரோனவ் அன் பும் நேர்மையும் மிகுந்தவர். அவருக்குக் கீழ் நீ பணி யாற்ற வேண்டும். அங்கே நீ உண்மையான இராணுவ சேவை

செய்ய வேண்டியிருக்கும். கட்டுப்பாடும் மிகவும் அவசியம். ஓரென்புர்கில் நீ செய்யக் கூடியது ஒன்றுமில்லை. உன் வயதில் சோம்பேறியாக இருக்கக் கூடாது. இன்று இரவு உணவுக்கு உன்னை எதிர்பார்க்கிறேன்'' என்ருர்.

என்னுடைய நிலைமை முதலில் மோசமாக இருந்தது. இப்பொழுது படுமோசமாகி விட்டது என்பதை உணர்ந் தேன். ''தாயாரின் வயிற்றிலிருக்கும் பொழுதே என்னைக் காவலர் படையில் சார்ஜெண்டாகப் பதிவு செய்து என்ன பிரயோசனம்? இப்பொழுது என்னுடைய நிலைமை என்ன? கிர்கீஸ்-கைஸா ஸ்டெப்பியின் எல்லைப் பகுதியில் வெகு தூரத் துக்கு அப்பால் உள்ள கோட்டையிலிருக்கும் படையில் நான் சேர்ந்து கொள்ள வேண்டும்!...'' அன்றிரவில் அந்தி ரேய் கார்லவிச்சுடன் நான் உணவருந்தினேன். அவர், அவ ருடைய பழைய அட்ஜுடென்ட், நான் ஆக மூன்று பேர்கள் மட்டுமே இருந்தோம். அவருடைய கருரான ஜெர்மானியச் சிக்கனம் உணவில் தெரிந்தது. நான் அங்கேயிருந்தால் தாம் உணவருந்தும் பொழுது சில நேரங்களில் என்னையும் விருந் தினுகச் சேர்த்துக் கொள்ள வேண்டுமே என்ற பயத்தில் தான் என்னை அவசரமாகக் கோட்டைக்கு அனுப்புகிருரோ என்று நினைத்தேன். மறு நாள் ஜெனரலிடம் விடை பெற்றுக் கொண்டு என் படையோடு சேர்ந்து கொள்வதற்காகப் புறப் பட்டேன்.

## அத்தியாயம் மூன்று

### கோட்டை

எங்கள் கோட்டை இது.
ரொட்டியும் தண்ணீருமே எங்கள் உணவு.
ஆனால்
எங்கள் எதிரிகள் இங்கே வந்தால்,
நிச்சயமாக விருந்து கொடுப்போம்:
வேட்டும் குண்டும்
வெடிமருந்தும் படைப்போம்; நன்றாக
விருந்து கொடுப்போம்.

**படைவீரர்கள் பாடல்[43]**

ஐயா! அவர்கள் பழைய
மரபைச் சேர்ந்தவர்கள்.

**மூடன்**

ஓரென்புர்கிலிருந்து நாற்பது வெர்ஸ்டாக்கள் தொலைவில் பெலகோர்ஸ்க் கோட்டை இருந்தது. யாயிக் நதியின் உயரமான கரையின் வழியே நாங்கள் போக வேண்டும். அந்த ஆற்றில் தண்ணீர் இன்னும் உறைய ஆரம்பிக்கவில்லை. ஆற்றின் பனி மூடிய கரைகளுக்கு இடையில் ஓடிய தண்ணீரின் கருஞ்சுழிப்பு என் கண்களை உறுத்தியது. ஆற்றின் மறு கரையில் கிர்கீஸ் ஸ்டெப்பி நிலம் நீண்டு பரந்து காணப்பட்டது. நான் பெரும்பாலும் சோகமான சிந்தனைகளில் மூழ்கியிருந்தேன். கோட்டைகளில் வாழ்க்கை நடத்துவதில் எனக்குச் சிறிதும் விருப்பமில்லை. எனது எதிர்கால மேலதிகாரி காப்டன் மிரோனவ் எப்படி இருப்பார் என்று கற்பனை செய்தேன். கடுகடுப்பான தோற்றமும் எதற்கெடுத்தாலும் எரிந்து விழுகின்ற குணமும் கொண்ட வயதான அதிகாரி; அவருக்கு இராணுவ சேவையைத் தவிர வேறு சிந்தனை இருக்காது; நான் சிறு குற்றம் செய்தால் கூட உடனே என்னைக் கைது செய்து ரொட்டியும் தண்ணீரும் மட்டுமே கொடுக்குமாறு உத்தரவிடக் கூடியவராக இருப்பார் என்று கற்பனை

செய்தேன். மாலை மறைய ஆரம்பித்தது. வண்டி வேகமாகப் போய்க் கொண்டிருந்தது. ''இங்கிருந்து கோட்டை வெகு தூரமா?'' என்று வண்டிக்காரனைக் கேட்டேன். ''இல்லை. அதோ தெரிவதுதான் கோட்டை'' என்று சொன்னான். நான் அவன் காட்டிய திசையில் கவனமாகப் பார்த்தேன். உயரமான கோட்டை மதில்களையும் கொத்தளங்களையும் நான் எதிர் பார்த்தேன். ஆனால் அங்கே மரத்தால் கட்டப்பட்ட சில வீடுகள் மட்டுமே தென்பட்டன; அவற்றைச் சுற்றிலும் உயரமான மரக் கட்டைகளைக் கொண்டு வேலி போடப் பட்டிருந்தது. பாதையின் ஒரு பக்கத்தில் மூன்று அல்லது நான்கு வைக்கோல் போர்கள் இருந்தன; அவற்றைப் பாதி யளவுக்குப் பனி மூடியிருந்தது. மறு பக்கத்தில் சிதிலமாகி வளைந்து போன அரவை மில் இருந்தது; அதன் காற்றாடிகள் வளைந்து தொங்கிக் கொண்டிருந்தன. ''கோட்டை எங்கே இருக்கிறது?'' என்று நான் ஆச்சரியத்தோடு கேட்டேன். ''அதுதான் கோட்டை'' என்று வண்டிக்காரன் அந்தச் சிறிய கிராமத்தைச் சுட்டிக் காட்டினான். அப்போது வண்டி அந்தக் கிராமத்துக்குள் நுழைந்தது. வாயிலில் ஒரு பழைய இரும்பு பீரங்கி நிறுத்தப்பட்டிருந்தது. அந்தக் கிராமத்துத் தெருக் கள் குறுகலாகவும் வளைந்தும் இருந்தன. பெரும்பாலான தாழ்ந்த குடிசைகளில் வைக்கோல் கூரை போடப்பட்டிருந் தது. தளகர்த்தரின் வீட்டுக்கு வண்டியை ஓட்டுமாறு வண்டிக்காரனிடம் சொன்னேன். ஒரு நிமிடத்துக்குப் பிறகு மரத்தால் கட்டப்பட்ட சிறிய வீட்டுக்கு முன்னாலிருந்த மேடான இடத்தில் வண்டி நின்றது. அந்த வீட்டுக்கு அருகில் மரத்தால் கட்டப்பட்ட மாதாகோவில் இருந்தது.

என்னைச் சந்திப்பதற்கு யாரும் வெளியில் வரவில்லை. நான் வாயிலுக்குச் சென்று கதவைத் திறந்து உள்ளே நுழைந்தேன். ஒரு காயமடைந்த வயதான படைவீரன் மேசையின் மீது உட்கார்ந்திருந்தான். அவன் பச்சை நிற முள்ள இராணுவ உடையின் கைப் பகுதியில் ஒரு சிறு நீல நிறத் துணியைத் தைத்துக் கொண்டிருந்தான். அவனிடம் நான் வந்திருப்பதை உள்ளே சென்று தெரிவிக்குமாறு கேட்டுக் கொண்டேன். ''ஐயா! நீங்கள் உள்ளே போகலாம். அவர்கள் உள்ளே இருக்கிறார்கள்'' என்று அவன் பதிலளித் தான். நான் ஒரு சுத்தமான சிறிய அறைக்குள் நுழைந்தேன்.

அந்த அறை பழங்காலத்திய மரபுப்படி அலங்கரிக்கப்பட்டிருந்தது. ஒரு மூலையில் தட்டுகள், கோப்பைகள் வைப்பதற்கான அலமாரி இருந்தது. அந்த அதிகாரியின் டிப்ளொமா சான்றிதழ் மரச் சட்டத்தில் கண்ணுடி போடப்பட்டு சுவரில் தொங்கியது. அதற்கு அருகில் நன்கு வரையப்படாத சில ஓவியங்கள் தொங்கின. ஒரு படம் கீஸ்திரின் படையெடுப்பையும் அடுத்த படம் ஒச்சாக்கவ் படையெடுப்பையும் சித்திரித்தன.[44] மேலும், ''மணமகளைத் தேர்ந்தெடுத்தல்'', ''பூனையின் மரணம்'' என்று தலைப்பிடப்பட்ட இரண்டு படங்களும் அங்கே தொங்கின. சன்னலின் அருகில் மிகவும் வயதான ஒரு பெண் பஞ்சு திணித்த கோட்டு அணிந்து, தலையில் சதுரத் துணியைக் கட்டிக் கொண்டு உட்கார்ந்திருந்தாள். அவளுக்கு எதிரே ஒரு வயதான, ஒற்றைக் கண் இராணுவ அதிகாரி தன்னுடைய இரண்டு கைகளையும் நீட்டியபடியே நின்று கொண்டிருந்தார். அவள் அவருடைய கைகளில் கம்பளி நூலைச் சுற்றிக் கொண்டிருந்தாள். ''ஐயா! உங்களுக்கு என்ன வேண்டும்?'' என்று அவள் தன்னுடைய வேலையைக் கவனித்தபடியே கேட்டாள். நான் அங்கேயுள்ள படைப் பிரிவில் சேருவதற்கு வந்திருக்கிறேன்; காப்டனைச் சந்திக்க வேண்டும் என்று சொல்லிவிட்டு அந்த ஒற்றைக் கண் அதிகாரிதான் காப்டனுக இருப்பார் என்ற எண்ணத்தில் அவரை நோக்கித் திரும்பினேன். ஆனுல் வீட்டு எஜமானி நான் முன்பே நினைத்திருந்த உரையைப் பேசுவதற்கு முன்பு குறுக்கிட்டாள். ''இவான் குஸ்மீச் வீட்டில் இல்லை. அவர் கெராசிம் பாதிரியாரைச் சந்திப்பதற்குப் போயிருக்கிருர். அதனுலென்ன? நான் அவருடைய மனைவி. உங்களை மகிழ்ச்சியோடு வரவேற்கிறேன். உட்காருங்கள், ஐயா!'' என்ருள். பிறகு ஒரு வேலைக்காரியைக் கூப்பிட்டு உடனே சார்ஜென்டை அழைத்து வருமாறு உத்தரவிட்டாள். அந்த வயதான அதிகாரி தம்முடைய ஒற்றைக் கண்ணுல் என்னை அக்கறையோடு கவனித்தார். ''நீங்கள் முன்பு எந்தப் படைப் பிரிவில் இருந்தீர்கள்?'' என்று கேட்டார். நான் காவலர் படையில் இருந்ததாக பதிலளித்தேன். ''உங்களைக் காவலர் படையிலிருந்து கோட்டைக்கு மாற்றம் செய்தது ஏன் என்ற காரணத்தைச் சொல்வீர்களா?'' என்று மேலும் கேட்டார். என்னுடைய மேலதிகாரிகளுடைய முடிவின்படி நான் வந்

திருப்பதாகச் சொன்னேன். ''காவலர் படையில் கட்டுப் பாட்டை மீறியதற்காக இங்கே அனுப்பி வைத்தார்களா?'' என்று அவர் விஷமமாகக் கேட்டார். ''போதும். அந்த இளை ஞரைத் தொந்தரவு செய்யாதே. அவர் களைப்படைந்திருப் பது தெரியவில்லையா? அவரைச் சும்மா விடு! கையை நன்முக நீட்டு!'' என்று காப்டன் மனைவி சொன்னுள். பிறகு என்னை நோக்கிப் பேசினுள். ''ஐயா! எங்கோ ஒரு மூலையில் இருக்கிற கோட்டைக்கு அனுப்பி விட்டார்களே என்று வருத்தப்படா தீர்கள். நீங்கள் இங்கே வருகிற முதல் நபர் அல்ல; கடைசி நபராகவும் இருக்கப் போவதில்லை. இங்கே பழகிவிட்டால் சரியாகிவிடும். அலெக்சேய் இவானவிச் ஷ்வாப்ரினைக் கொலைக் குற்றத்துக்காக இங்கே அனுப்பி நான்கு வருடங் களுக்கு மேலாகிறது. அவன் ஏன் கொலை செய்தான் என்பது கடவுளுக்குத்தான் தெரியும். அவனும் ஒரு லெப்டினென்டும் வாட்களை எடுத்துக் கொண்டு ஊருக்கு வெளியே போயிருக் கிருர்கள். ஒருவரையொருவர் வாட்களால் நெருடியிருக் கிருர்கள். திடீரென்று அலெக்சேய் இவானவிச் ஒரு லெப்டி னென்டின் உடலுக்குள் வாளைச் சொருகி விட்டான். இரண்டு பேர் சாட்சி வேறு! என்ன செய்வது? இந்த மாதிரி யாருக்கும் நடக்கலாம்!'' என்ருள்.

அந்த சமயத்தில் உயரமான இளம் கஸாக் சார்ஜென்ட் அறைக்குள் நுழைந்தான்.

''மக்சீமிச்! இந்த அதிகாரி தங்குவதற்கு சுத்தமான அறையாக ஏற்பாடு செய்'' என்ருள்.

''வசிலீசா யெகோரவ்னு! அப்படியே செய்கிறேன். இவான் பலிஷாயெவ் வீட்டில் இவரும் தங்கலாமா?'' என்று கேட்டான்.

''இல்லை, மக்சீமிச்! அந்த வீட்டில் ஏற்கெனவே அதிக மானவர்கள் இருக்கிருர்கள், பலிஷாயெவ் எனக்கு நண்பர்; நாம் மேலதிகாரிகள் என்பதைப் புரிந்து கொண்டவர். இவரை... உங்கள் பெயர் என்ன ஐயா? பியோத்தர் அந்தி ரேயெவிச்?... பியோத்தர் அந்திரேயெவிச்சை செமியோன் கூஸவ்விடம் கூட்டிக் கொண்டுபோ. அந்த ராஸ்கல்தான் என்னுடைய காய்கறித் தோட்டத்தில் தன்னுடைய குதி ரையை ஓட்டியிருக்கிருன். மக்சீமிச்! சரிதானே? எல்லாம் சரியாக இருக்கிறதா?'' என்று கேட்டாள்.

''கடவுள் தயவால் எல்லாம் அமைதியாக இருக்கிறது. கார்ப்போரல் புரோஹரவ் மட்டும் குளியலறையில் உஸ்தீன்யா நிகூலினுவிடம் ஒரு சட்டி வெந்நீர் சம்பந்தமாக சண்டை போட்டிருக்கிறுன்'' என்று அந்த கஸாக் பதிலளித்தான்.

''இவான் இக்னுத்தியெவிச்!'' என்று காப்டன் மனைவி அந்த ஒற்றைக் கண் அதிகாரியைக் கூப்பிட்டாள். ''புரோஹரவ், உஸ்தீன்யா இரண்டு பேர்களையும் கூப்பிட்டு விசாரியுங்கள். தவறு செய்தது யார் என்று கண்டுபிடியுங்கள். சரி. இரண்டு பேருக்குமே தண்டனை கொடுங்கள். மக்சீமிச்! நீ போகலாம். பியோத்தர் அந்திரேயெவிச்! மக்சீமிச் உங்கள் தங்குமிடத்தைக் காட்டுவான்'' என்றுள்.

நான் வணக்கம் தெரிவித்துவிட்டு வெளியே வந்தேன். கோட்டையைச் சேர்ந்த பிரதேசத்தின் கடைசியில், ஆற்றின் மேல் கரையில் அமைந்திருந்த வீட்டுக்கு சார்ஜென்ட் என்னை அழைத்துக் கொண்டு போனுன். அந்த வீட்டின் ஒரு பாதியில் செமியோன் கூஸவ் தன்னுடைய குடும்பத்தோடு குடியிருந்தான். மறு பாதி எனக்கு ஒதுக்கப்பட்டது. அந்தப் பகுதியை இரண்டாகத் தடுத்து ஓர் அறையை ஏற்படுத்தியிருந்தார்கள். அந்த அறை சுத்தமாக இருந்தது. ஸவேலிச் சாமான்களைப் பிரித்து வைத்துக் கொண்டிருந்தான். நான் அங்கிருந்த குறுகலான சன்னல் வழியாக வெளியே பார்த்துக் கொண்டிருந்தேன். எனக்கு முன்னுல் யாருக்கும் உற்சாகத்தைத் தர முடியாத ஸ்டெப்பி நிலம் காணப்பட்டது. வீட்டுக்கு எதிரில் சில குடிசைகள் இருந்தன. அந்தத் தெருவில் சில கோழிகள் நடமாடிக் கொண்டிருந்தன. ஒரு கிழவி குடிசை வாசலில் நின்று கையில் ஒரு சட்டியை வைத்துக் கொண்டு பன்றிகளைக் கூப்பிட்டாள். அவை உறுமலோடு அவளை நோக்கி ஓடி வந்தன. என்னுடைய இளமைப் பருவத்தைக் கழிப்பதற்கு எப்படிப்பட்ட இடம் கிடைத்திருக்கிறது என்பதை நினைத்து நான் மிகவும் வருத்தப்பட்டேன் நான் சன்னலிலிருந்து முகத்தைத் திருப்பிக் கொண்டேன். எனக்கு இரவு உணவு வேண்டாம் என்று சொல்லிவிட்டுத் தூங்க ஆரம்பித்தேன். ஸவேலிச் என்ன சொல்லியும் நான் கேட்கவில்லை. ''கடவுளே! அவர் சாப்பிடாமல் தூங்குகிறுரே! குழந்தைக்கு உடம்பு சரியில்லாமற்போய்விட்டால்

எஜமானியிடம் நான் என்ன பதில் சொல்வேன்?'' என்று அவன் வருத்தத்தோடு சொல்லிக் கொண்டிருந்தான்.

மறு நாள் காலையில் நான் உடையணிந்து கொள்ளத் தொடங்கிய பொழுது, கதவைத் திறந்து கொண்டு ஓர் இளம் அதிகாரி உள்ளே நுழைந்தார். அவர் அதிக உயர மில்லாமல், பழுப்பு நிறத்தில் இருந்தார். அவரை அநேக மாக அவலட்சணம் என்றே சொல்லிவிடலாம்; ஆனால் அவருடைய முகம் மட்டும் களையாக இருந்தது. அவர் பிரெஞ்சு மொழியில் என்னிடம் பேசினார். ''என்னை மன்னிக்க வேண்டும். வழக்கமான சம்பிரதாயங்கள் எதுவுமின்றி நான் உங்களைப் பார்க்க வந்திருக்கிறேன். நீங்கள் நேற்று வந்த செய்தியைக் கேள்விப்பட்டேன். ஒரு மனித முகத்தைப் பார்க்க வேண்டும் என்ற ஆசை என்னை உந்தித் தள்ளியது. என்னால் பொறுத்திருக்க முடியவில்லை. இங்கே சிறிது காலம் இருந்த பிறகு என்னுடைய உணர்ச்சி களை நீங்கள் புரிந்து கொள்வீர்கள்'' என்றார். கத்திச் சண்டை போட்டு ஓர் அதிகாரியின் உயிரைப் போக்கியதற் காகக் காவலர் படையிலிருந்து இங்கே வந்திருக்கும் அதி காரி இவராகத்தான் இருக்கும் என்று நான் ஊகித்துக் கொண்டேன். நாங்களிருவரும் அந்த நேரத்திலேயே நண் பர்களாகி விட்டோம். ஷ்வாப்ரின் நல்ல அறிவாளியாகத் தோன்றினார். அவர் நகைச் சுவையோடு இனிமையாகப் பேசக் கூடியவர். தளகர்த்தரையும் அவருடைய குடும்பத் தையும் மற்றும் என் தலைவிதியினால் நான் வந்து சேர்ந்துள்ள சமூகத்தையும் அதன் சுற்றுப்புறங்களையும் அவர் உற்சாக மாக வர்ணித்தார். அதைக் கேட்டு நான் பலமாகச் சிரித்துக் கொண்டிருந்தேன். அப்பொழுது, நேற்று நான் தளகர்த்தர் வீட்டுக்குப் போன பொழுது அங்கே முன் அறையில் இராணுவ உடையில் ஒட்டுப் போட்டுக் கொண்டிருந்த படைவீரன் உள்ளே நுழைந்தான். வசிலீசா யெகோரவ்னா என்னைத் தங்களோடு உணவருந்த அழைத்ததாகத் தெரிவித் தான். ஷ்வாப்ரின் என்னை அங்கே கூட்டிக் கொண்டுபோ கிறேன் என்றார்.

தளகர்த்தரின் வீட்டுக்குப் போகும் வழியில் சதுக்கத் தில் சுமார் இருபது வயோதிகர்கள் விறைப்பாக நின்று கொண்டிருப்பதைப் பார்த்தேன். அவர்கள் தங்களுடைய

நீளமான தலைமுடியைச் சடை பின்னியிருந்தார்கள்; மூன்று முனைகளை உடைய தொப்பிகளை அணிந்திருந்தார்கள். அவர்களுக்கு முன்னே தளகர்த்தர் நின்று கொண்டிருந்தார். அவர் உயரமானவர்; வயோதிகர் என்ற போதிலும் சுறுசுறுப்பானவராக இருந்தார். வீட்டில் அணிகின்ற உடை அணிந்திருந்தார். ஷ்வாப்ரினும் நானும் வருவதைப் பார்த்ததும் அவர் எங்களைப் பார்த்துச் சில வார்த்தைகள் அன்போடு பேசினார். பிறகு அந்த வயோதிகர்களுக்குத் தொடர்ந்து பயிற்சி கொடுத்தார். நாங்கள் அங்கே நின்று அதைப் பார்க்க விரும்பினோம். ஆனால் அவர் எங்களிடம் வீட்டுக்குப் போகுமாறும் தாம் விரைவில் வந்து விடுவதாகவும் சொன்னார். ''இங்கே நீங்கள் பார்ப்பதற்கு ஒன்றுமில்லை'' என்றார்.

வசிலீசா யெகோரவ்னா எங்களை எளிமையான உபசரிப்புடன் வரவேற்றாள்; என்னை நெடுங்காலமாகப் பழகிய நண்பனைப் போல நடத்தினாள். வேலைக்காரப் பெண் பலாஷ்காவும் காயம்பட்ட படைவீரனும் மேசையில் உணவு வகைகளைக் கொண்டுவந்து வைத்தார்கள். ''இவான் குஸ்மீச் தமது அணியினருக்கு இன்று அதிக நேரம் பயிற்சி கொடுக்கிறார் போலும். பலாஷ்கா! நீ போய் உடனே அவரை வரச் சொன்னேன் என்று சொல். மாஷா எங்கே?'' என்று அவள் கேட்டாள். உடனே வட்ட முகமும் இளஞ்சிவப்புக் கன்னங்களும் கொண்ட ஒரு பதினெட்டு வயதுப் பெண் அறைக்குள் நுழைந்தாள். அவள் தனது சணல் நிறத் தலை மயிரை நன்கு சீவி பிரகாசமான காதுகளுக்குப் பின்புறத்தில் தொங்க விட்டிருந்தாள். முதல் பார்வையில் எனக்கு அந்தப் பெண்ணை அவ்வளவாகப் பிடிக்கவில்லை. காப்டனின் மகள் மாஷா ஓர் அப்பாவிப் பெண் என்று ஷ்வாப்ரின் வர்ணித்திருந்த காரணத்தால், நான் அவளை ஆர்வத்தோடு கவனிக்கவில்லை. மார்யா இவானவ்னா ஒரு மூலையில் உட்கார்ந்து தையல் செய்து கொண்டிருந்தாள். இதற்கிடையில் முட்டைக்கோஸ் சூப் கொண்டுவரப்பட்டது. வசிலீசா யெகோரவ்னா தன்னுடைய கணவன் இன்னும் வந்து சேராததால் அவரைக் கூட்டி வருமாறு பலாஷ்காவை மீண்டும் அனுப்பினாள். ''விருந்தினர்கள் காத்துக் கொண்டிருக்கிறார்கள்; சூப் ஆறிப் போகிறது என்று எஜமானிடம் சொல். படைப் பயிற்சியை நாளைக்குச் செய்து கொள்ளலாம்.

கடவுள் தயவால் அந்தக் கிழடுகளை அதட்டுவதற்கு நாளைக்கு அதிகமான நேரம் கிடைக்கும்'' என்றாள். சிறிது நேரத்தில் காப்டன் அங்கு வந்து சேர்ந்தார். அவரோடு அந்த ஒற்றைக் கண் அதிகாரியும் வந்தார். ''மேசையில் உணவை வைத்து அதிக நேரமாகி விட்டது. உங்களைக் கூப்பிட்டால் சுலபமாக வருவதில்லை. ஏன் இவ்வளவு தாமதம், ஐயா?'' என்று காப்டன் மனைவி கேட்டாள். ''வசிலீசா யெகோரவ்னு! என்னுடைய கிழடுகளுக்குப் பயிற்சி கொடுத்துக் கொண்டிருந்தேன். வேலை அதிகம்'' என்று இவான் குஸ்மீச் பதிலளித்தார். ''போதும். அந்தக் கிழடுகளுக்குப் பயிற்சியளிப்பதால் என்ன பயன் ஏற்படும்? அவர்கள் கற்றுக் கொள்ளப் போவதில்லை. சரி. உங்களுக்குத்தான் பயிற்சியைப் பற்றி என்ன தெரியும்? பேசாமல் வீட்டில் உட்கார்ந்து பிரார்த்தனை செய்யுங்கள். அதுவே போதுமானது. அன்புள்ள விருந்தினர்களே! சாப்பிட ஆரம்பியுங்கள்'' என்றாள்.

நாங்கள் உணவருந்தத் தொடங்கினோம். வசிலீசா யெகோரவ்னு ஒரு வினாடி கூடப் பேச்சை நிறுத்தவில்லை. என்னுடைய பெற்றோர்கள் யார்? அவர்கள் உயிரோடிருக்கிறார்களா? எங்கே வசிக்கிறார்கள்? அவர்கள் சொத்து எவ்வளவு? இப்படி என்னிடம் சரமாரியாகக் கேள்விகள் கேட்டுக் கொண்டிருந்தாள். என் தகப்பனாரிடம் முந்நூறு பண்ணையடிமைகள் இருக்கிறார்கள் என்று கேள்விப்பட்டதும் அவள் மிகவும் ஆச்சரியமடைந்தாள். ''கேட்டீர்களா? சில பேர்கள் எவ்வளவு பணக்காரர்களாக இருக்கிறார்கள், பார்த்தீர்களா? நமக்கு ஒரே ஒரு வேலைக்காரப் பெண்—பலாஷ்காதான் இருக்கிறாள், ஐயா! ஆனால் கடவுள் தயவால் நாம் அவ்வளவு மோசமான நிலையில் இல்லை. நம்முடைய ஒரே கவலை—மாஷாவைப் பற்றித்தான். அவளுக்குக் கல்யாணம் செய்ய வேண்டிய பருவம் வந்து விட்டது. அவளுக்குச் சீதனமாக என்ன தரப் போகிறோம்? ஒரு சீப்பு, ஒரு துடப்பம், ஒரு வெள்ளிக் காசு (கடவுள் அவளைக் காப்பாற்றட்டும்!). யாராவது நல்ல இளைஞனைக் கிடைப்பானு? இல்லையென்றால் அந்தப் பெண் வாழ்க்கை முழுவதும் கன்னியாகவே இருக்க வேண்டியதுதான்'' என்றாள். நான் மார்யா இவானவ்னுவின் பக்கமாகத் திரும்பினேன். அவள் முகம் வேதனையால் சிவந்

திருந்தது. அவளுடைய சண்களிலிருந்து நீர்த் துளிகள் உணவுத் தட்டில் விழுந்தன. எனக்கு அவள் மீது அனுதாப மேற்பட்டதால் பேச்சை மாற்ற முயற்சித்தேன். ''பஷ்கீரி யர்கள் நம்முடைய கோட்டையைத் தாக்கப் போவதாகக் கேள்விப்பட்டேன்'' என்று சிறிதும் சம்பந்தமில்லாமல் பேசி னேன். ''ஐயா! இந்தச் செய்தியை எங்கே கேள்விப்பட்டீர் கள் என்று சொல்வீர்களா?'' என்று இவான் குஸ்மீச் விசா ரித்தார். ''ஓரென்புர்கில் பேசிக் கொண்டார்கள்'' என்று நான் பதிலளித்தேன். ''பிதற்றல். நெடுங்காலமாக இந்தப் பகுதி அமைதியாக இருக்கிறது. பஷ்கீரியர்களை ஒடுக்கி விட் டோம்; கிர்கீஸியர்களுக்குப் பாடம் கற்பித்து விட்டோம். அவர்கள் நமக்குத் தொல்லை கொடுக்க மாட்டார்கள். அப்படி யாரும் தொல்லை கொரடுத்தால் நான் அவர்களை ஓடஓட விரட்டுவேன். அவர்கள் பத்து வருடங்களுக்கு மறக்க முடியாதபடிப் பாடம் புகட்டுவேன்'' என்றூர் தளகர்த்தர். ''எப்பொழுதும் ஆபத்து வரக் கூடிய கோட்டையில் வசிப் பது உங்களுக்குப் பயமாக இல்லையா?'' என்று வஸிலீசா யெகோரவ்னவைக் கேட்டேன். ''எனக்குப் பழக்கமாகி விட்டது, ஐயா! இருபது வருடங்களுக்கு முன்பு இங்கே மாற்றப்பட்டோம். ஆரம்பத்தில் இந்தக் கொடியவர்களை நினைத்தாலே எனக்குப் பயமாக இருந்தது. அவர்களுடைய சிவிங்கி உரோமத் தொப்பிகளைப் பார்த்தால் அல்லது அவர் களுடைய பேய்க் கூச்சலைக் கேட்டால் எனக்கு உயிரே போய் விடும். உண்மைதான், ஐயா! ஆனல் இப்பொழுது எனக்குப் பழகி விட்டது. அந்தக் கொலைகாரர்கள் கோட்டைக்குள் வந்து விட்டார்கள் என்று இப்பொழுது யாராவது சொன் னல் கூட நான் பயப்பட மாட்டேன்'' என்று அவள் பதி லளித்தாள்.

''வஸிலீசா யெகோரவ்னவுக்கு வீரம் அதிகம். அதற்குப் பல சான்றுகளை இவான் குஸ்மீச் சொல்ல முடியும்'' என்று ஷ்வாப்ரின் பகட்டாகப் பேசினர்.

''ஆமாம்! அவள் சில பெண்களைப் போல பயந்த சுபாவ முடையவளல்ல'' என்றூர் இவான் குஸ்மீச்.

''மார்யா இவானவ்ன எப்படி? தாயாரைப் போல வீரம் நிறைந்தவளா?'' என்று நான் கேட்டேன்.

''மாஷாவா? இல்லை, அவள் ஒரு கோழை. ரைபிள்

துப்பாக்கியால் சுடும் பொழுது ஏற்படும் சத்தம் கூட அவளுக்குப் பயத்தை உண்டாக்கிவிடும்; நடுங்கி விடுவாள். இரண்டு வருடங்களுக்கு முன்பு என்னுடைய பெயர் சூட்டிய நாள் விழாவின் போது பீரங்கியை வெடிக்குமாறு இவான் குஸ்மீச் ஏற்பாடு செய்தார். அந்தச் சத்தத்தில் என்னுடைய செல்லக் குழந்தைக்கு உயிரே போய் விட்டது. அன்றிலிருந்து அந்தப் பாழாய்ப் போன பீரங்கியில் வெடிப்பதே இல்லை'' என்று மார்யா இவானவ்னுவின் தாயார் பதிலளித்தாள்.

நாங்கள் எல்லோரும் சாப்பாட்டை முடித்துவிட்டு எழுந்தோம். காப்டனும் அவருடைய மனைவியும் தூங்குவதற்குப் படுக்கை அறைக்குச் சென்றூர்கள். நான் ஷ்வாப்ரினுடைய அறைக்குச் சென்று அன்றைய மாலைப்பொழுதை அவரோடு கழித்தேன்.

## அத்தியாயம் நான்கு

### சண்டை

தயவு செய்து, எழுந்து நில்லுங்கள்.
இந்தக் கூர்மையான வாளை ஏதோ
என்னுல் முடிந்த வரை
உங்கள் மார்பிலே பாய்ச்ச வேண்டும்

**க்னியாழ்னின்**[45]

சில வாரங்களான பிறகு பெலகோர்ஸ்க் கோட்டையில் என்னுடைய வாழ்க்கை சமாளிக்கக் கூடியதாக இருந்தது மட்டுமல்லாமல் உண்மையிலேயே இனிமையானதாகவும் மாறியது. தளகர்த்தரின் வீட்டில் என்னை அவர்கள் குடும்பத்தில் ஒருவனைப் போல அன்போடு நடத்திஞர்கள். தளகர்த்தர், அவருடைய மனைவி இருவருமே மிகவும் நல்லவர்கள் என்று சொல்லலாம். ஒரு படை வீரரின் மகனுன இவான் குஸ்மீச் எளிமையும் அன்பும் நேர்மையும் நிறைந்தவர். அதிகமான படிப்பு இல்லாவிட்டாலும் அதிகாரியாகப் பதவி உயர்வு பெற்றவர். அவர் சுலபமாக வாழ்க்கை நடத்தும் இயல்புடையவராதலால் குடும்பத்தில் அவர் மனைவிக்கு அதிகமான] செல்வாக்கு ஏற்பட்டிருந்தது. வசிலீசா யெகோரவ்னுவுக்கு இராணுவ சேவையைப் பற்றி உயர்வான அபிப்பிராயம் கிடையாது; அதுவும் வீட்டு வேலை மாதிரியே என்று நினைப்பவள். தம்முடைய வீட்டைப் போலவே கோட்டையையும் அதிகாரத்தோடு நிர்வாகம் செய்து வந்தாள். மார்யா இவானவ்னு விரைவில் என்னைக் கண்டு வெட்கப்படுவதை நிறுத்திஞள். நாங்களிருவரும் நண்பர்களாஞேம். அவள் உணர்ச்சியும் நல்லறிவும் பொருந்திய பெண் என்பதை நான் தெரிந்து கொண்டேன். என்னையறியாமலே நான் அந்த நல்ல குடும்பத்தில் தனி ஈடுபாடு கொள்ள ஆரம்பித்தேன். ஒற்றைக் கண் லெப்டினென்ட் இவான் இக்னுத்தியெவிச்சுக்கும் அந்த வீட்டின் தலைவிக்கும் தவறுன உறவு இருப்பதாக ஷ்வாப்ரின் மறைமுகமாகக் குறிப்பிட்டிருந்தாலும் அந்த நபரோடும் நான் அன்போடு பழகினேன். அந்த எண்ணத்

துக்கு எந்த ஆதாரமுமில்லை. எனினும் ஷ்வாப்ரின் அதைப் பற்றி சிறிதும் யோசிக்காமல் பேசி வந்தார்.

நான் உரிய காலத்துக்குப் பிறகு அதிகாரியாகப் பதவி உயர்வு பெற்றேன். என்னுடைய பணிகள் கஷ்டமில்லாமல் இருந்தன. கடவுளாலும் கைவிடப்பட்ட இந்தக் கோட்டை யில் போர் வீரர் அணிவகுப்பு இல்லை; படைப் பயிற்சி இல்லை; இரவு நேரத்தில் காவல் காக்கும் பழக்கமும் இல்லை. அவ்வப் பொழுது தளகர்த்தர் தம்முடைய படையினருக்குத் தானுகவே படைப் பயிற்சி கொடுப்பார். எனினும் அவர்கள் எல்லோருக்கும் இடது, வலது என்ற வித்தியாசத்தைப் புரிந்து கொள்ளத் தெரியவில்லை. எனவே அவர்களில் பெரும் பான்மையினர் தவறு செய்துவிடக் கூடாது என்ற பயத்தில் ஒவ்வொரு தடவை திரும்புகிற பொழுதும் சிலுவைக் குறி இட்டுக் கொள்வார்கள். ஷ்வாப்ரினிடம் சில பிரெஞ்சுப் புத்தகங்கள் இருந்தன. நான் அவற்றைத் தொடர்ந்து படித் ததனுல் எனக்கு இலக்கிய ஆர்வம் ஏற்பட்டது. காலையில் புத்தகங்களைப் படிப்பதும் அவற்றை மொழிபெயர்ப்பதும் சில சமயங்களில் கவிதை எழுதுவதுமாக எனக்குப் பொழுது போயிற்று. நான் அநேகமாக ஒவ்வொரு நாளும் தளகர்த் தரின் வீட்டில் உணவருந்திவிட்டு அங்கேயே பொழுதைக் கழித்தேன். சில நாட்களில் கெராசிம் பாதிரியாரும் அவ ருடைய மனைவி அக்குலீனு பம்பீலவ்னுவும் மாலை நேரத் தில் அங்கே வருவார்கள். வம்பு பேசுவதில் அந்த அம்மை யாருக்கு இணையாக அந்த மாவட்டத்தில் ஒருவரும் கிடை யாது. ஷ்வாப்ரினை நான் தினமும் சந்திப்பேன். ஆனுல் சிறிது காலத்துக்குப் பிறகு அவருடைய பேச்சு எனக்கு அருவருப் பைத் தந்தது. தளகர்த்தரின் குடும்பத்தைப் பற்றி அவர் தரக்குறைவாகப் பேசுவதும் குறிப்பாக மார்யா இவானவ் னுவை ஏளனம் செய்வதும் எனக்குப் பிடிக்கவில்லை. நான் பழகுவதற்கு அந்தக் கோட்டையில் வேறு எந்த இராணுவ அதிகாரியின் குடும்பமும் இல்லை; நானும் அதைப் பற்றிக் கவலைப்படவில்லை.

பஷ்கீரியர்களைப் பற்றிப் பலவிதமான ஆரூடங்கள் சொல்லப்பட்ட போதிலும், அவர்கள் கலகம் செய்யக் கூடும் என்ற அறிகுறிகள் இல்லை. நமது கோட்டையைச் சுற்றி யிருந்த பிரதேசங்களில் அமைதி நிலவியது. ஆனுல் எங்

களுக்கிடையே உடனே ஏற்பட்ட பகைமை எங்களது அமைதி யான வாழ்க்கையைக் குலேத்தது.

நான் கவிதை எழுத ஆரம்பித்தேன் என்று முன்பே குறிப்பிட்டிருக்கிறேன். அந்த ஆரம்பக் கவிதைகள் நன்ருகவே அமைந்திருந்தன. சில வருடங்களுக்குப் பிறகு அலெக்சாந்தர் பெத்ரோவிச் சுமரோக்கவ்[46] என்னுடைய கவிதைகளே மிகவும் பாராட்டிஞர். ஒரு சமயம் நான் எழு திய கவிதை எனக்கு மிகவும் திருப்தியளித்தது. எழுத்தாளர் கள் தாங்கள் எழுதியதை யாரிடமாவது படித்துக் காட்ட அடிக்கடி ஆசைப்படுகிருர்கள் என்பதும் அதற்கு அபிப்பிரா யம் கேட்பது என்று சொல்லிக் கொள்வதும் நன்கு தெரிந்த விஷயமே. கோட்டையில் கவிதையை ரசிக்கத் தெரிந்த ஒரே நபர் ஷ்வாப்ரின் என்ற காரணத்தால் அவரிடம் அந்தக் கவிதையைப் பிரதியெடுத்துக் கொண்டு சென்றேன். முன்னுரையாகச் சில வார்த்தைகளேச் சொல்லிவிட்டு, என் னுடைய பையிலிருந்து நோட்டுப் புத்தகத்தை வெளியே எடுத்தேன். பின்வரும் கவிதையை வாசித்தேன்:

என்னுடைய காதலே மறக்கப் போகிறேன்;
அழகுமிக்க மாஷாவைப் பிரியப் போகிறேன்;
அன்புமிக்க மாஷாவைப் பிரிந்து சென்ருலே
எனக்குச் சுதந்திரமான எண்ணங்கள் தோன்றும்.

ஓ! அந்த விழிகளே நான் நேசிக்கிறேன்;
பகலிலும் இரவிலும் எனக்கு அமைதியில்லே;
என்னருகில் அவை எப்பொழுதும் பிரகாசிக்கும்;
அவற்றின் ஒளியில் மூழ்கிச் சாகிறேன்.

என்னுடைய வேதனேகளுக்கு மாஷா சர்ட்சி
என்னுடைய துயரத்துக்கு அனுதாபம் காட்டு;
காதல் சங்கிலியால் கட்டுண்ட எனக்கு
அமைதியைக் கொடுக்க உன்னுல் முடியும்.[47]

''என்னுடைய கவிதை எப்படி இருக்கிறது?'' என்று கேட்டேன். ஷ்வாப்ரின் இதை நிச்சயமாகப் பாராட்டுவார் என்று நான் மனதுக்குள் எதிர்பார்த்தேன். வழக்கமாக என்னே ஊக்குவிக்கின்ற ஷ்வாப்ரின் அந்தக் கவிதை மோச மாக இருப்பதாகச் சொன்ன பொழுது எனக்கு அதிகமான கோபம் ஏற்பட்டது.

''ஏன் அப்படிச் சொல்கிறீர்கள்?'' என்று என்னுடைய கோபத்தை அடக்கிக் கொண்டு கேட்டேன்.

''ஏனென்றால் இந்தக் கவிதை என்னுடைய ஆசிரியர் வசீலி கிரீலவிச் த்ரேதியக்கோவ்ஸ்கியின்[48] காதற்கவிதைகளைப் போல இருக்கிறது'' என்றார்.

அப்போது அவர் என்னுடைய நோட்டுப் புத்தகத்தை வாங்கி அந்தக் கவிதையில் ஒவ்வொரு வரியையும் ஒவ்வொரு சொல்லையும் குறை சொல்ல ஆரம்பித்தார். பிறகு கவிதை எழுதியதற்காக என்னைக் கேலி செய்தார். என்னால் அதைத் தாங்கிக் கொள்ள முடியவில்லை. நான் அவரிடமிருந்து என்னுடைய நோட்டுப் புத்தகத்தைப் பிடுங்கிக் கொண்டு இனி எக்காலத்திலும் என் கவிதைகளை அவரிடம் காட்ட மாட்டேன் என்றேன். இதைக் கேட்டதும் ஷ்வாப்ரின் சிரித்தார்.

''நீ சொன்னபடி இருக்க முடியுமா என்று பார்ப்போம். சாப்பாட்டுக்கு முன்பு இவான் குஸ்மீச்சுக்கு ஒன்று அல்லது இரண்டு டம்ளர் வோட்கா வேண்டும். அது போல ஒரு கவிஞனுக்குத் தன்னுடைய கவிதைகளைக் கேட்பதற்கு ஒரு நபர் அவசியம் வேண்டும். அது சரி. உன்னுடைய கவிதையில் மாஷா என்ற பெண்ணை உயிருக்குயிராகக் காதலிப்பதாகவும், அவள் உன்னை இன்பமயமான துன்பங்களுக்கு ஆளாக்குவதாகவும் எழுதியிருக்கிறாயே, அவள் யார்? மார்யா இவானவ்னாவாக இருக்காது என்று நம்புகிறேன்'' என்றார்.

''அது யாராக இருந்தால் உங்களுக்கென்ன? உங்களுடைய அபிப்பிராயமும் ஊகங்களும் எனக்கு வேண்டாம்'' என்று நான் முகத்தைச் சுளித்துக் கொண்டு கோபமாகச் சொன்னேன்.

''ஓ! தொட்டால் சுருங்கும் கவிஞர்; ஜாக்கிரதையான காதலர்'' என்று ஷ்வாப்ரின் அலட்சியமாகச் சொன்ன பொழுது எனக்கு மேலும் ஆத்திரம் ஏற்பட்டது. ''நண்பன் என்ற முறையில் என்னுடைய ஆலோசனையைக் கேட்பது நல்லது. காதலில் நீ வெற்றி பெற வேண்டுமானால் கவிதை மட்டும் போதுமானதல்ல'' என்றார்.

''அப்படி என்றால் என்ன அர்த்தம்? நீங்கள் சொல்ல விரும்புவதைத் தெளிவாகச் சொல்லுங்கள்'' என்றேன்.

''அப்படியே செய்கிறேன். மாலை மறைகின்ற பொழுது மாஷா மிரோனவா உன்னைச் சந்திக்க வேண்டுமென்ருல் காதற்கவிதை எழுதிப் பயனில்லை. அவளுக்கு ஒரு ஜோடி தோடு வாங்கிக் கொடுத்தால் போதும். அதைத்தான் சொன் னேன்'' என்ருர்.

இதைக் கேட்ட பொழுது என்னுடைய ரத்தம் கொதித் தது.

''நீங்கள் அவளை இவ்வளவு கேவலமாக நினைப்பதற்குக் காரணம் என்ன?'' என்று என்னுடைய ஆத்திரத்தை சிரமப் பட்டு அடக்கிக் கொண்டு கேட்டேன்.

''ஏனென்ருல் அவளுடைய ஒழுக்கத்தைப் பற்றி எனக்கு ஏற்கெனவே நன்ருகத் தெரியும்'' என்று என்னை இகழ்ச்சி யாகப் பார்த்தபடியே சொன்னுர்.

''போக்கிரியே! நீ சொல்வது பொய்! சிறிதும் வெட்க மில்லாமல் பொய் சொல்கிருய்'' என்று நான் அதிக ஆத்திரத் தோடு கத்தினேன்.

ஷ்வாப்ரினுடைய முகம் வெளுத்துப் போய்விட்டது.

''நான் உன்னைச் சும்மா விட மாட்டேன். உனக்குச் சவால் விடுகிறேன்'' என்று என் கையைப் பிடித்தபடியே சொன்னுர்.

''ஓ! நீ எப்பொழுது விரும்புகிருயோ அப்பொழுது உன் னேடு சண்டை போடத் தயார்'' என்று நான் மகிழ்ச்சியோடு பதிலளித்தேன். அந்த நேரத்தில் அவனுடைய உடலைத் துண்டு துண்டாக வெட்ட வேண்டுமென்று எனக்கு ஆத்திரம் ஏற்பட்டது.

நான் உடனே இவான் இக்னுத்தியெவிச்சைப் பார்ப் பதற்குச் சென்றேன். அவர் தளகர்த்தர் மனைவியின் உத்தர வின் பேரில் ஊசி நூலும் கையுமாக உட்கார்ந்திருந்தார். குளிர் காலத்தில் பயன்படுத்துவதற்காகக் காளான்களைக் கயிற்றில் சொருகித் தொங்கவிடும் வேலையில் ஈடுபட்டிருந் தார்.

''பியோத்தர் அந்திரேயெவிச்! உள்ளே வாருங்கள்! நீங்கள் வருவது நல்ல காற்று வீசப் போவதற்கு அறிகுறி போலும். வந்த காரியத்தை நான் தெரிந்து கொள்ளலாமா?'' என்று என்னை வரவேற்ருர்.

நான் அலெக்சேய் இவானவிச்சோடு தகராறு செய்து

கொண்ட விவரத்தைச் சுருக்கமாகத் தெரிவித்தேன். எங்களுக்கிடையே சண்டை நடைபெறும் பொழுது எனக்கு உதவியாளராக இருக்குமாறு அவரைக் கேட்டுக் கொண்டேன். இவான் இக்னுத்தியெவிச் நான் சொன்னவற்றை கவனமாகக் கேட்டார். அவ்வப்பொழுது தமது ஒற்றைக் கண்ணை அகலமாக விரித்தார்.

''அலெக்சேய் இவானவிச்சின் உடலில் நீங்கள் வாளைச் சொருக விரும்புகிறீர்கள்; அதற்கு நான் சாட்சியாக இருக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறீர்கள். சரிதானு? உங்களுடைய விருப்பம் அதுதானே?'' என்று கேட்டார்.

''ஆமாம், ஐயா!''

''பியோத்தர் அந்திரேயெவிச்! என்னைக் கடவுள் காப்பாற்றட்டும். நீங்கள் என்ன நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள்! அலெக்சேய் இவானவிச்சோடு நீங்கள் தகராறு செய்து கொண்டீர்கள். அவ்வளவுதானே? வார்த்தைகளால் எலும்புகள் நொறுங்குவதில்லை. அவர் உங்களைத் திட்டுகிருர். நீங்கள் அவரைத் திருப்பித் திட்டுங்கள். அவர் உங்கள் முகத்தில் குத்துகிருர். நீங்கள் அவர் காதில் அறைந்து விடுங்கள். அப்படியே சிறிது நேரம் சச்சரவு செய்யுங்கள். பிறகு பிரிந்து செல்லுங்கள். உங்களிருவரையும் மறுபடி சேர்த்து வைப்பதற்கு நாங்கள் இருக்கிறோம். அதற்குப் பதிலாக அவருடைய உடம்பில் வாளைச் சொருகுவதால் ஒரு பயனும் ஏற்படாது. நீங்கள் அவரைக் கொன்றுவிட்டால் நல்லது தான். எனக்கு அலெக்சேய் இவானவிச்சை எப்பொழுதுமே பிடிக்காது. ஆனுல் அவர் உங்கள் உடம்பில் வாளைச் சொருகி விட்டால் உங்கள் கதி என்னவாகும்? அப்பொழுது யாரை முட்டாள் என்று சொல்ல வேண்டியிருக்கும்? யோசித்துப் பாருங்கள்'' என்று கூறினர்.

அந்த லெப்டினென்டின் நியாயமான வாதம் என்னுடைய உறுதியைக் குலைக்கவில்லை. நான் என்னுடைய முடிவை மாற்றப் போவதில்லை என்று கூறினேன்.

''உங்கள் விருப்பம் போல செய்யுங்கள். எது நல்லது என்று தோன்றுகிறதோ, அதைச் செய்யுங்கள். ஆனுல் நான் ஏன் அதைப் பார்க்க வர வேண்டும்? எதற்காக? நான் இது வரை சண்டையைப் பார்த்தது கிடையாது என்று நினைத்தீர்களா? துருக்கியர்களையும் ஸ்வீடிஷ்காரர்களையும்

எதிர்த்து நான் சண்டை போட்டிருக்கிறேன். போதுமான சண்டைகளைப் பார்த்து விட்டேன். இனி எதற்கு?'' என்றார்.

இரண்டு பேர்கள் சவால் விட்டுச் சண்டை போடும் பொழுது ஓர் உதவியாளரின் கடமைகளை என்னாலியன்ற வரை அவருக்கு விளக்கினேன். ஆனால் இவான் இக்னாத்தியெவிச்சுக்கு நான் சொன்னது புரியவில்லை.

''உங்கள் விருப்பம் போல செய்யுங்கள். ஆனால் இந்த விவகாரத்தில் ஒரே ஒரு காரியத்தில் மட்டும் நான் ஈடுபடப் போகிறேன். இவான் குஸ்மீச்சிடம் உடனே போய், அரசாங்க உத்தரவுகளுக்கு விரோதமான ஒரு காரியம் இந்தக் கோட்டையில் நடைபெறப் போகிறது என்று தெரிவிப்பேன். அதைத் தடுப்பதற்கான நடவடிக்கைகளைத் தளகர்த்தர் எடுக்க வேண்டும் என்று வற்புறுத்துவேன்....'' என்றார்.

இதைக் கேட்டவுடன் எனக்கு அதிகமான பயம் உண்டாகி விட்டது. தளகர்த்தரிடம் தெரிவித்து விடாதீர்கள் என்று இவான் இக்னாத்தியெவிச்சைக் கேட்டுக் கொண்டேன். நான் மிகவும் வற்புறுத்திய பிறகு அவர் தளகர்த்தரிடம் தெரிவிக்க மாட்டேன் என்று கடைசியில் உறுதி கொடுத்தார். அதன் பிறகுதான் நான் அவரை விட்டுப் பிரிந்தேன்.

அன்றைய மாலை நேரத்தில் வழக்கம் போல தளகர்த்தரின் வீட்டுக்குப் போயிருந்தேன். என்னைப் பற்றி மற்றவர்கள் சந்தேகப்படக் கூடாது என்பதற்காகவும் எக்கச்சக்கமான கேள்விகளுக்கு இடமளிக்கக் கூடாது என்பதற்காகவும் நான் உற்சாகமாகவும் எந்தக் கவலையும் இல்லாதிருப்பது போலவும் நடித்தேன். ஆனால் இதே நிலையில் இருக்கும் வேறு சிலர் அலட்சியமாக நடந்து கொண்டதாகப் பெருமையாகச் சொல்வதைப் போல என்னால் முடியவில்லை. நான் அன்றைய மாலைப் பொழுதில் மென்மையும் உணர்ச்சிக் கனிவும் கலந்த மனோநிலையில் இருந்தேன். மார்யா இவானவ்னா என்றைக்குமில்லாத தனி அழகோடு விளங்குவதாக நினைத்தேன். இதுவே நான் அவளைப் பார்க்கும் கடைசித் தடவையாக இருக்கலாம் என்று தோன்றியதால், என்னுடைய கண்களில் ஒரு அலாதியான சோகம் குடிகொண்டது. ஷ்வாப்ரினும் அங்கே வந்திருந்தார். நான் அவரைத் தனியே கூட்டிக் கொண்டு போய் இவான் இக்னாத்தியெவிச்சுக்கும் எனக்கும் நடந்த உரையாடலைத் தெரிவித்

தேன். ''நமக்கு உதவியாளர்கள் தேவையா? அவர்கள் இல் லாமலே நாம் சண்டை போடுவோம்'' என்று அவர் கண்டிப் பாகக் கூறினர். கோட்டைக்கு வெளியே சிறிது தூரத்தில் இருக்கும் வைக்கோற் போர்களின் பின்னல் உள்ள இடத்தில் சண்டையை வைத்துக் கொள்வதென்றும், மறு நாள் காலை யில் சரியாக ஏழு மணிக்கு அங்கே இருக்க வேண்டுமென்றும் முடிவு செய்தோம். நாங்களிருவரும் அதிகமான நட்புணர்ச்சி யோடு பேசிக் கொண்டிருந்தது போலத் தோன்றவே, இவான் இக்னத்தியெவிச் தமது உற்சாகத்தில் உண்மையைச் சொல்லி விட்டார்.

''அதுதான் சரி!'' என்று அவர் மகிழ்ச்சியோடு சொன் ஞர். ''நல்ல சண்டையைக் காட்டிலும் மோசமான சமா தானம் எப்போதுமே நல்லது; கௌரவத்தைக் காட்டிலும் காயம் இல்லாத உடம்பு நல்லது'' என்ருர்.

''இவான் இக்னத்தியெவிச்! என்ன சொன்னீர்கள்? நான் சரியாகக் கவனிக்கவில்லை'' என்று ஒரு மூலையில் உட்கார்ந்து கொண்டு சீட்டை வைத்துக் குறி சொல்லிக் கொண்டிருந்த தளகர்த்தரின் மனைவி கேட்டாள்.

என்னுடைய முகத்தில் உடனே தோன்றிய அதிருப்தியை இவான் இக்னத்தியெவிச் கவனித்திருக்க வேண்டும்; மேலும் எனக்குக் கொடுத்திருக்கும் உறுதியை நினைத்ததும் அவ ருக்குக் குழப்பம் ஏற்பட்டு விட்டது. அவரால் பதில் சொல்ல முடியவில்லை. இதைக் கண்ட ஷ்வாப்ரின் நிலைமையைச் சமா ளிக்க முன்வந்தார்.

''நாங்களிருவரும் மீண்டும் நண்பர்களாகி விட்டோம் என்பதனல் இவான் இக்னத்தியெவிச் மகிழ்ச்சி அடைகிருர்'' என்ருர்.

''ஏன்? நீங்கள் யாரோடு சண்டை போட்டீர்கள்?'' என்று கேட்டாள்.

''எனக்கும் பியோத்தர் அந்திரேயெவிச்சுக்கும் தீவிர மான சச்சரவு ஏற்பட்டது.''

''எதைப் பற்றி?''

''ஓர் அற்பமான விஷயம்தான். ஒரு பாட்டைப் பற்றி சச்சரவு ஏற்பட்டது, வசிலீசா யெகோரவ்னு!''

''ஒரு பாட்டைப் பற்றியா சச்சரவு செய்து கொண்டீர்

கள்? அது அற்பமான விஷயமல்லவா? போகட்டும். சச்சரவு எப்படி ஆரம்பமாயிற்று?''

''பியோத்தர் அந்திரேயெவிச் அவர் சமீபத்தில் எழுதிய பாட்டை இன்று என்னிடம் படித்துக் காட்டினர். ஆனால் நான் எனக்கு மிகவும் பிரியமான மற்ெருரு பாட்டைப் பாடினேன்:

*காப்டன் மகளே! வீட்டிலே இரு!*
*நிலவின் ஒளியில் ஊர் சுற்ருதே*[49]

எங்களுக்கிடையே மோதல் ஏற்பட்டது. பியோத்தர் அந்திரேயெவிச்சுக்கு அதிகமான கோபம். ஆனால் நல்ல வேளையாக அவரவருக்குப் பிடித்தமான பாடலைப் பாடுவதற்கு ஒவ்வொருவருக்கும் உரிமையுண்டு என்பது அவருக்கு ஞாபகம் வந்தது. பிரச்சினை அதோடு முடிந்து விட்டது'' என்ருர்.

ஷ்வாப்ரினின் துணிச்சலைக் கண்டு எனக்குக் கோபாவேசமேற்பட்டது. ஆனால் அவருடைய பாட்டில் மறைந்திருந்த ஏளனத்தை என்னைத் தவிர யாரும் புரிந்து கொள்ளவில்லை. அந்தப் பாடலையும் சிறிதும் பொருட்படுத்தவில்லை. பாடல்களைப் பற்றிப் பேச ஆரம்பித்தபடியால் பிறகு கவிஞர்களைப் பற்றிப் பேசினேம். கவிஞர்கள் எல்லோருமே குடிகாரர்கள்; ஒழுக்கக் குறைவானவர்கள் என்று தளகர்த்தர் சொன்னர். கவிதை எழுதுவது வீணன வேலை; இராணுவத்திலிருப்பவர்களுக்குச் சிறிதும் பொருந்தாது; எனவே கவிதை எழுதுவதை விட்டுவிடு என்று அவர் எனக்கு நட்பு முறையில் ஆலோசனை கூறினர்.

ஷ்வாப்ரின் அங்கே உட்கார்ந்திருந்ததை என்னால் தாங்கிக் கொள்ள முடியவில்லை. நான் சட்டென்று எழுந்து தளகர்த்தரிடமும் அவருடைய குடும்பத்தினரிடமும் விடை பெற்றுக் கொண்டேன். என்னுடைய அறைக்குத் திரும்பியதும் என்னுடைய வாளை எடுத்து அதன் நுனியின் கூர்மையைச் சோதித்தேன். ஸவேலிச்சிடம் காலையில் ஆறு மணிக்கு என்னை எழுப்புமாறு சொல்லிவிட்டுப் படுக்கையில் படுத்தேன்.

மறு நாள் காலையில் குறிப்பிட்ட நேரத்திற்கு என்னுடைய எதிரியை எதிர்பார்த்துக் கொண்டு வைக்கோற்

போருக்குப் பின்னால் நின்று கொண்டிருந்தேன். அவரும் சீக்கிரமாகவே வந்து சேர்ந்தார். ''நம்மை யாரும் தடுத்து விடலாம். எனவே சீக்கிரமாக ஆரம்பிப்போம்'' என்றார். எங்களுடைய மேலங்கிகளைக் கழற்றிவிட்டு உள்ளே அணிந்திருந்த உடைகளோடு இருவரும் நின்றோம். எங்கள் கைகளில் வாட்கள் பிரகாசித்தன. திடீரென்று இவான் இக்னாத்தியெவிச்சும் நான்கு அல்லது ஐந்து படைவீரர்களும் மற்றொரு வைக்கோற் போரின் மறைவிலிருந்து வெளிப்பட்டார்கள். நாங்கள் உடனே தளகர்த்தரைப் பார்க்க வேண்டும் என்று அவர் சொன்னார். அவருடைய உத்தரவுக்கு மனமில்லாமல் கீழ்ப்படிந்தோம். எங்களைச் சூழ்ந்து கொண்டு படைவீரர்கள் நடந்தார்கள். இவான் இக்னாத்தியெவிச் பகட்டான கம்பீரத்தோடு வெற்றி வீரரைப் போல எங்களுக்கு முன்னால் நடந்தார். எல்லோரும் கோட்டையை நோக்கிச் சென்றோம்.

நாங்கள் தளகர்த்தரின் வீட்டை அடைந்ததும் இவான் இக்னாத்தியெவிச் முன்னே சென்று கதவைத் திறந்தார். ''நான் அவர்களைக் கொண்டுவந்திருக்கிறேன்'' என்று ஆரவாரமாக அறிவித்தார். வசிலீசா யெகோரவ்னா வெளியில் வந்து எங்களைச் சந்தித்தாள். ''ஐயா! என்ன இதெல்லாம்? ஏன்? நம்முடைய கோட்டையில் கொலை விழலாமா? இவான் குஸ்மீச்! இவர்களை உடனே கைது செய்ய உத்தர விடுங்கள்! பியோத்தர் அந்திரேயெவிச்! அலெக்சேய் இவானவிச்! உங்கள் வாட்களை உடனே ஒப்படையுங்கள்! இந்த நிமிடமே ஒப்படையுங்கள்! பலாஷ்கா! இந்த வாட்களைக் கொண்டு போய் இருட்டறையில் போட்டுப் பூட்டு. பியோத்தர் அந்திரேயெவிச்! நீங்கள் இப்படி நடந்து கொள்வீர்கள் என்று நான் சிறிதும் எதிர்பார்க்கவில்லை. உங்களுக்கு வெட்கமாக இல்லையா? அலெக்சேய் இவானவிச் சமாசாரம் வேறு. ஒரு படைவீரனைக் கொலை செய்ததற்காகத்தானே காவலர் படையிலிருந்து அவரை இங்கே மாற்றினார்கள். அவருக்குக் கடவுள் நம்பிக்கையும் கிடையாது. ஆனால் நீங்கள் இப்படி நடந்து கொள்ளலாமா? அவரைப் போல ஆகப் போகிறீர்களா?'' என்று சரமாரியாகப் பொழிந்தாள்.

இவான் குஸ்மீச் தன்னுடைய மனைவி சொன்னதை ஒத்துக் கொண்டார். ''நான் சொல்வது இதுதான்: வசிலீசா

யெகோரவ்ஞ சொல்வதுதான் சரி. சண்டை போடுவதை இராணுவ விதிகள் கட்டாயமாகத் தடை செய்கின்றன'' என்று திரும்பத் திரும்பிச் சொன்ஞர். இதற்கிடையில் பலாஷ்கா எங்களுடைய வாள்களை வாங்கி இருட்டறையில் போட்டுப் பூட்டிஞள். எனக்குச் சிரிப்பு ஏற்பட்டது. ஷ்வாப்ரின் நிலைகுலையாமல் நின்று கொண்டிருந்தார். ''வசிலீசா யெகோரவ்ஞ! நான் உங்களுக்கு மரியாதை கொடுக்கத் தயார். ஆஞல் நீங்கள் எங்களுக்கு நீதிபதியாக விளங்க முடியாது என்பதை நான் எடுத்துக் காட்டுவது அவசியம் என்று நினைக்கிறேன். இந்த விவசாரத்தை இவான் குஸ்மீச் சிடம் விட்டு விடுங்கள். என்ன செய்ய வேண்டும் என்பது அவருக்குத் தெரியும்'' என்று காட்டமாகச் சொன்ஞர். ''ஐயா! என்ன சொல்கிறீர்கள்? கணவனும் மனைவியும் ஒரே உடல், ஒரே உயிர் தானே? இவான் முஸ்மீச்! ஏன் சும்மா இருக்கிறீர்கள்? ஏதாவது உத்தரவு கொடுங்கள். இவர்களைக் கைது செய்து வெவ்வேறு அறைகளில் போடுங்கள். அவர்களைப் பிடித்திருக்கும் பேய் ஓடுகிற வரை அவர்களுக்கு ரொட்டியும் தண்ணீரும் கொடுக்கட்டும். அவர்கள் என்ன பிராயச்சித்தம் செய்ய வேண்டும் என்பதை கெராசிம் பாதிரியார் சொல்லட்டும். தங்களுடைய பாவச் செயலுக்கு வருத்தம் தெரிவிப்பதோடு கடவுள் தங்களை மன்னிக்குமாறு அவர்கள் பகிரங்கமாகக் கேட்டுக் கொள்ள வேண்டும்'' என்ருள்.

இவான் குஸ்மீச்சுக்கு என்ன நடவடிக்கை எடுப்பதென்று தெரியவில்லை. மார்யா இவானவ்ஞவின் முகம் வெளுத்துப் போய் விட்டது. புயல் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்தது. தளகர்த்தரின் மனைவி நிதானமடைந்தாள். நாங்கள் ஒருவரை ஒருவர் முத்தம் கொடுக்க வேண்டுமென்று வற்புறுத்திஞள். பலாஷ்கா எங்களுடைய வாட்களைக் கொண்டு வந்து கொடுத்தாள். நாங்களிருவரும் வீட்டை விட்டுப் போன பொழுது நண்பர்களாகி விட்டது போலவே தோன்றியது. இவான் இக்ஞத்தியெவிச் எங்களைப் பின் தொடர்ந்து வந்தார். ''தளகர்த்தரிடம் சொல்ல மாட்டேன் என்று என்னிடம் உறுதி கொடுத்துவிட்டுப் பிறகு அவரிடம் புகார் செய்து விட்டீர்களே. அதற்காக நீங்கள் வெட்கப்படவில்லையா?'' என்று நான் அவரைக் கேட்டேன். ''இவான்

குஸ்மீச்சிடம் நான் சொல்லவில்லை என்பது கடவுளுக்குத் தெரியும். வசிலீசா யெகோரவ்ளு என்னிடமிருந்து எல்லா விவரங்களையும் கிரகித்துக் கொண்டாள். தளகர்த்தருக்குத் தெரியாமலேயே மற்ற ஏற்பாடுகளைச் செய்தாள். எனினும் நல்ல முடிவு ஏற்பட்டதற்கு நாம் ஆண்டவனுக்கு நன்றி தெரிவிக்க வேண்டும்'' என்று இவான் இக்னூத்தியெவிச் பதிலளித்தார். இப்படிச் சொன்ன பிறகு அவர் போய் விட்டார். நானும் ஷ்வாப்ரினும் மட்டுமே அங்கு நின்று கொண்டிருந்தோம். ''நமக்குள் ஏற்பட்டிருக்கும் சச்சரவு இப்படி முடிவதில் அர்த்தமில்லை'' என்று நான் சொன்னேன். ''ஆம். இது சரியான முடிவு அல்ல. உங்களுடைய அகம்பா வத்துக்கு நீங்கள் இரத்தம் சிந்துவது அவசியம். ஆனால் இனிமேல் அவர்கள் நம்மைக் கண்காணிப்பார்கள். சில நாட்களுக்காவது நாம் நண்பர்களைப் போல நடிக்க வேண் டும். போய்வருகிறேன்'' என்றார் ஷ்வாப்ரின். ஒன்றுமே நடக்காததைப் போல நாங்கள் பிரிந்து சென்றோம்.

நான் தளகர்த்தரின் வீட்டுக்கு மீண்டும் திரும்பினேன். வழக்கம் போல மார்யா இவானவ்னுவின் அருகில் உட்கார்ந் தேன். இவான் குஸ்மீச் வெளியே சென்றிருந்தார். வசிலீசா யெகோரவ்னு வீட்டு வேலைகளை மும்முரமாகக் கவனித்துக் கொண்டிருந்தாள். நாங்களிருவரும் தணிவான குரலில் பேசிக் கொண்டோம். மார்யா இவானவ்னு எனக்கும் ஷ்வாப் ரினுக்கும் ஏற்பட்ட சச்சரவின் விளைவாக அவர்களிடம் ஏற்பட்ட கவலையை அன்போடு என்னிடம் தெரிவித்தாள்.

''நீங்கள் இருவரும் வாட்சண்டை போடப் போகிறீர் கள் என்று கேள்விப்பட்ட பொழுது எனக்கு மயக்கம் வருவது போல இருந்தது. ஆண்கள் எவ்வளவு விசித்திரமானவர் கள்! யாரோ ஒரு வார்த்தை சொன்னதற்காக, அதிலும் சில நாட்களில் மறந்து போகக் கூடிய ஒரு வார்த்தைக்காக அவர்கள் ஒருவரையொருவர் கொலை செய்யத் துணிந்து விடுகிறார்கள். தங்களுடைய வாழ்க்கையையும் மனச்சாட்சி யையும் பலி கொடுக்கத் தயாராவது மட்டுமல்ல, அவர்களை உயிருக்குயிராக நேசிப்பவர்களின் நலத்தையும்.... ஆனால் உங்களால் இது ஏற்பட்டிருக்காது என்று நம்புகிறேன். அலெக்சைய் இவானவிச்தான் இதற்குக் காரணமாக இருந் திருக்க வேண்டும்'' என்றாள்.

''மார்யா இவானவ்ஞ! நீங்கள் ஏன் அப்படி நினைக்கிறீர்கள்?''

''எனக்குத் தெரியாது... அவர் எப்பொழுதுமே என்னை ஏளனமாகப் பேசுகிருர். எனக்கு அவரைப் பிடிக்கவில்லை; அவரை நினைத்தாலே அருவருப்பு உண்டாகிறது. ஆனல் அவர் என்னை வெறுக்கிருர் என்ருல் நான் மிகவும் வருத்தப் படுவேன். இது விசித்திரமாகத் தோன்றலாம். நான் மிகவும் கவலைப்படுவேன்.''

''மார்யா இவானவ்ஞ! அவருக்கு உங்கள் மீது பிரியமுண்டா? உங்களுடைய கருத்தைச் சொல்லுங்கள்.''

மார்யா இவானவ்ஞ வெட்கமடைந்தாள்.

''அவர் என்னை விரும்புகிருர் என்று நினைக்கிறேன்'' என்று அவள் தயங்கியபடியே பதிலளித்தாள்.

''நீங்கள் அப்படி நினைக்கக் காரணமென்ன?''

''அவர் என்னைத் திருமணம் செய்து கொள்ள விரும்புவதாகக் கூறியதுண்டு.''

''உங்களைத் திருமணம் செய்து கொள்ள விரும்புவதாகச் சொன்ஞரா? எப்பொழுது?''

''சென்ற வருடத்தில். நீங்கள் இங்கே வருவதற்கு இரண்டொரு மாதங்களுக்கு முன்பு.''

''நீங்கள் அதற்கு ஒத்துக் கொள்ளவில்லை. அப்படியா?''

''ஆமாம். அலெக்சேய் இவானவிச் கெட்டிக்காரர்தான்; நல்ல குடும்பத்தைச் சேர்ந்தவர்; அவருக்குச் சொத்துக்களும் இருக்கின்றன. எனினும் மாதாகோவிலில் திருமணச் சடங்குகளின் போது அவரோடு சேர்ந்து நிற்பதற்கும் எல்லோர் முன்னிலையிலும் அவரை முத்தமிடுவதற்கும் என் மனம் ஒப்பவில்லை.... உலகத்தையே எனக்குத் தருவதாகச் சொன்ஞலும் நான் அதைச் செய்ய மாட்டேன், செய்ய மாட்டேன்!'' என்ருள்.

மார்யா இவானவ்ஞ தெரிவித்த செய்திகள் என் கண்களைத் திறந்தன என்றுதான் சொல்ல வேண்டும். அதற்குப் பிறகுதான் எனக்குப் பல விஷயங்கள் தெளிவாகப் புரிந்தன. அவளைப் பற்றிப் பேசுகின்ற பொழுதெல்லாம் ஷ்வாப்ரின் தொடர்ந்து வெறுப்பைக் கக்கியது ஏன் என்பது இப்பொழுது எனக்குப் புரிந்தது. எங்களிருவருக்கும் இடையில் ஏற்பட்டுக் கொண்டிருந்த பரஸ்பர அன்பை அவர் கவனித்

திருக்க வேண்டும். எனவே அதை ஆரம்பத்திலேயே கிள்ளிப் போட வேண்டுமென்று விஷமத்தனமாக நடந்து கொண்டிருக்கிருர். எங்களுடைய சச்சரவுக்குக் காரணமான அன்று அவர் சொன்ன வார்த்தைகளை நினைத்துப் பார்த்தேன். அவை அருவருப்பானவை மட்டுமல்ல; ஒரு பெண்ணை மிகவும் இழிவான வகையில் அவதூறு செய்கின்ற வார்த்தைகள். அகம்பாவத்தால் மற்றவர்களை அவதூறு செய்கின்ற ஷ்வாப்ரினுக்குச் சரியான தண்டனை கொடுக்க வேண்டும் என்ற எண்ணம் என் மனதில் வேரூன்றியது. நல்ல சந்தர்ப்பம் வரட்டும் என்று நான் பொறுமையில்லாமல் காத்திருந்தேன்.

அதிக நாட்கள் காத்திருக்க வேண்டிய அவசியம் எனக்கு இல்லாமற்போய் விட்டது. மறு நாள் காலையில் நான் அறையில் உட்கார்ந்து ஒரு இரங்கற்பா எழுதிக் கொண்டிருந்தேன். என்னுடைய இறகுப் பேனவின் மேல்முனையைக் கடித்துக் கொண்டு பொருத்தமான சொற்களை யோசித்துக் கொண்டிருந்தேன். அந்த நேரத்தில் சன்னலுக்குக் கீழேயிருந்த சுவரில் ஷ்வாப்ரின் தட்டினர். நான் பேனவை வைத்துவிட்டு வாளை எடுத்துக் கொண்டு வெளியே போனேன். ''நாம் எதற்காக சண்டையைத் தள்ளிப் போட வேண்டும்? இப்பொழுது யாரும் நம்மை வேவு பார்க்கவில்லை. ஆற்றங்கரைக்குப் போகலாம். அங்கே யாரும் நம்மைப் பார்க்க முடியாது'' என்று சொன்னர். நாங்களிருவரும் ஆற்றங்கரையை நோக்கி, வளைந்து போகின்ற ஒரு பாதையில் மௌனமாக நடந்தோம். ஆற்றங்கரைக்கு வந்ததும் ஓர் இடத்தில் நின்று கொண்டு உறைகளிலிருந்து வாட்களை உருவினேம். ஷ்வாப்ரினுக்கு வாட்சண்டையில் அனுபவம் அதிகம்; ஆனல் அவரைக் காட்டிலும் அதிகமான துணிச்சலும் வலிமையும் என்னிடம் உண்டு. மேலும் ஒரு காலத்தில் இராணுவத்தில் பணியாற்றியவரான என்னுடைய முன்னள் ஆசிரியர் திருவாளர் பப்ரே வாட்சண்டையில் எனக்குக் கொஞ்சம் பயிற்சி கொடுத்திருந்தார். அந்தப் பயிற்சி இந்த நேரத்தில் எனக்குக் கை கொடுத்தது. நான் அவ்வளவு திறமையோடு வாட்சண்டை செய்வேன் என்று ஷ்வாப்ரின் எதிர்பார்த்திருக்க முடியாது. வெகு நேரம் வரை ஒருவராலும் அடுத்தவருக்குக் காயமேற்படுத்த முடியவில்லை. கடைசியில் ஷ்வாப்ரினுக்குச் சோர்வு

ஏற்படுவதை உணர்ந்து நான் முழு பலத்தோடு அவரைத் தாக்கினேன். அநேகமாகத் தண்ணீருக்குள் அவரைத் தள்ளி விட்டேன். திடீரென்று யாரோ என் பெயரைச் சொல்லி பலமாகக் கூப்பிடும் சத்தம் கேட்டது. நான் அந்தத் திசையில் திரும்பிய பொழுது மலைப் பாதையில் ஸவேலிச் வேகமாக என்னை நோக்கி ஓடி வருவதைப் பார்த்தேன். அந்த நேரத்தில் ஷ்வாப்ரின் எனது மார்பில் வேகமாக வாளைச் சொருகவே எனது வலது தோள்பட்டையில் அது ஆழமாகப் பாய்ந்தது. நான் சுய நினைவை இழந்து கீழே விழுந்தேன்.

# அத்தியாயம் ஐந்து

## காதல்

அழகுப் பெண்ணே!
உனக்கு இன்னும் வயசு வரவில்லை.
உன் அப்பாவைக் கேள்,
உன் அம்மாவைக் கேள்,
அழகுப் பெண்ணே!
உன் அப்பாவைக் கேள்,
உன் அம்மாவைக் கேள்,
உறவுக்காரர்களைக் கேள்,
அழகுப் பெண்ணே!
அறிவு வரும் வரை காத்திரு,
சீதனம் சேரும் வரை காத்திரு.

நாட்டுப் பாடல்[50]

என்னைக் காட்டிலும் உயர்ந்தவனைப்
பார்த்தால் என்னை மறப்பாய்;
என்னைக் காட்டிலும் தாழ்ந்தவனைக்
கண்டால் என்னை நினைப்பாய்.

நாட்டுப் பாடல்[51]

எனக்குச் சுயநினைவு வந்த பிறகும் சிறிது நேரத்துக்குப் பிறகுதான் அன்று நடைபெற்ற சம்பவங்களை நினைவுபடுத்திக் கொள்ள முடிந்தது. ஏதோ ஒரு புதிய அறையில் படுக்கையில் நான் படுத்திருந்தேன். உடல் மிகவும் பலவீனமாக இருந்தது. என் கட்டிலுக்கு அருகில் ஸவேலிச் கையில் ஒரு விளக்கைப் பிடித்துக் கொண்டு நின்று கொண்டிருந்தான். என்னுடைய மார்பிலும் தோள்பட்டையிலும் கட்டப்பட்டிருந்த துணிப் பட்டையை யாரோ கவனத்தோடு அவிழ்த்துக் கொண்டிருந்தார்கள். என்னுடைய நினைவுகள்

சிறிது சிறிதாகத் தெளிவடைந்தன. நாங்கள் போட்ட வாட் சண்டை என்னுடைய நினைவுக்கு வந்தது. எனக்குக் காயம் ஏற்பட்டிருக்க வேண்டுமென்று நினைத்தேன். அந்த நேரத் தில் அறைக் கதவு லேசாகத் திறந்தது. ''அவர் எப்படி இருக் கிருர்?'' என்று மெல்லிய குரலில் விசாரிப்பது கேட்டது. அந்தக் குரலைக் கேட்டதும் என் உடல் சிலிர்த்தது. ''அப் படியேதான். சுயநினைவு இல்லாமலே இருக்கிருர். இன்றுடன் ஐந்து நாட்களாகி விட்டன'' என்று ஸவேலிச் பெருமூச்சு விட்டபடியே பதிலளித்தான். நான் புரண்டு படுக்க விரும் பினேன். ஆனல் என்னல் முடியவில்லை. ''நான் எங்கே இருக் கிறேன்? அது யார்?'' என்று மிகவும் சிரமப்பட்டுப் பேசி னேன். மார்யா இவானவ்ன என் கட்டிலின் அருகில் வந்து, குனிந்து என்னைப் பார்த்தாள். -''எப்படி இருக்கிறீர்கள்?'' என்று கேட்டாள். ''நல்ல வேளையாகக் கடவுள் காப்பாற் றினர்'' என்று மெல்லிய குரலில் சொன்னேன். ''மார்யா இவானவ்ன, நீங்களா?.. எனக்குச் சொல்லுங்கள்....'' என்னல் பேச முடியாமல் பாதியிலேயே நிறுத்தி விட்டேன். ஸவேலிச் பெருமூச்சு விட்டான். அவன் முகத்தில் மகிழ்ச்சி தோன்றியது. ''அவர் பேசி விட்டார்! கடவுள் கருணை காட்டி விட்டார்!'' என்று அவன் திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருந்தான். ''ஓ! பியோத்தர் அந்திரே யெவிச்! எவ்வளவு பயந்து விட்டேன் தெரியுமா, ஐயா? ஐந்து நாட்கள்! எவ்வளவு கஷ்டம்!..'' என்ருன். மார்யா இவானவ்ன அவன் பேச்சில் குறுக்கிட்டாள். ''ஸவேலிச்! அவரோடு அதிகமாகப் பேசாதே. அவர் மிகவும் பலவீன மாக இருக்கிருர்'' என்று சொல்லிவிட்டு சப்தமில்லாமல் கதவைத் திறந்து மெதுவாக அதை மூடிவிட்டு வெளியே போனுள். எனக்கு ஒரே குழப்பமாக இருந்தது. நான் தள கர்த்தரின் வீட்டில் இருக்கிறேன்; மார்யா இவானவ்ன என்னைப் பார்க்க வந்திருக்கிருள் என்று புரிந்து கொண் டேன். ஸவேலிச்சிடம் சில கேள்விகள் கேட்பதற்கு முயற் சித்தேன். ஆனல் அந்தக் கிழவன் தலையைப் பலமாக ஆட்டி விட்டுத் தன்னுடைய காதுகளைப் பொத்திக் கொண்டான். என்னல் ஒன்றும் செய்ய முடியவில்லை. என்னுடைய கண்களை மூடிக் கொண்டேன். சிறிது நேரத்தில் தூக்கம் வந்ததும் எல்லாவற்றையும் மறந்து விட்டேன்.

எனக்கு விழிப்பு ஏற்பட்டதும் ஸவேலிச்சைக் கூப்பிட்டேன். ஆனல் எனக்கு அருகே உட்கார்ந்திருந்த மார்யா இவானவ்னு தேவதைகளுக்குரிய இனிமையான குரலில் என்னிடம் பேசினுள். அந்த நேரத்தில் எனக்கு ஏற்பட்ட உணர்ச்சிப் பரவசத்தை வார்த்தைகளால் வர்ணிக்க முடியாது. நான் அவளுடைய கையை இழுத்து என் மார்போடு அணைத்துக் கொண்டேன். என்னுடைய ஆனந்தக் கண்ணீரில் அவள் கை நனைந்தது. மாஷா தன்னுடைய கையை விலக்கிக் கொள்ளவில்லை.... திடீரென்று ஏற்பட்ட உணர்ச்சிப் பெருக்கில் தன் உதடுகளை என் முகத்தில் பதித்து முத்தமிட்டாள். என் உடல் முழுவதும் நெருப்புப் பிடித்தது போல உணர்ச்சி ஏற்பட்டது. ''அன்பே! மார்யா இவானவ்னு! என்னை மணந்து கொள்ளுங்கள். நீங்கள் ஒத்துக் கொண்டால்தான் என்னுடைய எதிர்காலம் மகிழ்ச்சியாக இருக்கும்'' என்றேன். அவள் தன்னை நிதானப்படுத்திக் கொண்டாள். ''அமைதியாக இருங்கள். உங்களுக்குப் புண்ணியம்'' என்று சொல்லிக் கொண்டு தன்னுடைய கையை என்னிடமிருந்து விலக்கிக் கொண்டாள். ''நீங்கள் இன்னும் அபாய நிலையிலிருந்து மீளவில்லை. காயம் பலமானது. உடல் நிலையைக் கவனித்துக் கொள்ளுங்கள். தயவு செய்து, எனக்காகக் கவனித்துக் கொள்ளுங்கள்'' என்று சொல்லி என்னை ஆனந்த பரவசமான நிலையில் வைத்துவிட்டு அவள் வெளியே சென்றுள். மகிழ்ச்சியில் எனக்கு உயிர் திரும்பியது. அவள் என்னுடையவள்! அவள் என்னைக் காதலிக்கிறுள்! இந்த ஒரு எண்ணம் மட்டுமே என் உடல் முழுவதும் நிறைந்திருந்தது.

அந்த விளுடியிலிருந்து நான் படிப்படியாக குணமடைய ஆரம்பித்தேன். எங்கள் கோட்டையில் மருத்துவர் இல்லாததால் படைப் பிரிவின் நாவிதன் எனக்கு மருந்து கொடுத்து கவனித்துக் கொண்டான். நல்ல வேளையாக என்னை வைத்துப் பரிசோதனை செய்யும் காரியத்தில் அவன் ஈடுபடவில்லை. நான் சீக்கிரமாக குணமடைவதற்கு என்னுடைய இளமை உதவியது; இயற்கை ஒத்துழைத்தது. தளகர்த்தரின் குடும்பத்தில் ஒவ்வொருவரும் என்னைக் கவனித்துக் கொண்டார்கள். மார்யா இவானவ்னு என்னை விட்டு எங்குமே போகவில்லை. முன்பு நான் செய்த காதற்பிரகடனம் பாதியிலேயே

நின்று விட்டபடியால் அதை மீண்டும் வலியுறுத்துவதற்கு இந்த வாய்ப்பை நான் பயன்படுத்திக் கொண்டேன். இந்தத் தடவை மார்யா இவானவ்ஞ என் பேச்சு முழுவதையும் அதிகமான பொறுமையோடு கேட்டாள். அதோடு அவள் என்னைக் காதலிப்பதையும் நாணம் என்ற பெயரில் மறைக்க வில்லை. அவளுடைய பெற்ருேர்கள் அவளுடைய மகிழ்ச் சிக்குக் குறுக்கே நிற்க மாட்டார்கள் என்ருள். ''ஆனல் நீங்கள் நன்ருக யோசிக்க வேண்டும். உங்களுடைய பெற் ருேர்கள் உங்களுடைய முடிவை ஏற்றுக் கொள்வார்களா?'' என்று சந்தேகத்தோடு கேட்டாள்.

நான் வெகு நேரம் சிந்தித்தேன். என் தாயார் மிகவும் இளகிய மனமுடையவள் என்பதில் எனக்கு சந்தேகம் இல்லை. ஆனல் என் தகப்பனரின் கருத்துக்களும் போக்குகளும் வேறு விதமானவை என்று எனக்குத் தெரியும். என்னுடைய காதலை இளம் வயதுக் கோளாறு என்று நினைப்பாரே தவிர அதைக் கேட்டு உணர்ச்சியால் நெகிழ்ந்து திருமணம் செய்து கொள் என்று அனுமதி கொடுக்க மாட்டார் என்று எனக்குத் தோன்றியது. நான் இதைச் சிறிதும் மறைக்காமல் மார்யா இவானவ்ஞவிடம் தெரிவித்தேன். ஆனல் என் தகப்பனரின் சம்மதத்தையும் ஆசீர்வாதத்தையும் கேட்டு உருக்கமாக அவருக்குக் கடிதம் எழுதுவதென்று முடிவு செய்தேன். நான் தயாரித்த கடிதத்தை மார்யா இவானவ்ஞவிடம் காட்டி னேன். அந்தக் கடிதம் உள்ளத்தைத் தொடும் வகையில் இருப்பதோடு என்னுடைய முடிவு எவ்வளவு நியாயமானது என்பதை நன்ருக விளக்குவதாகவும் அவள் கருதிஞள். இந்தக் கடிதம் என் தகப்பனரின் மனதை நிச்சயமாக உருக் கும் என்று அவள் நினைத்தாள். இளமைக்கும் காதலுக்குமே உரிய நம்பிக்கை என்ற உணர்ச்சி அவளுடைய மென்மை யான இதயத்தில் பொங்கி வழிந்தது.

என் உடம்பு குணமடைந்த பிறகு ஷ்வாப்ரினைப் பார்த்த முதல் சந்தர்ப்பத்திலேயே அவரோடு சமாதானம் செய்து கொண்டேன். இவான் குஸ்மீச் என்னை மிகவும் கண்டித்தார். ''ஓ! பியோத்தர் அந்திரேயெவிச்! உன்னைக் கைது செய் வதற்கு உத்தரவிட வேண்டும். ஆனல் போதுமான தண்டனை உனக்குக் கிடைத்து விட்டது. அலெக்சேய் இவானவிச்சைக் களஞ்சியத்தில் பாதுகாவலில் வைத்திருக்கிருேம். வசிலீசா

யெகோரவ்ஞ அவனுடைய வாளைக் கைப்பற்றியதோடு, அதை இருட்டறையில் பத்திரமாகப் பூட்டி வைத்திருக்கிருள். அவனும் தன்னுடைய குற்றத்தை நினைத்து வருந்தட்டும்'' என்ருர். அதிகமான மகிழ்ச்சியில் திளைத்துக் கொண்டிருந்த எனக்கு யாரைப் பற்றியும் எந்த வருத்தமுமில்லை. எனவே அன்பு நிறைந்த இதயம் கொண்ட தளகர்த்தரிடம் ஷ்வாப்ரினுக்காகப் பரிந்து பேசினேன். அவர் வழக்கம் போல தம்முடைய மனைவியைக் கலந்து கொண்டு ஷ்வாப்ரினை விடுவிக்க முடிவு செய்தார். ஷ்வாப்ரின் என்னைச் சந்தித்து, எங்களுக்கிடையே ஏற்பட்ட சச்சரவுக்கும் சம்பவங்களுக்கும் தம்முடைய ஆழ்ந்த வருத்தத்தைத் தெரிவித்தார். எல்லாவற்றுக்கும் என்னுடைய தவறுகளே காரணம்; எனவே என்னை மன்னியுங்கள் என்று கேட்டுக் கொண்டார். யாரைப் பற்றியும் வன்மம் கொண்டிருப்பது என்னுடைய இயல்புக்குப் புறம்பானதாகையால், அவர் எனக்கிழைத்த தவறுக்கும் என் உடலில் ஏற்படுத்திய காயத்துக்கும் அவரை மனப்பூர்வமாக மன்னித்தேன். அவர் அகம்பாவமானவர்; அவருடைய காதல் நிராகரிக்கப்பட்டதனுல் புண்பட்டு அவதூறு செய்து விட்டார் என்று கருதிய நான் என்னுடைய துரதிருஷ்டசாலியான எதிரியைப் பெருந்தன்மையோடு மன்னித்தேன்.

நான் சீக்கிரமாகவே குணமடைந்து விட்டபடியால் என்னுடைய அறைக்குத் திரும்பினேன். என் தகப்பனுரிடமிருந்து எப்பொழுது பதில் வரும் என்று பொறுமையின்றி எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். அந்தக் கடிதத்தைப் பற்றி நம்பிக்கையோடிருக்க என்னுல் முடியவில்லை; ஆனுல் தீமை வரப் போகிறது என்று எனக்கு ஏற்பட்ட கவலையையும் மறைத்துக் கொள்ளப் பாடுபட்டேன். வசிலீசா யெகோரவ்ஞவிடமும் அவள் கணவரிடமும் என்னுடைய எண்ணங்களை நான் தெரிவிக்கவில்லை. ஆனுல் இது அவர்களுக்கு ஆச்சரியத்தைத் தராது என்பதை நான் உணர்ந்தேன். எங்களுடைய காதலை அவர்களிடமிருந்து மறைக்க நானே அல்லது மார்யா இவானவ்ஞவோ முயற்சிக்கவில்லை. அவர்கள் சம்மதம் கிடைக்கும் என்று முன்னதாகவே நம்பிக்கையை வளர்த்துக் கொண்டிருந்தோம்.

கடைசியில் ஒரு நாள் காலையில் ஒரு கடிதத்தோடு

ஸவேலிச் என்னிடம் வந்தான். நான் கடிதத்தை வாங்கிய பொழுது என் கை நடுங்கியது. அந்தக் கடிதத்தில் என் தகப்பனுருடைய கையெழுத்தில் முகவரி எழுதப்பட்டிருந்தது தெரிந்தது. இதுவே எனக்குக் கவலையை ஏற்படுத்தியது. ஏனென்றால் என்னுடைய தாயார் எனக்குக் கடிதம் எழுத, என் தகப்பனுர் அந்தக் கடிதத்தின் கீழ் சில வரிகள் எழுதுவதுதான் வழக்கம். வெகு நேரம் வரை அதைப் பிரித்துப் படிக்க எனக்கு மனமில்லே. அந்த மேலுறையில் எழுதப்பட்டிருந்த முகவரியைப் பார்த்துக் கொண்டேயிருந்தேன்: ''என் மகன் பியோத்தர் அந்திரேயெவிச் கிரின்யோவ், பெலகோர்ஸ்க் கோட்டை, ஓரென்புர்க் வட்டாரம்.'' என் தகப்பனுர் எந்த மனநிலேயில் கடிதத்தை எழுதினுர் என்பதை முகவரியிலுள்ள அவருடைய கையெழுத்தைக் கொண்டு கண்டுபிடிக்க முயன்றேன். கடைசியில் முத்திரையை உடைத்துக் கடிதத்தை வெளியில் எடுத்தேன். முதலிரண்டு வரிகளேப் படித்தவுடனேயே எங்களுக்கிடையில் எல்லாவிதமான உறவுகளும் முடிந்து விட்டன என்பது எனக்குத் தெளிவாயிற்று. அந்தக் கடிதம் பின்வருமாறு எழுதப்பட்டிருந்தது:

''என் மகன் பியோத்தர்! மிரோனவ் மகள் மார்யா இவானவ்னுவைத் திருமணம் செய்து கொள்வதற்குப் பெற்ருேர்களின் அனுமதியையும் ஆசீர்வாதத்தையும் கேட்டு நீ எழுதிய கடிதம் இம்மாதம் பதினேந்தாம் தேதியன்று எங்களுக்குக் கிடைத்தது. உனக்கு அனுமதி கொடுக்கவோ அல்லது ஆசீர்வாதம் செய்யவோ எனக்கு உத்தேசமில்லே. மேலும் நீ இராணுவ அதிகாரியாக இருந்த போதிலும், சிறு வயதில் நீ சேட்டை செய்கிற பொழுது உன்னேத் தண்டித்ததைப் போல, இப்போதும் தண்டனே கொடுக்க ஆசைப்படுகிறேன். ஏனென்ருல் நாட்டின் பாதுகாப்புக்காக உன்னிடம் வாள் தரப்பட்டிருக்கிறதே தவிர உன்னேப் போன்ற மூர்க்கர்கள் ஒருவரோடொருவர் சண்டை போட்டுக் கொள்வதற்காக அல்ல. அந்த வாளே வைத்திருப்பதற்குரிய தகுதி உனக்கு இன்னும் ஏற்படவில்லே என்பதை நீ நிரூபித்து விட்டாய். இவ்விதமான பிதற்றல்களே நீ மறக்க வேண்டும் என்பதற்காக பெலகோர்ஸ்க் கோட்டையிலிருந்து இன்னும் வெகு

தூரத்துக்கு அப்பாலுள்ள ஓர் இடத்துக்கு உன்னை மாற்றி விடுமாறு அந்திரேய் கார்லவிச்சுக்கு உடனடியாகக் கடிதம் எழுதப் போகிறேன். உன்னுடைய சண்டையைப் பற்றியும் அதில் உனக்குக் காயமேற்பட்டதைப் பற்றியும் கேள்விப்பட்டதும் உன் தாயார் நோயாகப் படுத்து விட்டாள். இன்னும் படுத்த படுக்கையாகவே இருக்கிறாள். உன் கதி என்ன ஆகப் போகிறதோ? உன் வாழ்க்கையில் முன்னேற்றம் ஏற்பட வேண்டுமென்று கடவுளைப் பிரார்த்திக்கிறேன். ஆனால் கருணை மூர்த்தியான கடவுள் உனக்கு உதவுவார் என்று நான் நம்ப வில்லை.

''உன் தகப்பனார்,
''அ.கி.''

அந்தக் கடிதத்தைப் படித்ததும் என் மனதில் பலவித மான உணர்ச்சிகள் மோதின. என்னுடைய தகப்பனார் கடு மையான சொற்களை மிகவும் தாராளமாகக் கடிதத்தில் எழுதியிருந்தது எனக்கு ஆழ்ந்த வேதனையைத் தந்தது. மார்யா இவானவ்னாவைப் பற்றி அவமதிப்பாக எழுதியிருந் தது பண்புக்குறைவானது என்பதோடு தேவையற்றதாக வும் எனக்குத் தோன்றியது. பெலகோர்ஸ்க் கோட்டை யிலிருந்து மாற்றப்படலாம் என்ற எண்ணம் எனக்குக் கவலையைக் கொடுத்தபோதிலும் என் தாயார் படுத்த படுக் கையாக இருக்கும் செய்தி எனக்கு மிகவும் துயரத்தைத் தந்தது. இங்கே நடந்த சண்டையைப் பற்றி என் பெற்றோர் களுக்கு எப்படித் தெரியும்? ஸவேலிச்தான் தெரிவித்திருக்க வேண்டும் என்று நினைத்து, அவன் மீது மிகவும் ஆத்திர மடைந்தேன். என்னுடைய சிறிய அறையில் முன்னும் பின்னு மாக நடந்து கொண்டிருந்தேன். திடீரென்று ஸவேலிச் முன்னால் போய் நின்று கொண்டு அவனைக் கொன்று விடுவது போலப் பார்த்தேன். ''உன்னால்தான் எனக்குக் காயம் ஏற் பட்டது. என் உயிருக்காக ஒரு மாதம் போராடினேன். அதோடு திருப்தியடையாமல் என் தாயாரையும் கொல்லப் பார்க்கிறாயா?'' என்று அவனைக் கேட்டேன். இடிவிழுந்தது போல ஸவேலிச் நிலைகுலைந்து போனான். ''எஜமான்! என்ன சொன்னீர்கள்?'' என்று அழுவது போலப் பேசினான். ''என்னால் உங்களுக்குக் காயமேற்பட்டதா? அலெக்சேய்

இவானவிச்சின் வாள் வீச்சிலிருந்து என் உயிரைக் கொடுத்தாகிலும் உங்களைக் காப்பாற்ற வேண்டுமென்றுதானே நான் வேகமாக ஓடி வந்தேன்! அது கடவுளுக்குத் தெரியும். வயதாகி விட்டதால் வேகமாக ஓட முடியவில்லை. உங்கள் தாயாருக்கு நான் என்ன தீங்கு செய்தேன்?'' என்று கேட்டான். ''நீ என்ன செய்தாயா? என்னைப் பற்றி என் தகப்பனுருக்கு ஏன் எழுதினுய்? என்னை வேவு பார்ப்பதற்காக வந்திருக்கிருயா?'' என்றேன். ''கடவுளே! நான் உங்களைப் பற்றி எழுதினேனு? எஜமான் எனக்கு எழுதியிருக்கும் கடிதத்தைப் படித்துப் பாருங்கள். உண்மையைப் புரிந்து கொள்வீர்கள்'' என்று சொல்லிக் கொண்டே அழுதான். பிறகு தன் பையிலிருந்து ஒரு கடிதத்தை எடுத்து என்னிடம் கொடுத்தான். அதில் பின்வருமாறு எழுதப்பட்டிருந்தது:

''என் மகன் பியோத்தர் அந்திரேயெவிச் என்ன செய்து கொண்டிருக்கிருன் என்பதை நீ ஏன் எனக்குத் தெரிவிக்கவில்லை? நான் கண்டிப்பாக உத்தரவு கொடுத்திருந்தும் நீ அதைச் செய்யவில்லையே. நாயே! அவன் சேட்டைகளைப் பற்றி அந்நியர்கள் எனக்கு எழுதித்தான் நான் தெரிந்து கொண்டேன். சீ! உனக்கு வெட்கமாயில்லையா? உன் எஜமானின் உத்தரவுகளையும் உன்னுடைய கடமையையும் இப்படியா நிறைவேற்றுவது? இளைஞனை ஒருவனேடு சேர்ந்து கொண்டு நீயும் உண்மையை மறைத்து விட்டாய், நாயே! உன்னைப் பன்றிகளை மேய்க்க அனுப்பி விடுவேன். அவன் உடல்நிலை முன்னேற்றமடைந்திருக்கிறது என்று நான் கேள்விப்படுகிறேன். எனினும் இந்தக் கடிதம் கிடைத்ததும் அவனுடைய உடல்நிலையைப் பற்றியும், அவனுக்கு எந்த இடத்தில் காயமேற்பட்டது; அவனை நன்ருக கவனிக்கிருர்களா என்பதையும் உடனே எழுது. இது என் உத்தரவு.''

ஸவேலிச் எனக்கு எத்தகைய தீமையும் செய்யவில்லை என்பது எனக்குத் தெளிவாயிற்று. அவனை சந்தேகப்பட்டுத் திட்டியது சரியல்ல. எனவே அவனிடம் மன்னிப்புக் கேட்டேன். ஆனுல் அந்தக் கிழவனைத் தேற்ற முடியவில்லை. ''எஜமான் என்ன எழுதி விட்டார் பார்த்திர்களா? கடைசியில் இந்தக் கதியா எனக்கு ஏற்பட வேண்டும்? நாய் என்றும்

பன்றிகளை மேய்க்கத்தான் லாயக்கு என்றும் எழுதியிருக்கிறார். என்னால்தான் உங்களுக்குக் காயமேற்பட்டது என்று நீங்கள் சொல்கிறீர்கள். பியோத்தர் அந்திரேயெவிச்! இளம் எஜமானே! இதற்கெல்லாம் காரணம் நான் அல்ல; அந்தப் பாழாய்ப் போன பிரெஞ்சுக்காரன்தான். உங்களுக்கு வாட்சண்டை கற்றுக் கொடுத்தானே பாவி, அவன்தான் காரணம். என்னதான் வாட்சண்டை தெரிந்தாலும் போக்கிரிப் பயலுக்கு முன்னால் நாம் என்ன செய்ய முடியும்? இவ்வளவு பணத்தைச் செலவழித்து பிரெஞ்சுக்காரனை வேலைக்கு வைத்தார்களே. அதனால் ஒரு பயனாவது உண்டா?'' என்று புலம்பினான்.

என்னையும் என்னுடைய நடத்தையையும் பற்றி என் தகப்பனாருக்கு வேலை மெனக்கெட்டு எழுதியது யார்? ஜெனரலா? அவர் அவ்வளவு தூரம் என் மீது அக்கறையுள்ளவராகத் தெரியவில்லையே; மேலும் இவான் குஸ்மீச் எங்கள் சண்டையைப் பற்றி அவருக்கு அறிக்கை அனுப்பவில்லையே. எவ்வளவு யோசித்தாலும் எனக்கு என்றும் புரியவில்லை. கடைசியில் ஷ்வாப்ரின் மீதுதான் எனக்கு சந்தேகம் ஏற்பட்டது. கோட்டையிலிருந்து என்னை வெளியேற்றி தளகர்த்தர் குடும்பத்தோடு எனக்குத் தொடர்பு இல்லாமற் செய்வதன் மூலம் பயனடையக் கூடிய ஒரே நபர் ஷ்வாப்ரின் தவிர வேறு யாருமில்லை.எல்லாவற்றையும் மார்யா இவானவ்னாவிடம் தெரிவிப்பதற்காகப் புறப்பட்டேன். நான் அங்கே சென்ற பொழுது அவள் வாயிற்படியில் நின்றுகொண்டிருந்தாள். ''ஏன் இப்படி இருக்கிறீர்கள்? உங்கள் முகமெல்லாம் வெளுத்திருக்கிறதே!'' என்று என்னைப் பார்த்ததும் அவள் கேட்டாள். ''எல்லாம் முடிந்து விட்டது!'' என்று சொல்லியபடியே என் தகப்பனாரின் கடிதத்தை அவளிடம் நீட்டினேன். இப்பொழுது அவள் முகம் வெளுத்து விட்டது. கடிதத்தைப் படித்துவிட்டு என்னிடம் அதைத் திருப்பிக் கொடுத்த பொழுது அவளுடைய விரல்கள் நடுங்கின. அவளுடைய குரல் மிகப் பரிதாபமாக இருந்தது. ''உங்கள் பெற்றோர்களுக்கு என்னைப் பிடிக்கவில்லை. நாம் நினைத்தது நடக்கப் போவதில்லை. கடவுள் சித்தப்படி நடக்கட்டும். நமக்கு எது நல்லது என்பது நம்மைக் காட்டிலும் கடவுளுக்குத்தான் தெரியும். நாம் என்ன செய்ய முடியும்? பியோத்தர்

அந்திரேயெவிச்! நீங்கள் மகிழ்ச்சியோடிருந்தால் போதும்....'' என்ருள். நான் உடனே அவள் கையைப் பிடித்துக் கொண்டு, ''இல்லே! நான் எதற்கும் தயார். நீ என்னைக் காதலிக்கிருய். என்னுடைய பெற்ருேர்களின் காலடியில் நாம் விழுவோம். அவர்கள் எளிமையானவர்கள். பணத்தால், அகம்பாவத்தால் அவர்களுடைய இதயங்கள் கல்லாகி விடவில்லை.... அவர்கள் நம்மை ஆசீர்வதிப்பார்கள். நாம் திருமணம் செய்து கொள்வோம்.... சிறிது காலத்துக்குப் பிறகு என் தகப்பனுருடைய மனம் மாறிவிடும். இது எனக்கு நன்ருகத் தெரியும். என் தாயார் எப்பொழுதும் என் பக்கம்தான் இருப்பாள். என் தகப்பஞர் விரைவில் என்னை மன்னித்து விடுவார்'' என்று சொன்னேன். ''பியோத்தர் அந்திரேயெவிச்! அது சரியல்ல. உங்கள் பெற்ருேர்களது ஆசீர்வாதம் இல்லாமல் நான் உங்களைத் திருமணம் செய்து கொள்ள மாட்டேன். அவர்களது ஆசீர்வாதம் இல்லையென்ருல் உங்கள் வாழ்க்கையில் மகிழ்ச்சி ஏற்படாது. கடவுள் விருப்பப்படி நடக்கட்டும். உங்களுக்கென்று பிறந்திருக்கும் மணப் பெண்ணை நீங்கள் சந்தித்தால், அந்தப் பெண்ணைக் காதலித்தால் கடவுளின் ஆசீர்வாதம் உங்களுக்குக் கிடைக்கட்டும். பியோத்தர் அந்திரேயெவிச்! உங்கள் இருவரது நலத்துக்காகவும் நான் கடவுளை....'' அப்போது அவள் விம்மி விம்மி அழுதாள். பிறகு என்னை விட்டுப் போய் விட்டாள். அவளைப் பின்தொடர்ந்து வீட்டுக்குள் போக வேண்டுமென்று ஓர் உந்துதல் எனக்கு ஏற்பட்டது: ஆனுல் என்னுடைய உணர்ச்சிகளை அடக்கிக் கொள்ள முடியாது என்பதால் என்னுடைய வீட்டுக்குத் திரும்பினேன்.

நான் என்னுடைய அறையில் உட்கார்ந்து தீவிரமாகச் சிந்தித்துக் கொண்டிருந்த பொழுது ஸவேலிச் உள்ளே நுழைந்து என்னுடைய சிந்தனைகளைக் கலைத்தான். என் தகப்பனுருக்கு அவன் எழுதிய கடிதத்தை என்னிடம் நீட்டினுன். ''படித்துப் பாருங்கள் ஐயா! என்னுடைய எஜமானைப் பற்றிக் கண்டதையும் எழுதி அப்பாவுக்கும் மகனுக்கும் தகராறு ஏற்படுத்தியிருக்கிறேனு என்று பாருங்கள்'' என்ருன். நான் அந்தக் கடிதத்தை வாங்கிப் பார்த்தேன். தனக்கு வந்த என் தகப்பனுரின் கடிதத்துக்கு ஸவேலிச் எழுதிய பதில் அது. அதை அப்படியே கீழே தந்திருக்கிறேன்:

*''இரக்கம் நிறைந்த எஜமானரான பெருமதிப்பிற்குரிய அந்திரேய் பெத்ரோவிச் அவர்களுக்கு!*

*''தங்கள் அடிமையான என்னிடம் தாங்கள் கோபமடைந்து எழுதிய கருணை நிறைந்த கடிதம் எனக்குக் கிடைத்தது. எஜமானரின் உத்தரவை மீறியதற்கு நான் வெட்கப்பட வேண்டும் என்று கடிதத்தில் எழுதப்பட்டிருந்தது. நான் ஒரு நாய்ப் பிறவியல்ல; நான் தங்களுடைய விசுவாசமான ஊழியன். எஜமானுடைய உத்தரவை நான் அப்படியே நிறைவேற்றுகிறேன். தங்களுடைய விசுவாசமிக்க ஊழியனாக இருந்து தங்கள் சேவையிலேயே தலை நரைத்துப் போனவன் நான். தங்களுக்கு வீணான கலவரத்தை ஏற்படுத்தக் கூடாது என்றுதான் பியோத்தர் அந்திரேயெவிச்சுக்கு ஏற்பட்ட காயத்தைப் பற்றி நான் எழுதவில்லை. எஜமானி அவ்தோத்யா வசீலியெவ்னா அவர்கள் கவலையினால் படுத்த படுக்கையாக இருப்பதாகக் கேள்விப்பட்டேன். அவர்கள் விரைவில் குணமடைய வேண்டுமென்று கடவுளைப் பிரார்த்திக்கிறேன். பியோத்தர் அந்திரேயெவிச் தனது மார்பில் வலது தோள்பட்டையின் கீழ் எலும்புக்கு அடியில் காயம்பட்டிருக்கிறார். காயம் ஒன்றரை அங்குல ஆழம் இருக்கும். அவரை ஆற்றங்கரையிலிருந்து தளகர்த்தரின் வீட்டுக்கு நாங்கள் தூக்கிக் கொண்டு போனோம். அவரை அங்கே படுக்க வைத்திருந்தோம். நாவிதன் ஸ்தெபான் பரமோனவ் காயத்துக்கு சிகிச்சை செய்தான். கடவுள் தயவால் பியோத்தர் அந்திரேயெவிச் இப்பொழுது குணமடைந்து விட்டார். அவரைப் பற்றி எழுதுவதற்கு நல்ல விஷயங்களைத் தவிர வேறு ஒன்றுமில்லை. அவருடைய மேலதிகாரிகள் அவரை மிகவும் பாராட்டுவதாகக் கேள்விப்படுகிறேன். வசிலீசா யெகோரவ்னா அவரைத் தன்னுடைய மகனைப் போல அன்பாக நடத்துகிறாள். அவர் ஆபத்தில் சிக்கினாரென்றால்—இளங்கன்று பயமறியாது. யானைக்கும் அடி சறுக்கும். பன்றிகளை மேய்க்க என்னை அனுப்பப் போவதாக எழுதியிருக்கிறீர்கள். நான் உங்கள் அடிமை. எஜமானருக்கு என்ன விருப்பமோ அதைச் செய்யட்டும். என்னுடைய எளிமையான வாழ்த்துக்களை ஏற்று அருள் புரியுமாறு கேட்டுக் கொள்கிறேன்.*

*''தங்கள் விசுவாசமான அடிமை,*
**''அர்ஹீப் ஸவேலியெவ்.''**

அந்த அன்பு நிறைந்த கிழவனின் கடிதத்தைப் படித்த பொழுது அவ்வப்பொழுது எனக்கு ஏற்பட்ட சிரிப்பை என்னுல் அடக்க முடியவில்லை. என்னுடைய தகப்பனுரின் கடிதத்துக்குப் பதில் எழுதக் கூடிய நிலைமையில் நான் இல்லை. எனவே என் தயாரின் கவலையைப் போக்க ஸவேலிச் எழுதியுள்ள கடிதமே போதும் என்று எனக்குத் தோன்றியது.

இதற்குப் பிறகு என்னுடைய நிலைமையில் பல மாற்றங்கள் ஏற்பட ஆரம்பித்தன. மார்யா இவானவ்னு என்னிடம் பேசவில்லை என்றே சொல்லலாம். எப்படியாவது என்னைச் சந்திக்காமல் இருப்பதற்கு எல்லா முயற்சிகளையும் செய்தாள். தளகர்த்தரின் வீடு சிறிது சிறிதாக அதன் கவர்ச்சியை இழந்தது. என்னுடைய வீட்டில் தன்னந்தனியாக உட்கார்ந்திருக்க ஆரம்பித்தேன். இதற்காக வசிலீசா யெகோரவ்னு என்னை முதலில் கடிந்து கொண்டாள்; ஆனுல் என்னுடைய பிடிவாதத்தைப் பார்த்த பிறகு அவள் பேசாமலிருந்தாள். இவான் குஸ்மீச்சை எப்பொழுதாவது என்னுடைய வேலையின் நிமித்தமாக மட்டுமே சந்திப்பேன். அவ்வளவுதான். ஷ்வாப்ரினை மிகவும் அபூர்வமாகத்தான் பார்த்தேன். அப்படிச் சந்திக்கும் சமயங்களில் எனக்கு அதிகமான வெறுப்பு ஏற்படும். ஏனென்ருல் அவர் என்னை இரகசியமாக வெறுப்பது போல எனக்குத் தோன்றியது. இதனுல் அவர் மீது எனக்கிருந்த சந்தேகங்களும் உறுதிப்பட்டன. வாழ்க்கை எனக்கு மிகவும் வேதனையாக இருந்தது. எப்பொழுதும் தனியாக உட்கார்ந்து வருத்தப்பட்டுக் கொண்டிருக்க ஆரம்பித்தேன். என்னுடைய சோகமான சிந்தனைகளை எனக்கிருந்த ஓய்வும் தனிமையும் அதிகப்படுத்தின. என்னுடைய தனிமையில் காதல் கொழுந்து விட்டெரிந்தது; அது படிப்படியாக வளர்ந்து மாபெரும் சுமையாக என்னை அழுத்தியது. படிப்பது, கவிதைகள் எழுதுவது போன்றவற்றில் முன்பு எனக்கிருந்த ஆர்வம் மறைந்து விட்டது. என் மனச் சோர்வு அதிகரித்தது. எனக்குப் பைத்தியம் பிடிக்கும் அல்லது குடிகாரனுக மாறி விடுவேன் என்று பயந்தேன். அப்பொழுது திடீரென்று நடைபெற்ற சம்பவங்கள் எனக்குப் பலமான அதிர்ச்சியைக் கொடுத்தன. ஆனுல் அவை எனக்கு நன்மையைத் தந்து என் வாழ்க்கை முழுவதையுமே மாற்றின.

# அத்தியாயம் ஆறு

## புகச்சோவின் கலகம்

*இளைஞர்களே! கேளுங்கள்*
*வயதான எங்களுடைய வார்த்தைகளை.*

**பழம் பாடல்**[52]

*நான் நேரில் கண்ட பல விசித்திரமான சம்பவங்களை வர்ணிப்பதற்கு முன்பாக 1773ம் வருடத்தின் இறுதியில் ஓரென்புர்க் வட்டாரத்தில் இருந்த நிலைமைகளைப் பற்றி சில வார்த்தைகள் எழுதுவது அவசியம் என்று நினைக்கிறேன்.*

*இந்த வட்டாரம் மிகப் பெரியதாகவும் செல்வம் கொழிக்கும் பகுதியாகவும் இருந்தது. இங்கே நெடுங்காலமாக வசித்து வருகின்ற மக்கள் பாதிக் காட்டு மிராண்டிகளாகவே இருந்தனர். அவர்கள் மிகச் சமீப காலத்தில்தான் தங்கள் வட்டாரத்தில் ருஷ்ய ஜார் சக்கரவர்த்திகளின் ஆட்சியை ஏற்றுக் கொண்டிருக்கின்றனர். ஆனால் அவர்கள் சட்டங்களுக்கும் சமூக வாழ்க்கைக்கும் பழக்கப்படாதவர்கள்; அளவுக்கு மீறிய துணிச்சலும் குரூரமான பழக்கங்களும் கொண்டவர்கள். அவர்கள் அடிக்கடி அரசாங்கத்தை எதிர்த்துக் கலகம் செய்தார்கள். எனவே அவர்களைக் கட்டுப்படுத்துவதற்காக அரசாங்கம் அவர்களைத் தொடர்ச்சியாகக் கண்காணிப்பது மிகவும் அவசியமாக இருந்தது. முக்கியமான இடங்களில் எல்லாம் கோட்டைகள் கட்டப்பட்டன; யாயிக் நதிக் கரை ஓரத்தில் நெடுங்காலமாக வாழ்ந்து வருகின்ற கஸாக்குகள் பெரும்பாலும் இக்கோட்டைகளில் குடியமர்த்தப்பட்டனர். ஆனால் இந்தப் பிரதேசங்களில் அமைதியையும் பாதுகாப்பையும் கண்காணிக்க வேண்டிய யாயிக் கஸாக்குகள், தாங்களே அதிருப்தியடைந்த பிரஜைகளாக மாறினர். அவர்களால் அரசாங்கத்துக்கு ஆபத்து ஏற்படக் கூடிய நிலைமைகள் உருவாயின. 1772ம் வருடத்தில் மேஜர்-ஜெனரல் த்ரவுபேன்பெர்க் அந்தத் துருப்புக்*

களைக் கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவருவதற்காக எடுத்த கடுமையான நடவடிக்கைகளின் விளைவாக அவர்களுடைய முக்கியமான கோட்டையில் கலகம் ஏற்பட்டது. கலகக்காரர் கள் த்ரவுபேன்பெர்க்கை மிகக் கொடுமையாகக் கொலை செய்துவிட்டு[53] கஸாக் நிர்வாக அமைப்பிலும் விருப்பம் போல மாற்றங்களைச் செய்து கொண்டனர். கடைசியில், அந்தக் கலகம் ஒடுக்கப்பட்டது; கலகக்காரர்கள் காட்டு மிராண்டித் தனமாக தண்டிக்கப்பட்டுப் பழிவாங்கப்பட் டனர்.

இந்தச் சம்பவங்கள் நான் பெலகோர்ஸ்க் கோட்டைக்கு வருவதற்குச் சிறிது காலத்திற்கு முன்பு நடைபெற்றவை யாகும். நான் வந்த பொழுது எல்லாம் அமைதியாக இருந் தது; அல்லது அமைதியாக இருப்பது போலத் தோன்றியது. கலகக்காரர்கள் திருந்தி விட்டதாகச் சொல்லப்பட்டது; அதிகாரிகளும் இதை எளிதாக நம்பினார்கள். ஆனால் சூழ்ச்சி மிகுந்த கலகக்காரர்கள் பழிவாங்க வேண்டுமென்று இரக சியமான திட்டங்களை உருவாக்கிச் கொண்டிருந்தனர். மறு படியும் கலகம் செய்வதற்குச் சரியான சந்தர்ப்பத்தை எதிர் பார்த்துக் காத்துக் கொண்டிருந்தனர்.

நான் கதையைத் தொடர்கிறேன்.

ஒரு நாள் மாலை நேரத்தில் (1773ம் வருடம் அக்டோபர் மாதத்தின் ஆரம்பத்தில்) நான் என்னுடைய அறையில் தனியாக உட்கார்ந்து இலையுதிர் காலக் காற்று ஊளையிடு வதைக் கேட்டுக் கொண்டிருந்தேன். வானத்தில் மேகங்கள் நிலாவைக் கடந்து போய்க் கொண்டிருந்தன. அந்தக் காட்சி யை சன்னல் வழியாகப் பார்த்துக் கொண்டிருந்தேன். அப் பொழுது தளகர்த்தர் என்னைக் கூப்பிடுவதாக யாரோ வந்து சொன்னார்கள். நான் உடனே அவருடைய வீட்டுக்குப் புறப்பட்டேன். அங்கே ஷ்வாப்ரின், இவான் இக்னாத்தியெவிச், கஸாக் சார்ஜென்ட் ஆகியோர் உட்கார்ந்திருந்தனர். வசி லீசா யெகோரவ்னாவையும், மார்யா இவானவ்னாவையும் அங்கே காணவில்லை. தளகர்த்தர் ஏதோ நினைவுகளில் மூழ்கியபடி என்னை வாருங்கள் என்றார். பிறகு அவர் அறைக் கதவைத் தாளிட்டுவிட்டு எங்களை உட்காருமாறு கேட்டுக் கொண்டார். கஸாக் சார்ஜென்ட் மட்டும் கதவின் அருகே நின்று கொண்டிருந்தான். தளகர்த்தர் தம் பையிலிருந்து

ஒரு கடிதத்தை எடுத்தார். ''அதிகாரிகளே! நமது ஜெனரல் மிகவும் முக்கியமான தகவலை அனுப்பியிருக்கிறார். அதைப் படிக்கிறேன்'' என்று சொல்லிவிட்டு, மூக்குக் கண்ணாடியை மாட்டிக் கொண்டு, அந்தக் கடிதத்தை உரக்கப் படித்தார்:

''பெலகோர்ஸ்க் கோட்டையின்
தளகர்த்தர் காப்டன் மிரோனவ்
அவர்களுக்கு.
'' மி க வு ம் இ ர க சி ய ம ா ன து!

''டான் கஸாக்கும் கலகக்காரனுமான யெமெல்யான் புகச்சோவ் சமீபத்தில் சிறையிலிருந்து தப்பியோடி, சட்ட விரோதமான கும்பலைச் சேர்த்துக் கொண்டு, யாயிக் கிராமப் பகுதிகளில் கிளர்ச்சிகளைத் தூண்டி வருகிறான். பல இடங் களில் கொலை செய்து கொள்ளையடித்திருப்பதோடு நம் கோட்டைகள் சிலவற்றையும் கைப்பற்றித் தரைமட்டமாக்கி யிருக்கிறான். இவற்றோடு நில்லாமல் காலஞ்சென்ற மூன்றாம் பீட்டர் சக்கரவர்த்தியின் பெயரைத் தனக்குச் சூட்டிக் கொண்டிருக்கிறான். இந்தத் திமிரான செயலை நாம் ஒரு போதும் மன்னிக்க முடியாது. இந்த உத்தரவு கிடைத்த வுடன் பாசாங்குக்காரனும் குற்றவாளியுமான யெமெல்யான் புகச்சோவ் உங்கள் பாதுகாப்பிலிருக்கும் கோட்டையைத் தாக்கினால் அதற்குத் தேவையான எதிர்நடவடிக்கைகளை எடுப்பதோடு—முடியுமானால் அவனை ஒழிக்க வேண்டுமென் றும்—காப்டனுக்கு ஆணையிடுகிறோம்.''

''தேவையான எதிர்நடவடிக்கைகளைச் செய்ய வேண் டும்!'' தளகர்த்தர் கடிதத்தை மடித்து வைத்து விட்டுத் தம் மூக்குக் கண்ணாடியைக் கழற்றியபடியே இந்த வார்த் தைகளைத் திருப்பிச் சொன்னார். ''சொல்வது எளிது; செய் வது கடினம். அந்தப் போக்கிரிக்கு நல்ல பலம் சேர்ந்து விட் டது. நம்மிடம் நூற்றுமுப்பது பேர்கள்தான் இருக்கிறார் கள். கஸாக்குகளை நம்ப முடியாதென்பதால் நான் அவர் களைக் கணக்கில் சேர்க்கவில்லை. மக்சீமிச்! நான் உன்னைச் சொல்லவில்லை.'' (சார்ஜென்ட் சிரித்தான்.) ''நண்பர்களே! நாம் தீவிரமான நடவடிக்கைகளை எடுப்பது அவசியம். காவல், இரவில் ரோந்து போவது ஆகிய கடமைகளை மற்ற

வர்களுக்கு முன்மாதிரியாகச் செய்யுங்கள். கோட்டை மீது தாக்குதல் ஏற்பட்டால் உடனே கோட்டைக் கதவைப் பூட்டுங்கள்; படைவீரர்களுக்கு உஷார் என்று அறிவியுங்கள். மக்சீமிச்! நீ மற்ற கஸாக்குகளை நன்றாக கவனித்து வா. பீரங்கியை சரிவர சுத்தம் செய்யச் சொல். எல்லாவற்றுக்கும் மேலாக இங்கே பேசிய விஷயங்களை இரகசியமாக வைத்துக் கொள். கோட்டையில் வேறு யாருக்கும் இது தெரியக் கூடாது'' என்றார்.

இந்த உத்தரவுகளைக் கொடுத்துவிட்டு இவான் குஸ்மீச் எங்களை அனுப்பி வைத்தார். நானும் ஷ்வாப்ரினும், அங்கே தெரிவிக்கப்பட்ட விஷயத்தைப் பற்றி விவாதித்தபடியே வெளியே வந்தோம். ''இது எப்படி முடியும் என்று நினைக்கிறீர்கள்?'' என்று அவரைக் கேட்டேன். ''கடவுளுக்குத் தான் தெரியும். பார்ப்போம். இது வரை நம்மிடம் குறிப்பாக எதையும் சொல்லவில்லை. ஆனால்....'' இந்த இடத்தில் அவர் பேச்சை நிறுத்திவிட்டு ஞாபக மறதியாக ஒரு பிரெஞ்சுப் பாட்டை சீட்டியடிக்க ஆரம்பித்தார்.

நாங்கள் மிகவும் எச்சரிக்கையாக நடந்து கொண்ட போதிலும் புகச்சோவ் வரப் போகும் செய்தி கோட்டைக்குள் எப்படியோ பரவியது. இவான் குஸ்மீச் தன்னுடைய மனைவி சொன்னபடிக் கேட்பவர் என்ற போதிலும் ஒரு முக்கியமான இராணுவ இரகசியத்தை அவளிடம் ஒருபோதும் தெரிவிக்கக் கூடியவர் அல்ல. அந்தக் காரியத்தைச் செய்யுமாறு உலகத்தில் எந்தச் சக்தியும் அவரை நிர்ப்பந்திக்க முடியாது. ஜெனரலிடமிருந்து கடிதம் வந்ததும் அவர் மிகவும் சாமர்த்தியமாக வசிலீசா யெகோரவ்னாவை வெளியே அனுப்பி விட்டார். கெராசிம் பாதிரியாருக்கு ஓரென்புர்கிலிருந்து ஏதோ அதிசயமான செய்தி வந்திருக்கிறது; ஆனால் அவர் அதை இரகசியமாக வைத்திருக்கிறார் என்று தம் மனைவியிடம் சொன்னார். உடனே பாதிரியாரின் மனைவியைப் பார்க்கப் போவதென்று வசிலீசா யெகோரவ்னா முடிவு செய்தாள். மாஷா தனியே இருக்க வேண்டாம்; அவளையும் உன்னோடு கூட்டிக் கொண்டு போ என்று இவான் குஸ்மீச் மனைவியிடம் சொன்னார்.

இப்பொழுது அந்த வீட்டில் இவான் குஸ்மீச் மட்டுமே இருந்தார். அவர் உடனே எங்களைக் கூட்டி வரச் சொன்னார்.

நாங்கள் பேசுவதை பலாஷ்கா கேட்கக் கூடாதென்பதற்காக அவளை ஒரு சிறு அறையில் போட்டுப் பூட்டி விட்டார்.

வசிலீசா யெகோரவ்னு பாதிரியார் மனைவியிடமிருந்து எந்தத் தகவலும் கிடைக்காமல் ஏமாற்றத்தோடு வீட்டுக்குத் திரும்பியவுடன் இவான் குஸ்மீச் பலாஷ்காவை ஒரு சிறு அறையில் போட்டுப் பூட்டிவிட்டுத் தம் அதிகாரிகளோடு யுத்தத்தைப் பற்றி ஆலோசனை நடத்தினுர் என்பதைக் கேள்விப்பட்டாள். தன் கணவர் தன்னை ஏமாற்றி விட்டார் என்பது தெரிந்ததும் அவரைக் குறுக்கு விசாரணை செய்தாள். ஆனுல் இவான் குஸ்மீச் இதை எதிர்பார்த்தார். அவருடைய வாழ்க்கைத் துணைவி எல்லாவற்றையும் துருவித் துருவிக் கேட்கும் இயல்புடையவள். எனவே அவளுடைய கேள்விகளுக்குச் சிறிதும் பதட்டமில்லாமல் உற்சாகத்தோடு பதிலளித்தார். ''கோட்டையிலிருக்கும் பெண்கள் வீட்டில் அடுப்பெரிக்க வைக்கோலைப் பயன்படுத்துவதாகக் கேள்விப்பட்டேன். அது மிகவும் ஆபத்தானதாயிற்றே. அதனுல் இனிமேல் அடுப்பெரிக்க வைக்கோலை உபயோகிக்கக் கூடாது; விறகையும் சுள்ளிகளையும் தான் உபயோகிக்க வேண்டும் என்று கண்டிப்பான உத்தரவு கொடுத்தேன்'' என்றுர். ''அப்படியானுல் அவளை ஏன் பூட்டி வைத்தீர்கள்? அந்த இருட்டறையில் ஏன் பலாஷ்காவைப் பூட்டி வைத்தீர்கள்?'' என்று அவள் விடாமல் கேட்டாள். இவான் குஸ்மீச் இந்தக் கேள்வியை எதிர்பார்க்காத காரணத்தால் ஏதோ ஒரு பதிலை முணுமுணுத்தார். வசிலீசா யெகோரவ்னுவுக்குத் தன்னுடைய கணவர் மழுப்புகிறுர் என்பது புரிந்தது. அவரிடமிருந்து உண்மையைப் பிடுங்க முடியாது என்று புரிந்து கொண்டு கேள்வி கேட்பதை நிறுத்தினுள். அக்குலீனு பம்பீலவ்னு புது மாதிரியாகத் தயாரிக்கும் வெள்ளரிக்காய் ஊறுகாய் பற்றிப் பேச ஆரம்பித்தாள். அன்றிரவு முழுவதும் அவளால் தூங்க முடியவில்லை. தன் கணவருக்குத் தெரிந்த விஷயம் தனக்குத் தெரியக் கூடாதென்றுல் அது என்னவாக இருக்கும் என்று யோசித்துக் கொண்டிருந்தாள்.

மறு நாள் காலையில் மாதாகோவிலிலிருந்து திரும்புகிற பொழுது இவான் இக்னுத்தியெவிச் பீரங்கியில் சிறுவர்கள் திணித்து வைத்த கல், கந்தைத் துணி, மரக் கட்டை, எலும்புத் துண்டுகள் மற்றும் எல்லாவிதமான குப்பைகளையும்

வெளியே எடுத்து அதை சுத்தம் செய்து கொண்டிருப்பதைப் பார்த்தாள். ''இந்த ராணுவத் தயாரிப்புகளுக்கு என்ன அர்த்தம்? கிர்கீஸியர்கள் படையெடுக்கலாம் என்று எதிர் பார்க்கிறார்களா? இவ்வளவு சாதாரணமான விஷயத்தை இவான் குஸ்மீச் என்னிடமிருந்து மறைக்க மாட்டாரே'' என்று அவள் வெகு நேரம் யோசித்தாள். அவளுடைய தணியாத ஆவலைத் தூண்டிக் கொண்டிருக்கும் விஷயத்தை எப்படியாவது தெரிந்து கொள்ள வேண்டும் என்று உறுதி யாக முடிவு செய்தாள். உடனே இவான் இக்னாத்தியெவிச் சைக் கூப்பிட்டாள்.

நீதிபதி விசாரணையைத் தொடங்கும் பொழுது சம்பந்த மில்லாத கேள்விகளைக் கேட்டு அந்த நபரின் கவனத்தைத் திருப்ப முயல்வார். பிறகு திடீரென்று முக்கியமான கேள் வியைச் கேட்டு மடக்கி விடுவார். அது போல, வசிலீசா யெகோரவ்னா சற்று நேரம் குடும்ப சமாசாரங்களைப் பேசிக் கொண்டிருந்தாள். பிறகு ஒரு விநாடி மௌனமாக இருந்து விட்டு நீண்ட பெருமூச்சு விட்டாள். ''கடவுளே! கடவுளே! சேதி தெரியுமா? இதெல்லாம் எப்படி முடியப் போகிறதோ?'' என்று தலையைப் பலமாக ஆட்டியபடியே சொன்னாள்.

''கவலைப்படாதீர்கள், அம்மையாரே! கடவுள் இரக்கம் நிறைந்தவர். நம்மிடம் ஏராளமான போர்வீரர்கள் இருக் கிறார்கள்; போதுமான வெடிமருந்து இருக்கிறது. நான் பீரங்கியை நன்றாக சுத்தம் செய்து விட்டேன். புகச்சோவின் மூக்குதலை முறியடித்து விடலாம் என்று நம்புவோம். கடவுளின் கருணை இருக்கும் பொழுது நமக்கு எந்த ஆபத்தும் வராது'' என்று இவான் இக்னாத்தியெவிச் பதில் அளித்தார்.

''இந்த புகச்சோவ் என்பவன் யார்?'' என்று அவள் கேட்டாள்.

இப்பொழுது இவான் இக்னாத்தியெவிச் நாக்கைக் கடித்துக் கொண்டார். ஏனென்றால் அவர் தன்னையறியாமல் உண்மையைச் சொல்லி விட்டார். ஆனால் இனிமேல் நாக்கைக் கடித்துப் பயனுண்டா? வசிலீசா யெகோரவ்னா தான் யாரிடமும் சொல்ல மாட்டேன் என்று சத்தியம் செய்து அவரிடமிருந்து எல்லா விவரங்களையும் தெரிந்து கொண் டாள்.

வசிலீசா யெகோரவ்னா தன்னுடைய சத்தியத்தைக் காப்

பாற்றினுள். பாதிரியார் மனைவியைத் தவிர, வேறு யாரிடமும் ஒரு வார்த்தை கூடச் சொல்லவில்லை. பாதிரியார் வீட்டுப் பசு கோட்டைக்கு வெளியே மேயப் போகும். அதைப் போக்கிரிகள் பிடித்துவிடக் கூடாது என்பதால் ஜாக்கிரதையாக இருக்கும்படி அவளிடம் மட்டும் சொன்னுள்.

வெகு சீக்கிரத்தில் எல்லோரும் புகச்சோவைப் பற்றியே பேசிக் கொண்டிருந்தார்கள். பலவிதமான வதந்திகள் வேகமாகப் பரவின. தளகர்த்தர் கஸாக் சார்ஜென்டைப் பக்கத்துக் கிராமங்களுக்கும் கோட்டைகளுக்கும் சென்று விவரங்களைச் சேகரித்து வருமாறு அனுப்பினுர். மக்சீமிச் இரண்டு நாட்களுக்குப் பிறகு திரும்பி வந்தான். கோட்டையிலிருந்து அறுபது வெர்ஸ்டாக்கள் தூரத்தில் ஸ்டெப்பியில் ஏராளமான நெருப்புகளைப் பார்த்ததாகக் கூறினுன். மேலும் அதிக அளவில் எதிரிப் படைகள் இருப்பதாக பஷ்கீரியர்கள் தெரிவித்ததாகவும் சொன்னுன். எனினும் ஆபத்து ஏற்படலாம் என்ற பயத்தில் அவன் எதிரிகளை நெருங்காததால் அவர்களைப் பற்றி திட்டவட்டமாகச் சொல்ல முடியவில்லை·

கோட்டைக்குள் இருந்த கஸாக்குகள் மத்தியில் என்றுமே இல்லாத பரபரப்பு நிலவியது. எங்கு பார்த்தாலும் அவர்கள் கூட்டம் கூட்டமாக நின்று கொண்டு தணிந்த குரலில் பேசிக் கொண்டிருந்தார்கள். எப்பொழுதாவது போர்வீரன் வருவதைப் பார்த்தால் மட்டும் கலைந்து சென்ருர்கள். தளகர்த்தர் அவர்களிடம் பேசுமாறு ஒற்றர்களை அனுப்பினுர். யுலாய் என்ற பெயருடைய மதம் மாறிய கல்மீக் ஒற்றன் முக்கியமான தகவலைத் தெரிந்து கொண்டு வந்து தளகர்த்தரிடம் சொன்னுன். கஸாக் சார்ஜென்ட் பொய்யான தகவல்களைக் கொடுத்ததாக யுலாய் தெரிவித்தான். கிராமங்களிலிருந்து திரும்பியதும் கலகக்காரர்களின் முகாமுக்குத் தான் போனதாகவும் அவர்களுடைய தலைவரைச் சந்தித்த பொழுது அவருடைய கையை முத்தமிட அவர் அனுமதி கொடுத்ததாகவும் அவரோடு நீண்ட நேரம் பேசிக் கொண்டிருந்ததாகவும் அந்த வஞ்சகமான கஸாக் தன்னுடைய தோழர்களிடம் சொல்லியிருக்கிருன். தளகர்த்தர் இதைக் கேட்டதும் சார்ஜென்டைக் கைது செய்து பாதுகாவலில் வைத்துவிட்டு அவனுடைய இடத்துக்கு யுலாயை நியமித்தார். இந்தச் செய்தி கஸாக்குகளிடம் அதிருப்தியை ஏற்படுத்தியிருக்க

வேண்டும். அவர்கள் தங்களுடைய கோபத்தைப் பகிரங்க மாகவே வெளிப்படுத்தினார்கள். தளகர்த்தரின் உத்தரவை இவான் இக்னாத்தியெவிச் நிறைவேற்றும் பொழுது, ''கோட்டைப் பெருச்சாளியே! நாளைக்கு உனக்கு இதே கதி!'' என்று அவர்கள் உரக்கக் கத்தியதைக் கேட்டிருக்கிறார். சிறை வைக்கப்பட்ட சார்ஜென்டை அதே நாளன்று விசாரணை செய்யலாம் என்று தளகர்த்தர் நினைத்திருந்தார். ஆனால் அந்த சார்ஜென்ட் வெளியிலே இருந்த அனுதாபிகளின் உதவியோடு சாமர்த்தியமாகத் தப்பி விட்டான்.

மற்றொரு சம்பவமும் தளகர்த்தருக்க அதிகமான கவலையைத் தந்தது. கலகங்களைத் தூண்டிவிடக் கூடிய பிரசுரங்களை வைத்துக் கொண்டிருந்ததற்காக ஒரு பஷ்கீரியன்[54] கைது செய்யப்பட்டிருந்தான். இந்த சம்பவத்துக்குப் பிறகு தளகர்த்தர் அதிகாரிகளின் கூட்டத்தை மறுபடியும் நடத்த விரும்பினார். இம்முறையும் ஏதாவது ஒரு சாக்குச் சொல்லி வசிலீசா யெகோரவ்னாவை வெளியே அனுப்பிவிட முயற்சி செய்தார். ஆனால் இவான் குஸ்மீச் உலகத்திலேயே அதிகமான நேர்மையும் உண்மையும் கொண்டவர். எனவே சென்ற தடவை கையாண்ட வழியைத் தவிர வேறு புதிதாக எதுவும் அவருக்குத் தோன்றவில்லை.

''வசிலீசா யெகோரவ்னா!'' என்று தொண்டையைச் செறுமிக்கொண்டு அவளைக் கூப்பிட்டார். ''கெராசிம் பாதிரியாருக்கு ஏதோ முக்கியமான தகவல் கிடைத்திருப்பதாகச் சொன்னார்கள்....'' என்று ஆரம்பித்தார். ''இவான் குஸ்மீச்! போதும். ஏன் இப்படிப் பொய் சொல்கிறீர்கள்? என்னை வெளியே விரட்டிவிட்டு நீங்கள் யெமெல்யான் புகச்சோவ் பற்றி அதிகாரிகளோடு கலந்து பேச விரும்புகிறீர்கள். இந்தத் தடவை நான் ஏமாற மாட்டேன்!'' என்று அவள் குறுக்கிட்டுச் சொன்னாள். இவான் குஸ்மீச் கண்களை அகலமாகத் திறந்தார். ''அன்பே! உனக்கு ஏற்கெனவே தெரியும் போல இருக்கிறது. அப்படியானால் நீ இங்கேயே இருக்கலாம். உனக்கு முன்பாகவே நாங்கள் விவாதிக்கிறோம்'' என்றார். ''அதுதான் சரி. மற்றவர்களை ஏமாற்றும் வித்தை உங்களுக்குத் தெரியாது. அதிகாரிகளைக் கூப்பிடுங்கள்'' என்றாள்.

நாங்கள் மறுபடியும் அங்கே கூடினோம். இவான் குஸ்மீச்

தன் மனைவியின் முன்னிலையில் புகச்சோவ் வெளியிட்டிருக்கும் அறிவிப்பை வாசித்தார். அதை யாரோ ஒரு அரை குறைஞானமுள்ள கஸாக் எழுதியிருக்க வேண்டுமென்று தோன்றியது. எங்கள் கோட்டைக்குள் உடனே நுழையப் போவதாகவும், கஸாக்குகளும் படைவீரர்களும் தன்னோடு சேர்ந்து விடுமாறும் அந்தப் போக்கிரி கேட்டுக் கொண்டிருந்தான். அதிகாரிகள் எதிர்த்தால் அவர்களுடைய உயிருக்கு ஆபத்து என்றும் எச்சரிக்கை செய்திருந்தான். அந்த அறிவிப்பு, நயமில்லாத ஆனால் ஆணித்தரமான சொற்களில் எழுதப்பட்டிருந்தது. அதை சாதாரண மக்கள் படிக்கும் பொழுது அவர்களுடைய மனங்களில் ஆபத்தான விளைவை நிச்சயமாக ஏற்படுத்தும்.

''போக்கிரிப் பயல்! என்ன தைரியம்! நமக்கே எச்சரிக்கை கொடுக்கிறானே! அவனைப் போய்ப் பார்த்து நம்முடைய கொடிகளை அவன் காலடியில் போடுவோம் என்று எதிர் பார்க்கிறானா? கெட்ட நாய்! நாற்பது வருஷ காலம் இராணுவத்தில் சேவை செய்தவர்களுக்கு ஒன்றும் தெரியாது என்று நினைக்கிறானா? தளகர்த்தர்கள் இந்த முரடனுக்கு பயப்படுவார்கள் என்று நினைக்கிறானா?'' என்றாள் வசிலீசா யெகோரவ்னா.

''அம்மாதிரி பயப்படக் கூடிய தளகர்த்தர்கள் யாருமில்லை. ஆனால் எதிரி ஏற்கெனவே பல கோட்டைகளைக் கைப் பற்றி விட்டதாகச் சொல்கிறார்களே'' என்றார் இவான் குஸ்மீச்.

''அவனிடம் உண்மையிலேயே பலமிருக்கிறது என்று தோன்றுகிறது'' என்றார் ஷ்வாப்ரின்.

''அவன் பலம் எவ்வளவு என்பதை விரைவில் கண்டு பிடித்துவிடலாம். வசிலீசா யெகோரவ்னா! களஞ்சியத்தின் சாவியைக் கொடு. இவான் இக்னாத்தியெவிச்! அந்த பஷ்கீரியனை இங்கே இழுத்து வா. யுலாயிடம் சவுக்கைக் கொண்டு வருமாறு சொல்'' என்றார் தளகர்த்தர்.

''இவான் குஸ்மீச்! சற்றுப் பொறுங்கள். மார்யா இவானவ்னாவை வெளியே போகச் சொல்லி விடுகிறேன். அவனுடைய ஓலத்தைக் கேட்டால் அவள் பயந்து விடுவாள். உண்மையைச் சொல்ல வேண்டுமானால், எனக்கும் இதைப்

பார்க்கப் பிடிக்காது. நான் போய் வருகிறேன்'' என்று சொல்லிவிட்டு அவள் எழுந்தாள்.

சென்ற காலத்திய விசாரணைகளில் குற்றம் சாட்டப்பட்டவர்களைச் சித்திரவதை செய்வது ஒரு முக்கியமான அங்கமாக இருந்தது. அதனால் பிற்காலத்தில் அது ஒழிக்கப்பட்ட போதிலும் அந்தக் கருணை மிக்க உத்தரவை யாரும் பின்பற்றவில்லை. குற்றம் சாட்டப்பட்ட ஒருவனைத் தண்டிப்பதற்கு அவன் தன்னுடைய குற்றத்தை ஒத்துக் கொள்வது அவசியம் என்று கருதப்பட்டது. இந்த எண்ணம் அர்த்தமற்றது என்பது மட்டுமல்லாமல் சரியான நீதி இயல் கோட்பாடுகளுக்கும் புறம்பானதாகும். ஏனென்றால் குற்றம் சாட்டப்பட்ட ஒருவன் நான் அந்தக் குற்றத்தைச் செய்யவில்லை என்று சொல்லும் பொழுது உடனே அவன் நிரபராதி என்ற முடிவுக்கு யாரும் வருவதில்லை. அப்படியானால் அவன் குற்றத்தை ஒத்துக் கொள்வதை மட்டும் அடிப்படையாகக் கொண்டு அவன் குற்றவாளியே என்ற முடிவுக்கு வருவது எப்படிச் சரியாகும்? சித்திரவதை செய்கின்ற காட்டுமிராண்டித் தனமான பழக்கம் ஒழிக்கப்பட்டது சரியல்ல என்று வாதாடுகின்ற சில வயதான நீதிபதிகளை நான் இன்றைக்கும் சந்திக்கிறேன். அந்தக் காலத்தில் சித்திரவதை செய்வது முறைதானா என்ற கேள்வியை நீதிபதிகளும் எழுப்பவில்லை; குற்றம் சாட்டப்பட்டுச் சித்திரவதை செய்யப்பட்டவர்களும் எழுப்பவில்லை. எனவே தளகர்த்தரின் ஆணை அங்கேயிருந்தவர்களிடம் சிறிதும் அமைதிக் குலைவையோ, அல்லது ஆச்சரியத்தையோ ஏற்படுத்தவில்லை. இவான் இக்நத்தியெவிச் தளகர்த்தர் மனைவியிடம் சாவியை வாங்கிக் கொண்டு, பஷ்கீரியனை இழுத்து வருவதற்காகக் களஞ்சியத்தை நோக்கிச் சென்றார். சில நிமிடங்களுக்குப் பிறகு அந்தக் கைதியைக் கூட்டிக் கொண்டு திரும்பினார். தளகர்த்தரின் உத்தரவுக்குப் பிறகு அந்தக் கைதியை அறைக்குள் கொண்டு வந்தார்.

அந்த பஷ்கீரியனின் கால்களில் கொண்டி போடப்பட்டிருந்ததால் அவன் மிகுந்த சிரமத்தோடு வாயிலைக் கடந்து அறைக்குள் நுழைந்தான். தன் தலையிலிருந்த உயரமான தொப்பியை அகற்றிவிட்டுக் கதவின் அருகில் நின்றான். அவனைப் பார்த்த பொழுது என்னுடைய உடலில் ஓடிக்

கொண்டிருந்த இரத்தம் உறைந்து விட்டது. அந்த மனிதனை நான் என்றைக்கும் மறக்க மாட்டேன். அவன் வயது எழுபதுக்கு மேல் இருக்கும். அவன் மூக்கும் காதுகளும் வெட்டப்பட்டிருந்தன. அவன் தலை மொட்டையடிக்கப்பட்டிருந்தது. அவனுடைய மோவாயில் அங்கொன்றும் இங்கொன்றுமாக வெள்ளை உரோமம் தெரிந்தது. அவன் குட்டையாகவும், மெலிந்த உடலும் வளைந்த முதுகுமாக நின்று கொண்டிருந்தான். ஆனால் சிறு கீற்றுப் போன்ற அவனுடைய கண்களில் இன்னும் நெருப்பின் தணல் தெரிந்தது.

இந்தப் பயங்கரமான அறிகுறிகளிலிருந்து 1741ம் வருடத்தில் ஏற்பட்ட கலகத்தில் ஈடுபட்டதற்காக அவன் தண்டிக்கப்பட்டவன்[55] என்பதை தளகர்த்தர் புரிந்து கொண்டார். ''ஓ! நீ பழைய ஓநாய்தானா? எங்கள் வலைகளில் முன்பே சிக்கியிருக்கிறாயா? உன் மொட்டைத் தலையிலிருந்து நீ முதல் தடவையாகக் கலகம் செய்பவனல்ல என்று தெரிகிறதே. என் கிட்டே வா! உன்னை இங்கே அனுப்பியது யார் என்று சொல்'' என்று தளகர்த்தர் அதட்டினார்.

அந்த பஷ்கீரியக் கிழவன் ஒரு வார்த்தை கூடப் பேசாமல் தளகர்த்தரையே புரியாமல் உற்றுப் பார்த்துக் கொண்டு நின்றான்.

''ஏன் பேசாமலிருக்கிறாய்? உனக்கு ருஷ்ய மொழி புரியாதா? யுலாய்! இவனை நம்முடைய கோட்டைக்கு அனுப்பியது யார் என்று உன்னுடைய மொழியில் கேள்'' என்றார் தளகர்த்தர்.

யுலாய் தளகர்த்தரின் கேள்வியைத் தார்த்தாரிய மொழியில் மொழிபெயர்த்தான். ஆனால் அந்த பஷ்கீரியன் அப்பொழுது முன் மாதிரியே எதுவும் பேசாமல் நின்று கொண்டிருந்தான்.

''சரி. உன்னைப் பேச வைக்கிறேன். அவனுடைய முதுகிலிருக்கும் கோடுபோட்ட துணியை எடுத்துவிட்டு சவுக்கடி கொடுங்கள். யுலாய்! சுடச்சுடக் கொடு!'' என்று தளகர்த்தர் உத்தரவிட்டார்.

இரண்டு வயதான படைவீரர்கள் அவன் உடலில் தொங்கிய சட்டையைக் கழற்றினர். அந்தப் பரிதாபத்துக்குரிய மனிதனின் முகத்தில் இப்பொழுது பயப்படுவதற்குரிய அறிகுறிகள் தென்பட்டன. சிறு குழந்தைகளிடம் அகப்பட்டுக்

கொண்ட பிராணியைப் போல அவன் சுற்றுமுற்றும் பார்த் தான். அங்கேயிருந்த படைவீரர்களில் ஒருவன் அந்தக் கைதி யின் இரண்டு கரங்களையும் தூக்கித் தன்னுடைய தோள் பட்டை மீது வைத்துக் கொண்டு அவனைத் தன் முதுகின் மீது ஏற்றிக் கொண்டான். யுலாய் சவுக்கை எடுத்துச் சொடுக்கிப் பார்த்தான். அந்த நேரத்தில் அந்தக் கைதி தலையைக் குனிந்தபடியே கெஞ்சுவது போல மெல்லிய குரலில் முன கினான். அவன் வாயைத் திறந்த பொழுது நாக்கு வெட்டப் பட்டு அடிப்பகுதி மட்டுமே இருப்பது தெரிந்தது.

என்னுடைய வாழ்நாளில் நடைபெற்ற இந்தச் சம்ப வத்தை நினைத்துப் பார்த்துவிட்டு சக்கரவர்த்தி அலெக் சாந்தரின் அடக்கமான ஆட்சியோடு ஒப்பிடும் பொழுது, கல்வியின் வேகமான வளர்ச்சியையும் மனிதப் பண்பு எங்கும் பரவியிருப்பதையும் நினைத்து ஆச்சரியமடைகிறேன். இளை ஞர்களே! என்னுடைய எழுத்துக்களை நீங்கள் படிக்கும் சந் தர்ப்பம் ஏற்படுமானால் ஒன்றை நினைவில் வைத்துக் கொள் ளுங்கள்: வன்முறையான கொந்தளிப்புக்கள் ஏதுமில்லாமல் ஏற்படுகின்ற ஒழுக்கஞ்சார்ந்த முன்னேற்றமே மிகவும் சிறப் பானது; அதுவே நெடுங்காலம் நிலைத்திருக்கும்.

நாங்கள் இடிவிழுந்தவர்களைப் போல உட்கார்ந்திருந் தோம்.

''சரி. இவனிடமிருந்து உபயோகமுள்ள எந்தத் தகவலை யும் நாம் பெற முடியாது. யுலாய்! இவனைக் களஞ்சியத் துக்குத் திரும்பக் கொண்டுபோ. நண்பர்களே! நாம் வேறு சில விஷயங்களைப் பேச வேண்டும்'' என்றார் தளகர்த்தர்.

நாங்கள் இராணுவ ரீதியில் எங்களுடைய நிலையைப் பற்றிப் பேச ஆரம்பிக்கும் பொழுது திடீரென்று வசிலீசா யெகோரவ்னா அறைக்குள் ஓடி வந்தாள். வேகமாக ஓடி வந்த காரணத்தால் அவளால் மூச்சு விடக் கூட முடியவில்லை. அவள் அதிகமான பரபரப்படைந்திருப்பதற்கான அறிகுறி கள் முகத்தில் தென்பட்டன.

''ஏன் இப்படி வருகிறாய்? என்ன நடத்தது?'' என்று தளகர்த்தர் ஆச்சரியத்தோடு அவளைக் கேட்டார்.

''ஆபத்து! அன்பே! இன்று காலையில் கீழ் ஏரிக் கோட்டை யைக் கைப்பற்றி விட்டார்கள். கெராசிம் பாதிரியாருடைய வேலைக்காரன் அங்கேயிருந்து இப்பொழுதுதான் வந்திருக்

கிறுன். கோட்டை பிடிபட்டதை அவனே பார்த்தாஞம், தளகர்த்தரையும் மற்ற எல்லா அதிகாரிகளேயும் தூக்கில் போட்டு விட்டார்களாம். எல்லாப் படைவீரர்களேயும் கைது செய்து விட்டார்கள். நாம் என்ன செய்வதென்று பேசி முடிப் பதற்குள் அந்தச் காட்டு மிராண்டிகள் இங்கே வந்து விடு வார்கள்'' என்று வசிலீசா யெகோரவ்ஞ தெரிவித்தாள்.

இந்த செய்தியை நான் சிறிதும் எதிர்பார்க்கவில்லே. அதைக் கேட்டதும் எனக்கு வியப்பும் அதிர்ச்சியும் ஏற்பட் டது. கீழ் ஏரிக் கோட்டையின் தளகர்த்தரோடு எனக்கு அறிமுகம் இருந்தது. அவர் அமைதியும் அடக்கமும் நிறைந்த இளேஞர். இரண்டு மாதங்களுக்கு முன்புதான் அவரும் அவ ருடைய இளம் மனேவியும் ஒரென்புர்கிலிருந்து திரும்பும் வழியில் இவான் குஸ்மீச்சின் வீட்டில் தங்கிவிட்டுப் போஞர் கள். கீழ் ஏரிக் கோட்டையிலிருந்து சுமார் இருபத்தைந்து வெர்ஸ்டாக்கள் தூரத்தில் எங்கள் கோட்டை அமைந்திருந் தது. எனவே புகச்சோவின் தாக்குதலே நாங்கள் எந்த நேரத் திலும் எதிர்பார்க்கலாம். அப்படியாஞல் மார்யா இவானவ் ஞவின் கதி என்ன என்று நினேத்த பொழுது என்னுடைய இதயம் வேதனேயால் கனத்தது.

''இவான் குஸ்மீச்! நான் சொல்வதைக் கேளுங்கள். நம் உடலில் கடைசிச் சொட்டு இரத்தம் இருக்கும் வரை கோட்டையைப் பாதுகாப்பது நம் கடமை. அது நமக்குத் தெரியும். ஆஞல் இங்கேயுள்ள பெண்களின் பாதுகாப்பைப் பற்றி நாம் ஏதாவது செய்ய வேண்டும். ஒரென்புர்குக்குச் செல்லும் பாதையில் ஆபத்துக்கள் இல்லேயென்முல் அவர்களே அங்கே அனுப்பி விடுங்கள்; அல்லது அதற்கும் அப்பாலுள்ள பாதுகாப்பான கோட்டைக்கு அனுப்புங்கள். இந்தக் காட்டு மிராண்டிகளின் கைகளில் அவர்கள் சிக்கக் கூடாது'' என்று நான் தளகர்த்தருக்குச் சொன்னேன்.

இவான் குஸ்மீச் தன் மனேவியை நோக்கித் திரும்பிஞர்.

''அன்பே! நான் சொல்வதைக் கேள். இந்தக் கலகக் காரர்களோடு சண்டை முடிவடைகிற வரை உங்களே வேறு எங்காவது அனுப்புவது நல்லதுதானே? நீ என்ன சொல் கிருய்?'' என்று கேட்டார்.

''பிதற்றல்!'' என்று அவள் பதிலளித்தாள். ''துப்பாக்கி குண்டு துளேக்காத கோட்டை எங்காவது உண்டா? பெல

கோர்ஸ்க் கோட்டையில் பாதுகாப்பு இல்லை என்று ஏன் நினைக்கிறீர்கள்? இங்கே இருபத்திரண்டு வருடங்கள் வாழ்ந்து விட்டோம். அது கடவுளுக்கே தெரியும், பஷ்கீரியர்களையும் கிர்கீஸியர்களையும் பார்த்து விட்டோம். இப்பொழுது புகச்சோவ். அவன் சுடுகாட்டுக்குப் போன பிறகும் நாம் இருப்போம்'' என்றாள்.

''அன்பே! அப்படியானால் நல்லது'' என்றார் இவான் குஸ்மீச். ''இந்தக் கோட்டை மீது உனக்கு நம்பிக்கை இருந்தால் நீ இங்கேயே இருக்கலாம். ஆனால் மாஷாவை என்ன செய்வது? நாம் அவனைத் தோற்கடித்தால் அல்லது நமக்கு உதவிப் படைகள் வருமானால் நல்லதே. ஆனால் கோட்டையை எதிரி கைப்பற்றி விட்டால்?'' என்று கேட்டார்.

''அப்படியானால்...'' வசிலீசா யெகோரவ்னா மிகுந்த பரபரப்போடு தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டு பேச்சைப் பாதியில் நிறுத்திக் கொண்டாள்.

''இல்லை, வசிலீசா யெகோரவ்னா!'' என்று தளகர்த்தர் தொடர்ந்து பேசினார். அவருடைய வாழ்க்கையில் முதல் தடவையாகத் தன் மனைவி தன்னுடைய வார்த்தைகளுக்கு முக்கியத்துவமளித்து ஊன்றிக் கேட்பதைப் பார்த்தார். ''மாஷா இங்கே இருப்பது சரியல்ல. அவளை ஓரென்புர்குக்கு அவளுடைய ஞானத்தாயிடம் அனுப்பி விடலாம். அங்கே அதிகமான படைகளும் பீரங்கிகளும் இருக்கின்றன. கற்களால் கட்டப்பட்ட கோட்டை இருக்கிறது. நீயும் அவளோடு போவது மிகவும் நல்லது என்று நினைக்கிறேன். நீ வயதான கிழவி தான். ஆனால் அவர்கள் புயலைப் போல வந்து கோட்டையைக் கைப்பற்றி விட்டால் உன்னுடைய நிலைமை என்னவாகும் என்று யாரால் சொல்ல முடியும்?'' என்றார்.

''அப்படியே செய்யலாம்'' என்று வசிலீசா யெகோரவ்னா ஒத்துக் கொண்டாள். ''மாஷாவை அனுப்பி விடுவோம். ஆனால் நானும் போக வேண்டும் என்று சொல்லாதீர்கள். நான் போக மாட்டேன். வயதான காலத்தில் உங்களை விட்டுப் பிரிந்து முன் பின் தெரியாத இடத்தில் அனாதையாகச் சாவதற்கு எனக்கு விருப்பமில்லை. நாம் ஒன்றாக வாழ்ந்தது போலவே ஒன்றாகச் சாவோம்'' என்றாள்.

''அப்படியானால் சரி'' என்றார் தளகர்த்தர். ''தாமதம் சிறிதும் கூடாது. நீ போய் மாஷாவைப் பிரயாணத்துக்குத்

தயார் செய். நாளை அதிகாலையில் அவளை அனுப்பி வைப்போம். நம்மிடமிருக்கும் படை வீரர்களில் சிலரைக் கூட இதற்கு ஒதுக்க முடியாத நிலைதான். இருந்தாலும் அவளுக்குப் பாதுகாப்பும் அவசியம். மாஷா எங்கேயிருக்கிறாள்?'' என்று கேட்டார்.

''அவள் அக்குலீனா பம்பீலவ்னாவின் வீட்டுக்குப் போயிருக்கிறாள். கீழ் ஏரிக் கோட்டையை எதிரிகள் கைப்பற்றி விட்டார்கள் என்று கேட்டதிலிருந்து அவளுக்கு மனம் சரியில்லை. ஒருவேளை அவளுக்கு உடல் நிலை சரியில்லாமலிருக்கலாம். கடவுளே! இப்படியும் ஒரு காலம் வரலாமா?'' என்றாள்.

வசிலீசா யெகோரவ்னா தன்னுடைய மகளின் பிரயாணத்துக்குத் தேவையான ஏற்பாடுகளைச் செய்வதற்குப் புறப்பட்டாள். தளகர்த்தருடைய அறையில் விவாதம் தொடர்ந்து கொண்டிருந்தது. ஆனால் நான் விவாதத்தில் கலந்து கொள்ளவில்லை; மற்றவர்கள் என்ன பேசினார்கள் என்பதைக் கவனிக்கவுமில்லை. அங்கே மாலையுணவு சாப்பிடும் பொழுது மார்யா இவானவ்னாவைப் பார்த்தேன். அவள் வெளிறிப் போய் சிவந்த கண்களோடு பரிதாபமாகத் தோன்றினாள். நாங்கள் எதுவும் பேசாமல் சாப்பிட்டு முடித்து வழக்கத்தைக் காட்டிலும் சீக்கிரமாகவே எழுந்தோம். தளகர்த்தரின் குடும்பத்தினர் ஒவ்வொருவரிடமும் விடை பெற்றுக் கொண்டு எங்களுடைய அறைகளை நோக்கிச் சென்றோம். ஆனால் நான் வேண்டுமென்றே என்னுடைய வாளை அங்கே வைத்துவிட்டு வந்தேன். எனவே அதை எடுத்து வருவதற்காக உள்ளே போனேன். மார்யா இவானவ்னா தனியே இருப்பாள் என்று எதிர்பார்த்தேன். உண்மையில் அவள் கதவின் அருகில் என்னைச் சந்தித்து என்னுடைய வாளைக் கொடுத்தாள். ''பியோத்தர் அந்திரேயெவிச்! போய் வருகிறேன்'' என்று அழுதபடியே சொன்னாள். ''நான் ஓரென்புர்குக்குப் போகிறேன். நீங்கள் நெடுங்காலம் மகிழ்ச்சியோடு வாழ வேண்டும். ஒருவேளை கடவுள் நம்மை மீண்டும் ஒன்றுசேர்க்கலாம். இல்லையென்றாள்....'' என்று சொல்லிவிட்டு அவள் விம்மி விம்மியழுதாள். நான் அவளைத் தூக்கியணைத்தேன். ''அன்பே! போய்வா'' என்று விடை கொடுத்தேன். ''இனியவரே!

அன்பே! போய்வருகிறேன்! எனக்கு எத்தகைய முடிவு ஏற்பட்டாலும் என்னுடைய கடைசிச் சிந்தனை உங்கள் மீதே இருக்கும்; கடைசிப் பிரார்த்தனையும் உங்களுக்காகவே இருக்கும்! இதை நம்புங்கள்.'' மாஷா அழுதபடியே என் மார்போடு ஒட்டிக் கொண்டாள். நான் மிகவும் உணர்ச்சியோடு அவளை முத்தமிட்டேன்; பிறகு அந்த வீட்டை விட்டு வேகமாகப் புறப்பட்டேன்.

## அத்தியாயம் ஏழு

**முற்றுகை**

என் தலையே! போர்வீரன் தலையே!
முப்பத்து மூன்று வருடங்கள்
விசுவாசமாக உழைத்தாய்,
அதனுலென்ன பயன்?
பணமோ பாராட்டோ
உனக்குக் கிடையாது;
உன்னைப் பற்றி நல்ல
வார்த்தை எதுவுமில்லை;
போர்வீரன் என்பதற்கு மேல்
பதவி உயர்வும் உனக்கில்லை,
என் தலையே!
உனக்குக் கிடைத்ததெல்லாம்—
இரண்டு கம்பங்கள்
குறுக்குச் சட்டத்தில்
தொங்கிய சுறுக்குக் கயிறு
உனக்குக் கிடைத்தது,
வேறென்ன?

**நாட்டுப் பாடல்**

மறு நாள் அதிகாலையில் மார்யா இவானவ்ன கோட்டையிலிருந்து வெளியே போகும் பொழுது கடைசி முறையாக அவளைப் பார்த்து விடை கொடுக்க வேண்டுமென்று ஆசைப்பட்டேன். எனவே அன்றிரவில் நான் அணிந்திருந்த உடைகளைக் கழற்றவில்லை; இரவு முழுவதும் உறங்கவுமில்லை. என்னிடம் மாபெரும் மாற்றங்கள் ஏற்பட்டிருப்பதை நான் உணர்ந்தேன். முன்பு என்னிடம் ஏற்பட்ட மனச்சோர்வை என்னுல் தாங்க முடியவில்லை. ஆனுல் இப்பொழுது என்னிடம் ஏற்பட்ட பரபரப்பை என்னுல் எளிதில் தாங்கிக் கொள்ள முடிந்தது. பிரிவினுல் ஏற்படுகின்ற வேதனையோடு தெளிவில்லாத ஆனுல் இனிமையான நம்பிக்கைகளும் பொறு

மையில்லாமல் ஆபத்தை எதிர்நோக்குகின்ற பரபரப்பும் மிக மேன்மையான ஆசைகளும் என்னிடம் ஏற்பட்டன. இரவு வெகு சீக்கிரமாகக் கழிந்து விட்டது. நான் வெளியே புறப்படப் போகும் நேரத்தில் கதவைத் திறந்து கொண்டு ஒரு கார்ப்போரல் உள்ளே வந்தான். கோட்டையிலிருந்த நமது கஸாக்குகள் இரவோடிரவாக வெளியே போய் விட்டார்களென்றும் அவர்கள் யுலாயைப் பலவந்தமாகக் கொண்டு போய் விட்டார்கள் என்றும் கூறினான். மேலும் கோட்டைக்கு வெளியே ஏராளமான அந்நியர்கள் குதிரைகள் மீது சுற்றிக் கொண்டிருப்பதாகவும் தெரிவித்தான். அப்படியானால் மார்யா இவானவ்னா கோட்டையை விட்டுப் போக முடியாது என்று எனக்குத் தோன்றியது. அதை நினைக்கும் பொழுதே எனக்கு அச்சமேற்பட்டது. அந்தக் கார்ப்போரலிடம் சில உத்தரவுகளை அவசரமாகச் சொல்லி விட்டு நான் தளகர்த்தருடைய வீட்டுக்கு அவசரமாகச் சென்றேன்.

பொழுது புலரும் காலை நேரம். நான் வேகமாகப் போய்க் கொண்டிருந்த பொழுது யாரோ என் பெயரைச் சொல்லிக் கூப்பிட்டார்கள். நான் நின்றேன். "எங்கே போகிறீர்கள்?" என்று கேட்டபடியே இவான் இக்னத்தியெவிச் அவசரமாக என்னை எட்டிச் சென்றார். "இவான் குஸ்மீச் கோட்டையிலுள்ள மேடையில் இருக்கிறார். உங்களைக் கூட்டி வருமாறு என்னை அனுப்பினார். புகச்சோவ் வந்து விட்டான்" என்றார். "மார்யா இவானவ்னாவை வெளியே அனுப்பி விட்டீர்களா? என்று துடிக்கும் இதயத்தோடு கேட்டேன். "இல்லை. வெளியே அனுப்ப முடியவில்லை. ஓரென்புர்குக்குப் போகும் பாதை துண்டிக்கப்பட்டு விட்டது. எதிரிகள் கோட்டையைச் சூழ்ந்து விட்டார்கள். பியோத்தர் அந்திரேயெவிச்! மோசமான நிலைமை ஏற்பட்டிருக்கிறது" என்றார்.

நாங்கள் கோட்டை மேடைக்குச் சென்றோம். அந்த இயற்கையான மேட்டுப் பகுதியைச் சுற்றி முள்வேலி போடப்பட்டிருந்தது. கோட்டைக்குள் இருந்த எல்லோரும் முன்பே அங்கே கூடிவிட்டதாகத் தெரிந்தது. படைவீரர்கள் வரபின் துப்பாக்கிகளைச் சாய்வாகத் தோளில் வைத்துக் கொண்டு நின்று கொண்டிருந்தார்கள். முந்திய தினமே பீரங்கியை இழுத்துக் கொண்டுவந்து அங்கே வைத்திருந்

தார்கள். அங்கே நின்று கொண்டிருந்த குறைந்த எண்ணிக்கையுள்ள படைவீரர்கள் முன்பு தளகர்த்தர் முன்னும் பின்னும் நடந்து கொண்டிருந்தார். ஆபத்து வந்தவுடன் அந்த அனுபவமிக்க போர்வீரரின் நாடி நரம்புகளில் புது வேகம் ஏற்பட்டிருப்பது நன்கு தெரிந்தது. கோட்டைக்கு வெளியே சிறிது தூரத்தில் ஸ்டெப்பி நிலத்தில் சுமார் இருபது நபர்கள் குதிரைகளின் மேல் உட்கார்ந்திருப்பது தெரிந்தது. அவர்கள் கஸாக்குளைப் போலத் தோன்றிய போதிலும் அவர்களில் பலர் பஷ்கீரியர்களெனத் தெரிந்தது. அவர்கள் அணிந்திருந்த உயரமான சிவிங்கித் தோல் தொப்பியும் அம்புக்கூடுகளும் அவர்களை அடையாளம் காட்டியது. தளகர்த்தர் படை வரிசையைப் பார்வையிட்டதும் போர் வீரர்களிடம் சுருக்கமாகப் பேசினார். ''இளைஞர்களே! நமது பேரன்புக்குரிய சக்கரவர்த்தினியைப் பாதுகாப்பதற்காக இன்று நாம் போரில் ஈடுபடுகிறோம். நாம் வீரமான, விசுவாசமான பிரஜைகள் என்பதை உலகத்துக்கு எடுத்துக் காட்டுவோம்'' என்றார். படைவீரர்கள் உற்சாகமாக ஆர்ப்பரித்தனர். ஷ்வாப்ரின் எனக்குப் பக்கத்தில் நின்று கொண்டு எதிரிகளை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார். ஸ்டெப்பி நிலத்தில் இருந்த குதிரை வீரர்கள் கோட்டையில் துருப்புகளின் நடமாட்டத்தைப் பார்த்து விட்டு என்ன செய்யலாம் என்று ஒன்றுகூடி விவாதிப்பது மாதிரித் தோன்றியது. தளகர்த்தர் பீரங்கியை எதிரிகளை நோக்கித் திருப்புமாறு இவான் இக்னத்தியெவிச்சுக்கு உத்தரவு கொடுத்தார். அவரே பீரங்கிக் குண்டின் இணைப்புத் திரிக்கு நெருப்பு வைத்தார். பீரங்கிக் குண்டு சப்தம் எழுப்பிக் கொண்டு எதிரிகளின் தலைக்கு மேலே பறந்து சென்று கீழே விழுந்தது. எதிரிகளுக்குச் சேதம் ஏற்படாவிட்டாலும் அவர்கள் உடனே நாலாபக்கங்களிலும் குதிரைகளை ஓட்டிக் கொண்டு சிதறிப் போனார்கள். இப்பொழுது ஸ்டெப்பி நிலத்தில் ஒருவரும் இல்லை.

அந்த சமயத்தில் வசிலீசா யெகோரவ்னா அவளை விட்டுப் பிரியாத மாஷாவையும் கூட்டிக் கொண்டு கோட்டை மேடைக்கு வந்தாள். ''யுத்த நிலவரம் எப்படி? எதிரி எங்கே இருக்கிறான்?'' என்று கேட்டாள். ''எதிரி வெகு தூரத்தில் இல்லை'' என்றார் இவான் குஸ்மீச். ''கடவுள் கிரு

பையால் எல்லாம் சரியாக முடிய வேண்டும். மாஷா! உனக்குப் பயமாக இருக்கிறதா?'' என்று கேட்டார். ''இல்லே, அப்பா! தனியாக வீட்டிலிருப்பதற்கு எனக்குப் பயமாக இருக்கிறது'' என்று அவள் பதிலளித்தாள். இதைச் சொல்லிவிட்டு என்னே லேசாக கவனித்து செயற் கையாகச் சிரித்தாள். என் கை என்னேயறியாமல் வாளின் கைப்பிடியைப் பற்றியது. எனது அன்புமிக்க மாஷாவைப் பாதுகாப்பதற்காகவே நேற்று அவளுடைய திருக்கரங்களி லிருந்து அந்த வாளே நான் பெற்றிருக்கிறேன் என்று எனக் குள் சொல்லிக் கொண்டேன். என்னுடைய இதயத்தில் நெருப்புப் பிடித்துக் கொழுந்து விட்டெரிவது போல ஓர் உணர்ச்சி என்னேத் தகித்தது. அவளேப் பாதுகாப்பதற் கென்றே பிறந்திருக்கும் போர்வீரஞக என்னே நினேத்துக் கொண்டேன். எப்பொழுது அந்த நெருக்கடியான நேரம் வரப் போகிறது; அவள் என் மீது வைத்திருக்கும் நம் பிக்கையை எப்படி நிறைவேற்றுவேன் என்று பொறுமை யில்லாமல் துடித்துக் கொண்டிருந்தேன்.

கோட்டையிலிருந்து அரை வெர்ஸ்டா தூரத்திலிருந்த சிறு குன்றுக்குப் பின்னுலிருந்து கூட்டமாகப் பல குதிரை வீரர்கள் முன்னே வந்தார்கள். சிறிது நேரத்துக்குள் ஸ்டெப்பி நிலம் முழுவதும் ஏராளமான போர்வீரர்கள் ஈட்டி, வில், அம்பு, முதலிய ஆயுதங்களே வைத்துக் கொண்டு நின்று கொண்டிருந்தார்கள். அவர்கள் மத்தியில், ஒரு மனிதன் செந்நிற உடையணிந்து வெள்ளேக் குதிரை மீது உட்கார்ந்து கையில் உருவிய வாளோடு வந்து அங்கே நின்ருன். அவன்தான் புகச்சோவ். அவனேச் சுற்றிலும் பலர் நின்று கொண்டிருந்தார்கள். அதன் உத்தரவு கொடுத்த தும் நான்கு குதிரை வீரர்கள் கோட்டையை நோக்கி மிக வேகமாக வந்து கதவின் அருகில் நின்ருர்கள். அவர்கள் கோட்டையிலிருந்து முந்திய இரவில் வெளியேறிச் சென்ற துரோகிகள் என்பதைப் பார்த்தோம். அவர்களில் ஒருவன் தன்னுடைய தொப்பிக்குக் கீழே ஒரு காகிதத்தை வைத்துக் கொண்டிருந்தான். இன்ஞெருவன் கையிலிருந்த ஈட்டியின் முனேயில் யுலாயின் தலே சொருகப்பட்டிருந்தது. அவன் ஈட்டியை வேகமாக ஆட்டிய பொழுது தலே மட்டும் வீசி எறியப்பட்டுக் கோட்டை மதிலேத் தாண்டிக் கீழே விழுந்

தது. பரிதாபத்துக்குரிய கல்மீக் வீரனின் தலை தளகர்த்தரின் காலடியில் வந்து விழுந்தது. ''சண்டை வேண்டாம்! ஜார் சக்கரவர்த்தி இங்கேயிருக்கிறார்! ஜார் சக்கரவர்த்தியிடம் வந்து சேருங்கள்!'' என்று துரோகிகள் உரத்த குரலில் முழங்கினர்.

''ஜார் சக்கரவர்த்தி என்றா சொல்கிறீர்கள்! இளைஞர்களே! சுடுங்கள்!'' என்றார் இவான் குஸ்மீச். எங்கள் போர் வீரர்கள் குண்டுமாரி பொழிந்தனர். கடிதத்தை வைத்துக் கொண்டிருந்த கஸாக் குண்டடிபட்டுக் குதிரையிலிருந்து கீழே விழுந்தான். உடனே மற்றவர்கள் வேகமாகப் பின் வாங்கினார்கள். நான் மார்யா இவானவ்னாவைக் கவனித்தேன். இரத்தக் கறையோடு யுலாயின் தலையைப் பார்த்த போதே அவளுக்கு ஒரு மாதிரியாக இருந்திருக்க வேண்டும். குண்டு மாரியைப் பார்த்ததும் அவள் திகைத்துப் போய் நின்றாள். தளகர்த்தர் ஒரு கார்ப்போரலைக் கூப்பிட்டு குண்டடிபட்டுக் குதிரையிலிருந்து விழுந்த கஸாக்கின் கையிலிருக்கும் கடிதத்தை எடுத்து வருமாறு உத்தர விட்டார். அந்தக் கார்ப்போரல் கோட்டைக்கு வெளியே சென்று அந்தக் கடிதத்தை எடுத்துக் கொண்டதோடு செத்துப் போனவனின் குதிரையையும் கடிவாளத்தைப் பிடித்துக் கொண்டுவந்தான். தளகர்த்தரிடம் கடிதத்தைக் கொடுத்தான். அவர் கடிதத்தைப் படித்துவிட்டு ஆத்திரத்தோடு அதைக் கிழித்தெறிந்தார். ஆனால் கலகக்காரர்கள் தாக்குதலுக்குத் தயாராகி விட்டது போலத் தோன்றியது. வெகு சீக்கிரத்தில் எங்களைச் சுற்றி குண்டுகள் வெடிக்கும் சத்தம் கேட்டது. நாங்கள் நின்று கொண்டிருந்த இடத்துக்குப் பக்கத்திலும் முள்வேலியிலும் அம்புகள் வந்து விழுந்தன. ''வசிலீசா யெகோரவ்னா!'' என்று தளகர்த்தர் தம் மனைவியைக் கூப்பிட்டார். ''பெண்கள் இங்கே நிற்பது சரியல்ல; மாஷாவைக் கூட்டிக் கொண்டுபோ. அவளைப் பார்! அந்தப் பெண்ணிடம் பாதி உயிர்தான் இருக்கிறது'' என்றார்.

குண்டுகள் பறப்பதைப் பார்த்ததும் வசிலீசா யெகோரவ்னாவின் ஆர்வம் குறைந்து விட்டது. அவள் ஸ்டெப்பி நிலத்தைப் பார்த்த பொழுது அங்கே கலகக்காரர்கள் சுறுசுறுப்பாக இருப்பதைக் கண்டாள். பிறகு தன் கணவனை நோக்கித் திரும்பினாள். ''இவான் குஸ்மீச்! நாம் வாழ்ந்தாலும்

செத்தாலும் அது கடவுள் சித்தம். மாஷாவை ஆசீர்வதியுங்கள். மாஷா! அப்பாவிடம் போய் நில்'' என்ருள்.

மாஷா முகம் வெளுத்துப் போய் நடுங்கிக் கொண்டே இவான் குஸ்மீச்சுக்கு முன்னுல் போய் முழந்தாளிட்டுத் தரையைப் பார்த்துக் குனிந்து நின்ருள். வயோதிகரான தளகர்த்தர் அவள் மீது மூன்று முறை சிலுவைக் குறியிட்டார்; பிறகு அவளுக்குக் கை கொடுத்து எழுந்து நிற்க உதவி செய்துவிட்டு அவளை முத்தமிட்டார். பிறகு உணர்ச்சி மிக்க குரலில் பேசினுர். ''மாஷா! நீ மகிழ்ச்சியோடிருக்குமாறு கடவுள் உதவி செய்வார். கடவுளைப் பிரார்த்தனை செய்; அவர் உன்னைக் கைவிட மாட்டார். கடவுள் கிருபையால் நல்ல இளைஞன் ஒருவனை நீ சந்திக்க வேண்டும். வசிலீசா யெகோரவ்னுவும் நானும் நடத்திய வாழ்க்கையைப் போல நீ அந்த இளைஞனேடு ஆனந்தமாக வாழ்க்கை நடத்த வேண்டும். போய்வா, மாஷா! வசிலீசா யெகோரவ்னு! அவளை சீக்கிரமாகக் கூட்டிக் கொண்டு போ'' என்ருர். (மாஷா அவர் தோளைக் கட்டிப் பிடித்துக் கொண்டு விம்மியழுதாள்.) ''என்னையும் முத்தமிடுங்கள்'' என்று தளகர்த்தரின் மனைவி அழுது கொண்டே சொன்னுள். ''போய்வருகிறேன், இவான் குஸ்மீச்! உங்கள் மனம் வருந்தும்படியாக நான் ஏதேனும் செய்திருந்தால் என்னை மன்னித்து விடுங்கள்'' என்ருள். ''போய்வா! அன்பே! போய்வா!'' என்று தளகர்த்தர் தன் மனைவியை அணைத்துக் கொண்டு விடை கொடுத்தார். ''போதும். புறப்படுங்கள். வீட்டுக்குப் புறப்படுங்கள். மாஷாவுக்கு விவசாயப் பெண்ணைப் போல உடை போட்டுவிடு'' என்ருர். தாயாரும் மகளும் அங்கேயிருந்து புறப்பட்டார்கள். மார்யா இவானவ்னு சென்ற திசையில் நான் பார்த்துக் கொண்டிருந்தேன். அவள் திரும்பிப் பார்த்து என்னை நோக்கித் தலையசைத்தாள். இப்பொழுது இவான் குஸ்மீச் எங்களை நோக்கித் திரும்பினுர்; அவருடைய முழு கவனமும் எதிரிகள் மீது இருந்தது. தலைவனைச் சுற்றி நின்ற கலகக்காரர்கள் திடீரென்று குதிரைகளிலிருந்து கீழே இறங்கலானுர்கள். ''வீரர்களே! உறுதியாக நில்லுங்கள். அவர்கள் இப்பொழுது தாக்கப் போகிருர்கள்'' என்ருர் தளகர்த்தர். அந்த நேரத்தில் பயங்கரமான கூக்குரலும் பேரொலியும் கேட்டது. கலகக்காரர்கள் முழு பலத்

தோடு கோட்டைக் கதவை நோக்கி ஓடி வந்தார்கள். எங்கள் பீரங்கியில் சிதறும் குண்டுகள் வைத்து கெட்டிக்கப்பட்டிருந்தது. கலகக்காரர்கள் கோட்டைக்கு மிக அருகில் வருகின்ற வரை தளகர்த்தர் காத்துக் கொண்டிருந்தார். பிறகு திடீரென்று பீரங்கியைச் சுடுமாறு உத்தரவு கொடுத்தார். பீரங்கி குண்டு கலகக்காரர்கள் கும்பலின் மத்தியில் வெடித்தது. அவர்கள் வலப் புறமும் இடப் புறமும் சிதறி ஓடி விட்டுப் பின்வாங்கினுர்கள். அவர்களுடைய தலைவன் மட்டும் முன்னணியில் தனியாக நின்று கொண்டிருந்தான்... அவன் தன்னுடைய வாளை உயர்த்திக் காட்டி தன் கூட்டத்தினரைக் கூப்பிட்டான்... சற்று நேரம் இல்லாதிருந்த கூக்குரலும் பேரொலியும் உடனே மீண்டும் கேட்டது. ''வீரர்களே! இப்போது கதவுகள் திறக்கட்டும்! முரசு கொட்டுங்கள்! படைவீரர்களே! முன்னேறுங்கள்! என்னைத் தொடர்ந்து முன்னேறுங்கள்'' என்று தளகர்த்தர் குரல் கொடுத்தார்.

தளகர்த்தர், இவான் இக்னுத்தியெவிச், நான் ஆகிய மூவரும் உடனே கோட்டைக்கு வெளியே பாய்ந்து சென்ருேம். ஆனுல் மற்ற படைவீரர்கள் பயத்தால் எங்களைப் பின் தொடரவில்லை. ''வீரர்களே! இன்னும் ஏன் அங்கே நிற்கிறீர்கள்?'' என்று இவான் குஸ்மீச் முழங்கினுர். ''நமக்கு மரணம் விதிக்கப்பட்டிருந்தால் வீர மரணம் எய்துவோம். ஒரு போர்வீரனுக்குப் பெருமை அதுதானே!'' என்ருர். அந்த நேரத்தில் கலகக்காரர்கள் கூட்டமாக வந்து எங்களைச் சூழ்ந்து கொண்டனர்; அவர்களில் பலர் கோட்டைக்குள் நுழைந்து விட்டனர். முரசு கொட்டும் சத்தம் நின்றது. கோட்டையிலிருந்த எங்கள் துருப்புகள் துப்பாக்கிகளைக் கீழே போட்டனர். நான் கீழே விழுந்தேன். ஆனுல் மறுபடியும் எழுந்து கலகக்காரர்களின் கூட்டத்தோடு கோட்டைக்குள் வந்து விட்டேன். தளகர்த்தருக்குத் தலையில் காயமேற்பட்டிருந்தது. கலகக்காரர்கள் அவரைச் சூழ்ந்து கொண்டு சாவியைக் கொடுக்குமாறு மிரட்டினுர்கள். நான் அவருக்கு உதவி செய்வதற்காக முன்னே சென்றபொழுது திட காத்திரமான உடலுடைய சில கஸாக்குகள் என்னைப் பிடித்துத் தங்களுடைய இடைவாரினுல் கட்டி விட்டார்கள். ''ஜார் சக்கரவர்த்தியை எதிர்த்ததற்கு உனக்கு சரியான தண்டனை கொடுப்போம்'' என்ருர்கள்.

எங்களைத் தெருக்களிலே இழுத்துக் கொண்டு போனார்கள். வீடுகளிலே இருந்த ஜனங்கள் ரொட்டியையும் உப்பையும் ஏந்திக் கொண்டு வெளியே வந்தார்கள். மாதாகோவில் மணி பலமாக ஒலித்தது. ஜார் சக்கரவர்த்தி கோட்டைச் சதுக்கத்தில் காத்துக் கொண்டிருக்கிறார்; அவருக்கு முன் பாக விசுவாசப் பிரமாணம் எடுப்பதற்குக் கைதிகளை உடனே கொண்டுவர வேண்டும் என்று கூட்டத்திலிருந்து சத்தம் கேட்டது. மக்கள் சதுக்கத்தில் குழுமினார்கள்; எங்களையும் அங்கே கொண்டுபோனார்கள்.

தளகர்த்தருடைய வீட்டுக்கு வெளியே கை வைத்த நாற்காலியில் புகச்சோவ் உட்கார்ந்திருந்தான். அவன் செந்நிறத்தில் கஸாக்குகளின் உடையை அணிந்திருந்தான்; அதன் ஓரங்கள் பின்னப்பட்டிருந்தன. ஸேபிள் தோலில் செய்யப்பட்டு பொன்னிறக் குஞ்சலங்கள் கட்டப்பட்டிருந்த உயரமான தொப்பியை அணிந்திருந்தான். அதன் கீழ் அவனுடைய பிரகாசமான கண்கள் தெரிந்தன. அந்த முகத்தை எங்கோ பார்த்தது போல எனக்குத் தோன்றியது. அவனைச் சுற்றிலும் கஸாக் இனத்துப் பெரியவர்கள் நின்று கொண்டிருந்தார்கள். கெராசிம் பாதிரியார் வெளுத்துப் போய் நடுங்கிக் கொண்டு கையில் ஒரு சிலுவையை வைத்துக் கொண்டு நின்றிருந்தார். அங்கே பலியிடப்படவிருக்கும் உயிர்களிடம் இரக்கம் காட்டுமாறு அவர் மௌனமாகக் கடவுளைப் பிரார்த்திப்பது போலத் தோன்றியது. அந்தச் சதுக்கத்தில் ஒரு தூக்குமரத்தை அவசரமாக நிறுவிக் கொண்டிருந்தார்கள். நாங்கள் வந்து சேர்ந்தவுடன் பஷ்கீரியர்கள் அங்கே கூட்டமாக இருந்தவர்களை விரட்டிவிட்டு எங்களைக் கொண்டு போய் புகச்சோவ் முன்பு நிறுத்தினார்கள். மாதாகோவில் மணியின் ஓசை நின்று விட்டது. எங்கும் ஒரே மௌனம். ''தளகர்த்தர் யார்?'' என்று அந்தப் பாசாங்குக்காரன் கேட்டான். நமது சார்ஜென்ட் கூட்டத்திலிருந்து முன்னே வந்து இவான் குஸ்மீச்சைச் சுட்டிக் காட்டினான். புகச்சோவ் அந்த வயோதிகரை நோக்கி மிகவும் ஆபத்தான வகையில் தன்னுடைய பார்வையைச் சுழல விட்டான். ''உன்னுடைய ஜார் சக்கரவர்த்தியை எதிர்ப்பதற்கு உனக்கு எவ்வளவு துணிச்சல்?'' என்று கேட்டான். தன்னுடைய உடலில் ஏற்பட்ட காயத்தினால் பல

வீனமடைந்திருந்த தளகர்த்தர் தனது எஞ்சிய பலம் முழுவதையும் திரட்டி அவனை நோக்கி உறுதியான குரலில் பதிலளித்தார். ''என்னுடைய ஜார் சக்கரவர்த்தி நீயல்ல; நீ ஒரு திருடன்; மோசடிக்காரன். நான் சொல்வது உன்னுடைய காதில் விழுகிறதா?'' என்று கேட்டார். புகச்சோவ் மிகவும் கோபமாக முகத்தைச் சுளித்துவிட்டு ஒரு வெள்ளைக் கைக் குட்டையை ஆட்டினான். உடனே சில கஸாக்குகள் அங்கே ஓடி வந்து அந்த முதிய காப்டனைத் தூக்கு மேடைக்கு இழுத்துக் கொண்டுபோனார்கள். முந்திய நாளன்று தளகர்த்தரால் 'விசாரணை செய்யப்பட்ட, மூக்கும் காதும் வெட்டப்பட்டிருந்த பஷ்கீரியன் தூக்கிலிடும் கம்பங்களின் குறுக்குச் சட்டத்தின் மீது உட்கார்ந்திருந்தான். அவன் கையிலே தூக்கிலிடுகின்ற கயிறு இருந்தது; ஒரு நிமிடத்தில் பரிதாபத்துக்குரிய இவான் குஸ்மீச் தூக்கு மரத்தில் ஊசலாடிக் கொண்டிருந்தார். பிறகு இவான் இக்னுத்தியெவிச்சைக் கொண்டுவந்து புகச்சோவ் முன்பு நிறுத்தினார்கள். ''ஜார் பியோத்தர் ஃபியோதரவிச்சுக்கு விசுவாசமாக நடந்து கொள்வேன் என்று சத்தியம் செய்'' என்று புகச்சோவ் உத்தரவிட்டான். காப்டனைப் போல இவான் இக்னுத்தியெவிச்சும், ''எங்களுடைய ஜார் சக்கரவர்த்தி நீயல்ல; கிழட்டுப் பயலே! நீ ஒரு திருடன்; மோசடிக்காரன்'' என்று கூறினார். புகச்சோவ் தன்னுடைய கைக்குட்டையை மறுபடியும் ஆட்டினான். தன்னுடைய பழைய மேலதிகாரியின் உடலுக்குப் பக்கத்தில் அந்தச் சிறப்பு மிக்க லெப்டினென்டின் உடலும் தொங்கியது.

அடுத்ததாக என்னைக் கொண்டுபோய் நிறுத்தினார்கள். என்னுடைய உன்னதமான தோழர்கள் சொன்ன அதே வார்த்தைகளைத் திருப்பிச் சொல்லும் உத்தேசத்தோடு நான் தைரியத்தோடு புகச்சோவை உற்றுப் பார்த்தேன். அந்தச் சமயத்தில் கலகக்காரர்களின் தலைவர்கள் கூட்டத்தில் ஷ்வாப்ரினைப் பார்த்த பொழுது எனக்கேற்பட்ட வியப்பை எடுத்துக் கூற முடியாது. அவன் கஸாக்குகளைப் போல முடி வெட்டிக் கொண்டு கஸாக்குகளின் உடையை அணிந்திருந்தான். அவன் புகச்சோவ் அருகில் சென்று அவன் காதுக்குள் ஏதோ சில வார்த்தைகளைச் சொல்வதைப் பார்த்தேன். புகச்சோவ் என்னைச் சரியாகக் கூடப் பார்க்

காமல் ''அவனைத் தூக்கிலிடுங்கள்'' என்று உத்தரவு கொடுத்தான். என் கழுத்தின் மீது தூக்குக் கயிறு போடப் பட்டது. நான் மனதுக்குள் ஒரு பிரார்த்தனையை முணு முணுத்தேன். என்னுடைய எல்லா பாவச் செயல்களுக்காக வும் மனப்பூர்வமாக வருந்துகிறேன்; என்னை மன்னியுங்கள்; எனக்கு மிகவும் நெருக்கமானவர்களைக் காப்பாற்றுங்கள் என்று கடவுளைப் பிரார்த்தித்தேன். என்னைத் தூக்குமேடைக்கு இழுத்துச் சென்றார்கள். ''பயப்படாதே, பயப்படாதே'' என்று அந்தக் கொலைகாரர்கள் என்னிடம் திரும்பத் திரும்பச் சொன்னார்கள். ஒருவேளை என்னை உற்சாகப்படுத்த அவர்கள் உண்மையிலேயே விரும்பியிருக்கலாம். திடீரென்று ஒரு கூக்குரல் என் காதில் விழுந்தது: ''பொறுங்கள்! பாவி களே! சற்றுப் பொறுங்கள்!'' கொலையாளிகள் தங்களுடைய தயாரிப்புகளைச் சட்டென்று நிறுத்திக் கொண்டார்கள். நான் சுற்று முற்றும் பார்த்தேன். புகச்சோவின் காலடியில் விழுந்து ஸவேலிச் வணங்கிக் கொண்டிருந்தான். ''கருணை நிறைந்த பிதாவே!'' என்று என்னுடைய பழைய ஆசிரியன் சொல்லிக் கொண்டிருந்தான். ''என்னுடைய எஜமானுடைய குழந்தையை எதற்காகக் கொல்ல விரும்புகிறீர்கள்? அவரை விட்டுவிடுங்கள். உங்களுக்கு நிறையப் பணம் கிடைக்கும். மக்களைப் பயமுறுத்த வேண்டுமென்றால் அவருக்குப் பதி லாக இந்தக் கிழவனைத் தூக்கிலிடுங்கள்'' என்றான். புகச் சோவ் சைகை காட்டியதும் என்னைக் கட்டியிருந்த கயிற்றை அவிழ்த்து உடனே என்னை விடுதலை செய்தார்கள். ''எங் கள் ஜார் சக்கரவர்த்தி உன்னை மன்னித்து விட்டார்'' என்று என்னிடம் கூறினார்கள். எனக்கு விடுதலை கிடைத் தது பற்றி அந்த நேரத்தில் எனக்கு மகிழ்ச்சியேற்பட்டதாக நான் சொல்ல முடியாது; ஆனால் நான் வருத்தமடைந்த தாகச் சொல்ல மாட்டேன். உண்மையைச் சொல்வதென் றால் நான் குழப்பத்தில் சிக்கியிருந்தேன். என்னை மறுபடி யும் அந்தப் பாசாங்குக்காரன் முன்னால் கொண்டுபோய் நிறுத்தி முழந்தாளிடச் செய்தார்கள். புகச்சோவ் தன் னுடைய உருண்டு திரண்ட கரத்தை என்னிடம் நீட்டினான். ''அவர் கையை முத்தமிடு! அவர் கையை முத்தமிடு!'' என்று எல்லாப் பக்கங்களிலிருந்தும் உரத்த குரலில் சொன் னார்கள். ஆனால் அவ்வளவு கேவலமாக என்னைத் தாழ்த்திக்

கொள்வதற்கு நான் தயாராயில்லே; அதற்குப் பதிலாக மிகவும் காட்டு மிராண்டித் தனமான வகையில் அவர்கள் என்னைக் கொலே செய்யலாமே. ஸவேலிச் எனக்குப் பின்னல் நின்று கொண்டு ''எஜமான்! பியோத்தர் அந்திரேயெவிச்!'' என்று ரகசியமாக என்னைக் கூப்பிட்டுத் தன்னுடைய முழங்கையால் என் முதுகை இடித்தான். ''பிடிவாதம் வேண்டாம்! நமக்கென்ன கவலே? காறித் துப்பி முத்தமிடுங்கள். அந்தப் போக்... அவன் கையை மத்தமிடுங்கள்'' என்றான். நான் சிறிதும் அசையவில்லே. புகச்சோவ் கையை மடக்கிக் கொண்டு என்னைப் பழிப்பது போலப் பேசினன். ''கனவான் ஆனந்தத்தில் மெய்மறந்து போய்விட்டார் போல இருக்கிறது. அவரைத் தூக்கி நிறுத்துங்கள்!'' என்றான். என்னைத் தூக்கி நிறுத்திய பிறகு என்னைச் சுதந்திரமாக விட்டுவிட்டார்கள். அங்கே நடந்து கொண்டிருந்த கேலிக்கூத்தைப் பார்த்து நான் திகைத்து நின்றேன்.

கோட்டையில் வசித்து வந்தவர்கள் எல்லோரும் ஒருவருக்குப் பின் ஒருவராக வந்து, சிலுவையில் அறையப்பட்ட ஏசு நாதரின் உருவத்தை முத்தமிட்டு, அந்தப் பாசாங்குக்காரனே வணங்கிவிட்டு, அவனுக்கு விசுவாசப் பிரமாணம் எடுத்துக் கொண்டார்கள். கோட்டையிலிருந்த படைவீரர்களும் அங்கே நின்று கொண்டிருந்தார்கள். படைப் பிரிவில் வேலே செய்த தையற்காரன் தன்னுடைய மொட்டையான கத்திரிக்கோலால் அவர்களுடைய சடையை வெட்டிக் கொண்டிருந்தான். பிறகு அவர்கள் தங்கள் தலேயை சிலுப்பி விட்டு, புகச்சோவிடம் போய் அவன் கையை முத்தமிட்டார்கள். அவன் உடனே அவர்களே மன்னித்துவிட்டுத் தன்னுடைய கூட்டத்தில் சேர்த்துக் கொண்டான். இது மட்டும் மூன்று மணி நேரம் நடைபெற்றது. கடைசியில் புகச்சோவ் தன்னுடைய நாற்காலியிலிருந்து எழுந்து, பெரியவர்களேக் கூட்டிக் கொண்டு வெளியே வந்தான். நன்கு அலங்கரிக்கப் பட்ட ஒரு வெள்ளேக் குதிரையைக் கொண்டுவந்து அவன் முன்னல் நிறுத்தினர்கள். இரண்டு கஸாக்குகள் அவனுடைய கம்புக்கூட்டில் கைகொடுத்து அவனேத் தூக்கி குதிரைச் சேணத்தின் மீது உட்கார வைத்தார்கள். அவன் கெராசிம் பாதிரியாரிடம் உணவருந்த அவருடைய வீட்டுக்கு வருவதாகச் சொன்னன். அந்த நேரத்தில் ஒரு பெண்ணின்

ஓலம் கேட்டது. சில கொள்ளேக்காரர்கள் தலேமுடி கலேந்து அலங்கோலமான நிலேயிலிருந்த வசிலீசா யெகோரவ்னுவைப் பிடித்து இழுத்துக் கொண்டு வந்தார்கள். அதற்குள் அவர் களில் ஒருவன் அவளுடைய பஞ்சு தைத்த கோட்டை அணிந் திருந்தான். மற்றவர்கள் இறகு திணிக்கப்பட்ட மெத்தை கள், தேநீர் தயாரிக்கும் பாத்திரங்கள், துணிமணிகள், இன்னும் பலவிதமான பொருள்களே வீட்டுக்கு வெளியே கொண்டுவந்து போட்டார்கள். ''ஐயா!'' என்று அந்த வயது முதிர்ந்த பெண்மணி பரிதாபமாகக் கதறினுள். ''என்னே அமைதியாகச் சாக விடுங்கள். இவான் குஸ்மீச் சிடம் என்னேக் கொண்டு செல்லுங்கள், ஐயா!'' என்று கெஞ்சினுள். அவள் திடீரென்று தலேயை உயர்த்தித் தூக்கி லிடும் கம்பங்களேப் பார்த்தாள்; அவள் கணவனின் உடல் அங்கே தொங்கிக் கொண்டிருப்பதைக் கண்டாள். ''போக் கிரிகளே!'' என்று அவள் பைத்தியம் பிடித்து விட்டதைப் போலக் கத்தினுள். ''என்ன காரியம் செய்து விட்டீர்கள்? இவான் குஸ்மீச்! என் கண்களின் ஒளியே! வீரத் திருவுரு வமே! பிரஷ்யர்களின் துப்பாக்கி முனே ஈட்டிகளும் துருக்கியர்களின் தோட்டாக்களும் உங்களேத் தொட வில்லேயே! போர்க் களத்தில் நீங்கள் வீர மரணம் எய்த வில்லேயே! ஒரு ஓடுகாலிப் போக்கிரியிடம் உயிரை இழந்து விட்டீர்களே!'' என்று கதறியழுதாள். ''அந்தக் கிழட்டுப் பேயின் வாயை அடையுங்கள்!'' என்று புகச்சோவ் உத்தர விட்டான். உடனே ஒரு கஸாக் இளேஞன் தன்னுடைய வாளி ஞல் அவளுடைய தலேயில் ஓங்கி அடித்தான். அவள் அந்த வீட்டுப் படிகளின் மீதே செத்து விழுந்தாள். புகச்சோவ் புறப்பட்டுச் சென்ருன். அவனுக்குப் பின்ஞல் மக்கள் கூட்டமாகச் சென்ருர்கள்.

## அத்தியாயம் எட்டு

### அழையா விருந்தினர்

அழைக்கப்படாத விருந்தாளி
ஒரு தார்த்தாரியனைக்
காட்டிலும் மோசமானவன்.

**பழமொழி**

கோட்டைச் சதுக்கத்தில் இப்பொழுது யாருமில்லை. சற்று முன்பு ஏற்பட்ட பலவிதமான பயங்கர அனுபவங்களினால் என் மனம் குழப்பமடைந்திருந்தது. என்னுடைய சிந்தனைகளை ஒன்று சேர்க்க முடியாமல் நான் அங்கேயே நின்று கொண்டிருந்தேன்.

மார்யா இவானவ்னாவின் கதி என்ன என்று தெரிந்து கொள்ள முடியாததனால் என் மனம் அதிகமான வேதனைக்கு உள்ளாகியிருந்தது. அவள் எங்கேயிருக்கிறாள்? அவளுக்கு ஏதேனும் ஆபத்தேற்பட்டதா? அவள் எங்காவது ஒளிந்து கொண்டிருப்பாளா? அப்படியானால் அந்த இடம் பாதுகாப்பானதா?... நான் இப்படிப்பட்ட கவலையைத் தருகின்ற சிந்தனைகளோடு தளகர்த்தரின் வீட்டுக்குள் நுழைந்தேன்.... அங்கே எல்லாம் நாசம். நாற்காலிகள், மேசைகள், பெட்டிகள் எல்லாம் உடைக்கப்பட்டிருந்தன. பீங்கான் பாத்திரங்கள் நொறுங்கிக் கிடந்தன. உபயோகமான எல்லாப் பொருள்களையும் எடுத்துக் கொண்டு போய்விட்டார்கள். மார்யா இவானவ்னாவின் படுக்கை அறைக்குப் போகின்ற சிறிய படிகளில் வேகமாக ஏறிச் சென்று முதல் தடவையாக அவளுடைய படுக்கை அறைக்குள் நுழைந்தேன். அங்கே கொள்ளைக்காரர்கள் அவளுடைய உடைகளையும் உடைமைகளையும் சூறையாடியிருந்தனர். படுக்கை மெத்தை கிழித்துப் போடப்பட்டிருந்தது. தெய்வப் படத்தை வைக்கும் பலகை காலியாக இருந்தது; அதன் முன்னால் விளக்கு மட்டும் எரிந்து கொண்டிருந்தது. சன்னல்களுக்கு இடையில் தொங்கிக்

கொண்டிருந்த கண்ணுடி மட்டுமே சேதமடையாமல் இருந்தது. இந்த எளிமையான அறையின் எஜமானி, இந்தக் கன்னிப் பெண்ணின் அறையின் சொந்தக்காரி எங்கே? ஒரு பயங்கரமான கற்பனே என்னுடைய மூளையில் பட்டுத் தெறித்தது; கொள்ளேக்காரர்களிடம் அவள் சிக்கியிருப்பாளோ? என் இதயத் துடிப்பு அப்படியே நின்று விட்டது.... என் அன்புக்குரிய காதலியின் பெயரைப் பலமாகச் சொல்லி விட்டு என் வேதனையைக் கண்ணீராக வடித்தேன்.... திடீரென்று ஏதோ சிறு சப்தம் கேட்டது. பீரேவின் மறைவிலிருந்து பலாஷ்கா வெளுத்துப் போய், நடுங்கிக் கொண்டு வெளியே வந்தாள்.

''ஓ! பியோத்தர் அந்திரேயெவிச்!'' என்று அவள் என்னே பரிதாபமாகப் பார்த்தாள். ''என்ன கொடுமை! என்ன பயங்கரம்!...'' என்ருள்.

''மார்யா இவானவ்ளு எங்கே? அவளுக்கு ஏதேனும் ஆபத்தேற்பட்டதா?'' என்று நான் பொறுமையில்லாமல் கேட்டேன்.

''சின்ன எஜமானி உயிரோடிருக்கிருள். அவள் அக்குலீஞ பம்பீலவ்ஞவின் வீட்டில் ஒளிந்து கொண்டிருக்கிருள்'' என்று அவள் பதிலளித்தாள்.

''பாதிரியார் வீட்டிலா?'' என்று பயத்தில் நான் பலமாகக் கேட்டு விட்டேன். ''அட கடவுளே! புகச்சோவ் அங்கே போயிருக்கிருன்!...'' என்றேன்.

நான் அந்த அறையிலிருந்து வேகமாக ஓடினேன்; ஒரு நிமிடத்தில் தெருவைக் கடந்து பாதிரியார் வீட்டை நோக்கித் தலைவிரி கோலமாக ஓடினேன். வழியில் எந்தக் காட்சியும் என் கண்ணில் படவில்லே. பாதிரியார் வீட்டிலிருந்து சத்தமும் சிரிப்பும் பாட்டும் வந்து கொண்டிருந்தன.... புகச்சோவ் தன்னுடைய நண்பர்களோடு அங்கே விருந்து சாப்பிட்டுக் கொண்டிருந்தான். பலாஷ்கா என்னேத் தொடர்ந்து ஓடி வந்தாள். அவளிடம் உள்ளே போய் அக்குலீஞ பம்பீலவ்ஞவைக் கூட்டிக் கொண்டுவா; மற்றவர்களுக்குத் தெரியக் கூடாது என்று சொன்னேன். ஒரு நிமிடத்துக்குப் பிறகு பாதிரியார் மனேவி கையில் காலியான பட்டிலோடு வெளியே வந்து என்னேச் சந்தித்தாள்.

''மார்யா இவானவ்ஞ எங்கே இருக்கிருள்? தயவு

செய்து, சொல்!'' என்று மிகுந்த பரபரப்போடு அவளைக் கேட்டேன்.

''பாவம்! அந்தக் குழந்தை! தடுப்புக்குப் பின்னால் என்னுடைய படுக்கையில் படுத்துக் கொண்டிருக்கிறாள்'' என்று பாதிரியார் மனைவி பதில் சொன்னாள். ''ஓ! பியோத்தர் அந்திரேயெவிச்! பயங்கரமான ஆபத்து ஏற்படுவது போலத் தோன்றியது. நல்ல வேளை. கடவுள் கருணையால் அவள் உயிர் தப்பினாள். அந்தப் போக்கிரி அப்பொழுதுதான் சாப்பிட உட்கார்ந்தான். அந்த நேரத்தில் மார்யா இவானவ்னா திடீரென்று விழித்துக் கொண்டு பயத்தால் முனகினாள்.... எனக்கு அப்படியே மூச்சு நின்றுவிடும் போல இருந்தது. அந்த முனகல் சத்தம் அவன் காதிலும் விழுந்தது. 'கிழவியே! யார் அங்கே முனகுவது?' என்று கேட்டான். நான் அவனைக் குனிந்து வணங்கிவிட்டு 'ஐயா, என்னுடைய சகோதரி மகளுக்கு உடம்பு சரியில்லை. ஒரு வாரமாகப் படுத்த படுக்கையாக இருக்கிறாள். அவள்தான் முனகுகிறாள்' என்று பதிலளித்தேன். 'உன்னுடைய சகோதரி மகள் இளம் பெண்ணா?' 'மேன்மை தங்கிய கனவானே! ஆமாம்.' 'அப்படியானால் அந்தப் பெண்ணைப் பார்க்கலாமா?' என் இருதயம் பலமாகத் துடித்தது. ஆனால் வேறு வழியில்லை. 'மேன்மை தங்கிய கனவானே! அந்தப் பெண் எழுந்து நடமாடக் கூடிய நிலையில் இல்லை. அதனால்தான் உங்களைப் பார்த்து மரியாதை செய்ய முடியவில்லை' என்றேன். 'அதனாலென்ன? கிழவியே! நீ கவலைப்படாதே. நான் போய் அவளைப் பார்க்கிறேன்' என்று சொல்லி அந்தக் கழிசடை தடுப்புக்குப் பின்னால் சென்றான். என்ன செய்தான் தெரியுமா? திரையை விலக்கினான். தன்னுடைய கழுகுக் கண்களால் பார்த்தான். வேறொன்றும் செய்யவில்லை... கடவுள் கருணை காட்டினார். நீ நம்புகிறாயோ என்னவோ நானும் என் கணவரும் நமக்கு ஆபத்து வந்து விட்டது; இனி நம்மை விட்டு வைக்க மாட்டான்; சாவு நிச்சயம் என்று நினைத்தோம். அதிருஷ்டவசமாக என் கண்மணிக்கு அவனை அடையாளம் தெரியவில்லை. கடவுளே! இதற்குத்தானா உயிர் வாழ்ந்தோம்! என்ன கொடுமை! பாவம் இவான் குஸ்மீச்! நம்பக் கூட முடியவில்லை... வசிலீசா யெகோரவ்னா. இன்னும் இவான் இக்னாத்தியெவிச்! அவன் என்ன செய்தான்?

உங்களை மட்டும் விட்டுவிட்டானே? அலெக்சேய் இவானவிச் ஷ்வாப்ரினைப் பற்றி உங்களுக்குத் தெரியுமா? கஸாக் வீரனைப் போல முடியை வெட்டிக் கொண்டு அவர்களோடு உட்கார்ந்து என் வீட்டில் விருந்து சாப்பிடுகிறான்! கெட்ட தந்திரக்காரன். என்னுடைய சகோதரி மகளுக்கு உடம்பு சரியில்லை என்று நான் சொன்ன பொழுது அவன் என்னை எப்படிப் பார்த்தான் தெரியுமா? அப்படியே பொசுக்கி விடுவது போலப் பார்த்தான். ஆனால் அவன் என்னைக் காட்டிக் கொடுக்கவில்லை. நாம் அதற்காக அவனுக்கு நன்றி செலுத்த வேண்டும்.'' இந்த நேரத்தில் விருந்தினர்கள் குடிவெறியில் கூச்சல் போடும் சத்தமும் கெராசிம் பாதிரியாரின் குரலும் கேட்டது. அவர்கள் வோட்கா மது வேண்டுமென்று கேட்கவே பாதிரியார் அதற்காகத் தன் மனைவியைக் கூப்பிட்டார். பாதிரியார் மனைவி உள்ளே போக அவசரப்பட்டாள். ''பியோத்தர் அந்திரேயெவிச்? உங்களுடைய வீட்டுக்குப் போங்கள்'' என்றாள். ''இது உங்களுக்கு ஏற்ற இடமல்ல. அந்தப் போக்கிரிகள் களியாட்டம் நடத்திக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் குடிமயக்கத்தில் இருக்கும் பொழுது அவர்கள் முன்பாக வந்து விடாதீர்கள். பியோத்தர் அந்திரேயெவிச்! போய்வாருங்கள். என்ன நடக்குமோ அது நடந்தே தீரும். கடவுள் நம்மைக் கைவிடமாட்டார்'' என்றாள்.

பாதிரியார் மனைவி உள்ளே போன பிறகு நான் வீட்டுக்குப் புறப்பட்டேன். என் மனம் ஓரளவுக்கு நிம்மதியாக இருந்தது. சதுக்கத்தின் வழியாகப் போகும் பொழுது தூக்குக் கம்பங்களைச் சுற்றி ஏராளமான பஷ்கீரியர்கள் நின்று கொண்டு, தொங்கிக் கொண்டிருக்கும் பிரேதங்களின் கால்களிலிருந்து பூட்சுகளைக் கழற்றிக் கொண்டிருப்பதைப் பார்த்தேன். எனக்கு அதிகமான கோபமேற்பட்டது. ஆனால் நான் தலையிடுவதால் ஒரு பயனும் ஏற்படாது என்பதால் என் கோபத்தை அடக்கிக் கொண்டேன். கொள்ளைக்காரர்கள் கோட்டை முழுவதும் வருவதும் போவதுமாக இருந்தார்கள். அதிகாரிகள் வசிக்கும் இடங்களிலிருந்த பொருள்களைச் சூறையாடினார்கள். அதிகமாகக் குடித்துவிட்டு அவர்கள் போட்ட சத்தம் எங்கும் கேட்டது. நான் வீட்டுக்குப்

போய்ச் சேர்ந்த பொழுது ஸவேலிச் வாசலில் நின்று கொண் டிருந்தான்.

என்னைப் பார்த்ததும் ''கடவுள் காப்பாற்றினர்!'' என் ருன். ''அந்தப் போக்கிரிகள் உங்களை மறுபடியும் பிடித்துக் கொண்டார்களோ என்று நான் பயந்து போய் விட்டேன். எஜமான் பியோத்தர் அந்திரேயெவிச்! உங்களுக்குத் தெரி யாதே! அந்தப் போக்கிரிகள் நம்முடைய சாமான்களையெல் லாம் திருடிக் கொண்டு போய் விட்டார்கள். ஆமாம், துணி மணிகள், உடைகள் தட்டுகள்—ஒன்றும் மிச்சமில்லை! போகட்டும். உங்களுடைய உயிரையாவது விட்டு வைத்தார் களே—அதற்குக் கடவுளுக்கு நன்றி செலுத்த வேண்டும்! ஐயா! அவர்கள் தலைவன் யாரென்று உங்களுக்குத் தெரியுமா?'' என்று கேட்டான். ''எனக்குத் தெரியாது. அவன் யார்?''

''ஐயா! விடுதியில் ஒரு குடிகாரப் பயலுக்கு உங்களுடைய முயல் தோல் கோட்டைக் கொடுத்தீர்களே, அவனை நினை விருக்கிறதா? அது புதிய கோட்டு. அந்த மிருகம் அதைப் போட்ட பொழுது கோட்டு பிய்ந்து விட்டதே.''

நான் திகைத்துப் போய் நின்றேன். அந்த வழிகாட்டிக் கும் புகச்சோவுக்கும் தோற்றத்தில் இருந்த ஒற்றுமை இப் பொழுது நன்ருகத் தெரிந்தது. புகச்சோவும் வழிகாட்டி யும் ஒரே நபர்தான் என்று முடிவான பிறகு, அவன் ஏன் எனக்கு இரக்கம் காட்டிஞன் என்பதை நான் புரிந்து கொண் டேன். சம்பவங்களின் விசித்திரமான தொடர்பை நினைத்து நான் அதிசயமடைந்தேன். வழிப்போக்கனுக்கு நான் தானம் கொடுத்த சின்னக் கோட்டு இன்று என்னைத் தூக்குக் கயிற்றி லிருந்து காப்பாற்றியிருக்கிறது. விடுதி, விடுதியாகப் போய்க் கொண்டிருந்த ஒரு குடிகாரன் இன்று பல கோட்டைகளைப் பிடித்துக் கொண்டிருப்பதோடு ஒரு அரசாங்கத்தின் அஸ் திவாரத்தையே ஆட்டிக் கொண்டிருக்கிருன்!

''நீங்கள் ஏதாவது சாப்பிட வேண்டாமா?'' என்று ஸவேலிச் தன்னுடைய பழக்கப்படிக் கேட்டான். ''வீட்டில் ஒன்றுமேயில்லை. இருந்தாலும் நான் போய் எதையாவது வாங்கிக் கொண்டு வந்து சமைக்கிறேன்'' என்ருன்.

அவன் போன பிறகு நான் சிந்தனையில் மூழ்கினேன். இனி என்ன செய்வது? அந்தப் போக்கிரியின் ஆட்சியில் கோட் டையில் தங்கியிருப்பதோ அல்லது அவனுடைய கூட்டத்

தைப் பின்தொடர்ந்து செல்வதோ ஒரு கௌரவமான அதிகாரிக்குப் பொருத்தமான செயல் அல்ல. இந்த நெருக்கடியான நேரத்தில் நான் எங்கேயிருந்தால் என்னுடைய சேவைகள் தாய்நாட்டுக்குப் பயன்படுமோ அங்கே போவது என்னுடைய கடமை.... ஆனால் மார்யா இவானவ்னுவின் அருகில் இருந்து அவளுக்குப் பாதுகாப்புத் தருவது மிகவும் அவசியமென்று என் காதல் என்னை வற்புறுத்தியது. கோட்டையிலுள்ள நிலைமையில் சில முக்கியமான மாற்றங்கள் சீக்கிரமாக ஏற்படுமென்று நான் எதிர்பார்த்தேன். ஆனால் அது வரை அவளுடைய ஆபத்தான நிலைமையைப் பற்றி நினைக்கும் பொழுது எனக்கு நடுக்கமேற்பட்டது.

நான் இப்படிச் சிந்தித்துக் கொண்டிருக்கும் பொழுது ஒரு கஸாக் அறைக்குள் வேகமாக ஓடி வந்தான். ''ஜார் சக்கரவர்த்தி உடனே உங்களை வரச் சொன்னார்'' என்றான்.

''அவர் எங்கேயிருக்கிறார்?'' என்று கேட்டுக் கொண்டு நான் புறப்படத் தயாரானேன்.

''தளகர்த்தருடைய வீட்டில் இருக்கிறார்'' என்று அந்த கஸாக் பதிலளித்தான். ''விருந்துக்குப் பிறகு என்னுடைய தலைவர் குளியல் கூடத்துக்குப் போனார். இப்பொழுது அவர் ஓய்வெடுத்துக் கொண்டிருக்கிறார். கனவான் அவர்களே! எல்லாவிதமான அறிகுறிகளையும் வைத்துப் பார்க்கும் பொழுது அவர் மிகவும் உயர்ந்த மனிதர் என்றுதான் சொல்ல வேண்டும். மாலையுணவின் போது இரண்டு முழுப் பன்றிக் குட்டிகளை அவர் ஒருவரே சாப்பிட்டார். சுடச்சுட வெந்நீரில் குளித்தார். அவருடைய உதவியாளர் தராஸ் கூரச்கினால் கூட அந்த வெந்நீரின் சூட்டைத் தாங்க முடியவில்லை. எனவே ஃபோம்கா பிக்பாயெவிடம் துடப்பத்தைக் கொடுத்தார். அவ்வளவு சூடான வெந்நீரில் குளித்த பிறகு தலையில் பச்சைத் தண்ணீர் ஊற்றிய பிறகுதான் அவருக்கு உணர்வு திரும்பியது. என்ன வேண்டுமானாலும் சொல்லுங்கள். அவர் மிகவும் உயர்ந்த மனிதர் என்பதில் சந்தேகம் இல்லை. அவருடைய மார்பில் ஜார் சக்கரவர்த்திக்குரிய சின்னங்கள்—ஒரு பக்கத்தில் ஐந்து கோபெக் நாணய அளவுள்ள இரட்டைக் கழுகின் படம், மறு பக்கத்தில் அவருடைய உருவம்—இருப்பதை குளியல் கூடத்தில் இருந்தவர்களிடம் காட்டினாராம்'' என்றான்.

அந்த கஸாக் வீரனின் அபிப்பிராயத்தை மறுத்துப் பேச நான் விரும்பவில்லை. எனவே அவனோடு தளகர்த்தரின் வீட்டுக்குப் புறப்பட்டேன். போகும் வழியில் புகச்சோவுக்கும் எனக்கும் ஏற்படப் போகும் சந்திப்பு எப்படியிருக்கும், அது எவ்விதமாக முடியும் என்று கற்பனை செய்ய முயற்சித்துக் கொண்டு சென்றேன். நான் நிம்மதியில்லாமல் தவித்தேன் என்பதை வாசகர்கள் எளிதாகப் புரிந்து கொள்ள முடியும்.

மாலை மறைகின்ற நேரத்தில் நாங்கள் தளகர்த்தரின் வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தோம். கறுப்பு நிறத்தில் தோன்றிய தூக்குக் கம்பங்களையும் அவற்றில் தொங்கிக் கொண்டிருந்த பிரேதங்களையும் பார்ப்பதற்குப் பயங்கரமாக இருந்தது. தளகர்த்தரின் வீட்டுக்கு முன்னால் இரண்டு கஸாக் வீரர்கள் காவல் காத்துக் கொண்டு நின்றார்கள். வீட்டுக்கு வெளியே பரிதாபத்துக்குரிய வசிலீசா யெகோரவ்னாவின் உடல் இன்னும் அகற்றப்படாமல் கிடந்தது. என்னைக் கூட்டிக் கொண்டு வந்த கஸாக் வீரன் உள்ளே சென்று நான் வந்திருக்கிறேன் என்பதைத் தெரிவித்தான். உடனே திரும்பி வந்து என்னை ஓர் அறைக்குள் கூட்டிச் சென்றான். அந்த அறையில்தான் நேற்று நான் மார்யா இவானவ்னாவிடமிருந்து மிகவும் உருக்கமான வகையில் விடை பெற்றுக் கொண்டேன்.

அங்கே நான் கண்ட காட்சி மறக்க முடியாததாகும். வெள்ளைத் துணி விரிக்கப்பட்டிருந்த மேசையில் பாட்டில்களும் டம்ளர்களும் நிறைய வைக்கப்பட்டிருந்தன. அங்கே புகச்சோவ், தொப்பிகளும் வர்ணச் சட்டைகளும் அணிந்திருந்த பத்து கஸாக் முதியவர்கள் புடை சூழ உட்கார்ந்திருந்தான். அவர்கள் அதிகமாகக் குடித்திருந்தபடியால் அவர்களுடைய சொரசொரப்பான முகங்கள் சிவந்து போயிருந்தன; கண்கள் பிரகாசமாகத் தோன்றின. அவர்கள் கூட்டத்தில் புதிதாகச் சேர்ந்திருக்கும் துரோகிகளான ஷ்வாப்ரின், மக்சீமிச் ஆகியோர் அங்கே காணப்படவில்லை. ''கனவான் அவர்களே! வருக! எங்களோடு உட்கார்ந்து விருந்தில் பங்கு கொள்ள வேண்டும்'' என்று புகச்சோவ் என்னை வரவேற்றான். அங்கேயிருந்தவர்கள் சிறிது விலகிக் கொண்டு நான் உட்காருவதற்கு இடம் கொடுத்தார்கள். அந்த மேசையின் கோடியில் நான் மௌனமாக உட்கார்ந்தேன். எனக்குப் பக்கத்திலிருந்த நல்ல தோற்றமுடைய,

ஒல்லியான கஸாக் இளைஞன் ஒரு டம்ளரில் வோட்கா மதுவை ஊற்றிக் கொடுத்தான். ஆனால் நான் அதைத் தொட வில்லை. என்னைச் சுற்றி உட்கார்ந்திருந்தவர்களை நான் மிகுந்த ஆர்வத்தோடு கவனித்தேன். புகச்சோவ் மேசை யின் தலைமையிடத்தில் முழங்கையை மேசை விரிப்பின் மீது வைத்துக் கொண்டு உட்கார்ந்திருந்தான். அவனுடைய கறுப்பு தாடி அவனுடைய பெரிய கையைச் சுற்றிக் கிடந் தது. அவனுடைய தோற்றம் சாதாரணமாகவும் சுமுகமாக வும் இருந்தது: மூர்க்கத் தனம் சிறிதுமில்லை. சுமார் ஐம்பது வயது மதிக்கத்தக்க ஒருவரிடம் அவன் அடிக்கடி பேசினான். அவரைப் பிரபு என்றும் திமபேயிச் என்றும் சில சமயங் களில் மாமா என்றும் கூப்பிட்டான். அவர்கள் தோழர்களைப் போல நடந்து கொண்டார்கள்; தங்கள் தலைவனுக்குத் தனி யான மரியாதை எதுவும் கொடுக்கவில்லை. காலையில் கோட் டையைத் தாக்கியதையும், தங்கள் கலகம் வெற்றியடைந் திருப்பதையும் எதிர்காலத்தில் என்ன செய்ய வேண்டும் என்பதைப் பற்றியும் பேசிக் கொண்டார்கள். அவர்கள் தற்பெருமையாகப் பேசிக் கொண்டதோடு அவரவர் அபிப் பிராயங்களையும் சொல்லிக் கொண்டிருந்தார்கள். புகச்சோ வின் அபிப்பிராயங்களையும் எந்தத் தயக்கமும் இல்லாமல் மறுத்துப் பேசினார்கள். இப்படி விநோதமாக நடைபெற்ற இராணுவ ஆலோசனைக் கூட்டத்தில் ஓரென்புர்க் கோட்டை மீது படையெடுப்பதென்று முடிவு செய்யப்பட்டது. இந்தத் துணிச்சலான முடிவு ஆபத்தான வகையில் அநேகமாக வெற்றியடையவிருந்ததைப் பின்னர் காண்போம். மறு நாள் காலையில் படைகளைத் திரட்டிக் கொண்டு புறப்படுவ தென்று முடிவு செய்யப்பட்டது. ''சகோதரர்களே! நாம் தூங்கச் செல்வதற்கு முன்பு எனக்குப் பிடித்தமான பாடலைப் பாடுங்கள்'' என்றான் புகச்சோவ். ''சுமக்கோவ்! நீ பாட்டை ஆரம்பித்துக் கொடு'' என்றான். என் பக்கத்திலிருந்தவர் ஒரு படகோட்டியின் சோகமான பாடலைத் தமது உடைந்த குரலில் பாடினார். அங்கிருந்த எல்லோரும் அவரோடு சேர்ந்து பாடினார்கள்:

பசுங்காடுகளே! ஓலத்தை நிறுத்துங்கள்!
நான் வீரத்தோடு சிந்திக்க வேண்டும்.

நாளைக் காலையில் எனக்கு விசாரணை
நீதிபதி யார்? ஜார் சக்கரவர்த்தி.
நம்முடைய எஜமான் என்னைக் கேட்பார்:
விவசாயி மகனே! உண்மையைச் சொல்—
கொள்ளை அடித்தாயே! உன் கூட்டாளிகள்
எத்தனை பேர்? உண்மையைச் சொல்—
அவர்கள் சிலரா? அல்லது பலரா?
நீதி தவறாத சக்கரவர்த்தியே!
நான் உண்மையைச் சொல்கிறேன்.
நடந்தது அனைத்தையும் சொல்கிறேன்.
என்னுடைய தோழர்கள் நால்வர்:
காரிருள் எனது முதல் தோழன்,
கூரிய கத்தி இரண்டாம் தோழன்,
சிட்டெனப் பறக்கும் குதிரை
எனது மூன்றாம் தோழன்,
விறைப்பான வில் நான்காம்
தோழன்—அம்புகள் தூதர்கள்
என்று பதில் சொல்வேன்.
நீதி தவறாத சக்கரவர்த்தி
திருவாய் மலர்ந்து பேசுவார்:
விவசாயி மகனே! வீரப்புதல்வனே!
உனக்குத் திருடத் தெரியும்.
வீரமாகப் பேசத் தெரியும்.
உனக்குப் பரிசு கொடுப்பேன்:
திறந்த வெளியில் மாளிகை,
இரண்டு உயர்ந்த கம்பங்கள்,
நடுவே குறுக்குச் சட்டம்.

தூக்குக் கம்பங்களைப் பற்றிய நாட்டுப் பாடலை அதே தூக்குக் கம்பங்களில் தங்கள் உயிர்களை வெகு சீக்கிரத்தில் இழக்கப் போகும் நபர்கள் பாடிய பொழுது எனக்கேற்பட்ட உணர்ச்சியை என்னால் வருணிக்க முடியவில்லை. அவர்களுடைய குரூரமான முகங்கள், சங்கீதக் குரல், சொல்லாற்றல் மிக்க வார்த்தைகளை முகவாட்டத்தோடு பாடிய முறை —இவை அனைத்தும் சேர்ந்து என் மனதில் மிகவும் பயத்தை ஏற்படுத்தின.

அங்கேயிருந்தவர்கள் எல்லோரும் மற்றொரு தடவை மது வருந்திய பிறகு புகச்சோவிடம் விடை பெற்றுக் கொண்டு வெளியே போனார்கள். நானும் அவர்களைப் பின் தொடர்வது போல எழுந்தேன். ஆனால் புகச்சோவ் என்னை உட்காரச் சொல்லிவிட்டு ''உங்களோடு பேச விரும்பு

கிறேன்'' என்று கூறினான். நாங்கள் இருவர் மட்டுமே அங்கு உட்கார்ந்திருந்தோம்.

முதலில் சில விநாடிகள் இருவருமே பேசாமலிருந்தோம். புகச்சோவ் என்னைத் தொடர்ச்சியாக உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான்; சில சமயங்களில் தனது இடது, கண்ணைச் சுருக்கிக் கொண்டு போக்கிரித் தனமும் ஏளனமும் கலந்த வாறு குறிப்பிடத்தக்க முறையில் என்னைப் பார்த்தான். கடைசியில் அவன் உண்மையான மகிழ்ச்சியோடு திடீரென்று சிரித்த பொழுது, அதன் காரணம் தெரியா மலே நானும் சிரித்தேன்.

''கனவான் அவர்களே!'' என்று பேச ஆரம்பித்தான். ''என்னுடைய ஆட்கள் உங்கள் கழுத்தில் சுருக்குக் கயிறைப் போட்ட பொழுது பயந்து போய் விட்டீர்களல்லவா? சும்மா ஒத்துக் கொள்ளுங்கள். இனி மரணம்தான் என்று முடிவு செய்தீர்களல்லவா? உங்கள் வேலைக்காரன் மட்டும் இல்லை யென்றால் நீங்கள் குறுக்குச் சட்டத்தில் தொங்கியிருப்பீர் கள். அந்தக் கிழட்டுப் பயலை நான் உடனே அடையாளம் கண்டு கொண்டேன். உங்களுக்கு வழியைக் காட்டி விடு திக்கு அழைத்துக் கொண்டு போன நபர் ஜார் சக்கரவர்த்தி என்பதை நீங்கள் நினைத்ததுண்டா? கனவான் அவர்களே! நீங்கள் நினைத்ததுண்டா?'' (இந்த வார்த்தைகளைச் செல் லும் பொழுது அவன் இறுமாப்போடு மர்மம் நிறைந்த வனாகவும் தோற்றமளித்தான்.) ''இன்று நீங்கள் எனக்கு விரோதமாக நடந்து கொண்டீர்கள்'' என்று அவன் தொடர்ந்து பேசினான். ''ஆனால் சில நெருக்கடிகள் காரண மாக என்னுடைய எதிரிகளிடம் அகப்பட்டுவிடக் கூடாது என்று நான் மாறுவேடத்தில் சுற்றிக் கொண்டிருந்த காலத் தில் நீங்கள் என்னிடம் அன்பாக நடந்து கொண்டீர்கள். அதனால்தான் உங்கள் உயிரைக் காப்பாற்றினேன். ஆனால் பொறுத்துப் பாருங்கள்! என்னுடைய நாட்டைப் பிடித்து விட்ட பிறகு உங்களுக்கு இன்னும் பெரிய உதவிகளைச் செய் வேன். எனக்கு விசுவாசமாகப் பாடுபடுவேன் என்று சத் தியம் செய்வீர்களா?'' என்று கேட்டான்.

அந்த ராஸ்கலின் கேள்வியும் அவனுடைய துணிச்ச லும் எனக்கு மிகவும் வேடிக்கையாக இருந்தது. நான் என்னையறியாமல் சிரித்து விட்டேன்.

''எதற்காகச் சிரிக்கிறீர்கள்?'' என்று அவன் முகத்தைச் சுளித்துக் கொண்டு கோபமாகக் கேட்டான். ''நான்தான் ஜார் சக்கரவர்த்தி என்பதை நீங்கள் நம்பவில்லையா? உண்மையைச் சொல்லுங்கள்.''

என்ன பதில் சொல்வதென்று தெரியாமல் நான் திகைத்துப் போய் விட்டேன். இந்த வழிப்போக்கனை என்னுடைய சக்கரவர்த்தி என்று ஒத்துக் கொள்ள என்னால் முடியவில்லை; அவ்வாறு ஒத்துக் கொண்டால் அது மன்னிக்க முடியாத கோழைத்தனம் என்று எனக்குத் தோன்றியது. ஆனால் அவனைப் பாசாங்குக்காரன் என்று நேருக்கு நேராகச் சொல்வதும் முடியாது. அதனால் என் உயிருக்கு ஆபத்து ஏற்படலாம். தூக்குக் கம்பங்களுக்குப் பக்கத்தில் நான் நின்று கொண்டிருந்த பொழுது, என்னைச் சுற்றிலும் ஏராளமான மக்கள் குழுமியிருந்த நேரத்தில் எனக்கேற்பட்ட கோபாவேசத்தின் முதற்சீற்றத்தில் அவ்வாறு சொல்லவும் அதன் விளைவை ஏற்றுக் கொள்ளவும் நான் தயாராக இருந்தேன். ஆனால் இப்பொழுது அது வெறும் போலித்துணிச்சல் என்று எனக்குத் தோன்றியது. நான் தயக்கத்தோடு பேசாமலிருந்தேன். புகச்சோவ் என்னுடைய பதிலுக்காக அமைதியின்றிக் காத்துக் கொண்டிருந்தான். கடைசியில் (அந்த நேரத்தை மனநிறைவோடு இன்னும் நினைத்துப் பார்க்கிறேன்) கடமையுணர்ச்சி மனிதர்களுக்கே உரித்தான பலவீனத்தை வென்றது.

''சரி! உண்மை முழுவதையும் சொல்லி விடுகிறேன். உங்களைச் சக்கரவர்த்தியாக நான் ஏற்றுக் கொள்ள முடியுமா என்று நீங்களே உங்களைக் கேட்டுப் பாருங்கள். உங்களுக்கு நியாயம் தெரியும். நானும் உண்மையாக நடந்து கொள்ள வேண்டுமல்லவா?'' என்றேன்.

''அப்படியானால் உங்களுடைய அபிப்பிராயப்படி நான் யார்?''

''நீங்கள் யார் என்பது கடவுளுக்குத்தான் தெரியும். நீங்கள் யாராக இருந்த போதிலும் ஓர் ஆபத்தான விளையாட்டில் ஈடுபட்டிருக்கிறீர்கள் என்பது உண்மையே.''

புகச்சோவ் சட்டென்று என்னை உற்றுப் பார்த்தான்.

''அப்படியானால் நான்தான் ஜார் சக்கரவர்த்தி பியோத்தர் ஃபியோதரவிச் என்று நீங்கள் நம்பவில்லை. மிக

வும் சரி. ஆனால் துணிச்சலுடையவன்தானே கடைசியில் வெற்றி பெறுவான்? அந்தக் காலத்தில் கிரீஷ்கா அத்ரி யேபியெவ்[56] சக்கரவர்த்தியாக ஆட்சி செய்யவில்லையா? என்னைப் பற்றி எப்படி வேண்டுமானாலும் நினைத்துக் கொள்ளுங்கள். ஆனால் என்னோடு சேர்ந்திருங்கள். நான் யாராக இருந்தால் உங்களுக்கென்ன? பெயரில் என்ன இருக்கிறது? எனக்கு விசுவாசமாகவும் உண்மையாகவும் பாடுபட்டால் நான் உங்களை பீல்டு-மார்ஷல் பதவிக்கு உயர்த்துவேன்; இளவரசராகக் கூட நியமிப்பேன். என்ன சொல்கிறீர்கள்?'' என்று கேட்டான்.

''இல்லை'' என்று நான் உறுதியாகச் சொன்னேன். ''நான் மேன் மக்கள் குடும்பத்திலே பிறந்தவன். சக்கரவர்த்தினிக்கு விசுவாசமாக நடப்பேன் என்று சத்தியம் செய்திருக்கிறேன். நான் உங்களோடு சேர முடியாது. நீங்கள் உண்மையிலேயே எனக்கு உதவி செய்ய விரும்பினால், ஓரென்புர்குக்குப் போவதற்கு என்னை அனுமதியுங்கள்'' என்றேன்.

புகச்சோவ் சிந்தித்துக் கொண்டிருப்பது போலத் தோன்றியது.

''நான் உங்களைப் போக அனுமதித்தால், எனக்கு விரோதமாகச் சண்டை செய்ய மாட்டேன் என்று சத்தியம் செய்வீர்களா?'' என்று கேட்டான்.

''அவ்விதமாக நான் எப்படி சத்தியம் செய்ய முடியும்?'' என்று கேட்டேன். ''முடிவு செய்வது என் கையிலில்லை என்பது உங்களுக்குத் தெரியும். உங்களை எதிர்த்துச் சண்டை செய்யுமாறு எனக்கு உத்தரவு வந்தால், நான் அவ்வாறே செய்வேன். அதற்கு மேல் அதில் விவாதத்திற்கு இடமில்லை. இப்பொழுது உங்களிடம் அதிகாரம் இருக்கிறது. உங்களுக்குக் கீழே இருப்பவர்களிடம் கட்டுப்பாட்டையும் கீழ்ப்படிதலையும் வற்புறுத்துகிறீர்களல்லவா? நான் உங்களிடம் வேலை செய்து கொண்டு உங்களுக்குக் கீழ்ப்படிந்து நடக்கா விட்டால் என்னைப் பற்றி என்ன நினைப்பீர்கள்? என் உயிர் உங்கள் கையிலிருக்கிறது. என்னைப் போகுமாறு அனுமதித்தால் நான் உங்களுக்கு நன்றி கூறுவேன். என்னைத் தூக்கிலே போட்டால் கடவுள் அதற்கு நியாயம் வழங்குவார். என் மனதிலே பட்டதை மறைக்காமல் சொல்லி விட்டேன்'' என்றேன்.

என்னுடைய நேர்மை புகச்சோவுக்கு வியப்பை ஏற் படுத்தியிருக்க வேண்டும்.

''அப்படியானால் சரி!'' என்று சொல்லிவிட்டு என் தோளில் தட்டிக் கொடுத்தான். ''தண்டனை கொடுக் கும் பொழுது நான் கடுமையாக தண்டிப்பேன். ஆனால் மன்னிக்கும் பொழுது தாராளமாக நடந்து கொள்வேன். நீங்கள் எங்கு வேண்டுமானாலும் போகலாம்; எப்படி வேண்டுமானாலும் நடந்து கொள்ளலாம். நீங்கள் என்னை நாளைக்குச் சந்தித்து விடை பெற்றுக் கொள்ளலாம். இப் பொழுது வீட்டுக்குப் போய்த் தூங்குங்கள். எனக்கும் தூக் கம் வருகிறது'' என்றான்.

நான் வீட்டுக்குப் புறப்பட்டேன். வானத்தில் மூடுபனி கவிந்திருந்தது. எங்கும் ஒரே மௌனம். நிலாவும் நட்சத் திரங்களும் பிரகாசமாக ஒளி வீசின; கோட்டைச் சதுக்க மும் தூக்குக் கம்பங்களும் அந்த ஒளியில் நன்றாகத் தெரிந் தன. கோட்டை இருளில் மூழ்கி அமைதியாக இருந்தது. மதுக் கடையில் மட்டும் விளக்குகள் எரிந்து கொண்டிருந் தன. இவ்வளவு நேரமாகிய பிறகும் அங்கே பலர் குடித்துக் கொண்டும் களியாட்டங்களில் ஈடுபட்டுக் கூச்சலிட்டுக் கொண்டுமிருந்தனர். நான் பாதிரியார் வீட்டை நோக்கிப் பார்த்தேன். வீட்டுக் கதவும் சன்னல்களும் சாத்தப்பட் டிருந்தன. அங்கே எல்லாம் அமைதியாக இருப்பது போலத் தோன்றியது.

நான் வீட்டுக்குத் திரும்பிய பொழுது என்னைக் காண வில்லையே என்று ஸவேலிச் வருத்தத்தோடிருப்பதைக் கண் டேன். எனக்கு விடுதலை கிடைத்திருக்கும் செய்தியைக் கேட்ட பொழுது அவனடைந்த மகிழ்ச்சியை வருணிப்பது கடினமே. ''கடவுளே! உன் கருணைக்கு நன்றி'' என்று சிலுவைக் குறியிட்டுக் கொண்டு சொன்னான். ''காலையில் கோட் டையை விட்டுப் புறப்பட்டு, எங்கே போனால் நல்லதோ அங்கே போவோம். நான் உங்களுக்கு உணவு தயாரித்து வைத்திருக்கிறேன். சாப்பிடுங்கள். பிறகு காலை வரை நிம் மதியாகத் தூங்குங்கள். கடவுள் உங்களுக்குக் கருணை செய் வார்'' என்றான்.

நான் அவனுடைய ஆலோசனையைப் பின்பற்றி நன் றாகச் சாப்பிட்டு விட்டு, உடலும் உள்ளமும் சோர்ந்த நிலைமையில் வெறுந்தரையிலேயே படுத்துத் தூங்கினேன்.

# அத்தியாயம் ஒன்பது

## பிரிக்கப்படுதல்

உன்னைக் காதலித்தது இன்பமான காலம்,
என் இதயத்தின் இனிய பெண்ணே!
உன்னைப் பிரிவது துயரம் நிறைந்தது—
என் இன்னுயிரைப் பறிப்பது போன்றது.

ஹொராஸ்கோவ்[57]

அதிகாலையில் முரசு கொட்டும் சத்தத்தைக் கேட்டு நான் விழித்துக் கொண்டேன். உடனே வழக்கமாகக் கூட்டம் நடைபெறும் இடத்துக்குச் சென்றேன். தூக்குக் கம்பங்களுக்கு அருகே புகச்சோவின் ஆட்கள் வரிசையாக நிற்க ஆரம்பித்துக் கொண்டிருந்தனர். அந்தத் தூக்குக் கம்பங்களில் நேற்று தூக்கிலிடப்பட்டவர்களின் பிரேதங்கள் இன்னும் தொங்கிக் கொண்டிருந்தன. கஸாக் வீரர்கள் குதிரை மீது உட்கார்ந்திருந்தனர். படைவீரர்கள் ரைபிள் துப்பாக்கிகளுடன் நின்று கொண்டிருந்தனர். கொடிகள் காற்றிலே அசைந்தாடிக் கொண்டிருந்தன. சில பீரங்கிகள் பீரங்கி வண்டிகளில் ஏற்றப்பட்டிருந்தன; அவற்றில் எங்கள் பீரங்கியும் இருந்தது. கோட்டைக்குள் வசித்தவர்கள் எல்லோருமே பாசாங்குக்காரனின் வருகையை எதிர்பார்த்து அங்கே நின்று கொண்டிருந்தார்கள். தளகர்த்தரின் வீட்டுக்கு முன்பு நன்கு அலங்கரிக்கப்பட்ட ஒரு வெள்ளைக் குதிரையின் கடிவாளத்தைப் பிடித்துக் கொண்டு ஒரு கஸாக் வீரன் நின்று கொண்டிருந்தான். தளகர்த்தரின் மனைவியின் பிரேதம் எங்கே என்று பார்த்தேன். அதை ஒரு ஓரத்திலே இழுத்துப் போட்டு முரட்டுத் துணியால் மூடி வைத்திருந்தார்கள். வெகு நேரத்துக்குப் பிறகு புகச்சோவ் வீட்டை விட்டு வெளியே வந்தான். அங்கே கூடியிருந்தவர்கள் தங்கள் தலைகளிலிருந்து தொப்பிகளைத் தூக்கி வணக்கம் செலுத்தினார்கள். புகச்சோவ் முன்வாயிலில் நின்றபடியே அவர்களுக்கு முகமன் கூறினான். அங்கே நின்று கொண்டிருந்த பெரியவர்களில் ஒருவர் அவனிடம் செப்புக் காசுகள் நிறைந்த பையைக்

கொடுத்தார். அவன் கை நிறையக் காசுகளை அள்ளிக் கூட்டத்தில் வீசி எறிந்தான். அங்கிருந்த ஜனங்கள் ஓடிச் சென்று காசுகளைப் பொறுக்கினார்கள். அப்பொழுது ஏற்பட்ட மோதலில் சிலருக்குக் காயமேற்பட்டது. புகச்சோவைச் சுற்றி அவருடைய முக்கியமான கூட்டாளிகள் நின்று கொண்டிருந்தார்கள். அந்தக் கூட்டத்தில் ஷ்வாப்ரினும் நிற்பதைப் பார்த்தேன். எங்களுடைய கண்கள் சந்தித்துக் கொண்டன. என் கண்களிலே தோன்றிய அருவருப்பை அவர் பார்த்திருக்க வேண்டும். உடனே அதிகக் கோபத்தோடு தம்முடைய பார்வையைத் திருப்பிக் கொண்டார். என்னை அலட்சியமாக நினைப்பது போல நடந்து கொண்டார். நான் கூட்டத்தில் நிற்பதைப் புகச்சோவ் பார்த்து என்னை நோக்கித் தலையை அசைத்துவிட்டுத் தன்னிடம் வருமாறு கூப்பிட்டான். ''கனவான் அவர்களே! நான் சொல்வதைக் கேளுங்கள். உடனே ஓரென்புர்குக்குப் புறப்படுங்கள். அங்கேயிருக்கின்ற கவர்னர், ஜெனரல்கள் எல்லோரிடமும் என்னை ஒரு வாரத்துக்குள் எதிர்பார்க்கலாம் என்ற தகவலைச் சொல்லுங்கள். என்னை அன்போடும் பணிவோடும் வரவேற்பது நல்லதென்று ஆலோசனை சொல்லுங்கள். இல்லையென்றால் அவர்களுக்குக் குரூரமான மரணம் நிச்சயம். உங்கள் பிரயாணம் மகிழ்ச்சிகரமாக இருக்கட்டும். போய்வாருங்கள்'' என்றான். பிறகு அங்கே நின்று கொண்டிருந்தவர்களைப் பார்த்துத் திரும்பி ஷ்வாப்ரினை நோக்கிக் கையை நீட்டினான். ''வீரர்களே! இவர்தான் உங்களுடைய புது தளபதி. எல்லாவற்றிலும் அவர் சொல்லைக் கேட்டு நடக்க வேண்டும். இந்தக் கோட்டைக்கும் உங்களுக்கும் அவர்தான் இனி பொறுப்பாக இருப்பார்'' என்றான். இந்த வார்த்தைகளைக் கேட்ட பொழுது எனக்கு மிகவும் அச்சமேற்பட்டது. இனிமேல் கோட்டையில் எல்லா அதிகாரமும் ஷ்வாப்ரினுக்குத்தான். அட கடவுளே! மார்யா இவானவ்னா அவர் பொறுப்பில்தான்! அப்படியானால் மார்யா இவானவ்னாவின் கதி என்ன? புகச்சோவ் படிகளில் இறங்கி வந்து கொண்டிருந்தான். அந்த வெள்ளைக் குதிரையை அவன் அருகிலே கொண்டுபோய் நிறுத்தினார்கள். அங்கே நின்று கொண்டிருந்த கஸாக் வீரர்கள் உதவி செய்வதற்கு முன்பாக அவன் துள்ளிக் குதித்து சேணத்தின் மீது உட்கார்ந்தான்.

அந்த நேரத்தில் ஸவேலிச் கூட்டத்தை விலக்கிக் கொண்டு முன்னே வந்து புகச்சோவிடம் ஒரு காகிதத்தை நீட்டுவதைப் பார்த்தேன். இது என்ன விபரீதமாக இருக்கிறதே, எப்படி முடியுமோ என்று நான் யோசித்தேன். ''என்ன இது?'' என்று புகச்சோவ் போலியான கம்பீரத்தோடு கேட்டான். ''படித்துப் பாருங்கள். உங்களுக்கே தெரியும்'' என்று ஸவேலிச் பதிலளித்தான். புகச்சோவ் அந்தக் காகிதத்தை வாங்கிக் கொண்டு அதைக் கவனமாக வெகு நேரம் பார்த்துக் கொண்டிருந்தான். ''உன்னுடைய கையெழுத்து கோணல் மாணலாக இருக்கிறது'' என்று கடைசியில் சொன்னுன். ''உனது எழுத்து எம்முடைய கண்களுக்குப் புரியவில்லை. என்னுடைய முதல் காரியதரிசி எங்கே?'' என்று கேட்டான்.

கார்ப்போரல் உடையணிந்த ஒரு இளைஞன் புகச்சோவை நோக்கி ஓடி வந்தான். ''இதை உரக்கப் படி'' என்று சொல்லிவிட்டு அந்தப் பாசாங்குக்காரன் அவனிடம் காகிதத்தைக் கொடுத்தான். என்னுடைய முன்னுள் ஆசிரியன் புகச்சோவிடம் என்ன எழுதிக் கொடுத்திருக்கிருன் என்று தெரிந்து கொள்ள நான் மிகவும் ஆவலோடிருந்தேன். முதல் காரியதரிசி அந்தக் காகிதத்தில் எழுதியிருந்ததைப் பலமாக எழுத்துக் கூட்டிப் படித்தான்:

''இரண்டு மேலங்கிகள்—ஒன்று கலிக்கோ துணியிலும் அடுத்தது கோடு போட்ட பட்டுத் துணியிலும் தைக்கப்பட்டது—ஆறு ரூபிள்கள்.''

''இதற்கென்ன அர்த்தம்?'' என்று புகச்சோவ் கோபமாகக் கேட்டான்.

''மேலே படிக்கச் சொல்லுங்கள்'' என்று ஸவேலிச் அமைதியாகப் பதிலளித்தான்.

முதல் காரியதரிசி தொடர்ந்து பட்டியலைப் படித்தான்:

''பச்சைத் துணியில் தைக்கப்பட்ட இராணுவ உடை—ஏழு ரூபிள்கள்.

''வெள்ளைத் துணியில் தைக்கப்பட்ட டிரவுசர்—ஐந்து ரூபிள்கள்.

''நீளமான கை வைத்த பனிரெண்டு சட்டைகள்—பத்து ரூபிள்கள்.

''ஒரு தேநீர் கலப் பெட்டி—இரண்டு ரூபிள், ஐம்பது கோபெக்குகள்....''

''இதெல்லாம் என்ன?'' என்று புகச்சோவ் சீறி விழுந்தான். ''உன்னுடைய சட்டை, டிரவுசர், தேநீர்ப் பெட்டிக்கும் எனக்கும் என்ன சம்பந்தம்?'' என்று கேட்டான்.

ஸவேலிச் தன்னுடைய தொண்டையைச் சரி செய்த பிறகு விளக்கம் கொடுக்க ஆரம்பித்தான்.

''ஐயா! இங்கேயுள்ள போக்கிரிகள் என்னுடைய எஜமானரின் உடைமைகளைத் திருடி விட்டார்கள். அந்தப் பட்டியல்தான் இது'' என்றான்.

''எந்தப் போக்கிரிகள்?'' என்று இடிப்பது போலக் கேட்டான் புகச்சோவ்.

''என்னை மன்னியுங்கள். வாய்த் தவறுதலாகச் சொல்லி விட்டேன்'' என்றான் ஸவேலிச். ''அப்படியானால் அவர்கள் போக்கிரிகள் அல்ல. உங்களுடைய வீரப் படையினர் என் எஜமானருடைய வீட்டைச் சோதனை போட்டுக் கொள்ளையடித்துக் கொண்டுபோன பொருள்களை எழுதியிருக்கிறேன். கோபப்பட வேண்டாம். யானைக்கும் அடி சறுக்கும். அவனைத் தொடர்ந்து படிக்கச் சொல்லுங்கள்'' என்றான்.

''மேலே படி'' என்றான் புகச்சோவ். காரியதரிசி மேலே படித்தான்:

''பஞ்சடைக்கப்பட்ட பருத்தித் துணி மெத்தை ஒன்று; பட்டுத் துணி மெத்தை ஒன்று—நான்கு ரூபிள்கள்.

''ஓரங்களில் நரித் தோல் வைக்கப்பட்ட சிகப்புத் துணிக் கோட்டு—நாற்பது ரூபிள்கள்.

''மேன்மை மிக்க தங்களிடம் விடுதியில் கொடுக்கப்பட்ட முயல் தோல் கோட்டு—பதினைந்து ரூபிள்கள்.''

''என்ன பிதற்றல்!'' என்று புகச்சோவ் கண்கள் சிவப்படைந்து கோபமாகக் கேட்டான்.

என்னுடைய முன்னாள் ஆசிரியனைப் பற்றி எனக்குப் பயமேற்பட்டதை நான் ஒத்துக் கொள்ள வேண்டும். அவன் மேலும் ஏதோ விளக்கம் சொல்ல ஆரம்பித்த பொழுது புகச்சோவ் அவன் பேச்சில் குறுக்கிட்டான்.

''அற்பமான விஷயங்களுக்காக என்னைத் தொந்தரவு செய்ய உனக்கு எவ்வளவு தைரியம்?'' என்று அவன் கோப

மாகக் கத்தினன். தன் காரியதரிசி கையிலிருந்த காகிதத்தைப் பிடுங்கி ஸவேலிச்சின் முகத்தில் தூக்கி எறிந்தான். ''முட்டாள் கிழவனே! அவை கொள்ளையடிக்கப்பட்டன என்றால் துரதிருஷ்டம்தான். உன்னையும் உன்னுடைய எஜமானையும் என்னுடைய உத்தரவுக்குக் கீழ்ப்படியாதவர்களோடு சேர்த்துத் தூக்கில் போடாமல் விட்டதற்கு நீ உன்னுடைய வாழ்நாள் முழுவதும் என்னையும் என்னுடைய ஆட்களையும் கும்பிட வேண்டும். முயல் தோல் கோட்டு! உன்னைச் சவுக்கால் அடித்து உன்னுடைய உடம்பிலுள்ள தோலைப் பியத்து கோட்டுத் தைக்குமாறு சொல்லி விடுவேன். தெரியுமா?'' என்ருன்.

''உங்கள் விருப்பம் போல செய்யுங்கள்'' என்று ஸவேலிச் பதிலளித்தான். ''நான் ஒரு அடிமை. என்னுடைய எஜமானுடைய சொத்துக்களுக்கு நான் பதில் சொல்ல வேண்டுமே.''

புகச்சோவ் தாராளமான மனேபாவத்தில் இருந்தான் என்றுதான் எனக்குத் தோன்றியது. அவன் மேலும் ஒரு வார்த்தை கூடப் பேசாமல் குதிரையைத் திருப்பிக் கொண்டு போய்விட்டான். ஷ்வாப்ரினும் சில பெரியவர்களும் அவனைப் பின்தொடர்ந்து சென்ருர்கள். புகச்சோவின் ஆட்கள் கோட்டையிலிருந்து ஊர்வலமாக வந்தார்கள். புகச்சோவ் போவதைப் பார்ப்பதற்காக அங்கேயிருந்த கூட்டம் முன்னே சென்றது. கடைசியில் நானும் ஸவேலிச்சும் மட்டுமே அந்தச் சதுக்கத்தில் நின்று கொண்டிருந்தோம். என்னுடைய முன்னுள் ஆசிரியன் அந்தக் காகிதத்தைக் கையில் வைத்துக் கொண்டு, அதை மிகவும் வருத்தமாகப் பார்த்தவாறு நின்று கொண்டிருந்தான்.

எனக்கும் புகச்சோவுக்கும் நல்ல உறவு ஏற்பட்டதைப் பார்த்ததும் அதைப் பயன்படுத்திக் கொள்ளலாம் என்று அவன் நினைத்திருக்க வேண்டும். ஆனுல் அவனுடைய கெட்டிக்காரத் திட்டம் நிறைவேறவில்லை. நான் அவனைக் கண்டிக்க விரும்பினுலும் அவனைப் பார்க்கும் பொழுது எனக்குச் சிரிப்புத்தான் வந்தது.

''ஐயா! நீங்கள் சிரிக்கலாம். ஆனுல் மறுபடியும் அடுத்த ஊரில் வீடு பிடித்து உட்காரும் பொழுது, இது சிரிக்கக் கூடிய விஷயமல்ல என்பதைப் புரிந்து கொள்வீர்கள்'' என்ருன்.

நான் மார்யா இவானவ்னுவைப் பார்ப்பதற்காகப் பாதிரியார் வீட்டுக்கு வேகமாகச் சென்றேன். பாதிரியார் மனைவி என்னைச் சந்தித்து எனக்கு வேதனையளிக்கும் செய்தியைச் சொன்னுள். மார்யா இவானவ்னுவுக்கு இரவு நேரத்தில் காய்ச்சல் மோசமானதாகவும் இப்பொழுது சுய உணர்வில்லாமல் பிதற்றிக் கொண்டு இருப்பதாகவும் தெரிவித்தாள். நான் அவளுடைய அறைக்குச் சென்றேன். அவள் படுக்கையின் அருகே நான் சப்தமில்லாமல் போன பொழுது அவள் முகம் எப்படி மாறி விட்டது என்பதைப் பார்த்ததும் அப்படியே திகைத்து விட்டேன். அவளுக்கு என்னை அடையாளம் தெரியவில்லை. நான் அவள் படுக்கையின் அருகிலேயே வெகு நேரம் நின்று கொண்டிருந்தேன். கெராசிம் பாதிரியாரும் அவருடைய அன்பான மனைவியும் எனக்கு ஆறுதலாகச் சொன்ன எந்த வார்த்தையும் என் காதில் விழவில்லை. என் மனதில் விபரீதமான கற்பனைகள் தோன்றின. பயங்கரமான* கலகக்காரர்கள் மத்தியில் அந்த ஏழை அனுதைப் பெண் சிக்கியிருப்பதையும் அவளுக்கு எத்தகைய உதவியும் செய்ய முடியாத பரிதாபமான நிலை எனக்கு ஏற்பட்டிருப்பதையும் நினைத்த பொழுது என்னுடைய இதயம் வெடித்துவிடும் போலத் தோன்றியது. ஷ்வாப்ரின்! என் மனம் மற்றவர்களைக் காட்டிலும் ஷ்வாப்ரினைப் பற்றியே எப்பொழுதும் நினைத்தது. புகச்சோவ் அவனுக்கு முழு அதிகாரம் கொடுத்திருக்கிறுன்; அவனுடைய வெறுப்புக்கு ஆளான அந்த அறியாப் பெண், அந்த துரதிர்ஷ்டசாலி இருக்கும் கோட்டைக்கு அவனே தலைவனுகி விட்டான். அவன் என்ன செய்வான் என்று சொல்ல முடியாது. ஆனுல் நான் செய்யக் கூடியதும் ஒன்றுமில்லை. அவளுக்கு எப்படி உதவி செய்வது? அந்தக் கொடியவனின் கைகளிலிருந்து அவளை எப்படிக் காப்பாற்றுவேன்? எனக்கு ஒரே ஒரு வழிதான் தோன்றியது. உடனே ஒரென்புர்க் கோட்டைக்குச் சென்று, பெலகோர்ஸ்க் கோட்டையை விடுவிக்குமாறு அங்கேயுள்ளவர்களைக் கேட்டுக் கொள்வதென்றும் அந்த முயற்சியில் எனக்குரிய பங்கைச் செலுத்துவதென்றும் முடிவு செய்தேன். அந்தப் பெண்ணை என் மனைவி என்று கருதியபடியால் அவளை கவனித்துக் காப்பாற்றுங்கள் என்று அக்குலீனு பம்பீலவ்னுவிடம் பல தடவை கேட்டுக் கொண்டு அவளிட

மிருந்தும் பாதிரியாரிடமிருந்தும் நான் விடை பெற்றுக் கொண்டேன். அந்த அபலைப் பெண்ணின் கையை நான் முத்தமிட்ட பொழுது என் கண்களிலிருந்து பெருகிய கண்ணீர் அவள் கையை நனைத்தது. பாதிரியார் மனைவி என்னோடு கதவு வரை வந்து எனக்கு விடை கொடுத்தாள். ''போய்வாருங்கள், பியோத்தர் அந்திரேயெவிச்! போய் வாருங்கள். நாம் மீண்டும் நல்ல சூழ்நிலையில் சந்திப்பதற்குக் கடவுள் அருள் புரிவார். எங்களை மறந்துவிட வேண்டாம். அடிக்கடி கடிதம் எழுதுங்கள். பாவம் மார்யா இவானவ்னா——அவளுக்கு ஆறுதல் கூறுவதற்கோ அல்லது அவளைப் பாது காப்பதற்கோ உங்களைத் தவிர வேறு ஒருவருமில்லை'' என்றாள்.

கோட்டைச் சதுக்கத்துக்குப் போனதும், தூக்குக் கம்பங்களை ஏறிட்டுப் பார்த்து என்னுடைய வணக்கத்தைச் செலுத்தினேன். பிறகு ஓரென்புர்க்குக்குச் செல்லும் பாதையில் நான் நடக்க ஆரம்பித்தேன்; என்னை விட்டுப் பிரியாத ஸவேலிச்சும் என்னைப் பின் தொடர்ந்தான்.

நான் சிந்தனையில் மூழ்கியபடியே நடந்து கொண்டிருந்த பொழுது எனக்குப் பின்னால் குதிரையின் குளம்புச் சத்தம் கேட்டது. நான் திரும்பிப் பார்த்த பொழுது குதிரையில் ஒரு கஸாக் வீரன் மற்றொரு குதிரையின் கடிவாளத்தைக் கையில் வைத்துக் கொண்டு வேகமாக வந்து கொண்டிருப்பதைப் பார்த்தேன். அவன் தூரத்திலிருந்தபடியே என்னை நிற்குமாறு சைகை காட்டினான். நான் அங்கே நின்றேன். சிறிது நேரத்தில் எங்களுடைய பழைய சார்ஜென்ட் எங்கள் அருகில் வந்து குதிரையை விட்டுஇறங்கிக் கொண்டு, தான் கொண்டு வந்த மற்றொரு குதிரையின் கடிவாளத்தை என்னிடம் கொடுத்தான். ''கனவான் அவர்களே! எங்கள் தலைவர் இந்தக் குதிரையையும்,அவர் அணிந்திருந்த இந்தக் கோட்டையும் உங்களிடம் கொடுக்குமாறு சொன்னார்'' என்றான். (அந்தக் குதிரையின் சேணத்தில் ஒரு ஆட்டுத் தோல் கோட்டு வைக்கப்பட்டிருந்தது.) ''அவர் இவற்றைத் தவிர——'' இந்த இடத்தில் என்ன சொல்வதென்று தெரியாமல் அவன் தடுமாறினான்——''ஐம்பது கோபெக் காசும்... கொடுத்து விட்டார்... ஆனால் வருகிற வழியில் பணத்தைத் தொலைத்து விட்டேன். அதற்காக என்னை மன்னியுங்கள்''

என்றான். ஸவேலிச் அவனை ஓரப்பார்வை பார்த்தவாறு கேட்டான்: ''வழியில் தொலைத்து விட்டாயா? உன் சட்டையில் சலசலக்கிறதே அது என்ன? சீ! மானங்கெட்ட பிறவி!'' என்றான். ''சட்டைக்குள் சலசலக்கிறதா?'' என்று அந்த சார்ஜென்ட் சிறிது கூடக் கவலையில்லாமல் திருப்பிச் சொன்னான். ''சட்டைக்குள் சலசலப்பது கடிவாளம்; காசு இல்லை'' என்று அந்த சார்ஜென்ட் சிறிதும் கவலையில்லாமல் பதிலளித்தான். ''ரொம்ப சரி'' என்று சொல்லி நான் அந்த விவாதத்தை முடித்து வைத்தேன். ''அவரிடம் என்னுடைய நன்றியைச் சொல். போகும் வழியில் அந்த ஐம்பது கோபெக் காசைத் தேடி எடுத்து மது பானம் வாங்கிக் குடி'' என்று சொன்னேன். ''கனவான் அவர்களே! மிக்க நன்றி!'' என்று சொல்லிக் கொண்டு அவன் குதிரையைத் திருப்பினான். ''உங்கள் நலனுக்காக எப்பொழுதும் பிரார்த்தனை செய்வேன்'' என்றான். இப்படிச் சொன்ன பிறகு சட்டைப் பையைக் கையில் பிடித்துக் கொண்டு அவன் வேகமாகப் புறப்பட்டான். ஒரு நிமிட நேரத்தில் எங்கள் பார்வையிலிருந்து மறைந்து விட்டான்.

நான் அந்த ஆட்டுத் தோல் கோட்டை அணிந்து கொண்டு குதிரை மீது ஏறி உட்கார்ந்தேன். ஸவேலிச் எனக்குப் பின்னால் உட்கார்ந்து கொண்டான். ''ஐயா! அந்த ராஸ்கலிடம் நான் கொடுத்த மனுவினால் ஏற்பட்ட நன்மையைப் பார்த்தீர்களா? அந்தத் திருடன் அவமானமடைந்திருக்க வேண்டும். நீண்ட கால்களையுடைய கிழட்டுக் குதிரை! ஆட்டுத் தோல் கோட்டு! ஹூம்... நம்மிடமிருந்து அந்த ராஸ்கல் திருடியதில் பாதி கூட வரவில்லை. அதிலும் நீங்களாக அவனுக்குக் கொடுத்ததை நான் கணக்கில் சேர்க்கவில்லை. சரி. இது மட்டுமாவது கிடைத்ததே. ஒன்றுமில்லாததற்கு வங்கு நாய் உரோமத்தில் சிறிது கிடைத்தாலும் சரிதான்'' என்றான்.

## அத்தியாயம் பத்து

### ஓரென்புர்க் முற்றுகை

*மலைகளிலும் வயல்களிலும் படைகளை நிறுத்தி*
*வானத்தில் பறக்கும் கழுகைப் போல*
*கோட்டை சூழ்ந்த நகரத்தைப் பார்த்தான்.*
*பீரங்கிகளை மறைக்க மதிலை உயர்த்தினான்.*
*இரவு வந்ததும் இராணுவ வீரர்கள்*
*பீரங்கிகளைக் கொண்டு சென்றனர் கீழே.*

**ஹெராஸ்கோவ்**[58]

நாங்கள் ஓரென்புர்கை நெருங்கிய பொழுது கோட்டையிலிருந்த படை வீரர்களின் மேற்பார்வையில் ஒரு கூட்டம் கோட்டையைச் சுற்றிப் பாதுகாப்பு வேலைகளைச் செய்து கொண்டிருந்ததைப் பார்த்தோம். அவர்களுடைய தலைகள் மொட்டையடிக்கப்பட்டு, பழுக்கக் காய்ச்சிய இரும்பினால் முகங்களில் சூடு போடப்பட்டிருந்தது. அவர்களில் சிலர் மண்வெட்டிகளைக் கொண்டு பூமியைத் தோண்டிக் கொண்டிருந்தனர். வேறு சிலர் அகழியில் சேர்ந்திருந்த குப்பைகளை வண்டிகளில் அப்புறப்படுத்திக் கொண்டிருந்தனர். கொத்தனார்கள் கோட்டை மதில்களின் மேல் நின்று கொண்டு செங்கற்களை உபயோகித்துக் கோட்டைச் சுவர்களைச் செப்பனிட்டுக் கொண்டிருந்தனர். கோட்டை வாயிலில் காவல் காத்துக் கொண்டிருந்த படை வீரர்கள் எங்களை வாயிலில் நிறுத்தி அனுமதிச் சீட்டைக் காட்டுமாறு கேட்டனர். பெலகோர்ஸ்க் கோட்டையிலிருந்து நான் வருகிறேன் என்று தெரிந்ததும் அந்த சார்ஜென்ட் என்னை உடனே ஜெனரலின் வீட்டுக்குக் கூட்டிச் சென்றான்.

நான் போன நேரத்தில் ஜெனரல் தமது தோட்டத்தில் ஆப்பிள் மரங்களைப் பார்வையிட்டுக் கொண்டிருந்தார். இலை

யுதிர் காலத்தில் வீசுகின்ற காற்றில் மரங்களின் இலைகள் விழுந்து விட்டன. அவருடைய வயோதிகத் தோட்டக்காரனின் உதவியோடு அவற்றின் அடி மரத்தில் கவனமாக வைக்கோல் வைத்துக் கட்டிக் கொண்டிருந்தார். ஜெனரலின் முகபாவம் அமைதியாகவும் ஆரோக்கியமாகவும் சுமுகமானதாகவும் தோன்றியது. என்னைச் சந்தித்ததில் அவருக்கு மிகவும் மகிழ்ச்சியே. பெலகோர்ஸ்க் கோட்டையில் நடைபெற்ற பயங்கரமான சம்பவங்களுக்கு நான் சாட்சி என்ற காரணத்தால் என்னிடம் அவற்றைப் பற்றி விசாரித்தார். நான் அவரிடம் எல்லா விவரங்களையும் தெரிவித்தேன். நான் சொன்ன விஷயங்களை அவர் பட்டுப் போன கிளைகளை வெட்டிக் கொண்டே கவனமாகக் கேட்டார். அந்த சோகமான சம்பவங்களைப் பற்றிய என்னுடைய வர்ணனை முடிந்ததும் ''பாவம் மிரோனவ்'' என்று அனுதாபப்பட்டார். ''என்ன கொடுமை! அவர் ஒரு சிறந்த அதிகாரி. திருமதி மிரோனவா மிகவும் அன்பாக நடந்து கொள்வாள். காளான் ஊறுகாய்களை எவ்வளவு நன்றாகத் தயாரிப்பாள், தெரியுமா? காப்டன் மகள் மாஷா என்னவானாள்?'' என்று கேட்டார். பாதிரியார் மனைவியின் பராமரிப்பில் மாஷா கோட்டையில் தங்கியிருக்கிறாள் என்று சொன்னேன். ''அது சரியல்ல'' என்றார் ஜெனரல். ''அது ரொம்பத் தப்பு. அந்தப் போக்கிரிகளிடம் எவ்விதமான கட்டுப்பாடும் இருக்காது. அந்த அப்பாவிப் பெண்ணுடைய கதி என்னவாகும்?'' என்றார். பெலகோர்ஸ்க் கோட்டை சமீபத்திலேதான் இருக்கிறது; எனவே மேதகு ஜெனரல் அவர்கள் அந்தக் கோட்டையில் மிகவும் பரிதாபமான நிலையில் இருக்கின்ற ஜனங்களை விடுவிப்பதற்காகத் தமது படைகளைத் தாமதமில்லாமல் அனுப்புவார் என்று நான் நம்புவதாகச் சொன்னேன். ஜெனரல் சந்தேகப்படுவது போலத் தமது தலையை அசைத்தார். ''பார்க்கலாம்; பார்க்கலாம்'' என்றார். ''அதைப் பற்றி பிறகு பேசுவோம். சந்தர்ப்பம் கிடைக்கும் பொழுது என்னோடு தேநீர் அருந்த வா! இன்று மாலையில் யுத்த ஆலோசனைக் கூட்டம் நடத்தப் போகிறேன். அந்தப் போக்கிரி புகச்சோவையும் அவனுடைய படைகளையும் பற்றி நீதான் உண்மையான செய்திகளைச் சொல்ல முடியும். இப்பொழுது போய் ஓய்வெடுத்துக் கொள்'' என்றார்.

எனக்கு ஒதுக்கப்பட்ட இருப்பிடத்துக்கு நான் போன பொழுது ஸவேலிச் அதைச் சுத்தப்படுத்தி சீரமைத்துக் கொண்டிருந்தான். யுத்த ஆலோசனைக் கூட்டத்துக்குக் குறிப்பிட்ட நேரம் எப்பொழுது வருமென்று என்னால் முடிந்த அளவுக்குப் பொறுமையோடு காத்துக் கொண்டிருந்தேன். எனவே என்னுடைய பிற்கால வாழ்க்கையில் மிகவும் முக்கியமான விளைவை ஏற்படுத்தப் போகின்ற அந்த யுத்த ஆலோசனைக் கூட்டத்துக்கு நான் போகாமல் இருந்து விடவில்லை என்பதை வாசகர்கள் எளிதாகப் புரிந்து கொள்ள முடியும். ஜெனரல் குறிப்பிட்ட நேரத்துக்குச் சற்று முன்பே நான் அங்கு போய் விட்டேன்.

எனக்கும் முன்னதாக நகர சபை அதிகாரி ஒருவர் அங்கே வந்து உட்கார்ந்திருந்தார். அவர் நன்கு பருத்த உடலும் சிவப்பான கன்னங்களும் உடைய முதியவர்; சரிகை மேலங்கி அணிந்திருந்தார். அவர் சுங்க இலாகாவின் முக்கிய அதிகாரியாக இருக்கலாம் என்று எனக்குத் தோன்றியது. அவர் இவான் குஸ்மீச் தன்னுடைய பழைய நண்பர் என்று கூறி விட்டு அவருடைய முடிவைப் பற்றி விசாரித்தார். நான் பேசிக் கொண்டிருக்கும் பொழுது அடிக்கடி கேள்விகள் கேட்டார்; அல்லது பயன் தரக் கூடிய கருத்துக்களைச் சொன்னார். அவற்றிலிருந்து அவருக்கு இராணுவ விஞ்ஞானத்தைப் பற்றி அதிகமாகத் தெரியாத போதிலும் அறிவுக் கூர்மையுடையவர்; எதையும் சீக்கிரமாக கிரகித்துக் கொள்ளும் திறமையுடையவர் என்பதைத் தெரிந்து கொண்டேன். இதற்கிடையில் அந்தக் கூட்டத்தில் கலந்து கொள்ளுமாறு அழைக்கப்பட்டிருந்த மற்றவர்களும் வந்து சேர்ந்தார்கள். அங்கே இராணுவ விஷயங்கள் தெரிந்தவர்கள் ஜெனரலைத் தவிர வேறு ஒருவரும் இல்லை. எல்லோரும் உட்கார்ந்த பிறகு தேநீர் கொண்டுவரப்பட்டது. இராணுவ நிலைமையைப் பற்றி ஜெனரல் விரிவாகவும் மிகத் தெளிவாகவும் எடுத்துக் கூறினார்.

''கனவான்களே! கலகக்காரர்களுக்கு எதிராக நாம் எந்த முறையைக் கையாள வேண்டும்—முன்னேறித் தாக்குவதா அல்லது தற்காப்பைப் பின்பற்றுவதா—என்பதை இப்பொழுது முடிவு செய்ய வேண்டும். ஒவ்வொரு முறையிலும் சாதகமும் உண்டு; பாதகமும் உண்டு. முன்னேறித்

தாக்குவதன் மூலம் எதிரியை விரைவாக முறியடிக்கும் வாய்ப்பு ஏற்படும். தற்காப்பைப் பின்பற்றுவது நம்பிக்கையையும் பாதுகாப்பையும் கொடுக்கும்... எனவே நாம் முறைப்படி வாக்கெடுப்பு நடத்துவோம்—அதாவது, முதலில் கீழ் நிலையிலுள்ள அதிகாரிகளின் கருத்தைத் தெரிந்து கொள்வோம்'' என்று சொல்லிவிட்டு என்னை நோக்கித் திரும்பினர். ''உங்கள் கருத்தைத் தெரிவிக்கலாம்'' என்றார்.

நான் எழுந்து நின்று புகச்சோவையும் அவனுடைய கும்பலையும் சுருக்கமாக வருணித்துவிட்டு அந்தப் பாசாங்குக்காரனால் இராணுவப் படையின் தாக்குதலை எதிர்த்து நிற்க முடியாது என்று சொன்னேன்.

அங்கேயிருந்த அதிகாரிகளுக்கு என் கருத்து திருப்திகரமாக இருக்கவில்லை என்பது தெரிந்தது. என்னுடைய கருத்து ஓர் இளைஞனின் அவசரபுத்தியையும் துணிச்சலையும் பிரதிபலிப்பதாகக் கருதப்பட்டது. அங்கே ஒரு முணுமுணுப்புச் சத்தம் கேட்டது; ''முட்டாள்'' என்ற வார்த்தை கீழ் ஸ்தாயியில் சொல்லப்பட்டதையும் கேட்டேன். ஜெனரல் என்னை நோக்கித் திரும்பிக் கொண்டு சிரித்தபடியே பேசினார்:

''அதிகாரியே! இராணுவ ஆலோசனைக் கூட்டங்களில் முதல் வாக்கு எப்பொழுதுமே முன்னேறித் தாக்குவதற்கு ஆதரவாகவே இருக்கும். அது இயற்கையானதுதான். இப்போது வாக்கெடுப்பைத் தொடர்வோம். நகர சபை உறுப்பினர் அவர்களே! உங்கள் அபிப்பிராயத்தைச் சொல்லுங்கள்!'' என்றார்.

சரிகை தைக்கப்பட்ட மேலங்கியை அணிந்திருந்த முதியவர் ரம் மது சேர்க்கப்பட்ட தேநீரை வேகமாகக் குடித்தார். அது அவருடைய மூன்றாவது கோப்பையாகும்.

''மேதகு ஜெனரல் அவர்களே! நாம் முன்னேறித் தாக்கக் கூடாது; தற்காப்பு நடவடிக்கைகளும் சரியல்ல என்று நினைக்கிறேன்'' என்று அவர் பேச ஆரம்பித்தார்.

''உறுப்பினர் அவர்களே!'' என்று ஜெனரல் ஆச்சரியத்தோடு குறுக்கிட்டார். ''நமக்கு வேறு என்ன வழி இருக்கிறது? ஒன்று முன்னேறித் தாக்க வேண்டும். அல்லது தற்காப்பு நடவடிக்கைகளைச் செய்ய வேண்டும்....'' என்றார்.

''ஜெனரல் அவர்களே! நாம் எதிரியை விலைக்கு வாங்க வேண்டும்.''

''ஆஹா! ஹா! உங்கள் கருத்து மிகவும் பொருத்தமானது தான். எதிரியை விலைக்கு வாங்குவதும் சரியே. உங்களுடைய ஆலோசனையைப் பின்பற்ற முடியுமா என்பதை ஆராயலாம். அந்த ராஸ்கலின் தலையைக் கொண்டு வருபவர்களுக்கு... நம்முடைய ரகசிய நிதியிலிருந்து... எழுபத்தைந்து அல்லது நூறு ரூபிள்கள் வரை கொடுப்பதாக அறிவிக்கலாம்....''

''அப்படி அறிவித்தால் அந்தக் கொள்ளைக்காரர்கள் தங்கள் தலைவனுடைய கையையும் காலையும் கட்டிக் கொண்டு வந்து நம்மிடம் ஒப்படைப்பார்கள் என்பது மிகவும் உறுதியாகும். அப்படி நடக்காவிட்டால் என்னை நகர சபை உறுப்பினர் என்று நினைக்க வேண்டாம். வெறும் கிர்கீஸிய ஆட்டுக்கிடா என்று கூப்பிடுங்கள்'' என்று சுங்க அதிகாரி சவால் விட்டார்.

''இந்த ஆலோசனையையும் நாம் விவாதிக்கலாம்'' என்று ஜெனரல் கூறினார். ''எனினும் எப்படிப்பட்ட முடிவு செய்தாலும் இராணுவ நடவடிக்கைகளும் தேவையாகத் தான் இருக்கும். கனவான்களே! எல்லோரும் முறைப்படி உங்கள் கருத்துக்களைத் தெரிவியுங்கள்'' என்றார்.

அங்கே சொல்லப்பட்ட எல்லாக் கருத்துக்கள் என்னுடைய யோசனைக்கு விரோதமானவையாகவே இருந்தன. எல்லா அதிகாரிகளும் படை வீரர்களை முழுமையாக நம்ப முடியாது என்றார்கள். வெற்றி நிச்சயமாக ஏற்படும் என்று உறுதியாகச் சொல்ல முடியாத சூழ்நிலையில் நிதானமாக நடந்து கொள்வது அவசியம் என்று வலியுறுத்தினார்கள். திறந்த வெளியில் போருக்குச் செல்வதைக் காட்டிலும் கனமான கோட்டைச் சுவர்களுக்குப் பின்னால் பீரங்கிகளின் பாதுகாப்பில் இருப்பதுதான் அதிக புத்திசாலித்தனமென்பது எல்லோருடைய கருத்தாகவும் இருந்தது. கடைசியில் ஜெனரல் அவர்கள் எல்லோருடைய கருத்துக்களையும் கேட்ட பிறகு, தம்முடைய புகைக் குழாயிலிருந்த சாம்பலைத் தட்டி விட்டுப் பின்வருமாறு கூறினார்:

''கனவான்களே! இங்கே முதலில் அபிப்பிராயம் கூறிய சாதாரண அதிகாரியின் கருத்தை நான் அப்படியே ஏற்றுக் கொள்கிறேன் என்பதை உங்களிடம் தெரிவிப்பது அவசியம். ஏனென்றால் அவருடைய யோசனை இராணுவத் தந்திரங்களின்படி சரியானது. இராணுவ நடவடிக்கைகளில்

பின்பற்றப்படும் முக்கியமான தந்திரங்கள் முன்னேறித் தாக்குவதை வலியுறுத்துகின்றன; தற்காப்பு நடவடிக்கையை ஆதரிக்கவில்லை.''

இப்படிச் சொல்லிவிட்டு அவர் பேச்சை நிறுத்திக் கொண்டு புகைக் குழாயை நிரப்பினார். எனக்கு மிகவும் அகம்பாவம் ஏற்பட்டது. அங்கேயிருந்த அதிகாரிகளை அதிகமான ஆணவத்தோடு பார்த்தேன். அவர்கள் அதிருப்தியடைந்தவர்களைப் போன்று கவலையோடு தங்களுக்கிடையே பேசிக் கொண்டிருந்தார்கள்.

''ஆனால் கனவான்களே!'' என்று ஜெனரல் மறுபடியும் பேச ஆரம்பித்தார். அவருடைய வாயிலிருந்து நீண்ட பெருமூச்சும் அடர்த்தியான புகைச் சுருளும் வெளி வந்தது. ''மாட்சிமை பொருந்திய, கருணை நிறைந்த சக்கரவர்த்தினி அவர்கள் என்னிடம் ஒப்படைத்திருக்கும் மாநிலங்களின் பாதுகாப்பு பற்றிய பிரச்சினை ஏற்பட்டிருக்கின்ற காரணத்தால் இவ்வளவு பெரிய விஷயத்தில் என்னுடைய சொந்தப் பொறுப்பில் ஒரு முடிவை உங்களிடம் வற்புறுத்துவது சரியல்ல. எனவே நான் பெரும்பான்மையோர் கருத்தை ஏற்றுக் கொள்கிறேன். கோட்டைக்குள் பாதுகாப்பைப் பலப்படுத்திக் கொண்டு எதிரிகள் முற்றுகையிட வருவதை எதிர்பார்ப்பதுதான் மிகவும் பொருத்தமான நடவடிக்கை என்று முடிவு செய்திருக்கிறோம். அதே சமயத்தில் கோட்டைக்கு வெளியே எதிரிகளை நமது பீரங்கிப் படையைக் கொண்டு விரட்டுவோம்; சிறு எண்ணிக்கையுள்ள படைகளையும் இதற்காக அனுப்புவோம் (முடியுமானால்)'' என்று கூறி முடித்தார்.

இப்பொழுது அதிகாரிகள் என்னை ஏளனமாகப் பார்த்தார்கள். கூட்டத்துக்கு வந்தவர்கள் கலைந்து சென்றார்கள். அந்த அனுபவமிக்க இராணுவ அதிகாரி சரியான அபிப்பிராயத்தைச் சொன்னாரே தவிர, அங்கேயிருந்த அறிவும் அனுபவமுமில்லாத நபர்கள் சொன்னதை ஏற்று முடிவு செய்தார். அவருடைய பலவீனத்தை நினைத்து நான் மிகவும் வருந்தினேன்.

இந்தச் சிறப்புமிக்க ஆலோசனைக் கூட்டம் முடிந்த சில தினங்களில் புகச்சோவ், முன்பு கூறியது போலவே, ஓரென்புர்க் மீது படையெடுத்து வருகிறான் என்று கேள்விப்

பட்டோம். அந்தப் படைகள் வந்து கொண்டிருப்பதை கோட்டைச் சுவரின் உயரமான மூலையில் நின்று கொண்டு நான் பார்த்தேன். போன தடவை அவர்கள் தாக்கிய பொழுது நான் அவர்கள் படையின் எண்ணிக்கையைக் கணக்கிட்டேன். இப்பொழுது அந்தப் படை ஏராளமாகப் பெருகியிருப்பதாக எனக்குத் தோன்றியது. புகச்சோவ் பல சிறு கோட்டைகளைக் கைப்பற்றிய பொழுது கிடைத்த பீரங்கிகளைச் சேர்த்து ஒரு பீரங்கிப் படையையும் தயாரித்து விட்டான் என்று பார்த்தேன். யுத்த ஆலோசனைக் கூட்டம் எடுத்த முடிவை நினைக்கும் பொழுது ஓரென்புர்க் கோட்டைக்குள் நெடுங்காலத்துக்கு அடைபட்டிருக்க வேண்டுமென்று எனக்குத் தோன்றியது. இந்த தர்மசங்கடத்தை நினைக்கும் பொழுது எனக்கு அழுகை வரும் போல இருந்தது.

ஓரென்புர்க் கோட்டை முற்றுகையைப் பற்றி நான் இங்கே விரிவாக எழுதப் போவதில்லை. ஏனென்றால் அது ஒரு குடும்பத்தோடு மட்டும் சம்பந்தப்பட்ட விஷயமல்ல; வரலாற்றின் ஒரு பகுதி. இந்த முற்றுகையின் போது ஸ்தல நிர்வாகத்தின் திறமையின்மையினால் கோட்டைக்குள் இருந்தவர்கள் பலவிதமான நெருக்கடிகளையும், பஞ்சம் உள்பட பல கஷ்டங்களையும் அனுபவித்தார்கள் என்பதை மட்டும் இங்கே குறிப்பிட விரும்புகிறேன். ஓரென்புர்கில் அன்றாட வாழ்க்கை எவ்வளவு மோசமாக இருந்திருக்கும் என்பதை நீங்களே கற்பனை செய்து கொள்ளலாம். எல்லோரும் தங்களுக்கு ஏற்படப் போகும் முடிவைக் கவலையோடு எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். விலை வாசிகள் உண்மையில் அதிகமாக உயர்ந்த பொழுது மக்கள் எல்லோரும் தவித்தனர். வீடுகளின் கொல்லைப் புறங்களில் பீரங்கி குண்டு விழுவது ஜனங்களுக்கு சகஜமாகி விட்டது. புகச்சோவின் தாக்குதல்கள் கூட முன்பிருந்ததைப் போல ஜனங்களிடம் பொதுவான அக்கறையை ஏற்படுத்தவில்லை. ஒன்றும் செய்யாமல் உட்கார்ந்திருப்பது எனக்கு அதிகமான களைப்பை ஏற்படுத்தியது. நாட்கள் ஓடிக் கொண்டிருந்தன. பெலகோர்ஸ்க் கோட்டையிலிருந்து எனக்கு எந்தத் தகவலும் கிடைக்கவில்லை. எல்லாப் பாதைகளும் துண்டிக்கப்பட்டிருந்தன. மார்யா இவானவ்னாவைப் பிரிந்திருப்பதை என்

ஞல் தாங்கிக் கொள்ள முடியவில்லே. அவளுக்கு எத்தகைய ஆபத்து ஏற்பட்டிருக்குமோ என்று நினேத்து நினேத்து உருகினேன். என்னுடைய ஒரே பொழுதுபோக்கு குதிரைச் சவாரி செய்வதுதான். புகச்சோவின் உதவியால் என்னிடம் ஒரு நல்ல குதிரை இருந்தது. எனக்கு அன்ருடம் கிடைத்த குறைவான உணவை அந்தக் குதிரையோடு பகிர்ந்து கொண்டேன். தினமும் அந்தக் குதிரையிலேறிக் கொண்டு கோட்டைக்கு வெளியே சென்று வருவேன். அப்படிச் செல்லும் பொழுதெல்லாம் நானும் புகச்சோவின் குதிரை வீரர்களும் துப்பாக்கி குண்டுகளேப் பரிமாறிக் கொள்வது வழக்கமாக இருந்தது. இந்த சம்பவங்கள் கலகக்காரர்களுக்குச் சாதகமாக முடிவடைவதுதான் வழக்கம். ஏனென்ருல் அவர்களிடம் நல்ல குதிரைகள் இருந்தன. அவர்களுக்கு நல்ல சாப்பாடும் போதுமான அளவுக்கு மது பானமும் கிடைத்துக் கொண்டிருந்தன. எங்களுடைய குதிரைகளும் வீரர்களும் போதுமான உணவு கிடைக்காமல் மெலிந்து போயிருந்த சூழ்நிலேயில் கலகக்காரர்களே வெற்றிகரமாக எதிர்க்க முடியவில்லே. சில சமயங்களில் எங்களுடைய காலாட்படையும் இத்தகைய சண்டைகளில் ஈடுபடும். ஆஞல் அந்த வீரர்களும் உணவு பற்ருமல் மெலிந்து போனவர்களே. மேலும் பனி ஆழமாக விழுந்திருந்த காரணத்தால் கலகக்காரர்களின் குதிரைப் படைக்கு இவர்களால் அதிக சேதத்தை ஏற்படுத்த முடியவில்லே. கோட்டை மதில்களிலிருந்த பீரங்கிகளிலிருந்து இடி இடிப்பது போல குண்டுகளே வீசிஞலும் அதஞல் பலன் ஒன்றுமில்லே. பீரங்கிகளே வெளியே கொண்டு போஞல் அவை பெரும்பாலும் பூமியில் புதைந்துவிடும். எங்கள் குதிரைகள் மெலிந்து, களேத்துப் போயிருந்த காரணத்தால் பீரங்கிகளே இழுத்துக் கொண்டு வர அவற்ருல் முடியவில்லே. எங்களுடைய இராணுவ நடவடிக்கைகள் இவ்விதமாகவே இருந்தன! ஓரென்புர்க் அதிகாரிகள் சொன்ன நிதானமும் சமயோசிதமும் இதுதான் போலும்!

ஒரு சந்தர்ப்பத்தில் அதிகமான எண்ணிக்கையுள்ள கலகக்காரர்கள் படையை நாங்கள் எப்படியோ முறியடித்து அவர்களே ஓட ஓட விரட்டிஞேம். அவர்களில் ஒரு கஸாக் வீரன் மற்ற வீரர்களிடமிருந்து பிரிந்து போய் ஓடிக் கொண்

டிருந்த நேரத்தில் நான் அவனை விரட்டிப் பிடித்தேன். அவனை வெட்டுவதற்கு என்னுடைய துருக்கிய வாளை நான் ஓங்கிய பொழுது திடீரென்று அவன் தன்னுடைய தொப்பியை நீக்கி விட்டு என்னிடம் ''பியோத்தர் அந்திரேயெவிச்! சுகமாக இருக்கிறீர்களா?'' என்று கேட்டான்.

நான் அவனைப் பார்த்த பொழுது முன்பு எங்களிட மிருந்த பழைய சார்ஜென்ட் என்று அடையாளம் தெரிந்து கொண்டேன். அவனைப் பார்த்த பொழுது நான் சொல்ல முடியாத அளவுக்கு மகிழ்ச்சி அடைந்தேன்.

''அட! மக்சீமிச்! நீயா?'' என்று கேட்டேன். ''பெலகோர்ஸ்க் கோட்டையிலிருந்து வந்து அதிக நாட்களா யிற்று?''

''பியோத்தர் அந்திரேயெவிச் ஐயா! அதிக நாளகவில்லை. நேற்றுத்தான் அங்கிருந்து திரும்பினேன். நான் உங்களுக்கு ஒரு கடிதம் கொண்டுவந்திருக்கிறேன்'' என்றான்.

''அந்தக் கடிதம் எங்கே?'' என்று நான் கேட்ட பொழுது என்னுடைய முகம் சிவந்து போயிருந்தது.

''இதோ! என்னிடம்தான் இருக்கிறது'' என்று சொல்லி விட்டு மக்சீமிச் தன்னுடைய சட்டைக்குள்ளே கையை விட்டு அந்தக் கடிதத்தை எடுத்தான். ''எப்படியாவது இந்தக் கடிதத்தை உங்களிடம் சேர்த்து விடுவதாக பலாஷ்கா விடம் சத்தியம் செய்து கொடுத்தேன்'' என்றான். மடித்து வைக்கப்பட்டிருந்த ஒரு கடிதத்தை என்னிடம் கொடுத்து விட்டு அவன் உடனே ஓடிப் போய் விட்டான். நான் மிகுந்த பரபரப்போடு அதைப் பிரித்துப் படிக்க ஆரம்பித்தேன்.

''என்னுடைய தகப்பனாரையும் தாயாரையும் திடீரென்று என்னிடமிருந்து கடவுள் பறித்து விட்டார். இந்த உலகத்தில் எனக்கு வேறு உறவினர்கள் கிடையாது; என்னைப் பாது காப்பதற்கு ஒருவரும் இல்லை. நீங்கள் எப்பொழுதும் எனக்கு நன்மையேற்பட வேண்டுமென விரும்புவதாலும், யாருக்கும் உதவி செய்வது உங்களுடைய இயல்பு என்பதாலும் இந்தக் கடிதத்தை உங்களுக்கு எழுதுகிறேன். இந்தக் கடிதம் உங்கள் கையில் கிடைக்க வேண்டுமென்று கடவுளைப் பிரார்த்திக் கிறேன்! இதை உங்களிடம் சேர்த்து விடுவதாக மக்சீமிச் சத்தியம் செய்திருக்கிறான். உங்களை சண்டைகளின்

போது பல முறை பார்த்ததாகவும், நீங்கள் உங்கள் உயிரைப் பாதுகாக்க முயற்சிப்பதில்லை என்றும் உங்களுக்காகக் கண்ணீரை வடித்தபடியே பிரார்த்தனை செய்து கொண்டிருப்பவர்களை நினைப்பதில்லை என்றும் மக்சீமிச் பலாஷ்காவிடம் தெரிவித்திருக்கிறான். நான் அதிக நாட்கள் நோய் வாய்ப்பட்டிருந்தேன். என் உடம்பு குணமடைந்த பிறகு காலஞ்சென்ற என் தகப்பனுக்குப் பிறகு கோட்டையின் தளகர்த்தராகப் பதவி வகிக்கும் அலெக்சேய் இவானவிச் ஷ்வாப்ரின் கெராசிம் பாதிரியாரைக் கூப்பிட்டு என்னை உடனே தம்மிடம் ஒப்படைக்குமாறு நிர்ப்பந்தம் செய்தார். ஒப்படைக்க மறுத்தால் புகச்சோவிடம் அவரைப் பற்றிப் புகார் செய்யப் போவதாகப் பயமுறுத்தியிருக்கிறார். நான் தற்பொழுது எங்களுடைய பழைய வீட்டில் இருக்கிறேன். எனக்குக் காவல் போடப்பட்டிருக்கிறது. தன்னைத் திருமணம் செய்து கொள்ளுமாறு அலெக்சேய் இவானவிச் என்னை நிர்ப்பந்திக்கிறார். அக்குலீனு பம்பீலவ்னு என்னைத் தன் சகோதரி மகள் என்று அந்தப் போக்கிரிகளிடம் கூறிய பொழுது அவளைக் காட்டிக் கொடுக்காமல் இருந்ததன் மூலம் என் உயிரை அவர் காப்பாற்றியதாகச் சொல்கிறார். ஆனால் அலெக்சேய் இவானவிச்சைப் போல மோசமான ஒருவரைத் திருமணம் செய்து கொள்வதைக் காட்டிலும் அன்றைக்குச் செத்துப் போயிருந்தால் நல்லது என்று நினைக்கிறேன். என்னை அவர் மிகவும் கொடுமைப்படுத்துகிறார். நான் என்னுடைய முடிவை மாற்றிக் கொண்டு அவரைத் திருமணம் செய்து கொள்ளாவிட்டால் கலகக்காரர்களிடம் என்னை ஒப்படைத்துவிடப் போவதாகவும் லிஸவேத்தா ஹார்லவாவுக்கு[59] ஏற்பட்ட முடிவே எனக்கும் ஏற்படுமென்றும் பயமுறுத்துகிறார். நான் இதைப் பற்றி நன்றாகச் சிந்தித்து முடிவு செய்வதற்குப் போதுமான அவகாசம் தருமாறு அலெக்சேய் இவானவிச்சைக் கேட்டிருக்கிறேன். மூன்று நாட்கள் பொறுத்திருக்கிறேன்; அதற்குப் பிறகு நீ என்னைத் திருமணம் செய்து கொள்வதற்கு உடன்படாவிட்டால் உன் மீது சிறிதும் இரக்கம் காட்ட மாட்டேன் என்று சொல்லியிருக்கிறார். அன்புமிக்க பியோத்தர் அந்திரேயெவிச்! என்னைப் பாதுகாக்கக் கூடிய ஒரே நபர் தாங்கள்தான். ஒரு அபலைப் பெண்ணைக் காப்பாற்றுங்கள். ஜெனரலையும் மற்ற

எல்லா தளபதிகளையும் சந்தித்து எங்களுக்கு உடனே உதவி அனுப்புவதற்கு ஏற்பாடு செய்யுங்கள். முடியுமானால் நீங்களும் இங்கே வர வேண்டும். தங்களை மறவாத ஏழை அனாதை

**''மார்யா மிரோனவா.''**

இந்தக் கடிதத்தைப் படித்ததும் எனக்குப் பைத்தியம் பிடித்து விட்டது போல மாறி விட்டேன். என்னுடைய பரிதாபத்துக்குரிய குதிரையை இரக்கமில்லாமல் விரட்டிக் கொண்டு வேகமாக நகரத்துக்குத் திரும்பினேன். போகும் வழியெல்லாம் அந்த ஏழைப் பெண்ணை எப்படிக் காப்பாற்றலாம் என்று பலமாகச் சிந்தித்தேன். ஆனால் உருப்படியாக ஒரு யோசனையும் தோன்றவில்லை. நகரத்துக்குத் திரும்பியதும் நேரே ஜெனரல் வீட்டுக்குப் போய் அவருடைய அறைக்குள் வேகமாக நுழைந்தேன்.

அப்பொழுது அவர் புகைக் குழாயில் புகை பிடித்தபடியே அறைக்குள் முன்னும் பின்னுமாக நடந்து கொண்டிருந்தார். என்னைக் கண்டதும் அவர் நின்றார். என்னுடைய தோற்றத்தைப் பார்த்து அவர் திகைத்துப் போயிருக்க வேண்டும். நான் வெறிபிடித்தவனைப் போல உள்ளே நுழைந்ததன் காரணம் என்ன என்று என்னிடம் பரிவோடு விசாரித்தார்.

''மேன்மை தங்கிய ஜெனரல் அவர்களே!'' என்று ஆரம்பித்தேன். ''உங்களை என் தகப்பனார் மாதிரி நினைக்கிறேன். தயவு செய்து, என்னுடைய வேண்டுகோளை நிராகரிக்க வேண்டாம். என்னுடைய வாழ்க்கையில் மகிழ்ச்சி ஏற்படுவது இதைப் பொறுத்தே இருக்கிறது'' என்றேன்.

''நண்பனே! என்ன விஷயம்?'' என்று அந்தப் பெரிய அதிகாரி ஆச்சரியத்தோடு கேட்டார். ''உனக்கு என்ன உதவி வேண்டும்? சொல்'' என்றார்.

''மேன்மை தங்கிய ஜெனரல் அவர்களே! ஒரு படைப் பிரிவையும் சில கஸாக் வீரர்களையும் என் தலைமையில் ஒப்படையுங்கள். அவர்களைக் கூட்டிக் கொண்டு பெலகோர்ஸ்க் கோட்டைக்குப் போய் கலக்காரர்களை விரட்டுவதற்கு எனக்கு அனுமதி கொடுங்கள்'' என்றேன்.

எனக்கு மூளைக் கோளாறு ஏற்பட்டு விட்டதோ என்ற

சந்தேகத்தில் (அது பெருமளவுக்கு உண்மையே) ஜெனரல் என்னை உற்றுப் பார்த்தார்.

''என்ன சொன்னாய்? பெலகோர்ஸ்க் கோட்டையிலிருந்து கலகக்காரர்களை விரட்டப் போகிறாயா?'' என்று கடைசியில் கேட்டார்.

''வெற்றி நிச்சயம். போவதற்கு மட்டும் எனக்கு அனுமதி கொடுங்கள்'' என்று ஆர்வத்தோடு கேட்டேன்.

''இளைஞனே! அது முடியாது'' என்று தலையை அசைத்துக் கொண்டு சொன்னார். ''கோட்டை ரேகு தொலைவில் இருக்கிறபடியால், மத்தியப் போர் முனையிலிருந்து உனக்கு எந்த உதவியும் கிடைக்காதபடி தொடர்புகளைத் துண்டித்து விடுவது கலகக்காரர்களுக்குச் சுலபம். பிறகு உன்னை எளிதில் முறியடித்து விடுவார்கள். தொடர்புகள் துண்டிக்கப்பட்டால்....''

அவர் இராணுவ தந்திரங்களைப் பற்றி விரிவாகப் பேச ஆரம்பித்து விடலாம் என்று எனக்குப் பயம் ஏற்பட்டபடியால் நான் அவர் பேச்சில் குறுக்கிட்டேன்.

''காப்டன் மிரோனவின் மகளிடமிருந்து எனக்குக் கடிதம் வந்திருக்கிறது'' என்றேன். ''தன்னைத் திருமணம் செய்து கொள்ளுமாறு ஷ்வாப்ரின் அவளை நிர்ப்பந்தம் செய்கிறார். எனவே தன்னைக் காப்பாற்றுமாறு அவள் கடிதம் எழுதியிருக்கிறாள்.''

''அப்படியா? அந்த ஷ்வாப்ரின் சரியான ராஸ்கல். அவன் மட்டும் என் கையில் சிக்கினால் இருபத்து நாலு மணி நேரத்துக்குள் அவனைக் குற்ற விசாரணை செய்து கோட்டைச் சுவரில் நிறுத்தி வைத்துச் சுடுவேன். ஆனால் நாம் இப்பொழுது பொறுமையோடிருக்க வேண்டும்....'' என்றார்.

''பொறுமையா?'' என்று நான் பைத்தியக்காரனைப் போலக் கத்தினேன். ''அதற்குள் அவன் மார்யா இவானவ்னாவைப் பலவந்தமாகத் திருமணம் செய்து கொண்டு விடுவான்!...''

''ஓ! அல்லது அதைக் காட்டிலும் மோசமான காரியங்கள் கூட நடக்கலாம். கொஞ்ச காலத்துக்கு ஷ்வாப்ரினுடைய மனைவியாக இருப்பது கூட அவளுக்கு நல்லதுதான். அவன் இப்போது அவளைக் கவனித்துக் கொள்வான். நாங்கள் அவனைக் கொலை செய்த பிறகு கடவுள் கருணையால் நாம்

அவளுக்கு வேறொரு மணமகனைத் தேடிப் பிடிக்கலாம். அழகான விதவைகள் ரொம்பக் காலத்துக்கு விதவைகளாக இருப்பதில்லை. அதாவது நான் என்ன சொல்கிறேனென்றால் இளம் பெண்களைக் காட்டிலும் இளம் விதவைகளுக்குச் சுலபமாகக் கணவன் கிடைத்து விடுகிறான்'' என்றார்.

''அவளை ஷ்வாப்ரினுக்கு விட்டுக் கொடுப்பதைக் காட்டிலும் நான் செத்துப் போகத் தயார்!'' என்று நான் ஆவேசத்தோடு கத்தினேன்.

''ஓ!'' என்று அந்தக் கிழவர் இழுத்தார். ''இப்பொழுது எனக்குப் புரிகிறது. மார்யா இவானவ்னாவை நீ காதலிக்கிறாயா? அப்படியானால் நிலைமை வேறுதான்! அடப் பாவி! உன்னுடைய தலைமையில் ஒரு படைப் பிரிவையும் சில கஸாக் வீரர்களையும் ஒப்படைக்க என்னால் முடியாது. அப்படிப்பட்ட முயற்சி அர்த்தமற்றது. அதற்குப் பொறுப் பேற்றுக் கொள்ள என்னால் முடியாது'' என்றார்.

நான் தலையைக் குனிந்து கொண்டு சோகத்தில் மூழ்கினேன். ஒரு யோசனை திடீரென்று என் மனதில் பளிச்சிட்டது. பழைய காலத்து நாவலாசிரியர்கள் எழுதுவதைப் போல, அந்த யோசனை என்ன என்பதை அடுத்த அத்தியாயத்தில் வாசகர்களுக்குத் தெரிவிப்போம்.

## அத்தியாயம் பதினொன்று

### கலகக்காரர்களுடைய கிராமம்

கடுஞ்சீற்றமுடைய சிங்கம்
எந்த விலங்கையாவது கொன்று
புசிக்கும்; பசியடங்கிய பிறகு
சாதுவாக இருக்கும். ஆனால்
''என்னுடைய குகைக்கு இன்று
நீ வருவதேன்?'' என்று
மரியாதையோடு கேட்டது.

சுமரோக்கவ்[60]

நான் ஜெனரலை*விட்டுப் பிரிந்து என்னுடைய அறைக்கு வேகமாகச் சென்றேன். ஸவேலிச் தன் வழக்கமான முறையீடுகளோடு என்னைச் சந்தித்தான். ''குடிகாரக் காலிகளை எதிர்த்துச் சண்டை போட நீங்கள் போகலாமா, ஐயா? இது ஒரு கனவான் செய்யக் கூடிய வேலையா? உங்களுக்கு ஏதாவது ஏற்பட்டால், எந்தப் பலனுமில்லாமல் செத்துப் போவீர்களே. அவர்கள் துருக்கியர்களாகவோ, ஸ்வீடிஷ்காரர்களாகவோ இருந்தால் அது சரி. ஆனால் நீங்கள் சண்டை போடும் பயல்களின் பெயர்களைச் சொல்லவே எனக்குக் கூசுகிறது'' என்றான்.

என் பணம் எவ்வளவு மீதமிருக்கிறது என்று அவன் பேச்சில் குறுக்கிட்டுக் கேட்டேன்.

''கொஞ்சம் இருக்கிறது'' என்று அவன் திருப்தியோடு சொன்னான். போக்கிரிகள் நம்முடைய சொத்துக்களைக் கொள்ளையடித்தார்கள். அந்த நேரத்திலும் நான் பணத்தை மறைத்து விட்டேன்'' என்று சொல்லிவிட்டுத் தன் சட்டைப் பையிலிருந்து ஒரு நீளமான பணப் பையை வெளியில் எடுத்தான். அதில் நிறைய வெள்ளிக் காசுகள் இருந்தன.

''ஸவேலிச்! அதில் பாதியை என்னிடம் கொடுத்துவிட்டு மீதியை நீயே வைத்துக் கொள். நான் பெலகோர்ஸ்க் கோட்டைக்குப் போகப் போகிறேன்'' என்றேன்.

''பியோத்தர் அந்திரேயெவிச்! எஜமான்!'' என்று என்னுடைய அன்பான ஆசிரியன் உடைந்த குரலில் பேசினன். ''எல்லாப் பாதைகளும் கலகக்காரர்களின் கையிலிருக்கும் பொழுது நீங்கள் எப்படிப் போய்ச் சேர முடியும்? உங்களைப் பற்றி நீங்கள் யோசிக்காவிட்டாலும் உங்கள் பெற்றோர்களைப் பற்றி யோசிக்க வேண்டாமா? நீங்கள் ஏன் போக வேண்டும்? எதற்காக? கொஞ்சம் பொறுத்திருங்கள். நம்முடைய படைகள் வந்து அங்கே இருக்கிற ராஸ்கல்களைப் பிடித்துவிடும். அதற்குப் பிறகு நீங்கள் எங்கே வேண்டுமானுலும் போகலாம்'' என்ருன்.

ஆனல் நான் முன்பே மிக உறுதியான முடிவுக்கு வந்திருந்தேன்.

''இது விவாதிப்பதற்கான நேரமல்ல. காலம் கடந்து விட்டது'' என்று அந்தக் கிழவனிடம் கூறினேன். ''நான் போவது அவசியம். நான் போகத்தான் போகிறேன். ஸவேலிச்! எனக்காக வருத்தப்படாதே. கடவுள் கருணை மிக்கவர். ஒருவேளை நாம் சந்திக்கலாம். ஒரு விஷயத்தை நினைவில் வைத்துக் கொள்: மிகவும் சிக்கனமாக இருக்காதே. உனக்குத் தேவையான பொருள்களின் விலை எவ்வளவு அதிகமாக இருந்த போதிலும் அவற்றை வாங்கிக் கொள். இந்தப் பணம் உனக்கு என்னுடைய அன்பளிப்பு என்று வைத்துக் கொள். அடுத்த மூன்று நாட்களுக்குள் நான் திரும்பாவிட்டால்...''

''என்ன வார்த்தை சொல்லி விட்டீர்கள், ஐயா?'' என்று ஸவேலிச் குறுக்கிட்டுப் பேசினன். ''நான் உங்களைத் தனியாகப் போக விடுவேனு? தயவு செய்து, கனவில் கூட அப்படி நினைக்காதீர்கள். நீங்கள் போவதென்று முடிவு செய்து விட்டபடியால் நான் உங்களோடு வருவேன். நடந்தாவது வருவேனே தவிர உங்களைப் போகச் சொல்லிவிட்டு உட்கார்ந்திருக்க மாட்டேன். இந்தக் கோட்டைச் சுவருக்குப் பின்னல் நான் மட்டும் பத்திரமாக இருப்பேன் என்று நீங்கள் நினைக்கிறீர்களா? நான் உளறுகிறேன் என்று நினைக்கிறீர்களா? ஐயா! என்ன வேண்டுமானுலும் சொல்லுங்கள். ஆனல் நான் உங்களைத் தனியாகப் போக விட மாட்டேன்'' என்ருன்.

ஸவேலிச்சோடு விவாதிக்க முயற்சிப்பதில் எந்தப் பல

னும் கிடையாது என்பது எனக்குத் தெரியும். எனவே பிர யாணத்துக்குத் தேவையான தயாரிப்புகளைச் செய்வதற்கு அவனுக்கு அனுமதி கொடுத்தேன். அரை மணி நேரத்துக்குப் பிறகு என்னுடைய வலிமையான குதிரை மீது நான் உட் கார்ந்திருந்தேன். மெலிந்து எலும்பும் தோலுமாக இருந்த ஒரு நொண்டிக் குதிரை மீது ஸவேலிச் உட்கார்ந்திருந் தான். அந்தக் குதிரையின் சொந்தக்காரர் அதற்குத் தீனி போட முடியாமல் ஸவேலிச்சிடம் அதை அன்பளிப்பாகக் கொடுத்து விட்டார். கோட்டைக் கதவுகள் வரை குதிரை மீது சென்றோம். அங்கேயிருந்த காவலர்கள் எங்களை வெளியே செல்ல அனுமதித்தார்கள். ஓரென்புர்கை விட்டு நாங்களிருவரும் புறப்பட்டோம்.

மாலை நேரம் மறைந்து கொண்டிருந்தது. நாங்கள் போகும் வழியில்தான் பேர்த்ஸ்கயா கிராமம் இருக்கிறது. அது இப்பொழுது புகச்சோவின் தளமாக மாறி விட்டது. பாதைகளைப் பனி மூடியிருந்த போதிலும் தினமும் குதிரைக ளின் குளம்புத் தடங்கள் ஸ்டெப்பி நிலம் முழுவதும் காணப்பட்டன. நான் குதிரையைத் தவ்வு நடையில் ஓட்டிக் கொண்டு வேகமாகப் போய்க் கொண்டிருந்தேன். ஆனால் ஸவேலிச் எனக்கு வெகு தூரத்துக்குப் பின்னால் வந்து கொண்டிருந்தான். அவன் விடாமல் சத்தம் போடுவான். ''ஐயா! மெதுவாகப் போனால் என்ன? கடவுள் சாட்சியாக மெதுவாகப் போங்களேன்! உங்களுடைய வாட்ட சாட்ட மான முரட்டுக் குதிரைக்குச் சமமாக என்னுடைய பாழாய்ப்போன மட்டக் குதிரை ஓட முடியுமா? ஏன் அவசரப்பட வேண்டும்? பார்க்கிறவர்கள் நாம் ஏதோ விருந்துக்கு வேகமாகப் போவதாகவல்லவா நினைப்பார்கள்... நாம் தூக்குக் கம்பங்களை நோக்கித் தானே போகிறோம். பியோத்தர் அந்திரேயெவிச்!... எஜமான்!... என்னை விட்டு விடுங்கள்!... கடவுளே! என் எஜமானுடைய குழந்தை இப் படியா சாக வேண்டும்?'' என்பான்.

பேர்த்ஸ்கயா கிராமத்தில் விளக்குகள் எரிந்து கொண் டிருப்பதைச் சீக்கிரத்திலேயே பார்த்தோம். அந்தக் கிரா மத்துக்கு இயற்கை அரணாக உதவிய ஆழமான கிடங்கை நோக்கிச் சென்றோம். ஸவேலிச் தன்னுடைய புலம்பலை நிறுத்தாமலே என் பின்னால் வந்து கொண்டிருந்தான்.

அந்தக் கிராமத்தைச் சுற்றிக் கொண்டு போவதன் மூலம் ஆபத்தில் மாட்டிக் கொள்ளாமல் தப்பிவிடலாம் என்று நான் நினைத்துக் கொண்டிருந்தேன். ஆனால் அந்தச் சமயத்தில் திடீரென்று இருட்டிலிருந்து ஐந்து விவசாயிகள் தோன்றி எங்களை மறித்துக் கொண்டார்கள். அவர்களிடம் முரட்டுக் கம்புகள் இருந்தன. அது புகச்சோவின் எல்லைக் காவல் நிலையமாக இருக்கலாம். அவர்கள் எங்களைச் சத்தமாகக் கூப்பிட்டார்கள். உள்ளே அனுமதிக்கக் கூடிய அடையாளச் சொல் எனக்குத் தெரியாது. எனவே எதுவும் சொல்லாமல் போய்க் கொண்டிருப்பதென முடிவு செய்தேன். ஆனால் அவர்கள் உடனே என்னைச் சூழ்ந்து கொண்டனர். அவர்களில் ஒருவன் என்னுடைய குதிரையின் கடிவாளத்தைப் பிடித்துக் கொண்டான். உடனே நான் இடையிலிருந்த வாளை உருவி அவன் தலையில் ஓங்கி வெட்டினேன். அவன் தலையிலிருந்த தொப்பி அவனைக் காப்பாற்றியது; ஆனால் அவன் தள்ளாடிக் கடிவாளத்தை விட்டுவிட்டான். அப்பொழுது ஏற்பட்ட குழப்பத்தில் மற்றவர்கள் ஓடி விட்டனர். அந்த சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு நான் குதிரையை முடுக்கி வேகமாகப் போய் விட்டேன்.

இரவு வந்து விட்டதால் அந்தக் காரிருளில் எனக்கு எந்த விதமான ஆபத்தும் ஏற்பட முடியாது. ஆனால் நான் திரும்பிப் பார்த்த பொழுது ஸவேலிச் என்னைப் பின் தொடர்ந்து வரவில்லை என்பதைக் கண்டேன். நொண்டிக் குதிரையில் ஏறியிருந்த கிழவனால் கலகக்காரர்களிடமிருந்து தப்பி வர முடியவில்லை போலும். இனி என்ன செய்யலாம் என்று யோசித்தேன். அவனைப் பிடித்து வைத்திருக்கிறார்களா என்று தெரிந்து கொள்வதற்காகச் சிறிது நேரம் அங்கே காத்திருந்தேன். பிறகு குதிரையைத் திருப்பிக் கொண்டு அவனைக் காப்பாற்றுவதற்குப் புறப்பட்டேன்.

அந்த கிடங்கின் அருகே சென்ற பொழுது தூரத்தில் பேச்சுச் சத்தம் கேட்டது. அதில் ஸவேலிச் குரலும் கலந்திருப்பதை அறிந்தேன். நான் அந்தத் திசையில் குதிரையை வேகமாகச் செலுத்தினேன். சற்று நேரத்துக்கு முன்பு என்னை வழி மறித்த அதே விவசாயிகள் கும்பலிடம் அகப்பட்டுக் கொண்டேன். அவர்கள் ஸவேலிச்சைச் சூழ்ந்து நின்றனர். குதிரையிலிருந்து ஸவேலிச்சைக் கீழே இழுத்துப்

போட்டு அவனைக் கயிறுகளால் கட்டுவதற்கு முயற்சி செய்து கொண்டிருந்தனர். நான் அங்கே மீண்டும் வந்ததைக் கண்டு மகிழ்ச்சியடைந்து என்னை நோக்கிப் பலமாகச் சத்தம் போட்டுக் கொண்டு ஓடி வந்தனர்; வந்த உடனே என்னைக் குதிரையிலிருந்து கீழே இழுத்துப் போட்டனர். அந்தக் கும்பலுக்குத் தலைவனைப் போல இருந்த ஒருவன் என்னை உடனே ஜார் சக்கரவர்த்தியிடம் கொண்டுபோவதாகச் சொன்னான். ''உன்னை இப்பொழுதே கொன்று விடுவதா அல்லது நாளைக் காலை வரை காத்திருப்பதா என்பதை ஜார் சக்கரவர்த்தி முடிவு செய்வார்'' என்றான். நான் அவர்களை எதிர்த்துச் சண்டை போடவில்லை. ஸவேலிச்சும் இந்த விஷயத்தில் என்னைப் பின்பற்றினான். அந்தக் கும்பல் எங்களைக் கூட்டிக் கொண்டு வெற்றிப் பெருமிதத்தோடு கிராமத்துக்குள் நுழைந்தது.

அந்தக் கிடங்கின் மறு பக்கத்தில் ஏறி அந்த கிராமத்துக்குள் நுழைந்தோம். அங்கே எல்லா வீடுகளிலும் விளக்குகள் எரிந்து கொண்டிருந்தன. எங்கு பார்த்தாலும் ஆரவாரமும் இரைச்சலுமாக இருந்தது. தெருக்களில் ஆட்கள் அதிகமாகக் காணப்பட்டனர். ஆனால் எங்கும் இருட்டாக இருந்த காரணத்தால் யாரும் எங்களைக் கவனிக்கவில்லை; ஓரென்புர்கைச் சேர்ந்த இராணுவ அதிகாரி என்று என்னை அடையாளம் தெரிந்து கொள்ளவில்லை. முச்சந்தியிலிருந்த ஒரு வீட்டுக்கு எங்களைக் கொண்டுபோனார்கள். அந்த வீட்டுக்கு முன்னால் இரண்டு பீரங்கிகள் நிறுத்தி வைக்கப்பட்டிருந்தன; சில சாராயப் பீப்பாய்களும் அங்கே காணப்பட்டன. ''அதுதான் அரண்மனை; நான் உள்ளே போய் உங்களைப் பிடித்த விவரத்தைத் தெரிவிக்கிறேன்'' என்று ஒரு நபர் கூறிவிட்டு உள்ளே சென்றான். நான் ஸவேலிச்சைப் பார்த்தேன். அந்தக் கிழவன் சிலுவைக் குறியிட்டுக் கொண்டு தோத்திரத்தை முணுமுணுத்துக் கொண்டிருந்தான். வெகு நேரத்துக்குப் பிறகு அந்த நபர் திரும்பி வந்தான். ''உள்ளே வா. சக்கரவர்த்தி உன்னைக் கூட்டிக் கொண்டுவரச் சொன்னார்'' என்றான்.

நான் அந்த வீட்டுக்குள் (அல்லது அந்த விவசாயிகள் சொன்னது போல அரண்மனைக்குள்) நுழைந்தேன். அங்கே இரண்டு மாட்டுக் கொழுப்பு மெழுகு வத்திகள் எரிந்து

கொண்டிருந்தன; சுவர்களில் ஈயத்தாள் ஒட்டப்பட்டிருந் தது. மற்றபடி எல்லா வீடுகளையும் போல அங்கேயும் பெஞ்சு கள், மேசை, முகம் கழுவும் கலம், ஒரு ஆணியில் தொங்கிக் கொண்டிருந்த துண்டு, ஒரு மூலையில் தீ இடுக்கிகள், கற்பலகை மீது அடுக்கப்பட்டிருந்த மண் பானைகள் முதலி யவை காணப்பட்டன. ஒரு பகுதியில் தெய்வ வடிவங்க ளுக்குக் கீழ் புகச்சோவ் சிவப்பு உடையும் உயரமான தொப்பியும் அணிந்து கைகளை இடுப்பில் மடக்கி வைத்துக் கொண்டு உட்கார்ந்திருந்தான். அவனுடைய முக்கியமான உதவியாளர்கள் சிலர் அவனுக்குப் பக்கத்தில் அளவுக்கு மீறிய பணிவு காட்டிக் கொண்டு நின்று கொண்டிருந்தனர். ஓரென்புர்கிலிருந்து ஒரு அதிகாரி வந்திருக்கும் செய்தி கலகக்காரர்களிடம் மிதமிஞ்சிய ஆர்வத்தைத் தூண்டி விட்டிருக்கலாம்; எனவே என்னை அரசு முறைகளுக்கேற்பக் கூட்டிக் கொண்டு போனார்கள். உள்ளே சென்றதும் புகச் சோவ் என்னை அடையாளம் கண்டு கொண்டான். அவனுடைய போலியான கம்பீரம் உடனே மறைந்தது. ''கனவான் அவர்களே!'' என்று உற்சாகத்தோடு பேச ஆரம்பித்தான். ''சுகமாக இருக்கிறீர்களா? என்ன காரியமாக வந்தீர்கள்?'' என்று கேட்டான். நான் சொந்தக் காரியமாகப் போய்க் கொண்டிருக்கும் வழியில் அவனுடைய ஆட்கள் என்னைப் பிடித்துக் கொண்டு வந்து விட்டதாக நான் பதிலளித்தேன். ''சொந்தக் காரியம் என்றால்...?'' என்று அவன் விளக்கம் கேட்டான். இதற்கு என்ன பதில் சொல்வதென்று எனக்குத் தெரியவில்லை. அங்கே பலர் நின்று கொண்டிருப்பதால் நான் பேசுவதற்குத் தயங்குவதாக புகச்சோவ் நினைத்து அவனுடைய தோழர்களைப் பார்த்து வெளியே போகச் சொன்னான். அங்கே நின்று கொண்டிருந்தவர்களில்இரண்டு நபர்களைத் தவிர மற்றவர்கள் எல்லோரும் வெளியே போய் விட்டார்கள். ''இவர்கள் முன்னால் நீங்கள் பேசலாம். இவர்களிடமிருந்து நான் எதையும் மறைப்பதில்லை'' என்று புகச்சோவ் சொன்னான். அந்தப் பாசாங்குக்காரனின் அந் தரங்க ஆலோசகர்களை நான் ஓரக் கண்ணால் பார்த்தேன். ஒரு நபர் அதிகமான வயதுள்ள கூனல் விழுந்த ஒல்லியான கிழவன். அவனுடைய முகத்தில் வெண்மையான தாடி இருந்தது. அவன் போட்டுக் கொண்டிருந்த பழுப்புக் கோட்

டுக்குக் குறுக்கே ஒரு நீல நாடாவைக் கட்டிக் கொண்டிருந்ததுதான் ஒரு குறிப்பிட்ட அம்சமாக இருந்தது. ஆனால் அடுத்த நபரை சாகும் வரை என்னால் மறக்க முடியாது. அவன் நல்ல உயரம்; அகன்ற தோள்கள்; பருமனான உடல்; அவனுக்கு சுமார் நாற்பத்தைந்து வயதிருக்கலாம். அவன் முகம் பெரியதாகவும் அம்மை வடுக்கள் நிறைந்தும் காணப்பட்டது. அவனுடைய அடர்த்தியான சிவப்பு நிறத் தாடி, பிரகாசமான பழுப்புக் கண்கள், துவாரங்களில்லாத மொட்டையான மூக்கு, அவனுடைய நெற்றியிலும் கன்னங்களிலும் காணப்பட்ட சிவப்புத் தழும்புகள் அவனுடைய முகத்தைக் குரூரமாகக் காட்டின. அவன் சிகப்புச் சட்டையும் கிர்கீஸிய மேலங்கியும் கஸாக்குகள் அணிகின்ற காற்சட்டையும் அணிந்திருந்தான். முதல் நபர் ஒரு ஓடிப் போன கார்ப்போரல் என்றும் அவன் பெயர் பெலபரோதவ் என்றும் பின்னர் தெரிந்து கொண்டேன். அது போல இரண்டாவது நபர் அஃபனசிய் சக்கலோவ் (ஹ்லபூஷா என்ற பட்டப் பெயரும் உண்டு) என்ற பெயருடையவன் என்பதையும் சைபீரியாவிலுள்ள சுரங்கங்களில் வேலை செய்யுமாறு தண்டிக்கப்பட்டு மூன்று முறை அங்கிருந்து தப்பியோடி வந்தவன் என்பதையும் பின்னர் தெரிந்து கொண்டேன். என் மனதில் எத்தகைய உணர்ச்சிகள் ஏற்பட்டிருந்த போதிலும், எதிர்பாராத விதமாக இந்த நபர்களை நான் சந்தித்தது என்னுடைய கற்பனையில் மிகவும் அழுத்தமாகப் பதிந்தது. ஆனால் புகச்சோவ் கேட்ட கேள்வி என்னை யதார்த்தத்துக்கு இழுத்துக் கொண்டு வந்தது. ''நீங்கள் ஓரென்புர்கிலிருந்து இங்கே வந்த நோக்கம் என்ன? சொல்லுங்கள்'' என்றான்.

என் மூளையில் ஒரு விசித்திரமான யோசனை பளிச்செனத் தோன்றியது: கடவுளின் கருணையால் புகச்சோவை இரண்டாவது தடவை சந்திக்கும் வாய்ப்பு எனக்குக் கிடைத்திருக்கிறது; எனவே என்னுடைய திட்டத்தை நிறைவேற்ற இதைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்று நினைத்தேன். உடனே புகச்சோவின் கேள்விக்குப் பதிலளித்தேன்:

''பெலகோர்ஸ்க் கோட்டையில் ஓர் அனாதை துன்பத்தில் சிக்கியிருக்கிறாள். அவளைக் காப்பாற்றுவதற்காக அங்கே போகிறேன்.''

புகச்சோவின் கண்கள் பிரகாசித்தன.

''அந்த அனுதையை என்னுடைய ஆட்கள் துன்புறுத்து கிருர்களா? யார் என்று சொல்லுங்கள். அவன் ஓநாயைப் போல சூழ்ச்சியுடையவனுக இருந்தாலும் நீதியிலிருந்து தப்ப முடியாது. அந்தக் கொடியவன் யார்?'' என்று கோபத்தோடு கேட்டான்.

''ஷ்வாப்ரின்'' என்று நான் பதிலளித்தேன். ''பாதிரியார் வீட்டில் ஒரு நோயாளிப் பெண்ணைப் பார்த்தீர்களல்லவா? அவர் அந்தப் பெண்ணைக் காவலில் வைத்துத் தன்னைத் திருமணம் செய்து கொள்ள வேண்டுமென நிர்ப்பந்திக்கிருர்'' என்றேன்.

''ஷ்வாப்ரினுக்குத் தகுந்த பாடம் கற்பிப்பேன்'' என்று புகச்சோவ் கொடூரமாகச் சொன்னுன். ''என்னுடைய உத்தரவில்லாமல் நடந்து கொண்டால், என்னுடைய ஜனங்களில் யாரையாவது கொடுமைப்படுத்திஞல் என்ன நடக்கும் என்று பாடம் கற்பிப்பேன். அவனைத் தூக்கிலே போடுவேன்'' என்ருன்.

''என்னை ஒரு வார்த்தை சொல்வதற்கு அனுமதியுங்கள்'' என்று ஹ்லபூஷா அடித் தொண்டையில் பேசிஞன். ''அந்தக் கோட்டையின் தளகர்த்தராக ஷ்வாப்ரினை அவசரப்பட்டு நியமித்தீர்கள். இப்பொழுது அவனைத் தூக்கிலே போட அவசரப்படுகிறீர்கள். கஸாக் வீரர்களுக்கு மேலதிகாரியாக ஒரு கனவானை நியமித்து அவர்களை அவமதித்துவிட்டீர்கள். இப்பொழுது முதன் முதலாகக் கிடைத்த புகாரை ஏற்றுக் கொண்டு அவனைத் தூக்கிலிடுவதன் மூலம் மேன்மக்கள் அனைவருக்கும் பயத்தை ஏற்படுத்தி விடாதீர்கள்'' என்ருன்.

''அவர்களுக்குப் பதவி உயர்வோ தண்டனையோ காரணமில்லாமல் கொடுக்கக் கூடாது''என்று கோட்டின் குறுக்கே நீல நாடா அணிந்திருந்த கிழவன் பேசிஞன். ''ஷ்வாப்ரினைத் தூக்கில் போடுவதால் எந்தத் தீமையும் ஏற்படாது. ஆனுல் இந்த அதிகாரியை விசாரணை செய்வதும் அவசியமே. இந்த கனவான் இங்கே புறப்பட்டு வந்த காரணமென்ன? அவர் உங்களைச் சக்கரவர்த்தி என்று ஏற்றுக் கொள்கிருரா? இல்லையென்ருல் உங்களிடம் நீதிக்காக முறையிடுவது ஏன்? ஆம் என்ருல் இவ்வளவு காலமாக ஓரென்புர்கில் உங்களுடைய

எதிரிகளோடு கூடிக் குலாவி என்ன செய்து கொண்டிருந்தார்? இந்த நபரைத் தலைமையகத்துக்கு நான் கூட்டிக் கொண்டு போகட்டுமா? அங்கே இரும்புகளைப் பழுக்கக் காய்ச்சுவோம். ஓரென்புர்க் தளகர்த்தர்கள் இந்த நபரை இங்கே அனுப்பியிருக்கிறார்கள் என்று எனக்கு நிச்சயமாகத் தோன்றுகிறது'' என்றான்.

அந்தக் கிழட்டு ராஸ்கலின் தர்க்கரீதியான வாதம் எனக்கே நியாயமாகத் தோன்றியது. எப்படிப்பட்ட நபர்களிடம் நான் சிக்கி விட்டேன் என்பதை நினைத்த பொழுது என் உடலில் ஓடிய ரத்தம் உறைந்து விட்டது. புகச்சோவ் என்னுடைய கலக்கத்தைக் கவனித்திருக்க வேண்டும்.

''கனவான் அவர்களே!'' என்று சொல்லிவிட்டு என்னைப் பார்த்துக் கண் சிமிட்டினான். ''என்னுடைய பீல்டு-மார்ஷல் பேச்சில் நியாயமிருக்கிறது என்று நினைக்கிறேன். நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?'' என்று கேட்டான்.

புகச்சோவின் கிண்டல் எனக்கு தைரியத்தைக் கொடுத்தது. நான் அவனுடைய அதிகாரத்துக்கு உட்பட்டிருப்பதால் அவனுக்கு எது உசிதமாகத் தெரிகிறதோ அதைச் செய்யலாம் என்று நிதானமாக பதிலளித்தேன்.

''நல்லது. உங்கள் நகரத்தில் நிலைமைகள் எப்படியிருக்கின்றன என்பதை இப்பொழுது சொல்லுங்கள்'' என்றான்.

''கடவுள் கிருபையால் எல்லாம் நன்றாகவே இருக்கிறது'' என்று பதிலளித்தேன்.

''அப்படியா? ஆனால் ஜனங்கள் பட்டினியால் செத்துக் கொண்டிருக்கிறார்கள்!'' என்று சொன்னான் புகச்சோவ்.

அவன் சொன்னது உண்மையே. ஆனால் நான் என்னுடைய விசுவாசப் பிரமாணத்துக்கு உண்மையாக நடந்து கொண்டேன். அம்மாதிரியான வதந்திகள் உண்மையல்லவென்றும் ஓரென்புர்கில் ஏராளமான பொருள்களைச் சேமித்து வைத்திருப்பதாகவும் உறுதியளித்தேன்.

''பார்த்தீர்களா!'' என்று அந்தக் கிழவன் குறுக்கிட்டுப் பேசினான். ''உங்களிடமே பொய் சொல்கிறானே. ஓரென்புர்கிலிருந்து ஓடி வந்தவர்கள் அனைவரும் அங்கே கொடிய பஞ்சமும் பிளேக் நோயும் ஏற்பட்டிருப்பதாகச் சொன்னார்கள். சாப்பிடுவதற்கு ஒன்றுமில்லாமல் பிணத்தை சாப்பிடுவதாகவும் சொன்னார்கள். இந்தக் கனவான் அங்கே

எல்லாம் போதுமான அளவுக்கு இருப்பதாகச் சொல்வது உண்மையல்ல. நீங்கள் ஷ்வாப்ரினைத் தூக்கில் போட விரும்பினால் இந்த இளைஞனையும் அதே தூக்குக் கம்பத்தில் தொங்க விடுங்கள். இவர்களுக்கிடையே ஏற்பட்டிருக்கும் பொறாமையை ஒழிக்க அதுதான் வழி'' என்றான்.

அந்த அருவருக்கத்தக்க கிழவனின் வார்த்தைகள் புகச்சோவ் மனதில் பதிந்திருக்க வேண்டும். நல்ல வேளையாக ஹ்லபூஷா அந்தக் கிழவனோடு வாதம் செய்ய ஆரம்பித்தான்.

''நவூமிச்! போதும். நிறுத்து. எல்லோரையும் கழுத்தை நெறிக்க வேண்டும்; அல்லது தலையைச் சீவ வேண்டும் என்கிறாய். உன்னுடைய தோற்றம் எவ்வளவு நன்றாக இருக்கிறது தெரியுமா? உன்னைப் பார்த்தால் இனிமேல் உன்னுடைய உடலையும் உயிரையும் சேர்த்து வைத்திருப்பது சிரமமான காரியம் என்று தோன்றுகிறது. சுடு காடு உன்னை வா வா என்று அழைக்கிறது. ஆனால் நீ மற்றவர்களை ஒழிப்பதைப் பற்றியே பேசிக் கொண்டிருக்கிறாய். நீ இது வரை குடித்த இரத்தம் போதாதா?'' என்று கேட்டான்.

''நீ மட்டுமென்ன? பெரிய புனிதரோ?'' என்று பெலபரோதவ் பதிலடி கொடுத்தான். ''உன் மனதில் திடீரென்று இரக்கம் பொங்கி வழிவது ஏனோ?''

''நான் ஒரு பாவி என்று எனக்கு நன்றாகத் தெரியும். இந்தக் கை (இப்படிச் சொல்லிக் கொண்டு அவன் தன்னுடைய கை எலும்புகளை மடக்கி சட்டைக் கையை மேலே தள்ளிவிட்டுத் தன்னுடைய உரோமம் நிறைந்த புஜத்தைக் காட்டினான்)—இந்தக் கை எத்தனையோ கிறிஸ்தவர்களைக் கொலை செய்திருக்கிறது. ஆனால் நான் கொன்றது எதிரிகளை; விருந்தினர்களை அல்ல. தெரு முச்சந்தியில் அல்லது இருண்ட காட்டில் என்னுடைய விரோதியைக் கொலை செய்திருப்பேனே தவிர வீட்டுக்குள் அல்லது கணப்புக்கு அருகே உட்கார்ந்திருக்கும் பொழுது அல்ல. குண்டாந்தடியால் அல்லது கோடாலியால் ஒருவனைக் கொல்வேனே; ஒழிய கிழவிகளைப் போலவம்பளந்து கொண்டிருக்க மாட்டேன்'' என்றான்.

அந்தக் கிழவன் அவனைப் பார்த்துக் கோபமாக ''சப்பை மூக்கன்!...'' என்று சொல்லிவிட்டுத் தலையைத் திருப்பினான்.

''என்னடா முணுமுணுக்கிறாய், கிழட்டுப் பெருச்சாளியே?'' என்று ஹ்லபூஷா கத்தினான். ''உன் மூக்கைச் சப்பையாக்குகிறேன். கொஞ்சம் பொறு. நேரம் வரும். பழுக்கக் காய்ச்சிய இரும்பை உன் மூக்கில் வைப்பார்கள்.... அதற்கிடையில் உன்னுடைய தாடியைப் பிய்த்து விடுவேன். ஜாக்கிரதை!'' என்றான்.

''ஜெனரல்களே!'' என்று புகச்சோவ் பகட்டாகப் பேச ஆரம்பித்தான். ''போதும். சச்சரவு வேண்டாம். ஒரென்புர்கிலுள்ள நாய்களெல்லாம் ஒரு தூக்கு மேடையிலிருந்து தொங்கினால் கூட அது பெரிய விஷயமல்ல. ஆனால் நம்முடைய நாய்கள் ஒன்றோடொன்று மோதிக் கொள்வது கூடாது. சரி. ஒத்துப் போய் விடுங்கள்'' என்றான்.

ஹ்லபூஷாவும் பெலபரோதவும் ஒரு வார்த்தை கூடப் பேசாமல் ஒருவரையொருவர் கடித்து விடுவது போலப் பார்த்துக் கொண்டிருந்தனர். அந்த உரையாடல் எனக்கு மிகவும் பாதகமான வகையில் முடிவது போலத் தோன்றிய காரணத்தால் எப்படியாவது பேச்சை மாற்றுவது அவசியம் என்று நினைத்தேன். எனவே புகச்சோவைப் பார்த்து உற்சாகமாகப் பேச ஆரம்பித்தேன்.

''நீங்கள் எனக்குக் கொடுத்தனுப்பிய குதிரைக்கும் ஆட்டுத் தோல் கோட்டுக்கும் நன்றி சொல்ல மறந்து விட்டேன். உங்கள் உதவி மட்டும் இல்லையென்றால் நான் நகரத்துக்குப் போய்ச் சேர்ந்திருக்க மாட்டேன். போகும் வழியில் பனியில் செத்திருப்பேன்'' என்றேன்.

என்னுடைய தந்திரம் வெற்றியடைந்தது. புகச்சோவின் முகம் மலர்ந்தது.

''ஒரு தடவை உபகாரம் செய்தால் அதற்குப் பிரதியுபகாரம் எப்பொழுதும் உண்டு'' என்று கண்களைச் சிமிட்டிக் கொண்டு சொன்னான். ''ஷ்வாப்ரின் துன்புறுத்துகின்ற பெண்ணுக்கும் உங்களுக்கும் என்ன சம்பந்தம்? அவள் உங்களுடைய காதலியா? சொல்லுங்கள்'' என்றான்.

''அவள் என்னைத் திருமணம் செய்து கொள்ள நிச்சயிக்கப்பட்ட பெண்'' என்று சொன்னேன். நிலைமை எனக்குச் சாதகமாகத் திரும்புவதைப் புரிந்து கொண்டபடியால், நான் உண்மையை மறைக்கவில்லை.

''உங்களுடைய மணப் பெண்ணா? இதை ஏன் முன்பே

சொல்லவில்லை? உங்கள் திருமணத்தை நானே நடத்தி வைக்கிறேன். திருமண விருந்திலும் கண்டிப்பாகக் கலந்து கொள்வேன்'' என்று சொல்லி விட்டு பெலபரோதவை நோக்கித் திரும்பினான். ''பீல்டு-மார்ஷல்! கவனமாகக் கேளுங்கள். இந்தக் கனவானும் நானும் பழைய நண்பர்கள். நாம் எல்லோருமாக விருந்து சாப்பிடுவோம். காலையில்தான் ஞானம் உதயமாகும். இவரை என்ன செய்வதென்று நாளைக்கு முடிவு செய்வோம்'' என்றான்.

இந்த எதிர்பாராத கௌரவத்தை நான் மகிழ்ச்சியோடு மறுத்திருப்பேன். ஆனால் அதை ஏற்றுக் கொள்வதைத் தவிர வேறு வழி இல்லை. அந்த வீட்டுச் சொந்தக்காரரின் புதல்விகளான இரண்டு இளம் கஸாக் பெண்கள் அங்கேயிருந்த மேசை மீது வெள்ளைத் துணியை விரித்தனர். பிறகு ரொட்டி, மீன் சூப், பீர், வோட்கா மது பாட்டில்களையும் கொண்டுவந்து வைத்தனர். புகச்சோவ் மற்றும் அவருடைய பயங்கரமான தோழர்களோடு சேர்ந்து இரண்டாம் முறையாக விருந்து சாப்பிட்டேன்.

இரவில் வெகு நேரம் வரை நடைபெற்ற அவர்களுடைய களியாட்டத்தை விருப்பமில்லாத பார்வையாளனாக நான் கவனித்துக் கொண்டிருந்தேன். கடைசியில் அவர்கள் மது மயக்கத்துக்கு ஆளானார்கள். புகச்சோவ் தான் உட்கார்ந்திருந்த நாற்காலியிலேயே தூங்கி விழுந்தான். அவனுடைய தோழர்கள் எழுந்து, என்னை வெளியே போகுமாறு சைகை காட்டினார்கள். நான் அவர்களோடு அந்த வீட்டை விட்டு வெளியே வந்தேன். ஹ்லபூஷாவின் உத்தரவுப்படி காவலர்கள் என்னைத் தலைமையகத்துக்குக் கொண்டுபோனார்கள். ஸவேலிச்சும் அங்கே இருந்தான். எங்கள் இருவரையும் அன்றிரவில் ஒரு அறையில் பூட்டி வைத்தார்கள். அன்று நடைபெற்ற சம்பவங்கள் என் ஆசிரியனுக்குத் திகைப்பை ஏற்படுத்தியிருந்த காரணத்தால் அவன் என்னிடம் எதுவும் கேட்கவில்லை. அவன் இருட்டில் படுத்துக் கொண்டு வெகு நேரம் வரை பெருமூச்சு விடுவதும் முனகுவதுமாக இருந்தான். கடைசியில் ஒரு வழியாகக் குறட்டை விட்டுத் தூங்க ஆரம்பித்தான். நான் இரவு முழுவதும் விழித்துக் கொண்டு பலவிதமான சிந்தனைகளில் மூழ்கியிருந்தேன்.

மறு நாள் காலையில் புகச்சோவ் என்னைக் கூட்டி வரு

மாறு ஆளனுப்பினான். நான் அவன் தங்கியிருந்த வீட்டுக்குப் போனேன். வீட்டு வாசலில் மூன்று தார்த்தாரியக் குதிரைகள் கட்டப்பட்ட வண்டி நின்று கொண்டிருந்தது. தெருவில் ஏராளமானவர்கள் கூட்டமாக நின்று கொண்டிருந்தார்கள். புகச்சோவை வாயிலில் சந்தித்தேன். புகச்சோவ் உரோமக் கோட்டும் கிர்கீஸியத் தொப்பியும் அணிந்து கொண்டு பிரயாணத்துக்குத் தயாராக இருந்தான். முந்திய நாளிரவில் அவனோடிருந்த நண்பர்கள் அவனுக்கு அருகே அதிகமான பணிவோடு நின்று கொண்டிருந்தார்கள். நேற்றிரவில் பார்த்த காட்சிக்கும் இதற்குமுள்ள வேறுபாடு என் மனதில் பதிந்தது. புகச்சோவ் என்னை உற்சாகத்தோடு வரவேற்றுவிட்டு அந்த வண்டிக்குள் உட்காருமாறு சொன்னான்.

நாங்கள் வண்டியில் உட்கார்ந்தோம். அந்த வண்டியை ஓட்டுவதற்கு வந்த விசாலமான மார்புடைய தார்த்தாரியனிடம் ''பெலகோர்ஸ்க் கோட்டைக்கு ஓட்டு'' என்று புகச்சோவ் உத்தரவிட்டான். என்னுடைய இதயம் வேகமாகத் துடித்தது. குதிரைகள் கிளம்பின; மணிகள் ஒலித்தன; வண்டி பனிக் கட்டி மீது பறந்து சென்றது...

''நிறுத்து! நிறுத்து!'' என்று எனக்கு நன்கு தெரிந்த ஒரு குரல் ஒலித்தது. ஸவேலிச் எங்களை நோக்கி ஓடி வருவதைப் பார்த்தேன். வண்டியை நிறுத்துமாறு புகச்சோவ் உத்தரவிட்டான். ''எஜமான்! பியோத்தர் அந்திரேயெவிச்! வயதான காலத்தில் என்னைக் கைவிடாதீர்கள். இந்தப் போக்கி....'' என்று கெஞ்சினான். ''ஓ! கிழவன் வந்திருக்கிறானா? கடவுள் கருணையால் நாம் மறுபடியும் சந்திக்கிறோம். சரி, முன் பகுதியில் ஏறி உட்கார்'' என்றான் புகச்சோவ். ''மாண்பு மிக்க தலைவரே! பாதுகாவலரே! உங்களுக்கு மிகவும் நன்றி'' என்று சொல்லிக் கொண்டு ஸவேலிச் வண்டியில் உட்கார்ந்தான். ''ஒரு கிழவனுக்கு உதவி செய்ததற்காகக் கடவுள் உம்மை நூறு வருடங்கள் ஆரோக்கியமாக வைத்திருப்பார். உம்முடைய நலத்துக்காக என்னுடைய வாழ்க்கை பூராவும் பிரார்த்திக்கிறேன். முயல் தோல் கோட்டைப் பற்றி இனிமேல் வாயைத் திறக்க மாட்டேன்'' என்றான்.

ஸவேலிச் முயல் தோல் கோட்டைக் குறிப்பிட்டது புகச்

சோவுக்குக் கோபத்தை ஏற்படுத்தியிருக்க வேண்டும். நல்ல வேளையாக ஸவேலிச் சொன்னதை அவர் சரியாகக் கேட்காமலிருந்திருக்க வேண்டும்; அல்லது ஒருவேளை அதைப் பொருட்படுத்தாமலிருந்திருக்கலாம். குதிரைகள் வேகமாக ஓடின. தெருக்களில் போய்க்கொண்டிருந்த பொது மக்கள் நின்று கீழே குனிந்து வணக்கம் செலுத்தினார்கள். புகச்சோவ் வலப் புறமும் இடப் புறமும் தலையை அசைத்துக் கொண்டு வந்தான். சிறிது நேரத்தில் நாங்கள் கிராமத்துக்கு வெளியே வந்து சமதளமான பாதையில் வேகமாகப் போய்க் கொண்டிருந்தோம்.

என் மனதில் கொந்தளித்துக் கொண்டிருந்த உணர்ச்சிகளை எளிதில் கற்பனை செய்து கொள்ளலாம். இன்னும் சில மணி நேரங்களில் நான் இழந்து விட்டதாகக் கருதிய பெண்ணைச் சந்திக்கப் போகிறேன். நாங்கள் சந்திக்கும் காட்சியைக் கற்பனை செய்யமுயன்றேன்... சில விசித்திரமான நிகழ்வுப் பொருத்தங்களின் விளைவாக என்னோடு மர்மமான வகையில் தொடர்பு கொண்டிருக்கும் புகச்சோவைப் பற்றி நினைத்தேன். இன்றைய தினத்தில் என்னுடைய விதி இந்த நபரிடம் சிக்கியிருக்கிறது. அந்த நபரின் அதி பயங்கரமான குரூரத்தையும் இரத்த வெறியையும் நினைத்துப் பார்த்தேன். இன்று அதே நபர் என்னுடைய காதலியை விடுவிப்பதற்காகப் புறப்பட்டிருக்கிறான்! அவள் காப்டன் மிரோனவின் மகள் என்பது புகச்சோவுக்குத் தெரியாது. கோபமடைந்த ஷ்வாப்ரின் எல்லாவற்றையும் சொல்லிவிடலாம். அல்லது புகச்சோவ் வேறு எந்த வழியிலாவது உண்மையைக் கண்டு பிடித்து விடலாம்... அப்படியானால் மார்யா இவானவ்னாவின் கதி என்ன? என் உடல் அப்படியே குளிர்ந்து போய் விட்டது; என் தலைமயிர் சிலிர்த்துக் கொண்டு நின்றது....

திடீரென்று புகச்சோவ் என்னிடம் பேசிய பொழுது என் சிந்தனைகள் கலைந்தன.

''கனவான் அவர்களே! எதைப் பற்றி நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள்?'' என்று கேட்டான்.

''பல விஷயங்களை நினைத்துக் கொண்டிருக்கிறேன். நான் ஒரு இராணுவ அதிகாரி மட்டுமல்ல, நான் ஒரு பிரபு. நேற்று உன்னை எதிர்த்துச் சண்டை போட்டேன். இன்று

நீயும் நானும் ஒரே வண்டியில் உட்கார்ந்து போய்க் கொண்டிருக்கிறோம். என்னுடைய வாழ்க்கையில் மகிழ்ச்சியடைய உன்னையே நம்பியிருக்கிறேன்'' என்றேன்.

''நீங்கள் பயப்படுகிறீர்களா?'' என்று புகச்சோவ் கேட்டான்.

ஒரு தடவை என்னை மன்னித்து விட்ட காரணத்தால் இம்முறை அவனுடைய கருணையை மட்டுமல்லாமல், உதவியையும் எதிர்பார்க்கிறேன் என்று பதில் சொன்னேன்.

''கடவுள் சத்தியமாகச் சொல்கிறேன்: நீங்கள் சொல்வது மிக மிகச் சரி!'' என்று அந்தப் பாசாங்குக்காரன் கூறினான். ''என்னுடைய ஆட்கள் உங்களை எப்படிச் சந்தேகமாகப் பார்த்தார்கள் என்பது உங்களுக்குத் தெரியும். இன்று காலையில் கூட நீங்கள் ஒரு ஒற்றன் என்பதால் உங்களைச் சித்திரவதை செய்து தூக்கிலே போட வேண்டும் என்று அந்தக் கிழவன் வாதாடினான். நான் முடியாது என்று சொல்லி விட்டேன்'' என்றான். ஸவேலிச்சும் தார்த்தாரிய வண்டிக்காரனும் கேட்காமலிருக்க வேண்டும் என்பதற்காகத் தணிவான குரலில் பேசினான். ''நீங்கள் எனக்கு வோட்கா மது வாங்கித் தந்ததையும் முயல் தோல் கோட்டை அன்பளிப்பாகக் கொடுத்ததையும் நான் நினைவில் வைத்திருக்கிறேன். நீங்கள் நினைப்பது போல நான் இரத்தவெறி பிடித்து அலைகிற அரக்கன் அல்ல'' என்றான்.

பெலகோர்ஸ்க் கோட்டையைக் கைப்பற்றிய பொழுது நடந்த சம்பவங்கள் என்னுடைய நினைவுக்கு வந்தன. ஆனால் அவனை மறுத்துப் பேசுவதால் லாபமில்லை என்பதால் ஒன்றும் பேசாமலிருந்தேன்.

''என்னைப் பற்றி ஓரென்புர்கில் என்ன பேசிக் கொள்கிறார்கள்?'' என்று சிறிது நேர மௌனத்துக்குப் பிறகு புகச்சோவ் கேட்டான்.

''உன்னைத் தோற்கடிப்பது கடினமென்று பேசிக் கொள்கிறார்கள். உன் பலத்தை உணர்த்தி விட்டாய் என்பதில் சிறிது கூட சந்தேகமில்லை'' என்றேன்.

இந்தப் பதிலைக் கேட்டதில் அந்தப் பாசாங்குக்காரனின் அகம்பாவம் திருப்தியடைந்தது போன்ற அறிகுறிகள் அவன் முகத்தில் தோன்றின.

''ஆமாம்'' என்று உற்சாகமாகச் சொன்னான். ''எப்

படிச் சண்டை போட வேண்டுமென்று எனக்குத் தெரியும். யுஸேயெவயா சண்டையைப் பற்றி ஓரென்புர்கில் இருப்பவர்களுக்குத் தெரியுமா? நாற்பது ஜெனரல்கள் கொல்லப்பட்டனர். நான்கு படைப் பிரிவுகளைக் கைப்பற்றினேம். நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்? பிரஷ்ய அரசர் என்னை எதிர்த்து நிற்க முடியுமா?''

அந்தப் போக்கிரியின் துணிச்சல் எனக்குச் சிரிப்பை ஏற்படுத்தியது.

''உன் அபிப்பிராயம் என்ன? பிரெடெரிக்கைத் தோற்கடித்து விடுவாயா?''என்று கேட்டேன்.

''ஃபியோதர் ஃபியோதரவிச்சைத்தானே? ஏன் முடியாது? அவரைத் தோற்கடித்த ஜெனரல்களையே நான் தோற்கடித்து விட்டேன். இது வரை என்னுடைய படைகள் வெற்றி மேல் வெற்றி பெற்றிருக்கின்றன. நான் மாஸ்கோவை அடையும் வரை பொறுத்திருங்கள்'' என்றான்.

''நீ மாஸ்கோ மீது படையெடுக்கப் போகிறாயா?''

அந்தப் பாசாங்குக்காரன் சற்று நேரம் மௌனமாக இருந்துவிட்டு என்னிடம் குசுகுசுவென்று பேசினான்.

''கடவுளுக்குத்தான் தெரியும். இங்கே எனக்குப் போதுமான பிரதேசம் இல்லை. எனக்கு இன்னும் சுதந்திரம் வேண்டும். என்னுடைய ஆட்களுக்குப் புதுப்புது யோசனைகள் தோன்றுகின்றன. அத்தனையும் திருட்டுக் கூட்டம். நான் மிகவும் ஜாக்கிரதையாக நடந்து கொள்வது அவசியம். ஒரு தோல்வி ஏற்பட்டால் போதும். உடனே என்னைப் பிடித்துக் கொடுத்து விட்டுத் தங்களுடைய கழுத்தைக் காப்பாற்றிக் கொள்வார்கள்'' என்றான்.

''சரியாகச் சொன்னாய். சாதகமான சூழ்நிலை இருக்கும் பொழுதே அவர்களை விட்டுப் பிரிந்து சக்கரவர்த்தினியின் கருணையை வேண்டிக் கொள்வது உனக்கு நல்லது தானே?'' என்று யோசனை கூறினேன்.

புகச்சோவ் விரக்தியோடு சிரித்தான்.

''இல்லை. நான் வருத்தம் தெரிவித்துக் கொள்வதற்குரிய காலம் எப்பொழுதோ போய் விட்டது. இனிமேல் என் மீது கருணை காட்ட மாட்டார்கள். நான் எப்படி ஆரம்பித்தேனே அப்படியே முடித்துக் கொள்ள வேண்டியதுதான். ஒருவேளை எனக்கு வெற்றி கிட்டலாம். யாரால் சொல்ல

முடியும்? கிரீஷ்கா அத்ரியேபியெவ் கூட மாஸ்கோவில் ஆட்சி செய்யவில்லையா?'' என்ருன்.

''அவன் வாழ்க்கை எப்படி முடிந்தது தெரியுமா? ஒரு சன்னல் வழியாகத் தூக்கி எறியப்பட்டான். அவன் தலை வெட்டப்பட்டது. உடலை எரித்துச் சாம்பலாக்கி அந்தச் சாம்பலையும் பீரங்கிக் குழாயில் வைத்து ஆகாயத்தை நோக்கிச் சுட்டார்கள்!'' என்றேன்.

''நான் சொல்லப் போவதைக் கேளுங்கள்'' என்று புகச்சோவ் அசாதாரணமான அகத்தூண்டுதல் பெற்றவனைப் போலப் பேச ஆரம்பித்தான். ''நான் சிறு குழந்தையாக இருந்த பொழுது ஒரு கல்மீக் கிழவி இந்தக் கதையை என்னிடம் சொன்னுள். ஒரு காலத்தில் கழுகு காக்கையைப் பார்த்துக் கேட்டது: 'காக்கையாரே! நான் முப்பத்து மூன்று வருஷம்தான் பூமியில் வாழ்கிறேன். நீங்கள் மட்டும் முந்நூறு வருஷங்கள் வர்ழ்கிறீர்களே. அது எப்படி சாத்தியம்?' 'ஓ அதுவா? நீங்கள் உயிரோடிருப்பவைகளின் இரத்தத்தைக் குடிக்கிறீர்கள். ஆனுல் நானே செத்துப் போன உடலைச் சாப்பிடுகிறேன். அதனுல்தான் நான் முந்நூறு வருஷங்கள் வாழ்கிறேன்' என்று காக்கை பதில் சொன்னது. காக்கையைப் போல நானும் செத்துப் போன உடலைச் சாப்பிடப் போகிறேன் என்று கழுகு சொல்லிக் கொண்டது. கழுகும் காக்கையும் ஒன்ருகப் பறந்து சென்றன. போகும் வழியில் ஒரு குதிரை செத்துக் கிடப்பதைப் பார்த்தன. உடனே இரண்டும் பறந்து சென்று அந்த உடல் மீது உட்கார்ந்தன. காக்கை அந்தச் செத்த உடலைக் கொத்தித் தின்று கொண்டு அது சுவையாக இருப்பதாகச் சொன்னது. கழுகும் அந்த உடலைக் கொத்தியது; இரண்டாவது தடவை கொத்தியது. பிறகு தன்னுடைய இறக்கைகளை ஆட்டிக் கொண்டு காக்கையிடம் சொன்னது: 'சகோதரனே! எனக்கு இது சரிப்படவில்லை. உயிரோடிருப்பவைகளின் இரத்தத்தை ஒரே ஒரு தடவை குடித்தாலும் போதும். பிறகு கடவுள் இஷ்டப்படிச் செய்யட்டும். செத்த உடலைச் சாப்பிட்டுவிட்டு முந்நூறு வருடங்கள் வாழ்வது எனக்கு வேண்டாம்.' இந்தக் கல்மீக் கதை உங்களுக்குப் பிடிக்கிறதா?'' என்று கேட்டான்.

''நல்ல நீதி! ஆனுல் கொலை, கொள்ளைகளில் ஈடுபட்டு

வாழ்க்கை நடத்துவதும் செத்த உடலைச் சாப்பிடுவது மாதிரியானதே என்று நான் நினைக்கிறேன்'' என்றேன்.

புகச்சோவ் என்னை ஆச்சரியத்தோடு பார்த்தான். ஆனால் பதில் சொல்லவில்லை. நாங்கள் இருவரும் அவரவர் சிந்தனைகளில் மூழ்கியதால் மௌனமாக இருந்தோம். தார்த்தாரிய வண்டிக்காரன் ஒரு சோகமான பாடலைப் பாடினான். ஸவேலிச் ஆடி அசைந்தபடியே தூங்கிக் கொண்டிருந்தான். சமதளமான, குளிர் காலப் பாதையில் வண்டி பறந்து போய்க் கொண்டிருந்தது.... திடீரென்று யாயிக் நதியின் உயரமான கரையின் அருகே அந்தக் கிராமமும், அதன் முள்வேலியும் மணிக் கூண்டும் எனக்குத் தென் பட்டன. அதற்குக் கால் மணி நேரத்துக்குப் பிறகு பெல கோர்ஸ்க் கோட்டைக்குள் நாங்கள் நுழைந்தோம்.

## அத்தியாயம் பன்னிரண்டு

### அனாதைப் பெண்

எங்கள் ஆப்பிள் மரத்தில்
சின்னக் கிளைகள் இல்லை;
மலர்கள் பூத்துக் குலுங்கவில்லை.
எங்கள் சின்னப் பெண்ணுக்கு
அப்பா, அம்மா இல்லை;
அவளைச் சிங்காரிக்க யாருமில்லை;
அவளை ஆசீர்வதிக்க யாருமில்லை.

திருமணப் பாடல்[61]

வண்டி தளகர்த்தர் வீட்டுக்கு முன்பாக வந்து நின்றது. புகச்சோவின் வண்டியைப் பார்த்ததும் மக்கள் அங்கே கூட்டமாகச் சேர்ந்தார்கள். ஷ்வாப்ரின் வீட்டு வாயிலுக்கு வந்து பாசாங்குக்காரனை வரவேற்றார். அவர் இப்பொழுது கஸாக்குகளின் உடையை அணிந்திருந்ததோடு தாடியையும் நீளமாக வளர்த்துக் கொண்டிருந்தார். புகச்சோவ் வண்டியிலிருந்து கீழே இறங்குவதற்கு அந்தத் துரோகி உதவி செய்ததோடு தன்னுடைய மகிழ்ச்சியையும் விசுவாசத்தையும் காட்டிக் கொள்வதற்காக ஒரு அடிமையைப் போல கேவலமாக நடந்து கொண்டார். என்னைப் பார்த்ததும் அவருக்குக் கலக்கம் ஏற்பட்டிருக்க வேண்டும். ஆனால் உடனே சமாளித்துக் கொண்டார். ''நம்மவர்களோடு நீங்களும் சேர்ந்தாயிற்றா? நல்லதுதான்'' என்று சொல்லிக் கொண்டு என்னை நோக்கித் தம் கையை நீட்டினார். நான் அவரோடு ஒரு வார்த்தை கூடப் பேசாமல் விலகிக் கொண்டேன்.

காலஞ்சென்ற தளகர்த்தரின் அறைக்குள் நுழைந்தபொழுது என் மனம் வேதனையடைந்தது. சுவரில் எப்பொழுதும் போல அவருடைய டிப்ளொமா சான்றிதழ் தொங்கிக் கொண்டிருந்ததைப் பார்த்தேன். கடந்து போன நாட்

களை நினைவுபடுத்தும் சோகமான கல்லறை வாசகத்தைப் போல அந்தச் சான்றிதழ் தோன்றியது. இவான் குஸ்மீச் தம்முடைய மனைவியின் நச்சரிப்பை மறப்பதற்காக எந்த சோபாவில் ஆனந்தமாகத் தூங்குவாரோ அந்த சோபாவில் புகச்சோவ் இப்பொழுது உட்கார்ந்திருந்தான். ஷ்வாப்ரின் வோட்கா மதுவைத் தானே கொண்டுவந்து புகச்சோவுக்கு ஊற்றிக் கொடுத்தார். புகச்சோவ் ஒரு டம்ளர் குடித்து விட்டு என்னைக் காட்டி ''இவருக்கும் கொடுங்கள்'' என்ருன். ஷ்வாப்ரின் மது பானத் தட்டை எடுத்துக் கொண்டு என் னிடம் வந்த பொழுது நான் இரண்டாம் முறையாக முகத் தைத் திருப்பிக் கொண்டேன். ஷ்வாப்ரின் கலவரமடைந் திருப்பது தெரிந்தது. புகச்சோவ் தன்னிடம் அதிருப்திய டைந்திருப்பதை ஷ்வாப்ரின் தனக்கு இயல்பான உள்ளுணர் வால் அறிந்து கொண்டிருக்க வேண்டும். புகச்சோவிடம் புகழ்ந்து பசப்பிய போதிலும் அவ்வப்பொழுது சந்தேகத் தோடு என்னைப் பார்த்துக் கொண்டிருந்தார். கோட்டை யிலுள்ள நிலைமைகளைப் பற்றியும் எதிரிப் படைகள் நட மாட்டம் பற்றிய வதந்திகளையும் புகச்சோவ் விசாரித்தான். பிறகு திடீரென்று ''சகோதரனே! நீ கைதியாக வைத் திருக்கும் இளம் பெண் யார்? எனக்குச் சொல். அவளை நான் பார்க்க வேண்டும்'' என்ருன்.

ஷ்வாப்ரின் முகம் பிரேதத்தைப் போல வெளீத்துப் போயிற்று.

''ஐயா! அவள் கைதியல்ல....'' என்று தடுமாறிக் கொண்டே சொன்ஞர். ''அவளுக்கு உடல் நலமில்லை.... அவள் தனியறையில் இருக்கிருள்'' என்ருர்.

''என்னை அங்கே கூட்டிக் கொண்டுபோ'' என்று பாசாங் குக்காரன் சொல்லிவிட்டு எழுந்து நின்ருன். புகச்சோவின் விருப்பத்தை மறுக்க முடியாமல் ஷ்வாப்ரின் அவனைத் தனி யறைக்கு அழைத்துக் கொண்டு போஞர். நான் அவர்களைப் பின்தொடர்ந்து சென்றேன்.

ஷ்வாப்ரின் படிகளில் தயங்கி நின்ருர்.

''ஐயா! எனக்கு எந்தக் கட்டளையிடுவதற்கும் உங் களுக்கு உரிமையுண்டு. ஆஞல் என் மனைவியின் படுக்கை யறைக்குள் ஒரு அந்நியன் நுழைவதைத் தாங்கள் அனு மதிக்கக் கூடாது'' என்ருர்.

இதைக் கேட்டவுடன் என் மனதில் அதிகமான பயம் ஏற்பட்டது.

''என்ன—உனக்குக் கல்யாணம் நடந்து விட்டதா?'' என்று அவரைத் துண்டு துண்டாகக் கிழித்து விடுவதற்குத் தயாராக இருப்பது போலக் கேட்டேன்.

''உஸ்'' என்று புகச்சோவ் என்னைத் தடுத்தான். ''இது என்னுடைய விவகாரம்'' என்று என்னிடம் கூறிவிட்டு ஷ்வாப்ரினிடம் ''சாமர்த்தியமாக நடந்து கொள்ள முயற்சிக்காதே. சமாதானங்கள் எதுவும் எனக்குத் தேவை யில்லை. அவள் உன்னுடைய மனைவியோ இல்லையோ, நான் என்னோடு யாரையும் கூட்டிக் கொண்டு வருவேன். கன வான் அவர்களே! என்னைப் பின்தொடருங்கள்'' என்றான்.

அந்தத் தனியறையின் கதவுக்கு வெளியே ஷ்வாப்ரின் மறுபடியும் ஒரு முறை நின்றார்.

''ஐயா! அவளுக்கு அதிகமான காய்ச்சல் ஏற்பட்டிருக் கிறது; மூன்று நாட்களாகப் பிதற்றிக் கொண்டிருக்கிறாள் என்று எச்சரிக்கிறேன்'' என்றார்.

''கதவைத் திற!'' என்று புகச்சோவ் சொன்னான்.

ஷ்வாப்ரின் தன்னுடைய பையைத் துழாவிப் பார்த்து விட்டு, சாவியைக் கொண்டுவர மறந்து விட்டேன் என்றார். புகச்சோவ் அந்தக் கதவை ஓங்கி மிதித்ததும் பூட்டு உடைந்து கதவு திறந்தது. நாங்கள் உள்ளே நுழைந்தோம்.

அங்கே நான் கண்ட காட்சி என்னைத் திடுக்கிட வைத் தது. மார்யா இவானவ்னா விவசாயப் பெண்ணின் கிழிந்து போன உடையை அணிந்து கொண்டு தரையில் உட்கார்ந் திருந்தாள். அவள் மெலிந்து, வெளிறிப் போய், கலைந்த தலைமுடியோடு காட்சியளித்தாள். அவளுக்குப் பக்கத்தில் ஒரு கூஜாவில் தண்ணீரும் அதன் மேல் ஒரு ரொட்டித் துண்டும் காணப்பட்டன. என்னைக் கண்டதும் அவள் திடுக் கிட்டுக் கதறியழுதாள். அந்த நேரத்தில் எனக்கு ஏற்பட்ட திகைப்பில் எனக்கு என்ன நடந்ததென்று கூடத் தெரியாது.

புகச்சோவ் ஷ்வாப்ரினைப் பார்த்து ''இது நல்ல மருத் துவ விடுதியோ?'' என்று குத்தலாகக் கேட்டான். பிறகு மார்யா இவானவ்னாவின் அருகே சென்று ''ஏனம்மா! உன் கணவர் எதற்காக உன்னை தண்டித்திருக்கிறார்? நீ அவருக்குச் செய்த தீமை என்ன?'' என்று கேட்டான்.

''கணவனு? அவன் என்னுடைய கணவனல்ல. நான் ஒருக்காலும் அவனே மணந்து கொள்ள மாட்டேன்! அதற்கு முன்பே நான் செத்து விடுவதென்று முடிவு செய்திருக்கிறேன். என்னை யாராவது காப்பாற்ருவிட்டால் செத்துப் போவதைத் தவிர எனக்கு வேறு வழியில்லை'' என்று அவள் பதிலளித்தாள்.

புகச்சோவ் ஷ்வாப்ரினைக் கடித்து விடுவது போலப் பார்த்தான்.

''என்னை ஏமாற்ற நினைக்குமளவுக்கு உனக்குத் துணிச்சல் ஏற்பட்டிருக்கிறது! போக்கிரியே! உனக்கு என்ன தண்டனை கொடுக்கப் போகிறேன், தெரியுமா?'' என்ருன்.

ஷ்வாப்ரின் புகச்சோவ் காலடியில் விழுந்தார்... அந்த நேரத்தில் ஷ்வாப்ரின் மீது எனக்கு ஏற்பட்டிருந்த வெறுப்பும் கோபமும் அவர் மீது அருவருப்பாக மாறியது. ஒரு கனவான் கஸாக் ஓடுகாலியின் காலில் பரிதாபமாக விழுந்து கிடப்பதைப் பார்த்து வெறுப்படைந்தேன். புகச்சோவ் மனம் இளகியிருக்க வேண்டும்.

''இந்தத் தடவை உன்னை மன்னிக்கிறேன்'' என்று ஷ்வாப்ரினிடம் கூறினுன். ''ஆனுல் இன்னொரு தடவை இப்படி எதுவும் நடந்தால் உனக்கு இரண்டு மடங்கு தண்டனை கொடுப்பேன்'' என்ருன். பிறகு மார்யா இவானவ்னுவைப் பார்த்து அன்போடு பேசினுன். ''இளம் பெண்ணே! நீ எழுந்து வா, நான் உன்னுடைய சக்கரவர்த்தி. உனக்கு விடுதலை கொடுக்கிறேன்'' என்ருன்.

மார்யா இவானவ்னு அவனை உற்றுப் பார்த்தாள். தனக்கு முன்னுல் நிற்பவன் தன் பெற்ருேர்களைக் கொன்றவன் என்பதை அவள் ஊகித்திருக்க வேண்டும். திடீரென்று முகத்தைக் கைகளால் மூடிக் கொண்டு மயங்கி விழுந்தாள். நான் அவளை நோக்கிப் பாய்ந்தேன். ஆனுல் அதே சமயத்தில் என்னுடைய பழைய சிநேகிதியான பலாஷ்கா சிறிதும் பயமில்லாமல் அறைக்குள் ஓடி வந்து தன்னுடைய எஜமானிக்குச் சிகிச்சை செய்ய ஆரம்பித்தாள். புகச்சோவ் வெளியே சென்றதும் ஷ்வாப்ரினும் நானும் பின்தொடர்ந்தோம்.

''கனவான் அவர்களே! ஆபத்தில் சிக்கியிருந்த இளம் பெண்ணைக் காப்பாற்றி விட்டோம். இனி என்ன செய்ய வேண்டும்? பாதிரியாரை வரச் சொல்லட்டுமா? தன்

மைத்துனியின் திருமணத்தை அவரே நடத்தி வைக்கட்டும். இந்தத் திருமணத்துக்கு ஆதரவாளராக நான் இருக்கிறேன். மணமகனின் முக்கியமான நண்பனாக ஷ்வாப்ரின் இருக்கட்டும்'' என்று புகச்சோவ் சிரித்துக் கொண்டு சொன்னான்.

நான் இது வரை எதை நினைத்து பயந்து கொண்டிருந்தேனோ, அது அந்த நேரத்தில் நடந்தது. புகச்சோவ் சொன்ன யோசனையைக் கேட்டதும் ஷ்வாப்ரினுக்கு அடக்க முடியாத கோபம் ஏற்பட்டிருக்க வேண்டும்.

''ஐயா!'' என்று வெறிபிடித்தவனைப் போலக் கத்தினார். ''நான் தங்களிடம் பொய் சொன்னது தவறுதான். ஆனால் இவரும் உங்களை ஏமாற்றியிருக்கிறார். அந்தப் பெண் பாதிரியாரின் மைத்துனியல்ல. கோட்டையைப் பிடித்தவுடன் தூக்கிலே போட்ட காப்டன் இவான் மிரோனவின் மகளே அவள்'' என்றார்.

புகச்சோவ் தன்னுடைய நெருப்புத் துண்டங்களைப் போன்ற கண்களை என்னை நோக்கித் திருப்பினான்.

''என்ன இது?'' என்று ஆச்சரியத்தோடு கேட்டான்.

''ஷ்வாப்ரின் சொன்னது உண்மை'' என்று நான் உறுதியாகச் சொன்னேன்.

''அதை ஏன் என்னிடம் முன்பே தெரிவிக்கவில்லை?'' என்று புகச்சோவ் கேட்ட பொழுது அவன் முகம் இருண்டிருந்தது.

''நீயே முடிவு சொல்'' என்று நான் சொன்னேன். ''உன்னுடைய ஆட்களுக்கு முன்பாக மிரோனவின் மகள் உயிரோடிருப்பதைச் சொல்லியிருந்தால், அவர்கள் அங்கேயே அவளைக் கொன்றிருப்பார்கள். யாரும் அவளைக் காப்பாற்றியிருக்க முடியாது!'' என்றேன்.

''அது உண்மைதான்'' என்று புகச்சோவ் சிரித்துக் கொண்டே சொன்னான். ''என்னுடைய குடிகாரக் கும்பல் அந்தப் பெண்ணைச் சும்மா விட்டிருக்க மாட்டார்கள். பாவம் அந்தப் பெண்! பாதிரியார் மனைவி அவளை மறைத்து வைத்துக் காப்பாற்றியது சரிதான்'' என்றான்.

புகச்சோவ் சுமுகமாக நடந்து கொள்வதைப் பார்த்ததும் எனக்குத் திருப்தி ஏற்பட்டது. ''நான் சொல்வதைக் கேள். உன்னை எப்படிக் கூப்பிடுவதென்று எனக்குத் தெரியவில்லை. அதைத் தெரிந்து கொள்ள நான் விரும்ப

வில்லே.... ஆனுல் கடவுள் சாட்சியாகச் சொல்கிறேன்: நீ எனக்குச் செய்திருக்கும் உதவிக்கு என் உயிரைக் கொடுப்பதற்கும் தயாராக இருக்கிறேன். ஆனுல் ஒரு கிறிஸ்தவன் என்ற முறையில் என்னுடைய மனச் சாட்சிக்கும் கௌரவத்துக்கும் விரோதமான ஒன்றைச் செய்யுமாறு என்னை வற்புறுத்தாதே. உன்னை என்னுடைய பாது காவலராகக் கருதுகிறேன். நீ ஆரம்பித்த காரியத்தை முடித்து வைக்க வேண்டும்—நானும் இந்த இளம் பெண்ணும் கடவுள் காட்டும் பாதையில் போவதற்கு அனுமதி கொடு. நீ எங்கேயிருந்தாலும், உனக்கு எத்தகைய முடிவு ஏற்பட்டாலும், நாங்களிருவரும் எங்கள் வாழ்க்கையில் ஒவ்வொரு நாளும் உன்னுடைய பாவங்களை மன்னிக்குமாறு பிரார்த்தனை செய்வோம்...'' என்றேன்.

புகச்சோவின் கல் மனது இளகி விட்டது போலத் தோன்றியது.

''நீர் கேட்டதைத் தருகிறேன்!'' என்ருன். ''நான் தூக்கு மேடை என்ருல் தூக்கு மேடையே; நான் மன்னிப்பு என்ருல் முழு மன்னிப்பே. என்னுடைய பழக்கம் அது. உங்களுடைய அழகான காதலியைக் கூட்டிக் கொண்டு உங்களுக்குப் பிரியமான எந்த இடத்துக்கும் நீங்கள் போகலாம். கடவுள் உங்களை நேசித்து வழி காட்டுவார்'' என்ருன்.

இப்படிச் சொல்லி முடித்ததும் ஷ்வாப்ரினைப் பார்த்துத் தன்னுடைய கட்டுப்பாட்டுக்கு உட்பட்ட எல்லாக் கோட்டைகள் நகரங்களுக்குள்ளேயும் நுழைவதற்குரிய அனுமதிச் சீட்டை எனக்குக் கொடுக்குமாறு உத்தரவிட்டான். ஷ்வாப்ரின் திகைத்துப் போய் கற்சிலையாக மாறி விட்டது போல நின்று கொண்டிருந்தார். புகச்சோவ், ஷ்வாப்ரினைக் கூட்டிக்கொண்டு கோட்டையைச் சுற்றிப்பார்ப்பதற்குப் புறப்பட்டான். நான் பிரயாணத்துக்குத் தேவையான ஏற்பாடுகளைச் செய்வதற்காக அங்கேயே நின்றுவிட்டேன்.

நான் தனியறையை நோக்கி ஓடினேன். கதவு உள்ளே தாளிடப்படிருந்தது. நான் கதவில் ஓங்கித் தட்டினேன். ''யார் அது?'' என்று பலாஷ்கா கேட்டாள். நான் வந்திருக்கிறேன் என்று சொன்னேன். மார்யா இவானவ்னுவின் இனிமையான குரல் கதவு வழியாகக் கேட்டது. ''பியோத்தர் அந்திரேயெவிச்! ஒரு நிமிடம் பொறுங்கள். நான் உடை

மாற்றிக் கொண்டிருக்கிறேன். நீங்கள் பாதிரியார் வீட்டுக்குப் போங்கள். நான் ஒரு நிமிடத்தில் வந்து விடுகிறேன்'' என்ருள்.

நான் கெராசிம் பாதிரியார் வீட்டுக்குப் போனேன். அவரும் அவர் மனைவியும் வெளியே ஓடி வந்து என்னை வரவேற்ருர்கள். நான் கோட்டைக்கு வந்திருப்பதை ஸவேலிச் அவர்களிடம் முன்பே தெரிவித்திருக்க வேண்டும். ''பியோத்தர் அந்திரேயெவிச்! வாருங்கள்'' என்று பாதிரியார் மனைவி என்னை வரவேற்ருள். ''கடவுள் கருணையால் நாம் மறுபடியும் சந்தித்துக் கொள்ள முடிந்தது. எப்படி இருக்கிறீர்கள்? உங்களைப் பற்றி நாங்கள் தினமும் பேசிக் கொண்டிருப்போம். மார்யா இவானவ்ஞ! பாவம்! நீங்கள் இல்லாமல் மிகவும் கஷ்டப்பட்டாள், அது சரி. புகச்சோவோடு நன்ருகப் பழகுகிறீர்களே. அது எப்படி முடிந்தது? உங்களை ஏன் அவன் தூக்கில் போடவில்லை? ஆனல் அந்தப் போக்கிரிக்கு அதற்காகவாவது நாம் நன்றி செலுத்த வேண்டும்.'' ''கிழவி! போதும், நிறுத்து'' என்று அவளுடைய பேச்சில் கெராசிம் பாதிரியார் குறுக்கிட்டார். ''உனக்குத் தெரிந்த எல்லாவற்றையும் சொல்ல வேண்டியதில்லை. வம்புப் பேச்சினல் எந்த நன்மையும் வராது. பியோத்தர் அந்திரேயெவிச்! தயவு செய்து, உள்ளே வாருங்கள், நாம் சந்தித்து எவ்வளவு காலமாகி விட்டது'' என்று கூறினர்.

பாதிரியார் மனைவி ஓயாமல் பேசிக் கொண்டே தங்களிடமிருந்த உணவை எனக்கு முன்பு வைத்தாள். மார்யா இவானவ்ஞவைத் தன்னிடம் ஒப்படைக்குமாறு ஷ்வாப்ரின் தங்களை பலவந்தப்படுத்திய விவரங்களை என்னிடம் கூறினள். தங்களைப் பிரியும் பொழுது மார்யா இவானவ்ஞ எப்படி அழுதாள் என்றும் ஆனல் பலாஷ்கா மூலமாகத் தங்களுக்கு அவ்வப்பொழுது தகவல்கள் அனுப்பியதையும் சொன்னள். (அந்த பலாஷ்கா இருக்கிருளே, அவள் ரொம்ப கெட்டிக்காரி. அந்த சார்ஜென்டை அப்படியே வளைத்துப் போட்டு விட்டாள்.) அவள் ஆலோசனையினல்தான் மார்யா இவானவ்ஞ எனக்குக் கடிதம் எழுதியதாகவும், இப்படி இன்னும் பல செய்திகளையும் சொன்னள். நான் என்னுடைய அனுபவங்களை அவர்களிடம் சுருக்கமாகத் தெரிவித்தேன்.

பாதிரியாரும் அவர் மனைவியும் எப்படி தந்திரமாகத் தன்னை ஏமாற்றி விட்டார்கள் என்று புகச்சோவ் தெரிந்து கொண்டான் என்று சொன்ன பொழுது அவர்களிருவரும் சிலுவைக் குறியிட்டுக் கொண்டார்கள். ''கடவுளே! எங்களைக் காத்தருளுங்கள்'' என்றாள் அக்குலீனு பம்பீலவ்னு. ''புயல் மேகத்தைக் கடவுள் விரட்டி விடுவார். அலெக்சேய் இவானவிச் எவ்வளவு கீழ்த்தரமாக நடந்து கொண்டான்!'' என்று பாதிரியார் மனைவி சொல்லிக் கொண்டிருந்த பொழுது கதவு திறந்தது. மார்யா இவானவ்னு தன்னுடைய வெளுத்த முகத்தில் புன்சிரிப்போடு உள்ளே நுழைந்தாள். அவள் முன்பு உடுத்தியிருந்த விவசாயப் பெண்ணின் உடையை மாற்றிக் கொண்டு வழக்கமான உடையணிந்து வந்தாள். அவளுடைய எளிமையே தனி அழகோடு சோபித்தது.

நான் அவள் கையைப் பிடித்தேன். வெகு நேரம் வரை என்னுல் ஒரு வார்த்தை கூடப் பேச முடியவில்லை. எங்கள் இருவருடைய இதயங்களிலும் ஏராளமான சிந்தனைகள். எனவே அங்கே பேச்சுக்கு இடமில்லை. பாதிரியாரும் அவர் மனைவியும் தங்களுக்கு அங்கே இடமில்லை என்பதைப் புரிந்து கொண்டு எங்களைத் தனியே விட்டுப் போய் விட்டார்கள். நாங்கள் தனியே இருந்தோம்; எல்லாத் துன்பங்களையும் மறந்து விட்டோம். ஆசை தீரும் வரை பேசினேம். கோட்டை கைப்பற்றப்பட்டதிலிருந்து தனக்கேற்பட்ட சோதனைகளை, ஷ்வாப்ரின் அவளுக்குக் கொடுத்த கஷ்டங்களை மார்யா இவானவ்னு ஒன்றையும் விடாமல் என்னிடம் சொன்னுள். கடந்த காலத்தில் எவ்வளவு ஆனந்தமாக இருந்தோம் என்று பேசினேம்... இருவரும் சேர்ந்து கண்ணீர் வடித்தோம்... கடைசியில் என்னுடைய திட்டங்களைச் சொன்னேன். அவளைப் புகச்சோவின் கோட்டையில் ஷ்வாப்ரினுடைய அதிகாரத்தின் கீழ் விட்டுப் போவது என்ற பேச்சுக்கே இடமில்லை. ஆனுல் முற்றுகையில் சிக்கியிருக்கும் ஓரேன்புர்க் கோட்டைக்குப் போக முடியாது. இந்த உலகத்தில் அவளுக்கு ஒரு உறவினர் கூடக் கிடையாது. எனவே என்னுடைய பெற்றோர்களிடம் அவளை அனுப்பி வைப்பதென்ற முடிவைச் சொன்னேன். என் தகப்பனுருக்கு அவளைப் பிடிக்கவில்லை என்பது அவளுக்கு முன்பே தெரியும். எனவே அவள் முதலில் பயந்து போய்த் தயங்கி

ளுள். நான் அவளுடைய அச்சத்தை சிறிது சிறிதாகப் போக்கினேன். நாட்டுக்காக உயிர் நீத்த ஒரு கௌரவமான அதிகாரியின் மகளுக்கு அடைக்கலம் தருவதைத் தன்னுடைய கடமையாகவும் தனக்குப் பெருமையளிப்பதாகவும் என்னுடைய தகப்பனுர் கருதுவார் என்று உறுதியளித்தேன். ''மார்யா இவானவ்னு! என் அன்பே! என்னுடைய மனைவியாக உன்னைக் கருதுகிறேன். எத்தனையோ சோதனைகளுக்குப் பிறகு நாம் ஒன்றுசேர்ந்திருக்கிருேம். இனி உலகத்தில் எந்தச் சக்தியும் நம்மைப் பிரிக்க முடியாது'' என்று கடைசியில் சொன்னேன். மார்யா இவானவ்னு நான் சொன்னதைப் போலியான மறுப்புக்களோ நாணமோ இல்லாமல் மிகவும் அமைதியாகக் கேட்டாள். அவளுடைய வாழ்க்கையும் எதிர்காலமும் என்னேடு பிணைக்கப்பட்டு விட்டதாக அவள் கருதினுள். ஆனுல் என் பெற்றேர்கள் அனுமதி கொடுத்தால்தான் என்னைத் திருமணம் செய்து கொள்வேன் என்று மீண்டும் வலியுறுத்தினுள். அவளோடு வாதாடி அந்த முடிவை மாற்றுவதற்கு நான் முயற்சிக்கவில்லை. நாங்கள் மனப்பூர்வமான ஆசையோடு முத்தங்களிட்டோம்—இவ்விதத்தில் ஒரு வகையான முடிவுக்கு வந்தோம்.

ஒரு மணி நேரத்தில் ஒரு வேலைக்காரன் அனுமதிச் சீட்டை என்னிடம் கொண்டுவந்து கொடுத்தான். அந்தச் சீட்டில் புகச்சோவ் கிறுக்கியது போலக் கையொப்பமிட்டிருந்தான். புகச்சோவ் என்னைப் பார்க்க விரும்புவதாகவும் தெரிவித்தான். நான் போன பொழுது புகச்சோவ் அடுத்த ஊருக்குப் போவதற்குத் தயாராக நின்று கொண்டிருந்தான். இந்த வெறியனிடமிருந்து, பயங்காரமான பேயிடமிருந்து, என்னைத் தவிர மற்றவர்கள் அனைவரிடமும் குரூரமாக நடத்து கொண்ட அரக்கனிடமிருந்து விடை பெற்றுப் பிரிந்த பொழுது என் மனதிலேற்பட்ட உணர்ச்சிகளை என்னுல் வர்ணிப்பது கடினம். ஏன்? உண்மையைச் சொல்லி விடுகிறேனே. அந்த நேரத்தில் எனக்கு அவனிடம் மிகவும் ஆழமான அனுதாபம் ஏற்பட்டது. அவன் தலைமையில் திரண்டிருக்கும் கயவர்களிடமிருந்து அவனைப் பிரித்து, அவனுக்காகக் காத்துக் கொண்டிருக்கும் தூக்குக் கம்பங்களிலிருந்து அவனைக் காப்பாற்ற வேண்டுமென்று தீவிரமாக விரும்பினேன். அங்கே ஷ்வாப்ரினும் வேறு பல நபர்களும்

கூட்டமாக நின்றதால் என் மனதிலேற்பட்ட எல்லாக் கருத்துக்களையும் சொல்ல முடியவில்லை.

நாங்கள் நண்பர்களாகப் பிரிந்தோம். அந்தக் கூட்டத்தில் அக்குலீனு பம்பீலவ்னு நின்று கொண்டிருப்பதைப் பார்த்த புகச்சோவ் அவளை நோக்கித் தன்னுடைய விரலை நீட்டி விஷமமாகக் கண்ணைச் சிமிட்டினான். பிறகு வண்டியில் உட்கார்ந்து கொண்டு பேர்தாவுக்கு வண்டியை ஓட்டுமாறு வண்டிக்காரனுக்கு உத்தரவிட்டான். குதிரைகள் ஓட ஆரம்பித்த பொழுது அவன் மறுபடியும் வண்டியிலிருந்து தலையை நீட்டிக் கொண்டு என்னைப் பார்த்து உரத்த குரலில் பேசினான். ''கனவான் அவர்களே! போய் வருகிறேன். என்றைக்காவது ஒரு நாள் சந்திப்போம்'' என்றான். ஆம். நாங்கள் அதற்குப் பிறகு ஒரு தடவை சந்தித்துக் கொண்டோம். ஆனால் அந்தச் சூழ்நிலைமைகள் முற்றிலும் மாறிப் போயிருந்தன!...

புகச்சோவ் போய் விட்டான். அவனுடைய மூன்று குதிரைகள் பூட்டிய வண்டி போய்க் கொண்டிருந்த வெண்மையான ஸ்டெப்பி நிலத்தை நான் வெகு நேரம் பார்த்துக் கொண்டிருந்தேன். கூட்டம் கலைந்து விட்டது. ஷ்வாப்ரினும் எங்கோ மறைந்து விட்டார். நான் மறுபடியும் பாதிரியார் வீட்டுக்குப் போனேன். நாங்கள் புறப்படுவதற்குத் தேவையான எல்லா ஏற்பாடுகளும் முடிந்திருந்தன. மேலும் தாமதமில்லாமல் புறப்பட வேண்டுமென நானும் விரும்பினேன். காலஞ்சென்ற தளகர்த்தருக்குச் சொந்தமான பழைய வண்டியில் எங்களுடைய பொருள்களைக் குவித்துப் போட்டிருந்தோம். வண்டிக்காரன் ஒரு நொடியில் குதிரைகளை வண்டியில் பூட்டினான். மார்யா இவானவ்னுவின் பெற்றோர்களின் உடல்கள் மாதாகோவிலுக்குப் பின்னால் புதைக்கப்பட்டிருந்தன. அங்கே போய் விடை பெற்றுக் கொண்டு வருவதாக அவள் சொன்ன பொழுது நானும் கூட வருவதாகச் சொன்னேன்; ஆனால் அவள் தனியே போய் வர விரும்புவதாகச் சொல்லி விட்டாள். சில நிமிடங்களுக்குப் பிறகு மௌனமாகக் கண்ணீர் வடித்தபடியே அவள் திரும்பி வந்தாள். வண்டி புறப்படுவதற்குத் தயாராக நின்றது. கெராசிம் பாதிரியாரும் அவருடைய மனைவியும் வெளியே வந்து நின்றார்கள். நான், மார்யா இவானவ்னு,

பலாஷ்கா ஆகிய மூவரும் வண்டிக்குள் உட்கார்ந்து கொண்டோம். ஸவேலிச் முன் பக்கத்தில் ஏறி உட்கார்ந்தான். ''மார்யா இவானவ்ன! என் அன்பே! போய்வா! பியோத்தர் அந்திரேயெவிச்! ஒளி வீசும் வல்லூறே! போய்வாருங்கள்'' என்று பாதிரியாரின் அன்பான மனைவி விடை கொடுத்தாள். ''உங்கள் பிரயாணம் சுகமாக இருக்கட்டும்! கடவுள் உங்களிருவருக்கும் மகிழ்ச்சியைத் தரட்டும்!'' நாங்கள் புறப்பட்டோம். தளகர்த்தருடைய வீட்டில் சன்னலுக்கருகே ஷ்வாப்ரின் நின்று கொண்டிருப்பதைப் பார்த்தோம். அவர் முகத்தில் சிடுசிடுப்பும் மூர்க்கத்தனமும் தெரிந்தது. தோல்வியடைந்த எதிரி ஒருவருக்கு மனவேதனையையும் ஏற்படுத்துவது சரியல்ல என்ற எண்ணத்தில் நான் முகத்தை வேறு பக்கத்தில் திருப்பிக் கொண்டேன். கடைசியில் கோட்டைக் கதவு வழியாக பெலகோர்ஸ்க் கோட்டையை விட்டு நிரந்தரமாகப் பிரிந்து சென்றோம்.

•

# அத்தியாயம் பதின்மூன்று

## கைது

—ஐயா! என்னைக் கோபிக்காதீர்கள்.
நான் கடமையை முடிக்க வேண்டும்.
உங்களைச் சிறைக்கு அனுப்ப வேண்டும்.
—சரி. நான் தயார். ஆனால்
நடந்த சம்பவங்களை எனக்குரிய
வழியில் எடுத்துச் சொல்ல
அனுமதி முதலில் வேண்டும்.

**கினியாழ்னின்**[62]

என்னுடைய இனிய காதலியோடு எதிர்பாராதவிதமாக இணைக்கப்பட்டது என்னுடைய அதிருஷ்டமே. என்னால் அதை நம்ப முடியவில்லை. ஏனென்றால் அன்று காலை நேரத்தில் கூட அவளுக்கு என்ன ஏற்பட்டதோ என்று நான் கவலையும் வேதனையும் அனுபவித்துக் கொண்டிருந்தேன். நடந்தவையெல்லாம் வெறும் கனவு தானோ என்று கூட எனக்குச் சந்தேகம் ஏற்பட்டது. மார்யா இவானவ்னா தன்னுடைய மனதிலேற்பட்ட சிந்தனைகளை இன்னும் ஒழுங்கு படுத்த முடியாமலிருப்பதைப் போல வாடிய தோற்றத்தோடு என் முகத்தையும் பாதையையும் மாறிமாறிப் பார்த்துக் கொண்டிருந்தாள். நாங்கள் மௌனமாக உட்கார்ந்திருந்தோம். எங்களுடைய இதயங்கள் களைத்துச் சோர்ந்து போயிருந்தன. காலம் வேகமாகக் கழிந்து கொண்டிருந்ததை நாங்கள் கவனிக்கவில்லை. இரண்டு மணி நேரத்தில் புகச்சோவின் அதிகாரத்துக்கு உட்பட்ட அடுத்த கோட்டைக்குப் போய்ச் சேர்ந்தோம். அங்கே குதிரைகளை மாற்றிக் கொண்டோம். புதுக் குதிரைகள் உடனே கிடைத்ததையும், அந்தக் கோட்டையின் தளகர்த்தராகப் புகச்சோவினால் நியமிக்கப்பட்ட தாடியுள்ள கஸாக் வீரன் எங்களுக்கு அவசரமாகச் செய்த பணி விடைகளையும் பார்த்த பொழுது, புகச்சோ

வுக்கு மிகவும் வேண்டியவர்களாக எங்களைக் கருதினார்கள் என்பதைப் புரிந்து கொண்டேன். இது வம்புப் பேச்சில் சூரனான எங்களுடைய வண்டிக்காரன் செய்த உதவியாகும்.

நாங்கள் தொடர்ந்து பிரயாணம் செய்தோம். இருட்டும் நேரத்தில் ஒரு சிற்றூரை அடைந்தோம். பாசாங்குக்காரனின் படையில் சேருவதற்காக ஒரு பலமான படைப்பிரிவு அங்கே காத்துக் கொண்டிருப்பதாக தாடிக்கார கஸாக் தளகர்த்தர் எங்களிடம் தெரிவித்திருந்தார். காவலர்கள் எங்களை நிறுத்திப், ''போவது யார்?'' என்று வழக்கம் போலக் கேட்டார்கள். இந்தக் கேள்விக்கு எங்கள் வண்டிக்காரன் ஜார் சக்கரவர்த்தியின் நண்பரும் அவருடைய சீமாட்டியும் போவதாக உரத்த குரலில் பதிலளித்தான். உடனே பயங்கரமான வசவுகளைச் சொல்லிக் கொண்டு ஏராளமான ஹுஸார்கள் எங்களைச் சூழ்ந்து கொண்டார்கள். மீசையுள்ள ஒரு சார்ஜென்ட்-மேஜர் எங்களைப் பார்த்து ''சைத்தானுடைய நண்பனே! வெளியே வா! உனக்கும் உன்னுடைய சீமாட்டிக்கும் தயாராக வைத்திருக்கிறோம்'' என்று சத்தம் போட்டுச் சொன்னான்.

நான் வண்டியிலிருந்து கீழே இறங்கி அவர்களுடைய மேலதிகாரியிடம் என்னைக் கூட்டிக் கொண்டு போகுமாறு கேட்டுக் கொண்டேன். நான் இராணுவ அதிகாரி என்பதைக் கண்டதும் படைவீரர்கள் வசவுகளை நிறுத்திக் கொண்டார்கள். சார்ஜென்ட்-மேஜர் என்னை மேஜரிடம் கூட்டிக் கொண்டு சென்றான். ஸவேலிச் என்னை விட்டுச் சிறிதும் பிரியாமல் முணுமுணுத்துக் கொண்டே இருந்தான். ''ஜார் சக்கரவர்த்தியின் நண்பராம்! நல்ல கூத்து! சட்டியிலிருந்து தப்பி நெருப்புக்குள்ளேயே விழுந்து விட்டோம்... கடவுளே! இதெல்லாம் எப்படித்தான் முடியப் போகிறதோ!'' என்றான். வண்டி எங்களுக்குப் பின்னால் மெதுவாக வந்து கொண்டிருந்தது.

ஐந்து நிமிடங்கள் நடந்த பிறகு பிரகாசமான விளக்குகள் எரிந்து கொண்டிருந்த ஒரு வீட்டை அடைந்தோம். சார்ஜென்ட்-மேஜர் எனக்குப் பாதுகாப்புக்கு ஆட்களை நியமித்துவிட்டுத் தகவல் தெரிவிப்பதற்காக வீட்டுக்குள் சென்றான். உள்ளே போன ஒரு நிமிடத்துக்குள் அவன் திரும்பி வந்தான். மேன்மை தங்கிய மேலதிகாரி அவர்

களுக்கு என்னைச் சந்திக்க நேரமில்லை என்றும், என்னைச் சிறையில் தள்ளுமாறும் என் மனைவியை அவரிடம் அனுப்பி வைக்குமாறும் உத்தரவிட்டார் என்று தெரிவித்தான்.

''இதற்கு என்ன அர்த்தம்?'' என்று நான் ஆவேசமாகக் கத்தினேன். ''அந்த நபருக்குப் பைத்தியம் பிடித்து விட்டதா?'' என்று கேட்டேன்.

''கனவான் அவர்களே! எனக்குத் தெரியாது'' என்று சார்ஜென்ட்-மேஜர் பதில் கூறினான். ''மேன்மை தங்கிய அதிகாரி அவர்கள் கனவான் அவர்களைச் சிறையில் தள்ளுமாறும் சீமாட்டி அவர்களைத் தம்மிடம் அனுப்பி வைக்குமாறும் உத்தரவு கொடுத்தார். அதற்கு மேல் எனக்கு ஒன்றும் தெரியாது'' என்றான்.

நான் அந்த வீட்டுக்குள் நுழைந்தேன். என்னைத் தடுப்பதற்குக் காவலர்கள் யாரும் முயற்சிக்கவில்லை. ஐந்து அல்லது ஆறு ஹுஸார் அதிகாரிகள் சீட்டாடிக் கொண்டிருந்த அறைக்குள் வேகமாகச் சென்றேன். மேஜர் சீட்டுகளைக் கலைத்துப் போட்டுக் கொண்டிருந்தார். அந்த மேஜர் ஸிம்பீர்ஸ்க் விடுதியில் என்னிடமிருந்து பணம் பிடுங்கிய இவான் இவானவிச் ஸூரின் என்பதைப் பார்த்த பொழுது நான் மிகவும் ஆச்சரியமடைந்தேன்.

''இவான் இவானவிச்! நீங்கள்தானா? இது உண்மையா?'' என்றேன்.

''பியோத்தர் அந்திரேயெவிச்! என்ன விஷயமாக இந்தப் பக்கம் வந்தாய்? எங்கேயிருந்து வருகிறாய்? சகோதரனே, வாழ்த்துக்கள்! ஒரு கை உட்காருகிறாயா?'' என்று அவர் கேட்டார்.

''நன்றி. நான் தங்குவதற்கு ஏற்பாடு செய்தால் மிகவும் உதவியாக இருக்கும்.''

''தங்குவதற்குத்தானே? என்னோடு தங்கு.''

''இல்லை. நான் தனியாக வரவில்லை.''

''உன்னுடைய நண்பரும் என்னோடு தங்கலாமே.''

''நான் நண்பனோடு வரவில்லை. நான் ஒரு... ஒரு சீமாட்டியோடு வந்திருக்கிறேன்.''

''சீமாட்டியா? சகோதரனே! அவளை எங்கே பிடித்தாய்?'' (இப்படிச் சொன்ன பிறகு ஸூரின் ஒரு தனியான அர்த்தத்தோடு சீட்டியடித்தவுடன் அங்கே இருந்தவர்கள் எல்லோ

ரும் சிரித்தனர். நான் மிகவும் குழப்பமடைந்து நின்றேன்.)

''சரி. அப்படியே இருக்கட்டும்'' என்று ஸூரின் தொடர்ந்தார். ''உங்களிருவருக்கும் தனியே ஒரு அறை கொடுக்குமாறு சொல்கிறேன். எனக்கு வருத்தமாகத்தான் இருக்கிறது. முன்பு ஒரு தடவை நாம் ஆனந்தமாக இருந்தது போல இன்றைக்கும் இருந்திருக்கலாம்... பையனே! புகச்சோவுக்குப் பிடித்தமான சீமாட்டியை இங்கே கூட்டிக் கொண்டு வந்தால் என்ன? அல்லது அவள் ஏதாவது தொந்தரவு கொடுக்கிருளா?பயப்பட வேண்டாம் என்று அவளிடம் சொல். இந்தக் கனவான் மிக நல்ல கனவான்; அவளுக்கு எந்த சிரமமும் கொடுக்க மாட்டார் என்று அவளிடம் சொல். அவள் ஏதாவது சேட்டை செய்தால் ஓங்கி இரண்டு அடி கொடு'' என்ருர்.

''என்ன உளறுகிறீர்கள்?'' என்று நான் ஸூரினைக் கேட்டேன். ''புகச்சோவுக்குப் பிடித்தமான சீமாட்டியா? யார் சொன்னுர்கள்? அவள் காலஞ்சென்ற காப்டன் மிரோனவின் மகள். நான் அவளைச் சிறையிலிருந்து விடுவித்துக் கூட்டிக் கொண்டு வந்திருக்கிறேன். என்னுடைய தகப்பஞரிடம் கொண்டு போய் அவளை விட்டுவிட நினைத்திருக்கிறேன்'' என்றேன்.

''என்ன இது? உன்னைப் பற்றித்தான் என்னிடம் சொன்ஞர்களா? போகட்டும். நடந்ததை சரியாகச் சொல்.''

''சந்தர்ப்பம் கிடைக்கும் பொழுது அதை விரிவாகச் சொல்கிறேன். அதைக் காட்டிலும் அந்தப் பரிதாபத்துக்குரிய பெண்ணின் கவலையை நீக்குவது மிகவும் முக்கியம். உங்களுடைய ஹுஸார்கள் அவளைப் பயமுறுத்திக் கொன்று விட்டார்கள்'' என்றேன்.

ஸூரின் உடனே மார்யா இவானவ்னுவிடம் நேரில் சென்று நடந்த தவறுகளை மன்னிக்குமாறு கேட்டுக் கொண்டார். பிறகு நகரத்திலேயே மிகச் சிறந்த விடுதியில் அவளைத் தங்க வைக்குமாறு சார்ஜென்ட்-மேஜருக்கு உத்தரவு கொடுத்தார். நான் அவருடைய அறையிலேயே தங்குவதென்று முடிவு செய்தேன்.

நானும் ஸூரினும் உணவருந்திய பிறகு எனக்கேற்பட்ட பல்வேறு அனுபவங்களையெல்லாம் அவரிடம் எடுத்துக் கூறினேன். அவர் மிகவும் கவனமாக நான் சொல்லியதைக்

கேட்டார். நான் சொல்லி முடித்ததும் அவர் தலையை ஆட்டிவிட்டுப் பேச ஆரம்பித்தார்.

''சகோதரனே! நடந்தவரைக்கும் சரிதான். ஆனால் ஒரு விஷயம் எனக்குக் கொஞ்சமும் பிடிக்கவில்லை. நீ கல்யாணம் செய்து கொள்ள ஏன் முடிவு செய்தாய்? ஒரு கௌரவமான அதிகாரி என்ற முறையில் நான் உண்மையைச் சொல்கிறேன். உன்னை ஏமாற்ற எனக்கு விருப்பமில்லை. கல்யாணம் என்பது முட்டாள்தனம். மனைவி, ஏராளமான குழந்தைகள்—இதெல்லாம் உனக்கு எதற்கு? பேசாமல் நான் சொல்வதைக் கேள். இதையெல்லாம் மறந்துவிடு. காப்டன் மகளிடமிருந்து வெட்டிக் கொள். ஸிம்பீர்ஸ்க் செல்லும் பாதையில் எந்த ஆபத்தும் இப்பொழுது கிடையாது. அதை மிகவும் பாதுகாப்புள்ளதாகச் செய்திருக்கிறேன். நாளைக்கு அந்தப் பெண்ணை மட்டும் உன்னுடைய பெற்றோர்களிடம் அனுப்பி வை. நீ என்னுடைய படைப் பிரிவில் சேர்ந்து கொள். இனி மறுபடியும் ஓரென்புர்க்குப் போக முயற்சிப்பதில் அர்த்தமில்லை. கலகக்காரர்களிடம் நீ மறுபடியும் அகப்பட்டுக் கொள்வாய். அவர்களை இரண்டாவது தடவையும் உதறிவிட உன்னால் முடியாது. காதல் பைத்தியம் சீக்கிரமாகப் போய்விடும்; பிறகு எல்லாம் சரியாகிவிடும்'' என்றார்.

அவர் சொன்ன எல்லா விஷயங்களையும் நான் ஒத்துக் கொள்ள முடியாவிட்டாலும், சக்கரவர்த்தினியின் படைகளில் சேர்ந்து கொள்வது என்னுடைய கடமை மட்டுமல்ல; அதுவே கௌரவமானது என்று கருதினேன். ஸூரின் தெரிவித்த ஆலோசனையின்படி மார்யா இவானவ்னாவை என் பெற்றோர்களிடம் அனுப்புவதென்றும் நான் ஸூரின் தலைமையிலுள்ள படையில் சேர்ந்து கொள்வதென்றும் முடிவு செய்தேன்.

இரவில் படுப்பதற்குச் சென்ற பொழுது எனக்கு உதவி செய்வதற்காக ஸவேலிச் வந்தான். மறு நாள் காலையில் மார்யா இவானவ்னாவோடு ஊருக்குப் போகத் தயாராக இரு என்று அவனிடம் சொன்னேன். முதலில் அவன் என்னுடைய முடிவை எதிர்த்தான்.

''ஐயா! என்ன சொல்கிறீர்கள்? உங்களைக் கைவிட்ட மாதிரி நான் ஊருக்குப் புறப்படுவதா? உங்களை யார்

பார்த்துக் கொள்வார்கள்? உங்களுடைய பெற்ருேர்கள் என்ன நினைப்பார்கள்?'' என்ருன்.

என்னுடைய முன்னுள் ஆசிரியன் எவ்வளவு பிடிவாதக் காரன் என்பது எனக்குத் தெரியமாதலால் அவனை அன்போடு கெஞ்சுவது அவசியம் என்று நினைத்தேன்.

''அர்ஹீப் ஸவேலிச்! என் அருமை நண்பனே!'' என்று ஆரம்பித்தேன். ''நான் சொல்லப் போவதை நீ மறுக்கக் கூடாது. நீதான் என்னைக் காப்பற்ற வேண்டும். இங்கே எனக்கு வேலைக்காரன் தேவையில்லை. மார்யா இவானவ்ன உதவிக்கு நீ இல்லாமல் பிரயாணம் செய்தால் எனக்குச் சிறிதும் நிம்மதி இருக்காது. அவளுக்கு உதவி செய்தால் அது எனக்கும் உதவி செய்தது மாதிரிதான். ஏனென்ருல் நிலைமைகள் சீர்திருந்திய உடனே அவளைத் திருமணம் செய்து கொள்வதென்று உறுதியாக முடிவு செய்திருக்கிறேன்'' என் றேன்.

இதைக் கேட்டதும் ஸவேலிச் மிகவும் ஆச்சரியமடைந்த வனைப் போலத் தன்னுடைய கைகளை வீசினுன்.

''கல்யாணமா? குழந்தை கல்யாணத்தைப் பற்றிப் பேச லாமா? உங்கள் தகப்பனுர் என்ன சொல்வார்? உங்கள் தாயார் என்ன நினைப்பாள்?'' என்ருன்.

''அவர்கள் ஒத்துக் கொள்வார்கள். மார்யா இவானவ் னவைப் பார்த்ததும் நிச்சயமாக ஒத்துக் கொள்ளத் தான் போகிருர்கள்'' என்றேன். ''உன்னிடம் நான் முழு நம் பிக்கை வைத்திருக்கிறேன். நீ சொன்னுல் அப்பாவும் அம் மாவும் நிச்சயமாகக் கேட்டுக் கொள்வார்கள். எனக்காக நீ பரிந்து பேச வேண்டும். பேசுவாயா, மாட்டாயா?'' என்று கேட்டேன்.

அந்தக் கிழவனுடைய மனம் இளகி விட்டது.

''பியோத்தர் அந்திரேயெவிச்! எஜமான்! உங்கள் கல் யாணத்துக்கு இப்பொழுது அவசரமில்லை; தள்ளி வைத்துக் கொள்ளலாம் என்பது உண்மைதான். ஆனுல் மார்யா இவானவ்ன உங்களுக்குப் பொருத்தமான இளம் சீமாட்டி யாக இருப்பதால், இந்தச் சந்தர்ப்பத்தை இழந்துவிடக் கூடாது. சரி! அப்படியே நடக்கட்டும். அவளை, அந்த அன்புமிக்க தேவதையை உங்கள் தகப்பனுரிடம் நான் கூட்டிக் கொண்டு போகிறேன். இப்படிப்பட்ட ஒரு பெண்

கிடைக்கும் பொழுது சீதனமெல்லாம் வேண்டியதில்லை என்று உங்கள் தகப்பனுரிடம் இந்த ஏழை எடுத்துச் சொல்கிறேன்'' என்ருன்.

நான் ஸவேலிச்சுக்கு நன்றி கூறிவிட்டுத் தூங்குவதற்காக ஸூரினுடைய படுக்கையறைக்குச் சென்றேன். எனக்கு ஏற்பட்டிருந்த உற்சாகத்திலும் பரபரப்பிலும் வெகு நேரம் வரையிலும் தொணதொணவென்று பேசிக் கொண்டிருந்தேன். ஆரம்பத்தில் கொஞ்ச நேரம் வரை ஸூரின் நான் சொல்வதைக் கேட்டுக் கொண்டு விருப்பத்தோடு ஏதாவது பதில் சொல்வார். பிறகு அவரிடமிருந்து 'உம்' என்பது மட்டும் கேட்கும். அதுவும் ரொம்ப நேரத்துக்குப் பிறகு தான் கேட்கும். கடைசியில் என்னுடைய பேச்சுக்களுக்கு அவருடைய குறட்டைதான் .பதிலாகக் கிடைத்தது. அவருடைய பலமான குறட்டையையும் சீட்டியடிப்பது போல மூச்சை உள்ளே இழுக்கும் சத்தத்தையும் கேட்டு நான் பேச்சை நிறுத்திக் கொண்டு விரைவில் அவரைப் பின்பற்றினேன்.

நான் மறு நாள் காலையில் மார்யா இவானவ்னுவைச் சந்தித்து என்னுடைய யோசனையைத் தெரிவித்தேன். அவள் அது நல்ல யோசனை என்பதை ஒத்துக் கொண்டாள்; உடனே புறப்படத் தயாராக இருப்பதாகவும் கூறிஞள். ஸூரினுடைய படைப் பிரிவு அந்த நகரத்தை விட்டு அன்றைய தினமே புறப்படுவதாக இருந்தது. எனவே இனி தாமதிக்க வழியில்லை. மார்யா இவானவ்னுவிடம் என் பெற்ருேர்களுக்கு நான் எழுதிய கடிதத்தைக் கொடுத்துவிட்டு ஸவேலிச்சின் பாதுகாப்பில் அவளை ஒப்படைத்தேன். பிறகு அந்த இடத்திலேயே அவளிடமிருந்து விடை பெற்றேன். மார்யா இவானவ்னு கண்ணீர் விட்டழுதாள். ''பியோத்தர் அந்திரேயெவிச்! போய் வருகிறேன்'' என்று அவள் தணிவான குரலில் சொன்னுள். ''நீங்களும் நானும் மறுபடியும் சந்திப்போமா என்பது கடவுளுக்குத்தான் தெரியும். ஆனுல் என்னுடைய வாழ்க்கையின் கடைசி தினம் வரை உங்களை நான் மறக்க மாட்டேன். என் உடலில் உயிர் இருக்கும் வரை உங்களுடைய நினைவுகள் என் இதயத்தில் நிலைத்திருக்கும்'' என்ருள். என்ஞல் ஒரு வார்த்தை கூடப் பேச முடியவில்லை. எங்களைச் சுற்றி பலர் நின்று கொண்டிருந்தார்கள். எனவே

அந்நியர்களுக்கு முன்பு என்னுடைய உணர்ச்சிகளை வெளிப் படுத்திக் கொள்ள நான் விரும்பவில்லை. கடைசியில் அவள் ஊருக்குப் புறப்பட்டாள். நான் சோகத்தோடு ஸுரினைப் பார்க்கப் புறப்பட்டேன். என்னால் பேச முடியவில்லை. என்னை உற்சாகப்படுத்துவதற்கு ஸுரின் தன்னாலியன்ற வரை பாடு பட்டார். எனக்கும் ஏதாவது பொழுதுபோக்குத் தேவைப் பட்டது. அன்று மாலை வரையிலும் ஆரவாரமான கேளிக் கைகளில் நேரத்தைக் செலவிட்டோம். மாலை நேரத்தில் படைகளோடு புறப்பட்டோம்.

அப்பொழுது பிப்ரவரி மாதக் கடைசி. இராணுவ நட வடிக்கைகளுக்குக் குந்தகமாக இருந்த குளிர் காலம் முடி வுக்கு வந்து கொண்டிருந்தது. ஒரே சமயத்தில் எல்லாப் படைகளையும் ஒன்றாக இணைத்து ஒரு தாக்குதலை ஆரம்பிப் பதற்கு நம்முடைய ஜெனரல்கள் திட்டம் தீட்டிக் கொண் டிருந்தார்கள். புகச்சோவ் இன்னும் ஓரேன்புர்க் கோட்டை முற்றுகையை நீடித்துக் கொண்டிருந்தான். ஆனால் அங்கங்கே சிதறிக் கிடந்த படைப் பிரிவுகள் ஒன்றுசேர்ந்து எல்லாத் திசைகளிலும் கலகக்காரர்களின் தலைமையகத்தை நோக்கி முன்னேறிக் கொண்டிருந்தன. நமது படைகளைக் கண்ட வுடன் கிளர்ச்சியில் ஈடுபட்டிருந்த கிராமங்கள் கலகத்தைக் கைவிட்டன. எங்கு பார்த்தாலும் கலகக்காரர்களின் வஞ் சகப் படைகள் நம்மைக் கண்டு பயந்து ஓடி ஒளிந்து கொண் டன. எனவே இந்தப் போராட்டம் வேகமாகவும் வெற்றி கரமாகவும் முடிவடையப் போகிறது என்பது தெளிவா யிற்று.

வெகு சீக்கிரத்தில் இளவரசர் கலீத்சின் புகச்சோவை தத்தீஷெவ் கோட்டையிலிருந்து விரட்டியதோடல்லாமல்[63] அவனுடைய ஆதரவாளர்களையும் நாலாதிசைகளிலும் சிதறி யோடச் செய்தார். ஓரென்புர்க் கோட்டை மீதிருந்த முற் றுகையை முறியடித்த பொழுது கலகக்காரர்களுக்கு மரண அடி கொடுத்து விட்டது போலத் தோன்றியது. அதே சம யத்தில் ஸுரின் தலைமையில் ஒரு படை பஷ்கீரியக் கலகக் கும்பலை எதிர்த்து அனுப்பப்பட்டது. ஆனால் அந்தக் கும்பல் எங்களைச் சந்திப்பதற்கு முன்பே சிதறியோடி விட்டது. வசந்த காலத்தின் போது நாங்கள் ஒரு தார்த்தாரியக் கிரா மத்துக்குள் அடைபட்டிருந்தோம். சுற்றிலுமுள்ள ஆறுகளில்

தண்ணீர் அதிகமாகப் போய்க் கொண்டிருந்தது; சாலைகளைக் கடக்க முடியாது. எனவே ஒரு வேலையும் செய்யாமல் அந்தக் கிராமத்தில் இருந்த பொழுது, போக்கிரிகளையும் காட்டு மிராண்டிகளையும் எதிர்த்துக் சலிப்புத் தரும் வகையில் நடைபெறும் இந்தச் சிறு போர் சீக்கிரமாக முடிந்துவிடும் என்று ஒருவருக்கொருவர் ஆறுதல் சொல்லிக் கொண்டிருந்தோம்.

ஆனால் புகச்சோவ் எப்படியோ தப்பி விட்டான். அவன் சைபீரியாவுக்கு ஓடிப் போய் அங்கேயிருந்த தொழிற்சாலைகளில் தனக்கு ஆதரவாகப் பல கோஷ்டிகளைச் சேர்த்துக் கொண்டு தன்னுடைய கீழான செயல்களை மறுபடியும் தொடர்ந்தான். அவனுக்கு வெற்றி மேல் வெற்றி கிடைப்பதாக மறுபடியும் வதந்திகள் பரவின. சைபீரியாவில் கோட்டைகள் தரைமட்டமாக்கப்பட்டன என்று கேள்விப்பட்டோம். அந்தப் பாசாங்குக்காரன் கஸானைக் கைப்பற்றியதாகவும்[64] அடுத்து மாஸ்கோ நகரத்தின் மீது படையெடுக்கப் போகிறான் என்றும் செய்தி வந்தது, கேவலம் இந்தக் கலகக்காரர்களால் என்ன செய்ய முடியும் என்ற நம்பிக்கையில் ஆனந்தமாகத் தூங்கி அனுபவித்துக் கொண்டிருந்த நமது இராணுவத் தலைவர்கள் விழித்துக் கொண்டு சுறுசுறுப்பாக நடந்து கொண்டார்கள். வோல்கா நதியைக் கடந்து செல்லுமாறு ஸுரினுக்கு உத்தரவு வந்தது.

எங்களுடைய படையெடுப்பைப் பற்றியும் எவ்விதமாகப் போர் முடிவடைந்தது என்பதைப் பற்றியும் விரிவாக எழுதுவது என்னுடைய விருப்பமல்ல. ஆனால் இந்தப் போரினால் பொது மக்கள் சொல்ல முடியாத துன்பங்களையெல்லாம் அனுபவித்தார்கள் என்பதை மட்டும் இங்கே குறிப்பிடுவது அவசியமே. நாங்கள் சென்ற பாதையிலுள்ள கிராமங்களைக் கலகக்காரர்கள் ஏற்கெனவே சூறையாடியிருந்தார்கள். ஆனால் அந்தப் பரிதாபத்துக்குரிய ஜனங்களிடம் கடைசியாக மிச்சமிருந்த சிறிதளவு உணவுப் பொருளையும் கூட நாங்கள் விருப்பமில்லாமலேயே பிடுங்கி விட்டோம். அந்தப் பகுதிகளில் நிர்வாகம் என்பதே கிடையாது. நிலச்சுவான்தார்கள் காடுகளுக்குப் போய் ஒளிந்து கொண்டார்கள். எங்கு பார்த்தாலும் போக்கிரிகள் கூட்டமாகச் சேர்ந்து கொண்டு அக்கிரமங்களைச் செய்து வந்தார்கள். இவர்களைத் தவிர தனித்த இராணுவப் பிரிவுகளின் தலை

வர்கள் மனம் போனபடி தண்டனை கொடுப்பதும் மன்னிப்பு வழங்குவதும் சர்வசாதாரணமாக இருந்தது. கலகம் என்னும் மாபெரும் நெருப்புப் பற்றி யெரிந்த விரிவான பிரதேசம் முழுவதிலும் பயங்கரமான நிலைமைகள் இருந்தன.... ஈவிரக்கமற்றும் முட்டாள்தனத்தோடும் ருஷ்யர்கள் கலகம் செய்கின்ற காட்சியை நாம் பார்க்காமல் கடவுள் நம்மைக் காப்பாற்றட்டும்!

இவான் இவானவிச் மிஹெல்சோன்[65] தப்பியோடிய புகச்சோவை விரட்டிக் கொண்டு சென்றார். வெகு சீக்கிரத்தில் அவன் இறுதியாகத் தோல்வியடைந்த செய்தி கிடைத்தது. கடைசியில் பாசாங்குக்காரன் பிடிபட்டு விட்டான் என்ற செய்தி ஸூரினுக்குக் கிடைத்தது. அதே சமயத்தில் எங்கள் படைப் பிரிவை அங்கேயே முகாம் செய்யுமாறு தெரிவிக்கும் உத்தரவும் வந்தது. யுத்தம் முடிந்து விட்டது. கடைசியில் நான் ஊருக்குப் போய் என்னுடைய பெற்றோர்களைச் சந்திக்கலாம்! என் பெற்றோர்களைக் கட்டிப் பிடித்து அணைத்துக் கொள்ளலாம்; இது வரை மார்யா இவானவ்னாவிடமிருந்து ஒரு தகவல் கூட இல்லாததால் இப்பொழுது அவளைப் பார்க்க முடியும். இவற்றை நினைத்த பொழுது ஆனந்தத்தின் உச்சிக்கே போய் விட்டேன். ஒரு குழந்தையைப் போலத் துள்ளி விளையாடினேன். ஸூரின் என்னைப் பார்த்துத் தோள்களை அசைத்துக் கொண்டு சிரித்தார். "ஓ! நீ உருப்பட்ட மாட்டாய்! போய்க் கல்யாணம் செய்து கொள்! ஒழிந்து போ!" என்றார்.

ஆனால் என்னுடைய மகிழ்ச்சியில் வேறொரு விசித்திரமான உணர்ச்சியும் கலந்திருந்தது. எந்தக் குற்றமும் செய்யாத ஏராளமான பேர்களைக் கொன்று அவர்களுடைய இரத்தத்தால் கறைபட்டுப் போன கலகக்காரர் தலைவனையும் அவனுக்கு தண்டனை காத்திருப்பதையும் என்னால் மறக்க முடியவில்லை. "புகச்சோவ்! புகச்சோவ்!" என்று நான் புலம்பினேன். "துப்பாக்கிக் குண்டு உன்னைத் தொடவில்லையா? துப்பாக்கி ஈட்டி உன் மார்பைக் கிழிக்கவில்லையா? இப்படிப்பட்ட மரணம் உனக்கு வாய்க்கவில்லையே" என்று அழுதேன். நான் வேறு எவ்விதமாகச் சிந்திக்க முடியும்? புகச்சோவை நினைக்கும் பொழுதெல்லாம் அவனுடைய வாழ்க்கையிலேயே பயங்கரமான ஒரு கட்டத்தில் அவன் என்னிடம் காட்டிய

பரிவும் இரக்கமும் கொடியவனுன ஷ்வாப்ரினிடமிருந்து என்னுடைய மணப் பெண்ணைக் காப்பாற்றியதும் என்னுடைய நினைவுக்கு வரும்.

ஸுரின் எனக்கு விடுமுறை கொடுத்து ஊருக்குப் போக அனுமதித்தார். இன்னும் சில நாட்களில் என்னுடைய பெற்ரோர்களோடு ஆனந்தமாகக் கூடியிருப்பேன்; என் அன்புக் காதலி மார்யா இவானவ்னுவை மீண்டும் சந்திப்பேன்.... திடீரென்று என் தலை மீது இடி விழுந்தது.

நான் ஊருக்குப் போவதற்கு நிச்சயித்த தினத்தன்று, நான் பயணத்தைத் தொடங்கப் போகும் நேரத்தில் ஸுரின் கையிலே ஒரு காகிதத்தோடு நான் தங்கியிருந்த குடிசைக்குள் வந்தார். அவர் முகத்தில் அதிகமாகக் கவலைப்படுவதற்குரிய அறிகுறிகளைப் பார்த்தேன். என் இதயத்தில் சுருக்கென்ற வலி ஏற்பட்டது. என்ன தகவலோ தெரியவில்லையே என்று கவலைப்பட்டேன். அவர் என்னுடைய பணியாளை அறையிலிருந்து வெளியே அனுப்பிவிட்டு என்னைப் பார்த்து உங்களிடம் ஒரு தகவலைத் தெரிவிக்க வேண்டும் என்ருர். ''என்ன தகவல்?'' என்று நான் கலவரமடைந்து போய்க் கேட்டேன். ''ஒரு சிறு அசந்தர்ப்பம்'' என்று சொல்லிவிட்டு அந்தக் கடிதத்தை என்னிடம் கொடுத்தார். ''இது இப்பொழுதுதான் எனக்குக் கிடைத்தது . இதைப் படியுங்கள்'' என்ருர். நான் அதைப் படித்தேன். அது இராணுவ மேலதிகாரிகளுக்கு அனுப்பப்பட்ட இரகசிய உத்தரவு. நான் எங்கேயிருந்தாலும் என்னைக் கைது செய்து உடனே தகுந்த பாதுகாப்போடு கஸானுக்கு அனுப்பி வைக்க வேண்டுமென்றும் அங்கே புகச்சோவ் கலகம் சம்பந்தமாக நியமிக்கப்பட்டிருக்கும் விசாரணைக் குழு என்னை விசாரணை செய்யுமென்றும் குறிப்பிட்டிருந்தது.

அந்தக் கடிதம் என்னுடைய விரல்களின் இடுக்கில் அநேகமாக நழுவியது. ''எனக்கு வேறு வழியில்லை'' என்ருர் ஸுரின். ''உத்தரவை நான் நிறைவேற்ற வேண்டும். புகச்சோவுக்கும் உங்களுக்குமிருந்த நட்பும் உங்களுடைய பிரயாணங்களும் எப்படியோ அரசாங்கத்துக்குத் தெரிந்து விட்டது போலும். இதனுல் உங்களுக்கு எத்தகைய ஆபத்தும் ஏற்படாதென்று நம்புகிறேன். விசாரணைக் குழுவிடம் நீங்கள் குற்றம் செய்யவில்லை என்பதை நிரூபிக்கலாம். தைரியத்தை

இழக்க வேண்டாம். உடனே புறப்படுங்கள்'' என்றார். என்னுடைய மனம் தெளிவாக இருந்தது. நான் சிறிதும் விசாரணைக்காகப் பயப்படவில்லை. ஆனால் நானும் மார்யா இவானவ்னுவும் சந்திக்கும் அந்த இனிமையான நாளைப் பல மாதங்களுக்குத் தள்ளிப் போட வேண்டியிருக்கும் என்பதை நினைத்த பொழுது எனக்குத் திகைப்பும் மயக்கமும் ஏற்பட்டது. வெளியே வண்டி தயாராக நின்று கொண் டிருந்தது. ஸூரின் எனக்கு அன்போடு விடை கொடுத்தார். நான் வண்டியில் உட்கார்ந்தேன். எனக்கு இரு பக்கத்திலும் உருவிய வாள்களோடு இரண்டு ஹுஸார்கள் அமர்ந்தனர். நெடுஞ்சாலையில் வண்டி வேகமாகச் சென்றது.

# அத்தியாயம் பதினான்கு

## விசாரணை

வதந்தி எப்போதும் காட்டுத்
தீயைப் போலப் பரவும்.

பழமொழி

நான் செய்த ஒரே குற்றம் ஓரென்புர்க் கோட்டையிலிருந்து அனுமதியில்லாமல் வந்து பல நாட்கள் வெளியே தங்கியிருந்ததுதான் என்று உறுதியாக நம்பினேன். அதை நியாயப்படுத்துவதில் எந்த சிரமமும் இருக்காது. வீரர்கள் தனியாகச் சென்று எதிரிகளோடு சண்டைகளில் ஈடுபடுவது தடை செய்யப்படவில்லை என்பதோடு அதை மேலதிகாரிகள் ஊக்குவித்தார்கள் என்பது முக்கியமானதாகும். எனவே என் மீது தேவையில்லாத துணிச்சலைக் காட்டியதாகக் குறை கூறலாமே தவிர இராணுவ விதிகளை மீறியதாகக் குற்றம் சாட்ட முடியாது. ஆனால் எனக்கும் புகச்சோவுக்கும் நெருங்கிய நட்பு இருந்தது என்பதற்கு ஏராளமான சாட்சிகள் உண்டு. அந்த சாட்சியங்களைக் கேட்கும் பொழுது வேறு எந்த விளைவு ஏற்படுகிறதோ இல்லையோ விசாரணைக் குழுவின் சந்தேகங்கள் அதிகரிக்கும். வண்டியில் போய்க் கொண்டிருக்கும் பொழுது விரைவில் நடைபெறவிருக்கும் விசாரணையைப் பற்றியே நினைத்துக் கொண்டு என்ன பதில் சொல்லலாம் என்று சிந்தித்தேன். நீதிபதிகளின் முன்பு உண்மையை அப்படியே சொல்லிவிட வேண்டும்; அதுவே சுலபமானது; பாதுகாப்பானது என்று முடிவு செய்தேன்.

எங்கள் வண்டி கஸான் நகரத்தை நெருங்கிய பொழுது அந்த நகரத்தின் பல பகுதிகள் நெருப்பில் எரிந்து போயிருப்பதையும் அதிகமாக நாசமடைந்திருப்பதையும் பார்த்தேன். தெருக்களின் இரு மருங்கிலும் சாம்பல் குவியலாகக் கிடப்பதையும், அந்தக் குவியலுக்கிடையே சன்னல்கள் இல்லாமலும் கூரையில்லாமலும் சுவர்கள் அங்கங்கே நின்று கொண்டிருப்பதையும் பார்த்தேன். இந்த இடிபாடுகள்தான் புகச்

சோவ் விட்டுச் சென்ற மிச்சங்கள்! அந்த நகரத்தில் கோட்டை மட்டும்தான் அழிவிலிருந்து தப்பி நின்றது. ஹுஸார்கள் என்னை அந்தக் கோட்டைக்குக் கூட்டிக் கொண்டு போய் அங்கே காவலிலிருந்த அதிகாரியிடம் ஒப் படைத்தார்கள். அவன் உடனே ஒரு ஆசாரியைக் கூப்பிட் டான். என் கால்களில் விலங்குகள் மாட்டப்பட்டு நெருக்கிப் பூட்டப்பட்டன. பிறகு என்னை சிறைக்குக் கூட்டிக் கொண்டு போனுர்கள். இடவசதியில்லாத, இருட்டான அறை ஒன்றில் என்னைத் தள்ளிப் பூட்டினுர்கள். அந்த அறையில் சுவர்களில் காகிதம் ஒட்டப்படவில்லை; ஒரு சிறு பலகணியும் இரும்பால் செய்யப்பட்ட அடுப்பு மட்டுமே இங்கே இருந்தன.

ஆரம்பமே சரியில்லை என்பது உண்மையே. ஆனுல் நான் உற்சாகத்தையோ நம்பிக்கையையோ கைவிடவில்லை. துன்ப மடைந்தவர்கள் எல்லோரையும் போல நானும் ஆறுதலுக் காகப் பிரார்த்தனை செய்தேன். நான் முதல் தடவையாகத் தூய்மையான ஆனுல் புண்பட்டுள்ள இதயம் செய்கின்ற பிரார்த்தனையின் இனிமையை அனுபவித்தேன். நாளைக்கு என்ன நடக்குமோ என்ற கவலையே இல்லாமல் நிம்மதியாகத் தூங்கினேன்.

மறு நாள் காலையில் சிறைக் காவலாளி என்னைத் தூக்கத் திலிருந்து எழுப்பினுர். விசாரணைக் குழுவின் கூட்டம் ஆரம்ப மாகி விட்டது நான் உடனே அங்கு போக வேண்டும் என்ருர். இரண்டு படைவீரர்கள் எதிரேயிருந்த தளகர்த்தரின் வீட்டுக்கு என்னைக் கூட்டிக் கொண்டு போனுர்கள். அங்கே ஒரு அறைக்குள் என்னை அனுப்பி விட்டு அவர்கள் வெளியே நின்று கொண்டார்கள்.

நான் ஒரு பெரிய ஹாலுக்குள் நுழைந்தேன். பலவகை யான காகிதங்கள் குவியலாகக் கிடந்த ஒரு மேசைக்குப் பின்னுல் இரண்டு பேர் உட்கார்ந்திருந்தனர். அவர்களில் ஒருவர் அதிக வயதான ஜெனரல்; கண்டிப்பும் சிடுசிடு வென்ற முகத்தோற்றமும் கொண்டவர். அடுத்தவர் காவலர் படையைச் சேர்ந்த இளம் காப்டன்; அவருக்கு சுமாராக இருபத்தேட்டு வயது இருக்கும். சுறுசுறுப்பாகவும் இனிமை யான பண்பும் வசீகரமும் கொண்டிருந்தார். சன்னலுக்கு அருகே போட்டிருந்த மேசைக்குப் பின்னுல் விசாரணைக் குழுவின் காரியதரிசி உட்கார்ந்திருந்தார். அவருடைய

காதின் பின் புறத்தில் இறகு பேனாவைச் சொருகியிருந்தார். விசாரணை ஆரம்பமானவுடன் என்னுடைய சாட்சியத்தை எழுதிக் கொள்ளத் தயாராகக் கையிலே காகிதத்தை வைத்துக் கொண்டு உட்கார்ந்திருந்தார். விசாரணை ஆரம்பமாயிற்று. என்னுடைய பெயரையும் பதவியையும் கேட்டார்கள். நான் பதிலளித்ததும் ஜெனரல் என்னிடம் அந்திரேய் பெத்ரோவிச் கிரின்யோவ் மகனா என்று கேட்டார். நான் ஆமாமென்று பதிலளித்தேன். உடனே அவர் கடுகடுப்போடு ''அவ்வளவு உயர்ந்த மனிதருக்கு இவ்வளவு கேவலமான மகன் பிறந்திருப்பதை நினைக்க வருத்தமாக இருக்கிறது'' என்று அருவருப்போடு சொன்னார். என் மீது எத்தகைய குற்றச்சாட்டுகள் இருந்த போதிலும் உண்மையாக நடந்த விஷயங்களைச் சொல்லும் பொழுது அந்தக் குற்றச்சாட்டுகள் மறைந்துவிடும் என்று நான் நம்புவதாக நிதானமாகப் பதிலளித்தேன். என்னுடைய தன்னம்பிக்கை அவருக்கு அதிருப்தியளித்திருக்க வேண்டும்.

''நீ அதிகமாகப் பேசுகிறாய். ஆனால் உன்னைக் காட்டிலும் அதிக கெட்டிக்காரர்கள் கூட எங்களை ஏமாற்ற முடிந்ததில்லை'' என்றார்.

அப்போது விசாரணைக் குழுவில் இருந்த இளைஞர் நான் எப்பொழுது, எந்தச் சூழ்நிலையில் புகச்சோவிடம் வேலைக்குச் சேர்ந்தேன் என்றும் புகச்சோவ் ஆணையின்படி எத்தகைய பணிகளை நிறைவேற்றினேன் என்றும் கேட்டார்.

இராணுவ அதிகாரி என்ற முறையிலும் ஒரு கனவான் என்ற முறையிலும் புகச்சோவிடம் நான் வேலைக்குச் சேரவில்லை; புகச்சோவ் ஆணையின்படி எத்தகைய பணிகளையும் நான் நிறைவேற்றவில்லை என்று நான் கோபத்தோடு பதிலளித்தேன்.

''அப்படியானால் உன்னுடைய தோழர்களான எல்லா இராணுவ அதிகாரிகளையும் புகச்சோவ் தூக்கிலிட்டிருக்கும் பொழுது உன்னை மட்டும் விட்டு வைத்தது ஏன்?'' என்று அவர் மேலும் கேட்டார். ''இராணுவ அதிகாரி, கனவான் என்று நீ பெருமையாகப் பேசுகிறாய்; ஆனால் கலகக் கும்பலோடு சுமுகமாக உட்கார்ந்து விருந்து சாப்பிட்டிருக்கிறாய். புகச்சோவ் உனக்கு ஆட்டுத் தோல் கோட்டு, ஒரு குதிரை, ஐம்பது கோபெக் காசு முதலியனவற்றை அன்பளிப்பாகக்

கொடுத்திருக்கிறுன். உங்களுக்கிடையே இந்த விசித்திரமான நட்பு எப்படி ஏற்பட்டது? சக்கரவர்த்தினிக்கும் நாட்டுக்கும் துரோகம் செய்யும் நோக்கம் உனக்கு இல்லாவிட்டாலும் திருட்டுத்தனமும் கோழைத்தனமும் இதற்கு அடிப்படையாக இருந்திருக்கலாமல்லவா?'' என்று கேட்டார்.

காவலர் படையைச் சேர்ந்த இளம் அதிகாரியின் சொற்கள் என் மனதை அதிகமாகப் புண்படுத்தி விட்டன. எனவே என்னுடைய செயலை நியாயப்படுத்தி நானும் ஆத்திரமாகப் பேசினேன். முதலில் ஸ்டெப்பி நிலத்தில் போய்க் கொண்டிருக்கும் பொழுது பனிப்புயலில் அகப்பட்டுக் கொண்டதையும், அந்த நேரத்தில் புகச்சோவ் எனக்குச் செய்த உதவியையும், பெலகோர்ஸ்க் கோட்டை வீழ்ச்சியடைந்த பிறகு புகச்சோவ் என்னை அடையாளம் கண்டு பேசியதையும் எனக்கு மன்னிப்பு வழங்கியதையும் குறிப்பிட்டேன். அவனிடமிருந்து நான் குதிரையும் கோட்டும் சிந்தனையில்லாமல் பெற்றுக் கொண்டது உண்மையென்றாலும் பெலகோர்ஸ்க் கோட்டை முற்றுகையின் போது கலகக்காரர்களை எதிர்த்துக் கடைசி வரை சண்டையிட்டேன் என்பதை எடுத்துக் கூறினேன். கடைசியில், ஓரென்புர்க் முற்றுகையின் போதும் கலகக்காரர்களை எதிர்த்து என்னுடைய உற்சாகமான சேவைகளைப் பற்றி ஜெனரலிடம் கேட்டுத் தெரிந்து கொள்ளலாம் என்றேன்.

இதைக் கேட்டதும் கண்டிப்பு நிறைந்த முகத்தோற்றமுள்ள முதிய அதிகாரி உடனே மேசை மீதிருந்த கடிதத்தை எடுத்து உரக்கப் படித்தார்:

''மேன்மை தங்கிய அதிகாரி அவர்கள், இராணுவ அதிகாரி கிரின்யோவ் கலகத்தில் சம்பந்தப்பட்டிருந்ததாகவும் இராணுவ விதிகளுக்கும் விசுவாசப் பிரமாணத்துக்கும் விரோதமான வகையில் பாசாங்குக்காரனோடு தொடர்பு கொண்டிருந்ததாகவும் சொல்லப்படுவது பற்றி விசாரித்து உடனடியாக அறிக்கை சமர்ப்பிக்குமாறு உத்தரவிட்டபடிக் கீழ்க்கண்ட தகவல்கள் தெரிவிக்கப்படுகின்றன: இராணுவ அதிகாரி கிரின்யோவ் ஓரென்புர்க் கோட்டையில் கடந்த 1773ம் வருடம் அக்டோபர் மாத ஆரம்பத்திலிருந்து இந்த வருடம் பிப்ரவரி மாதம் 24ந் தேதி வரை இராணுவ சேவையில் ஈடுபட்டிருந்தார். அதன் பிறகு அவர் கோட்டையிலி

ருந்து வெளியேறி வேறு எங்கோ போய் விட்டார். அன்று முதல் என்னுடைய தலைமையில் இருந்த துருப்புகளில் அவர் இல்லை. கிராமத்தில் புகச்சோவோடு தங்கி இருந்ததாகவும் பிறகு தாம் முன்பு பணியாற்றிய பெலகோர்ஸ்க் கோட்டைக்கு அவனோடு சென்றதாகவும் செய்திகள் வந்தன. இந்த அதிகாரியின் நடத்தையைப் பற்றி நான்....'' அவர் கடிதத்தைப் படிப்பதை நிறுத்தினார். ''இதைப் பற்றி என்ன சொல்கிறீர்கள்?'' என்று கோபமாகக் கேட்டார்.

நான் ஆரம்பத்தில் எல்லாவற்றையும் மறைக்காமல் சொன்னது போல, இப்பொழுதும் மார்யா இவானவ்னுவுக்கும் எனக்கும் ஏற்பட்டிருந்த காதலையும் மற்ற சமாசாரங்களையும் ஒளிக்காமல் சொல்லிவிட நினைத்தேன். ஆனால் திடீரென்று விவரிக்க முடியாத அருவருப்பான உணர்ச்சி எனக்கு ஏற்பட்டது. நான் அவளைப் பற்றிக் குறிப்பிட்டால் விசாரணைக் குழு அவளையும் விசாரணைக்கு வருமாறு உத்தர விடும் என்று நினைத்தேன். போக்கிரிகள் அவளைப் பற்றி அவதூறு செய்ததுண்டு. விசாரணையிலும் அவற்றைப் பற்றிக் கேள்விகள் கேட்பார்கள். அவளும் பதில் சொல்ல வேண்டியிருக்கும். இதை நினைத்துப் பார்ப்பதற்கே பயங்கரமாக இருந்த காரணத்தால் நான் தயங்கினேன். என்னுடைய பேச்சும் குழப்பமாக இருந்தது.

விசாரணைக் குழுவிலிருந்த அதிகாரிகள் நான் சொல்லிக் கொண்டிருந்ததைச் சற்று அனுதாபத்தோடு கேட்டார்கள் என்றுதான் சொல்ல வேண்டும். ஆனால் என்னுடைய பேச்சு குழப்பமடைந்த பொழுது அவர்களுடைய சந்தேகங்கள் மீண்டும் தலை தூக்கின. என்னைப் பற்றி முக்கியமாகப் புகார் செய்த நபரை எனக்கு முன்னால் நிறுத்தி விசாரிக்க வேண்டும் என்று காவலர் படை அதிகாரி வலியுறுத்தினார். நேற்றைய போக்கிரியைக் கொண்டுவருமாறு ஜெனரல் உத்தரவு கொடுத்தார். என்னைப் பற்றி யார் புகார் செய்திருக்கலாம் என்று தெரிந்து கொள்ளும் ஆவலில் நான் கதவை நோக்கித் திரும்பினேன். சில நிமிடங்களுக்குப் பிறகு இரும்புச் சங்கிலிகளின் சத்தம் கேட்டது. கதவு திறந்தது. ஷ்வாப்ரின் உள்ளே நுழைந்தார். அவருடைய தோற்றம் எவ்வளவு மாறி விட்டது என்பதைப் பார்த்த பொழுது நான் திகைத்துப் போனேன். அவர் மிகவும் மெலிந்து இருந்த

தோடு வெளுத்துப் போயிருந்தார். சமீபகாலம் வரை நிலக் கரியைப் போலக் கறுப்பாக இருந்த அவருடைய தலைமயிர் முற்றிலும் வெள்ளையாக மாறியிருந்தது. அவருடைய நீண்ட தாடியைச் சரிவர வைத்துக் கொள்ள முடியவில்லை போலும். அவர் தன்னுடைய புகாரை மறுபடியும் சொன்னார். அவர் குரல் பலவீனமாக, ஆனால் துணிச்சலோடு ஒலித்தது. புகச் சோவ் என்னை ஓரென்புர்குக்கு வேவு பார்ப்பதற்காகவே அனுப்பினான்; நான் தினந்தோறும் கோட்டைக்கு வெளியே சென்று கலகக்காரர்களைச் சந்தித்து நகரத்தில் உள்ள நிலை மைகளைப் பற்றிக் கடிதம் கொடுத்து விட்டேன்; கடைசியில் நேரடியாகவே பாசாங்குக்காரனோடு சேர்ந்து கொண்டேன்; அவனோடு ஒவ்வொரு கோட்டையாகப் போய் அங்கே புகச் சோவினால் நியமிக்கப்பட்டிருந்த அதிகாரிகளுக்கு எல்லாக் கெடுதல்களையும் செய்தேன்; அவர்களுடைய பதவிகளைப் பிடுங்குவதும் பாசாங்குக்காரனின் அன்பளிப்புகளைப் பெறு வதும் என்னுடைய நோக்கம்—இப்படியே சொல்லிக் கொண்டு போனார். நான் அமைதியாகக் கேட்டுக் கொண் டிருந்தேன். ஒரு விஷயம் மட்டும் எனக்கு மன நிம்மதியைக் கொடுத்தது: இந்தக் கீழ்த் தரமான ராஸ்கல் மார்யா இவானவ்னாவின் பெயரை ஒரு தடவை கூடச் சொல்லவில்லை. அதற்கு என்ன காரணம்? அவள் தன்னை மிகவும் அருவருப் போடு ஒதுக்கி விட்டதால் ஏற்பட்ட ஆணவ பங்கமா? அல்லது எந்த உணர்ச்சியினால் விசாரணைக் குழுவினரிடம் அவள் பெயரைச் சொல்வதற்கு நான் விரும்பவில்லையோ, அதே உணர்ச்சியில் ஒரு சிறு பொறி அவரிடமும் இருந்ததா? எப்படி வேண்டுமானாலும் இருக்கட்டும். பெலகோர்ஸ்க் கோட்டைத் தளகர்த்தரின் மகள் பெயர் விசாரணைக் குழு விடம் சொல்லப்படவில்லை. இது என்னுடைய முடிவை மேலும் உறுதிப்படுத்தியது. ஷ்வாப்ரின் தெரிவித்திருக்கும் சாட்சியத்தை மறுத்து நான் ஏதேனும் சொல்ல விரும்பினால் அப்படியே சொல்லலாம் என்று விசாரணைக் குழு எனக்குத் தெரிவித்த பொழுது நான் எல்லா விவரங்களையும் முதலி லேயே தெரிவித்து விட்டேன்; அந்த சாட்சியமே போதும் என்ற காரணத்தால் புதிதாக எதுவும் சொல்ல விரும்ப வில்லை என்று கூறினேன். எங்களைச் சிறைக்குக் கொண்டு போகுமாறு ஜெனரல் உத்தரவு கொடுத்தார். நாங்கள்

இருவரும் ஒன்ருகப் புறப்பட்டோம். நான் அமைதியாக ஷ்வாப்ரினுடைய முகத்தைப் பார்த்தேன், ஆனுல் ஒன்றும் பேசவில்லே. அவர் வெறுப்போடு சிரித்தார். தன்னுடைய கால் சங்கிலிகளேக் கையில் பிடித்துக் கொண்டு எனக்கு முன்னதாக எட்டி நடந்து சென்ருர். என்னேச் சிறைக்குக் கொண்டு வந்தார்கள்; மறுபடியும் குறுக்கு விசாரணேக்காக என்னேக் கூப்பிடவில்லே.

இப்பொழுது நான் வாசகருக்குத் தெரிவிக்கப் போகும் சம்பவங்களே நான் நேரில் பார்க்கவில்லே. ஆனுல் இந்த சம்ப வங்களேப் பற்றி நான் திரும்பத் திரும்பக் கேள்விப்பட்ட காரணத்தால் சிறு நிகழ்ச்சிகள் உட்பட எல்லாமே என்னுடைய நினேவில் அப்படியே பதிந்து விட்டன. அந்த சம்பவங்கள் நடைபெறும் பொழுது மற்றவர்களுடைய பார் வைக்குத் தெரியாதபடி நானே அங்கேயிருந்தது போல ஒரு உணர்ச்சி எனக்கு ஏற்படுகிறது.

என்னுடைய பெற்ருேர்கள் மார்யா இவானவ்ஞவை அன்போடு வரவேற்று உபசரித்தார்கள். சென்ற நூற்ருண் டில் நம் நாட்டில் மக்களிடையே நிலவிய உபசரிப்பைத் தான் அதற்கு உதாரணமாகச் சொல்ல முடியும். அனுதை யான ஒரு ஏழைப் பெண்ணுக்குத் தாங்கள் அடைக்கலம் கொடுத்து உதவுவது இறைவன் திருவருளால் கிடைத்த அரிய வாய்ப்பு என்று மகிழ்ச்சி அடைந்தார்கள். வெகு சீக்கிரத்தில் அவர்களுக்கு மார்யா இவானவ்ஞவை மிகவும் பிடித்து விட்டது. ஏனென்ருல் அந்தப் பெண்ணேடு பழகிய எல்லோருக்குமே அவளே நிச்சயமாகப் பிடிக்கும். என் தகப் பஞர் என்னுடைய விருப்பத்தை வெறும் சபலம் என்று முதலில் நினேத்ததை இப்பொழுது விட்டுவிட்டார். என் தாயாரோ தன் மகன் பெத்ருஷாவுக்கும் காப்டனின் அருமை மகளுக்கும் திருமணம் நடக்கும் நன்ஞளே எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள்.

என்னேக் கைது செய்திருப்பதாக வதந்தியைக் கேள்விப் பட்டதும் என் குடும்பத்தினர் மிகவும் குழம்பிப் போஞர் கள். எனக்கும் புகச்சோவுக்குமிருந்த விசித்திரமான நட்பைப் பற்றி மார்யா இவானவ்ஞ சுவையாக வர்ணிப்பதைக் கேட்டு என் பெற்ருேர்கள் உற்சாகமாகச் சிரிப்பதுண்டு. அந்த நட்பு தவருனதாக இருக்கலாம் என்ற கவலே அவர்களுக்கு ஏற்பட

வில்லை. சக்கரவர்த்தினியின் ஆட்சிக்கு விரோதமாகவும், மேன் மக்களுக்கு எதிராகவும் வெடித்த கலகத்தில் நானும் சம்பந்தப்பட்டதாகச் சொல்லப்பட்டதை என் தகப்பனுரால் நம்ப முடியவில்லை. அவர் ஸவேலிச்சைக் கூப்பிட்டு துருவித் துருவிக் கேட்டார். புகச்சோவ் தன்னுடைய எஜமானருக்கு விருந்தளித்ததும், அன்பளிப்புகள் வழங்கியதும் உண்மை யென்ற போதிலும் ராஜத் துரோகம் என்ற பேச்சுக்கே அதில் இடமில்லையென்று எனது முன்னுள் ஆசிரியன் விளக்கி யிருக்கிறுன். இதைக் கேட்ட பிறகு என் பெற்றேர்களின் கவலை மறைந்து விட்டது; விரைவில் சாதகமான செய்தி வரும் என்று நம்பிக் கொண்டிருந்தார்கள். மார்யா இவானவ் ஞவின் மனதில் அதிகமான கவலை ஏற்பட்டிருந்தாலும், அவளிடம் அடக்கமும் நற்பண்புகளும் நிறைந்திருந்தபடி யால் அவளும் இதைப் பற்றிப் பேசவில்லை.

இப்படிச் சில வாரங்கள் கழிந்தன.... பீட்டர்ஸ்பர் கிலிருந்து எங்கள் உறவினரான இளவரசர் பி...யிடமிருந்து என் தகப்பனுருக்கு திடீரென்று ஒரு கடிதம் வந்தது. அதில் வழக்கமான முன்னுரைக்குப் பிறகு, இளவரசர் பி... என்னைப் பற்றிக் குறிப்பிட்டிருக்கிறுர். கலகக்காரர்களின் சதித் திட்டங்களில் நான் சம்பந்தப்பட்டிருந்ததாகச் சொல்லப்பட்ட புகார்களைப் பற்றி விசாரணை நடைபெற்ற தாகவும், துரதிருஷ்டவசமாக அந்தப் புகார்களும் ஆதாரங் களிருப்பதாக முடிவு செய்யப்பட்டிருக்கிறது என்றும் தெரி வித்தார். எனக்கு மிகவும் கடுமையான தண்டனை கொடுக்கப் பட வேண்டும் என்பது நியாயமாஞலும் சக்கரவர்த்தினி அவர்கள் என் தகப்பனுரின் முதிர்ந்த வயதையும் அவருடைய கடந்த கால சேவைகளையும் மனதில் கொண்டு அவருடைய வெறுக்கத்தக்க மகனை மன்னிக்க முடிவு செய்திருப்பதாக வும், கடுந்தண்டனைக்குப் பதிலாக தொலை தூரத்திலுள்ள சைபீரியாவுக்கு என்னை ஆயுள் பூராவும் நாடு கடத்துவதென முடிவு செய்திருப்பதாகவும் எழுதியிருந்தார்.

இந்தக் கடிதம் என் தகப்பனுருக்கு மரண அடியாக இருந் தது. அவருடைய வழக்கமான உறுதி எங்கோ போயிற்று. அவருடைய துயரத்தைப் (பெரும்பாலும் மௌனமாகவே) புலம்பினுர். ''புகச்சோவின் சதித் திட்டங்களுக்கு என் மகன் உடந்தையா? உடந்தையா?'' என்று திரும்பத் திரும்பக் கேட்

பார். ''கடவுளே! எனக்கு இப்படியும் ஒரு காலமா? சக்கர வர்த்தினி என் மகனுக்கு மன்னிப்பளித்திருக்கிறார்! அதனால் எல்லாம் சரியாகி விடுமா? கடுந்தண்டனைக்கு நான் பயப்படவில்லை. என்னுடைய முன்னோர்களில் ஒருவர் தமக்கு நியாயம் என்று தோன்றிய கருத்துக்களுக்காக உயிரைக் கொடுத்திருக்கிறார். என் தகப்பனார் வலீன்ஸ்கி, ஹ்ருஷ் சோவ் ஆகியவர்களோடு சேர்ந்து கொள்கைக்காக மரண தண்டனை அடைந்தார்.[66] ஆனால் மேன் மக்கள் குடும்பத் திலே பிறந்த என் மகன் தன் விசுவாசப் பிரமாணத்தை உதறித் தள்ளிவிட்டுப் பண்ணையடிமைகள், போக்கிரிகள், கொலைகாரர்களோடு சேர்வதா?... நீங்காத பழி வந்து விட்டதே!...'' என்று புலம்பினார். என் தகப்பனாரின் மன வேதனையைக் கண்டு பயந்து போன காரணத்தால் என் தாயார் அவருக்கு முன்பாகக் கண்ணீர் வடிப்பதில்லை. இந்த வதந்திகளை நம்ப முடியாது; மற்றவர்கள் சொல்வதைப் பற்றி நாம் ஏன் கவலைப்பட வேண்டும் என்று அவரைத் தேற்றுவாள். ஆனால் என் தகப்பனாரை யாரும் தேற்ற முடிய வில்லை.

மார்யா இவானவ்னா மற்றவர்கள் எல்லோரையும் காட் டிலும் அதிகமான துன்பத்தை அனுபவித்தாள். விசாரணை யின் போது நான் சுலபமாக என்னுடைய நடவடிக்கைகளை எந்த நிமிடத்திலும் நியாயப்படுத்தியிருக்க முடியும் என்று அவள் நம்பினாள். எனவே அவள் உண்மையை ஊகித்துக் கொண்டு என்னுடைய துன்பங்களுக்குத் தானே காரணமாக இருப்பதாக வேதனைப்பட்டாள். மற்றவர்களிடமிருந்து தன்னுடைய துயரத்தையும் கண்ணீரையும் மறைத்துக் கொண்டு என்னுடைய விடுதலைக்கு ஏதேனும் வழி இருக் கிறதா என்று எப்பொழுதும் முயற்சித்துக் கொண்டிருந் தாள்.

ஒரு நாள் மாலை நேரத்தில் என்னுடைய தகப்பனார் சோபாவில் உட்கார்ந்து கொண்டு **அரண்மனை அறிக்கையைப்** புரட்டிக் கொண்டிருந்தார். ஆனால் அவருடைய எண்ணங் கள் வேறொன்றில் ஈடுபட்டிருந்த காரணத்தால் இதைப் படிக்கும் பொழுது வழக்கமாக அவருக்கு ஏற்படக் கூடிய விளைவுகள் அப்பொழுது ஏற்படவில்லை. அவர் பழைய காலத் தில் படைகள் முன்னேறிச் செல்லும் பொழுது பாடுகின்ற

இசையைச் சீட்டியடித்துக் கொண்டிருந்தார். என் தாயார் கம்பளி நூலைக் கொண்டு மௌனமாகப் பனியன் பின்னிக் கொண்டிருந்தாள். அவள் கண்களிலிருந்து கண்ணீர்த் துளிகள் அவ்வப்பொழுது கம்பளி நூலின் மீது விழுந்து கொண்டிருந்தன. அவள் பக்கத்தில் உட்கார்ந்திருந்த மார்யா இவானவ்னு தான் செய்து கொண்டிருந்த சித்திரத் தையல் வேலையை திடீரென்று நிறுத்திவிட்டுப் பீட்டர்ஸ்பர்க் நகரத்தில் தனக்கு முக்கியமான வேலை ஏற்பட்டிருப்பதாக வும் எனவே தன்னுடைய பயணத்துக்கு ஒரு வண்டியைக் கொடுத்துதவுமாறும் கேட்டுக் கொண்டாள். இதைக் கேட்ட பொழுது என் தாயாருக்கு அதிகமான வருத்தம் ஏற்பட் டது. ''மார்யா இவானவ்னு! பீட்டர்ஸ்பர்க்குக்கு நீ ஏன் போக வேண்டும்? நீயும் எங்களைக் கைவிட்டுவிட மாட்டாய் அல்லவா?'' என்று கேட்டாள். சக்கரவர்த்தினியிடம் விசு வாசத்தோடு நடந்து கொண்டதால் உயிரைப் பறிகொடுத்த ஒரு தளகர்த்தரின்* மகள் என்ற முறையில் செல்வாக்குள்ள நபர்கள் சிலரைச் சந்தித்து அவர்களுடைய உதவியும் பாது காப்பும் தனக்கு வேண்டுமென்று வற்புறுத்தப் போவதாக வும், எனவே தன்னுடைய எதிர்கால வாழ்க்கையே இந்தப் பிரயாணத்தைப் பொறுத்து இருக்கிறது என்றும் மார்யா இவானவ்னு பதிலளித்தாள்.

என் தகப்பனர் தலையைக் குனிந்து கொண்டார். தன் மகன் செய்ததாகச் சொல்லப்படும் குற்றத்தை நினைவு படுத்தக் கூடிய எந்தப் பேச்சும் அவருக்கு வேதனையைத் தந்தது; அவருடைய காதுகளில் நாராசமாக ஒலித்தது. ''பெண்ணே! போய்வா'' என்று சொல்லிவிட்டுப் பெருமூச்சு விட்டார். ''உன்னுடைய மகிழ்ச்சிக்குத் தேவையான எந்தக் காரியத்துக்கும் நாங்கள் குறுக்கே நிற்கக் கூடாது. துரோகி என்று முடிவு செய்யப்பட்ட ஒருவனேடு உன் வாழ்க்கையைச் சம்பந்தப்படுத்திக் கொள்ள வேண்டாம். உனக்கு ஒரு நல்ல கணவன் கிடைப்பதற்குக் கடவுள் உதவி செய்வார்'' என்று சொல்லிவிட்டு அவர் அறையிலிருந்து வெளியே போய் விட் டார்.

என் தாயாரோடு தனியாக இருந்த பொழுது மார்யா இவானவ்னு தன்னுடைய திட்டங்களில் பெரும் பகுதியை என் தாயாரிடம் தெரிவித்திருக்கிருள். உடனே என் தாயார்



புஷ்கின் எழுதிய ஜிப்ஸிகள் என்ற கவிதையின் கையெழுத்துப் பிரதியும் அவர் வரைந்த சித்திரங்களும். 1823





1824ம் வருடத்தில் பீட்டர்ஸ்பர்கில் ஏற்பட்ட வெள்ளம். வேண்கலக் குதிரை வீரன் என்ற கவிதையில் பூஷ்கின் இதை வர்ணிக்கிறார். செதுக்கப்பட்ட ஓவியம். 1824



பீட்டர்ஸ்பர்க். செனட் சதுக்கத்தில் மாபெரும் பீட்டருக்கு எழுப்பப்பட்ட நினைவுச் சின்னம். செதுக்கப்பட்ட ஓவியம். 1806



**பூஷ்கின் எழுதிய கல்லாக மாறிய விருந்தாளி என்ற கவிதை நாடகத்தின் கையெழுத்துப் பிரதியும் அவருடைய சித்திரங் களும். *1830***




பூஷ்கின் எழுதிய தங்கச் சேவலின் கதை என்ற கவிதையின் கையெழுத்துப் பிரதியும் அவருடைய சித்திரங்களும். *1834*



பதிமூன்றும் வயதில் பூஷ்கின்—1822ம் வருடத்தில் வரையப்பட்டது



பூஷ்கின் பிறந்த வருடத்தில் மாஸ்கோ-கிரெம்ளினில் இருக்கும் சூடோவ் அரண்மனையின் காட்சி. செதுக்கப்பட்ட ஒவியம். 1799



*கவ்ரீல் தெர்ழாவின் (1743—1816). பிரபல மான ருஷ்யக் கவிஞர்; பூஷ்கினுடைய பள்ளிப் படிப்பு முடிவடைந்த பொழுது அவருக்கு ஆசி கூறியவர். பரொவிக்கோவ்ஸ்கி வரைந்த ஓவியம். 1811*



*அன்டோன் டேல்விக் (1798—1831). பூஷ்கினுடைய சக மாணவர்; கவிஞர். அச்சிடப்பட்ட ஓவியம். 1831*



*இவான் பூஷ்ச்சின் (1799—1859). பூஷ்கினுடைய நண்பர்; டிசம்பரிஸ்ட் கலகத்தில் பங்கு கொண்டதற்காக சைபீரியாவில் கடும் உழைப்புச் செய்யுமாறு தண்டிக்கப்பட்டார். அச்சிடப்பட்ட ஓவியம். 1820க்கள்*



வஸீலி பூஷ்கின்: கவிஞர். பூஷ்கினுடைய தந்தை வழியில் மாமா. அச்சிடப்பட்ட ஓவியம். 1810க்கள்

ஸென் பீட்டர்ஸ்பர்க் அருகே ஜார்ஸ்கயே செலோ என்ற கல்விகற்ற பள்ளி இதன் இடது பகுதியில் அமைந்திருந்தது.





எகதரீனுபகூனின
(1795 — 1869).
பூஷ்கினுடைய
சக மாணவனின்
சகோதரி; பூஷ்
கினுடைய முதற்
காதலி. சித்திரம்.
1810க்கள்

இடத்திலிருக்கும் எகதிரீனின்ஸ்கி அரண்மனே. பூஷ்கின் அச்சிடப்பட்ட ஓவியம். 1822





*கன்ஸ்தன்தீன் பாதியுஷ்கோவ் (1787—1855). கவிஞர்; இளம் பூஷ்கின் மீது அதிகமான தாக்கம் கொண்டிருந்தவர். செதுக்கப்பட்ட ஓவியம். 1821*



பியோத்தர் சயாதாயெவ் (1794—1856). எழுத்தாளர்; தத்துவஞானி. பூஷ்கினுடைய உலகப் பார்வையில் அதிகமான தாக்கத்தைக் கொண்டிருந்தவர். மோலினரி வரைந்த ஓவியம். 1810க்கள்



பீட்டர்ஸ்பர்க். கடற்படைத் தலைமையகக் கட்டிடம் அமைந்திருக்கும் நேவ்ஸ்கி நெடுஞ்சாலையின் காட்சி. அச்சிடப்பட்ட ஓவியம். 1829க்கள்



வஸீலி ஜீக்கோவ்ஸ்கி (1783—1852). பூஷ்கினுக்கு நண்பராக விளங்கிய மூத்த கவிஞர். 1820ம் வருடத்தில் ''தோல்வியடைந்த ஆசிரியர் வெற்றி யடைந்த மாணவனுக்குத் தரும் பரிசு'' என்று தமது ஓவியத்தில் எழுதி பூஷ்கினுக்குப் பரிசு கொடுத்தார். அச்சிடப்பட்ட ஓவியம். 1820



கிரீமியாவில் உள்ள குர்ஸூப். 1820ம் வருடத்தில் பூஷ்கின் வாழ்ந்த இல்லத்தைப் படத்தின் வலது கீழ் மூலேயில் காணலாம். அச்சிடப்பட்ட ஓவியம். 1822



பாக்ஸிசராய் அரண்மனையில் உள்ள ''கண்ணீர் ஊற்று''. பூஷ்கின் இதைப் பற்றிக் கவிதை எழுதியிருக்கிறூர். அச்சிடப்பட்ட ஓவியம். 1840க்கள்



*மரீயா வோல்கோன்ஸ்காயாவும் (1805—1863) மகனும். 1826ம் வருடத்தில் இந்த அம்மையார் தமது பிரபுத்துவக் குடும்ப உரிமைகளைத் துறந்தார்; சைபீரியாவுக்கு நாடு கடத்தப்பட்ட தன்னுடைய கணவர் வோல்கோன்ஸ்கியைப் பின்பற்றித் தாமும் அங்கே சென்ருர். பூஷ்கின் தன்னுடைய இளமைப் பருவத்தில் மரியாவைக் காதலித்தார். பிற்காலத்தில் இந்த அம்மையாரின் வீரத்தைப் போற்றினுர். ஸோக்கலோவ் வரைந்த நீர்வண்ண ஓவியம். 1826*



*எலிஸவேத்தா வரன்த்ஸோவா (1792—1880). 1820க்களில் பூஷ்கின் இவருக்குப் பல காதற் கவிதைகளை எழுதினர். செதுக்கப்பட்ட ஓவியம். 1829*



*வேரா வியாஸெம்ஸ்காயா (1790—1886) வியாஸெம்ஸ்கி பிரபுவின் மனைவி. பூஷ்கினுடைய நெருங்கிய நண்பர். 1809*



*மிகாய்லவ்ஸ்கோயே. பூஷ்கினுடைய தாயாரின் பண்ணை. பூஷ்கின் நாடு கடத்தப்பட்ட பொழுது இரண்டு வருடங்களுக்கு மேல் இங்கே தங்கியிருந்தார். அச்சிடப்பட்ட ஓவியம். 1837*



*அரீனு ரதியோனவ்னு (1758—1828), பூஷ்கினை வளர்த்த தாதி. இவரிடமிருந்து கற்றுக் கொண்ட நாட்டுப் பாடல்களையும் கதைகளையும் பூஷ்கின் தம்முடைய கவிதைகளில் அதிகமாகப் பயன்படுத்தியிருக்கிறுர். சிற்பம். 1870க்கள்*



ஆன்னு கெர்ன் (1800—1879). மேன்மக்கள் சமூகத்தைச் சேர்ந்த அழகி. பூஷ்கின் ஆன்னு மீது மோகம் கொண் டிருந்தார். பூஷ்கின் வரைந்த சித்திரம். 1829



திரிகோர்ஸ்கொயே என்ற கிராமத்தில் ஓஸிப்பொவின் இல்லம். பூஷ்கின் இங்கே அடிக்கடி வருவார். அச்சிடப்பட்ட ஓவியம். 1899



வில்ஹெல்ம் கியூஹில்பெக்கெர் (1799—1846). பள்ளிக் காலம் முதல் பூஷ்கினுக்கு நண்பராக இருந்த கவிஞர். டிசம்பரிஸ்ட் கலகத்தில் பங்கு கொண்டதற்காக சைபீரியாவுக்கு நாடுகடத்தப்பட்டு அங்கே மரணமடைந்தார். செதுக்கப்பட்ட ஓவியம். 19ம் நூற்ருண்டின் கடைசி



கோன்ட்ராட்டி ரிலேயெல் (1795—1826), கவிஞர். டிசம்பரிஸ்ட் கலகத்தின் தலைவர் என்ற முறையில் சிரச் சேதம் செய்யப்பட்டார். 1820க்கள்



டிசம்பரிஸ்டுகள் கொல்லப்பட்ட காட்சியை வரைந்த பூஷ்கின் ''நானும் கலந்து கொண்டிருப்பேன்...'' என்று எழுதியிருக்கும் காகிதம். 1826.



*ஜினயீடா வோல்கோன்ஸ்காயா (1792—1862). கவிஞர், இசையமைப்பாளர் மற்றும் பாடகி. கலைஞர்கள் இந்த அம்மையாரின் இல்லத்தில் சந்திப்பதுண்டு. பூஷ்கினும் இங்கே அடிக்கடி செல்வார். செதுக்கப்பட்ட ஓவியம். 1814*



மாஸ்கோவிலுள்ள திவெர்ஸ்கோய் நெடுஞ்சாலை. அச்சிடப்பட்ட ஓவியம். 1830க்கள்



மாஸ்கோவிலுள்ள போல்ஷாயா நிக்கீத்ஸ்கயா தெரு. அச்சிடப்பட்ட ஓவியம். 1830க்கள்



யெவ்கேனி பரதீன்ஸ்கி (1800—1844). பூஷ்கினுடைய நன்மதிப்பைப் பெற்ற கவிஞர். அச்சிடப்பட்ட ஓவியம். 1828



அலெக்சான்த்ரா முரவ்யோவா (1804—1832). டிசம்பரிஸ்ட் கலகத்தில் பங்கு கொண்ட முரவ் யோவின் மனைவி. நாடு கடத்தப்பட்ட கணவரோடு சைபீரியாவுக்குச் சென்றவர். அச்சிடப்பட்ட ஓவியம். 1826

கண்ணீர் விட்டபடியே அவளைக் கட்டியணைத்து, அவளுடைய முயற்சிகள் வெற்றி பெற வேண்டுமென்று கடவுளைப் பிரார்த்திப்பதாகக் கூறினாள். பிரயாணத்துக்குத் தேவையான தயாரிப்புகள் முடிந்ததும், சில தினங்களுக்குப் பிறகு மார்யா இவானவ்னா பணிவு நிறைந்த பலாஷ்காவுடனும் நம்பிக்கைக்குரிய ஸவேலிச்சோடும் தன் பிரயாணத்தைத் தொடங்கினாள். என்னை விட்டுப் பிரிந்திருப்பதை நினைத்து வேதனையடைந்து கொண்டிருந்த ஸவேலிச் நான் திருமணம் புரிந்து கொள்ளப் போகும் பெண்ணுக்குச் சேவை செய்வதைப் பற்றித் திருப்தி அடைந்திருக்கிறான்.

மார்யா இவானவ்னா எந்த ஆபத்தும் இல்லாமல் ஸபீயாவுக்கு[67] வந்து சேர்ந்தாள். சக்கரவர்த்தினியும் அவள் பரிவாரங்களும் பக்கத்திலிருக்கும் ஜார்ஸ்கயே செலோவில் தங்கியிருப்பதாகக் கேள்விப்பட்டு உடனே அங்கே தங்கியிருக்க முடிவு செய்தாள். அங்கே அவளுக்கு அஞ்சல் நிலையத்தின் தடுப்புக்குப் பின்னாலுள்ள மூலையில்தான் தங்க இடம் கிடைத்தது. அஞ்சல் நிலைய அதிகாரியின் மனைவி அவளிடம் உடனே பேச்சுக் கொடுத்து, அரண்மனையிலுள்ள ஒரு பணியாளரின் மைத்துனி என்று தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டு அரண்மனை வாழ்க்கையின் இரகசியங்கள் பலவற்றையும் எடுத்துக் கூறினாள். சக்கரவர்த்தினி வழக்கமாக எத்தனை மணிக்குத் தூங்கியெழுந்திருப்பாள், காப்பி சாப்பிடுவது எப்பொழுது, உலாவப் போவது எப்பொழுது, அவரோடு கூடச் செல்வது யார், முந்திய இரவில் உணவருந்தும் போது சக்கரவர்த்தினி குறிப்பாகத் தெரிவித்த கருத்து என்ன, அன்று மாலையில் சக்கரவர்த்தினி யாருக்குப் பேட்டியளித்தாள் என்பது போன்ற விவரங்களைச் சொன்னாள். சுருக்கமாகச் சொல்ல வேண்டுமானால் ஆன்னா விலாசியெவ்னாவின் உரையாடல் வரலாற்றிலே ஒரு சுவையான பக்கம்; பிற்காலத்திய தலைமுறையினருக்குப் பெருநிதி என்று கூற வேண்டும். அவள் சொன்னது எல்லாவற்றையும் மார்யா இவானவ்னா மிகவும் கவனமாகக் கேட்டாள். அவர்கள் இருவரும் பூங்காவுக்குச் சென்றனர். போகும் வழியில் ஆன்னா விலாசியெவ்னா ஒவ்வொரு பாதையையும் பாலத்தையும் சுட்டிக்காட்டி, அதன் சரித்திரத்தைச் சொல்லிக் கொண்டு வந்தாள். அவர்கள் பூங்காவைச் சுற்றிப் பார்த்து விட்டு

அஞ்சல் நிலையத்துக்குத் திரும்புவதற்குள் அவர்களிருவரும் மிகவும் நெருக்கமாகி விட்டார்கள்.

மறு நாள் அதிகாலையில் மார்யா இவானவ்ன எழுந்து உடைகளை மாற்றிக் கொண்டு பூங்காவுக்குச் சென்றாள். இலையுதிர் காலத்தில் வீசுகின்ற வாடைக் காற்றினால் மஞ்சளாக மாறிவிட்ட மரங்களின் உச்சியில் அந்த அழகான காலை நேரத்தில் கதிரவனின் இளம் கதிர்கள் தங்க முலாம் பூசிக் கொண்டிருந்தன. பெரிய ஏரியில் தண்ணீர் அமைதியாகப் பிரகாசித்துக் கொண்டிருந்தது. சற்று நேரத்துக்கு முன்பாக உறக்கம் கலைந்த அன்னப் பறவைகள் ஏரிக் கரையின் ஓரங்களில் கறுமையாகத் தெரிந்த புதர்களின் மறைவிலிருந்து புறப்பட்டும் கம்பீரமாகத் தண்ணீரில் மிதந்து வந்து கொண்டிருந்தன. பியோத்தர் அலெக்சாந்தரவிச் ரும்யான்த்செவ் பிரபு சமீபத்தில் பெற்ற இராணுவ வெற்றிகளைக் கௌரவிப்பதற்காக புல்வெளியின் மத்தியில் வெற்றிக் கம்பம் நிறுவப்பட்டிருந்தது[68]. மார்யா இவானவ்ன அந்த அழகான புல்வெளியின் அருகில் நடந்து வந்து கொண்டிருந்தாள். திடீரென்று ஒரு சிறு ஆங்கில நாய் அவளை நோக்கிக் குரைத்துக் கொண்டு ஓடி வந்ததும் அவள் பயந்து போய் அப்படியே நின்றாள். ''பயப்பட வேண்டாம்! அது கடிக்காது'' என்று ஓர் இனிமையான பெண் குரல் அதே சமயத்தில் அவள் காதில் விழுந்தது. அந்த வெற்றிக் கம்பத்துக்கு எதிரில் போடப்பட்டிருந்த பெஞ்சின் மீது உட்கார்ந்திருந்த சீமாட்டியை மார்யா இவானவ்ன பார்த்தாள். அவள் அந்த பெஞ்சின் அருகே சென்று ஒரு ஓரத்தில் உட்கார்ந்தாள். அந்த சீமாட்டி அவளைக் கவனமாகப் பார்த்தாள். அது போலவே மார்யா இவானவ்னவும் சில தடவை ஓரப் பார்வை பார்த்ததன் மூலமே அந்தச் சீமாட்டியை உச்சந் தலையிலிருந்து உள்ளங்கால் வரை கவனமாகப் பார்த்துக் கொண்டாள். அந்த சீமாட்டி வெள்ளை நிறத்தில் நீண்ட உடையும் பஞ்சடைத்த மேலங்கியும் இரவுத் தொப்பியும் அணிந்திருந்தாள். அவளுக்கு சுமார் நாற்பது வயதாகியிருக்குமென்று மார்யா இவானவ்ன மதித்தாள். அவள் முகம் நல்ல நிறத்தோடு அமைதியாகவும் கம்பீரமாகவும் தோற்றமளித்தது. அவளுடைய நீல விழிகளில், உதடுகளில் மலர்ந்த

சிரிப்பில் வருணிக்க முடியாத வசீகரமிருந்தது. அந்த சீமாட்டியே முதலில் பேச ஆரம்பித்தாள்.

"நீ இங்கே சுற்றுப்புறத்தில் வசிக்கிற பெண்ணுகத் தெரியவில்லையே. எங்கே இருக்கிருய்?" என்று கேட்டாள்.

"நான் வெளியூர், இங்கு நேற்றுத்தான் வந்தேன்."

"உன் பெற்ருேர்களோடு வந்திருக்கிருயா?"

"இல்லை, சீமாட்டியே! நான் தனியாகத்தான் வந்தேன்."

"தனியாகப் புறப்பட்டு வந்தாயா? இளம் வயதில் அப்படித் தனியாக வரலாமா?"

"என் தகப்பனுரையும் தாயாரையும் சமீபத்தில் இழந்து விட்டேன்."

"ஏதோ ஒரு முக்கிய விஷயமாக வந்திருக்கிருய். அப்படித்தானே?"

"சீமாட்டியே! ஆமாம். சக்கரவர்த்தினியைச் சந்தித்து ஒரு மனுக் கொடுப்பதற்காக வந்திருக்கிறேன்."

"உன் பெற்ருேர்களை சமீபத்தில் இழந்து விட்டதாகச் சொல்கிருய். உனக்கு ஏதேனும் அநீதி ஏற்பட்டதா? அதைப் பற்றிப் புகார் செய்ய வந்திருக்கிருயா?"

"சீமாட்டியே! இல்லை. நான் நீதி கேட்டு வரவில்லை. எனக்கு ஒரு உதவி செய்யுமாறு கேட்பதற்காக வந்திருக்கிறேன்."

"நீ யார் என்று நான் தெரிந்துகொள்ளலாமா?"

"காப்டன் மிரோனவின் மகள் நான்."

"காப்டன் மிரோனவ்! பெலகோர்ஸ்க் கோட்டையில் முன்பு தளகர்த்தராக இருந்தாரே—அவருடைய மகளா?"

"சீமாட்டி! ஆமாம்."

அந்த சீமாட்டி உணர்ச்சி வசப்பட்டது போலத் தோன்றியது.

"உன்னுடைய சொந்த விஷயத்தில் நான் தலையிடுவதாக நினைக்க வேண்டாம்" என்று மிகவும் அன்போடு கூறினுள். "நான் அரண்மனையோடு சம்பந்தப்பட்டவள். உன்னுடைய வேண்டுகோள் என்ன என்று எனக்குச் சொன்னுல், நான் என்னுல் முடிந்த உதவிகளைச் செய்யக் கூடும்" என்ருள்.

மார்யா இவானவ்னு எழுந்து நின்று அந்த சீமாட்டிக்குப் பணிவோடு நன்றி சொன்னுள். அந்த சீமாட்டி யார் என்று

தெரியாவிட்டாலும், அவளுக்குத் தன் மீது அனுதாபம் ஏற்பட்டிருக்கிறது; அவளிடம் நம்பிக்கை வைப்பது பலன் தரும் என்று மார்யா இவானவ்னுவின் மனதில் அழுத்தமான எண்ணம் தோன்றியது. அவள் தன் பையிலிருந்து ஒரு மடித்த காகிதத்தை எடுத்துத் தன்னைப் பாதுகாக்க முன்வந்திருக்கும் பெயர் தெரியாத சீமாட்டியிடம் கொடுத்தாள். அந்த சீமாட்டி அதை மௌனமாகப் படித்தாள்.

அந்தக் கடிதத்தில் எழுதப்பட்டிருந்ததை அவள் முதலில் அனுதாபத்தோடும் கவனத்தோடும் படித்தாள். ஆனால் சற்று நேரத்தில் அவள் முகபாவம் திடீரென்று மாறியது. சில விஞடிகளுக்கு முன்பு அமைதியாகவும் இனிமையாகவும் தோன்றிய சீமாட்டியின் முகம் இப்பொழுது கடுகடுப்பாக மாறியது. அவள் முகத்தைக் கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்த மார்யா இவானவ்னு இந்த மாற்றத்தைக் கண்டு கலவரமடைந்தாள்.

''கிரின்யோவுக்கு மன்னிப்பளிக்குமாறு நீ கேட்டிருக்கிருய்'' என்று சீமாட்டி அவருப்பாகச் சொன்னுள். ''சக்கரவர்த்தினி அவனை மன்னிக்கப் போவதில்லை. அவன் பாசாங்குக்காரனேடு சேர்ந்ததற்கு அறியாமையும் விளையாட்டுத்தனமும் காரணமல்ல; அவன் கொள்கையில்லாத ஆபத்தான போக்கிரி. அவனுடைய துரோகத்தை மன்னிக்க முடியாது.''

''இல்லை! நீங்கள் சொல்வது உண்மையல்ல!'' என்று மார்யா இவானவ்னு பலமாகச் சொல்லி விட்டாள்.

''உண்மை இல்லையா?'' என்று அந்தச் சீமாட்டி திருப்பிக் கேட்ட பொழுது அவள் முகம் சிவந்து போயிருந்தது.

''உண்மையல்ல! அது உண்மையல்ல என்று நான் சத்தியம் செய்வேன்! என்ன நடந்ததென்று எனக்குத் தெரியும். நான் உங்களிடம் எல்லாவற்றையும் விளக்கமாகச் சொல்கிறேன். அவர் எனக்காகத்தான் எல்லாக் கஷ்டங்களையும் ஏற்றுக் கொண்டார். விசாரணையின் போது அவர் உண்மையான காரணத்தைச் சொல்லியிருக்கலாம். ஆனல் அந்த விசாரணையில் என் பெயரைச் சொல்லி என்னை இழுத்துவிட விரும்பாததனுல்தான் அவர் பேசாமலிருந்து விட்டார்.'' இதற்குப் பிறகு அவள் வாசகருக்கு முன்பே தெரிந்த கதையை அந்தச் சீமாட்டியிடம் ஆர்வத்தோடு கூறினுள்.

அவள் சொல்லிக் கொண்டிருந்த விவரங்களை சீமாட்டி கவனமாகக் கேட்டாள்.

பிறகு ''நீ எங்கே தங்கியிருக்கிறாய்?'' என்று கேட்டாள். ஆன்னா விலாசியெவ்னாவின் வீட்டில் தங்கியிருப்பதாகச் சொன்னதும் அவள் சிரித்துக் கொண்டாள்.

''அவளை எனக்கு நன்றாகத் தெரியும். நாம் இங்கே சந்தித்ததைப் பற்றி யாரிடமும் சொல்லாதே. போய்வா. உன்னுடைய மனுவுக்குச் சீக்கிரமே பதில் வரும் என்று நான் நம்புகிறேன்'' என்றாள்.

இவ்வாறு கூறிவிட்டு அவள் எழுந்து வேலி போடப்பட்ட ஒரு பகுதிக்குள் நடந்து சென்றாள். மார்யா இவானவ்னா அளவற்ற நம்பிக்கைகளோடு ஆன்னா விலாசியெவ்னாவின் வீட்டை நோக்கி நடந்தாள்.

இலையுதிர் காலத்தில் காலை நேரத்தில் இப்படி உலாவப் போகலாமா, அது இளம் பெண்களுக்குக் கெடுதலாயிற்றே என்று ஆன்னா விலாசியெவ்னா கோபித்துக் கொண்டாள். பிறகு சமோவார் பாத்திரத்தைக் கொண்டுவந்து வைத்துத் தேநீர் தயாரித்தாள். வழக்கம் போல அரண்மனைக் கதை ஒன்றை நீட்டி முழக்கிச் சொல்லிக் கொண்டிருக்கும் பொழுது அரண்மனை ஊழியன் ஒருவன் வீட்டுக்குள் வந்தான். சக்கரவர்த்தினி அவர்கள் மரீயா இவானவ்னா மிரோனவாவுக்குப் பேட்டியளிக்க மனமுவந்து முடிவு செய்திருப்பதாகவும் அவள் உடனே அரண்மனைக்குப் புறப்பட வேண்டுமென்றும் தெரிவித்தான்.

இதைக் கேட்டதும் ஆன்னா விலாசியெவ்னாவுக்குத் திகைப்பும் பரபரப்பும் ஏற்பட்டது. ''அட கடவுளே! சக்கரவர்த்தினி உங்களை அரண்மனைக்கு வருமாறு அழைத்திருக்கிறார்களே!'' என்று பலமாகச் சொன்னாள். ''நீங்கள் வந்திருப்பது அரண்மனைக்கு எப்படித் தெரியும்? அன்பே! சக்கரவர்த்தினியை எப்படி சந்திக்கப் போகிறீர்கள்? சக்கரவர்த்தினி முன்பு எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்று உங்களுக்குத் தெரியுமா?.... நானும் உங்களோடு வரட்டுமா? வந்தால் உங்களுக்கு ஏதாவது சொல்லிக் கொடுத்து உதவி செய்வேனே! உங்களுடைய பிரயாண உடையில் நீங்கள் அரண்மனைக்குப் போகலாமா? மஞ்சள் மேலங்கியைக் கொடுத்து உதவுமாறு தாதிக்குத் தகவல் கொடுக்கலாமா?''

மார்யா இவானவ்ஞ தனியாகவே வரவேண்டும்; தான் அப்பொழுது அணிந்திருக்கும் உடையிலேயே வரலாம் என்று சக்கரவர்த்தினி சொல்லி விட்டதாக அரண்மனைப் பணியாள் கூறினன். பிறகு வேறு வழி இல்லை. மார்யா இவானவ்ஞ கோச் வண்டியில் உட்கார்ந்து ஆன்ஞ விலாசியெவ்ஞவின் ஆலோசனைகளும் நல்வாழ்த்துக்களும் தொடர அரண்மனைக்குப் புறப்பட்டாள்.

எங்களிருவருடைய எதிர்காலமும் தராசு முனையில் நிற்பதை மார்யா இவானவ்ஞ புரிந்து கொண்டாள். முதலில் அவளுடைய இருதயம் மிகவும் வேகமாகத் துடித்தது; பிறகு அப்படியே நின்று போய் விட்டது மாதிரித் தோன்றியது. சில நிமிடங்களில் கோச் வண்டி அரண்மனைக்கு முன்னுல் நின்றது. மார்யா இவானவ்ஞ நடுங்கிக் கொண்டே படிகளில் ஏறினுள். அவளுக்கு முன்னுல் அரண்மனைக் கதவுகள் விசாலமாகத் திறந்திருந்தன. அரண்மனைப் பணியாள் வழி காட்டிக் கொண்டு முன்னே செல்ல அவள் அவனைப் பின் தொடர்ந்து மிக அற்புதமாகத் தோன்றிய பல காலி அறைகளைக் கடந்து போய்க் கொண்டிருந்தாள். கடைசியில் மூடிய கதவுகளுக்கு அருகே அவன் நின்று கொண்டு தான் முன்னுல் போய் அவள் வந்திருப்பதைத் தெரிவிப்பதாகச் சொல்லிவிட்டு உள்ளே சென்றுன். அவள் மட்டும் அங்கே நின்று கொண்டிருந்தாள்.

சக்கரவர்த்தினியை நேருக்கு நேராகப் பார்க்கப் போவதை நினைக்கும் பொழுது மார்யா இவானவ்ஞவுக்கு ஏற்பட்ட பயத்தில் அவளால் நிற்கக் கூட முடியவில்லை. சில நிமிடங்களுக்குப் பிறகு கதவு திறக்கப்பட்டது. சக்கரவர்த்தினியின் தனியறைக்குள் அவள் நுழைந்தாள்.

சக்கரவர்த்தினி ஒப்பனை மேசைக்கு முன்பாக உட்கார்ந்து கொண்டிருந்தாள். முக்கியமான சில அதிகாரிகள் அங்கே நின்று கொண்டிருந்தார்கள். அவர்கள் மார்யா இவானவ்ஞவைப் பார்த்ததும் மரியாதையோடு வழி விட்டார்கள். சக்கரவர்த்தினி அவளிடம் அன்பாகப் பேசினுள். அப்பொழுது மார்யா இவானவ்ஞதான் காலையில் திறந்த மனதோடு பேசிய சீமாட்டி சக்கரவர்த்தினியே என்பதை உணர்ந்தாள். சக்கரவர்த்தினி அவளைப் பார்த்துச் சிரித்தபடியே அருகில் வருமாறு அழைத்தாள். ''உன்னுடைய வேண்டுகோளை

நிறைவேற்றி என்னுடைய வாக்கைக் காப்பாற்ற முடிந்தது பற்றி நான் மகிழ்ச்சியடைகிறேன். உன்னுடைய மணமகன் குற்றம் செய்யவில்லை என்பதில் இப்பொழுது எனக்குச் சந்தேகமில்லை. உன்னுடைய காரியம் வெற்றிகரமாக முடிந்து விட்டது. இந்தக் கடிதத்தை உன்னுடைய எதிர்கால மாமனுரிடம் கொண்டு போய்க் கொடு'' என்ருள்.

மார்யா இவானவ்னு அந்தக் கடிதத்தை வாங்கும் பொழுது அவள் கைகள் நடுங்கின. அப்படியே சக்கரவர்த்தினியின் காலடியில் விழுந்து ஆனந்தக் கண்ணீர் விட்டாள். சக்கரவர்த்தினி அவளைத் தூக்கி முத்தமிட்டாள். பிறகு அவளிடம் அன்பாகப் பேசினுள். ''நீ பணக்காரப் பெண்ணல்ல என்பது எனக்குத் தெரியும். காப்டன் மிரோனவின் மகளுக்கு உதவி செய்வது என் கடமையாகும், எனவே எதிர்காலத்தைப் பற்றிக் கவலைப்படாதே. உனக்குத் தேவையான எல்லா உதவிகளையும் நான் செய்வேன்'' என்ருள்.

சக்கரவர்த்தினி அந்த ஏழை அனுதைப் பெண்ணை மிகவும் அன்புடன் உபசரித்த பிறகு விடை கொடுத்து அனுப்பினுள். அதே கோச் வண்டியில் மார்யா இவானவ்னு வீட்டுக்குத் திரும்பினுள். அவள் எப்பொழுது திரும்புவாள் என்று ஆவலோடு காத்துக் கொண்டிருந்த ஆன்னு விலாசியெவ்னு சக்கரவர்த்தினியைப் பற்றிச் சரமாரியாகக் கேள்விகள் கேட்டாள். அந்தக் கேள்விகளுக்கு மார்யா இவானவ்னு முடிந்த வரை பதிலளித்தாள். ஆன்னு விலாசியெவ்னுவுக்கு அவள் மீது கோபமே. ஏனென்ருல் அரண்மனைக்குப் போய் சக்கரவர்த்தினியைப் பார்த்துப் பேசிவிட்டுத் திரும்பியவள் பல விஷயங்களை நன்ருக கவனித்துப் பார்த்துவிட்டுத் திரும்பியிருக்க வேண்டாமா? அல்லது பார்த்தவற்றையாவது சரியாக நினைவில் வைத்திருக்க வேண்டாமா? சரி. என்ன இருந்தாலும் கிராமத்தில் பிறந்து வளர்ந்த பெண்தானே! கெட்டிக்காரத்தனம் எப்படி வரும் என்று பெருந்தன்மையோடு அவளை மன்னித்தாள். மார்யா இவானவ்னு பீட்டர்ஸ்பர்கைச் சுற்றிப் பார்ப்பதற்குக் கூடத் தாமதிக்காமல் அன்றைய தினமே கிராமத்துக்குப் புறப்பட்டாள்...

---

*பியோத்தர் அந்திரேயெவிச் கிரின்யோவின் கையேடு இங்கே முடிவடைந்து விடுகிறது. சக்கரவர்த்தினியின் உத்தரவுப்படி 1774ம் வருடத்தின் கடைசியில் அவர் சிறையிலிருந்து விடுவிக்கப்பட்டார்; புகச்சோவுக்கு விதிக்கப்பட்ட மரண தண்டனை நிறைவேற்றப்பட்ட பொழுது அதைப் பார்க்கத் திரண்டிருந்த மக்கள் கூட்டத்தில் அவரும் நின்றதாகவும், புகச்சோவ் அவரை அடையாளம் கண்டு தம்முடைய தலையை அசைத்ததாகவும், சில நிமிடங்களில் அதே தலை துண்டிக்கப்பட்டு இரத்தம் சொட்டச் சொட்ட மக்கள் முன்னால் கொண்டுவந்து காட்டப்பட்டதாகவும் அவருடைய குடும்பத்தில் சொல்லி வருகிறார்கள். இறற்குப் பிறகு பியோத்தர் அந்திரேயெவிச் மார்யா இவானவ்னாவைத் திருமணம் செய்து கொண்டார். இன்றும் அவர்களுடைய சந்ததியினர் ஸிம்பீர்ஸ்க் வட்டாரத்தில் வசதியாக வாழ்ந்து வருகிறார்கள் அ. என்ற இடத்திலிருந்து முப்பது வெர்ஸ்டாக்கள் தூரத்தில் ஒரு கிராமம் பத்து நபர்களுக்குச் சொந்தமானதாக இருக்கிறது. அங்கேயிருக்கும் நாட்டுப்புற வீட்டின் அறை ஒன்றில் சக்கரவர்த்தினி இரண்டாம் எகதிரீனாவின் கையெழுத்தில் உள்ள கடிதம் கண்ணாடிச் சட்டம் போட்டு மாட்டப்பட்டிருக்கிறது. பியோத்தர் அந்திரேயெவிச்சின் தகப்பனாருக்கு எழுதப்பட்ட அந்தக் கடிதத்தில் அவர் மகனை விடுதலை செய்வதாகவும், காப்டன் மிரோனவின் மகள் நல்லறிவும் நற்பண்புகளும் வாய்க்கப் பெற்றவள் என்றும் குறிப்பிடப்பட்டிருக்கிறது. பியோத்தர் அந்திரேயெவிச் கிரின்யோவின் கையேட்டை அதில் வருணிக்கப்பட்டுள்ள காலப் பகுதியைப் பற்றி நாம் பல ஆராய்ச்சிகள் செய்திருப்பதால் அவருடைய பேரர்களில் ஒருவர் நம்மிடம் கொடுத்தார். அவருடைய உறவினர்களின் அனுமதியைப் பெற்று அதைத் தனி நூலாக வெளியிடுகிறோம். ஒவ்வொரு அத்தியாயத் தலைப்புக்கும் பொருத்தமான மேற்கோளை உதவியிருப்பதோடு சில பெயர்களையும் அங்கங்கே மாற்றியிருக்கிறோம்.*

**பதிப்பாசிரியர்**

**அக்டோபர் 19, 1836ம் வருடம்**

## பிற்சேர்க்கை

### நீக்கப்பட்ட அத்தியாயம்*

நாங்கள் வோல்கா நதிக் கரையை நெருங்கி விட்டோம். எங்கள் படைப் பிரிவு ஒரு கிராமத்துக்குள் நுழைந்தது. அன்றிரவில் அங்கேயே தங்குவதென்று அதிகாரிகள் முடிவு செய்தனர். ஆற்றின் மறு கரையிலிருந்த எல்லா கிராமங்களுமே கலகத்தில் ஈடுபட்டிருக்கின்றன என்றும் புகச்சோவின் கும்பல் எல்லா இடங்களிலும் சுற்றிக் கொண்டிருக்கிறதென்றும் கிராமப் பெரியவர் என்னிடம் தெரிவித்தார். இந்தச் செய்தியைக் கேட்டதும் எனக்கு அதிகமான கவலை ஏற்பட்டது. மறு நாள் காலையில் நாங்கள் ஆற்றைக் கடப்பதென்று முடிவு செய்யப்பட்டிருந்தது. நான் பொறுமையில்லாமல் துடிதுடித்துக் கொண்டிருந்தேன். ஆற்றின் அக்கரையிலிருந்து சுமார் முப்பது வெர்ஸ்டாக்கள் தூரத்தில் என் தகப்பனுருடைய பண்ணை இருந்தது. என்னைப் படகில் அக்கரைக்குக் கொண்டு போய் விட யாராவது வருவார்களா என்று விசாரித்தேன். அந்தக் கிராமத்திலிருந்தவர்கள் எல்லோருமே மீனவர்கள் தான்; எனவே அங்கே பல படகுகளும் இருந்தன. நான் கிரின்யோவிடம் சென்று எனது விருப்பத்தைத் தெரிவித்தேன். ''ஜாக்கிரதை! தனியாகப் போவது பெரும் ஆபத்தாகும். காலை வரை பொறுத்திரு. முதல் கோஷ்டியோடு

---

* **காப்டன் மகள்** நாவல் வெளியிடப்பட்ட பொழுது அரசாங்கத் தணிக்கை காரணமாக இந்த அத்தியாயம் நாவலில் இடம் பெறவில்லை. பூஷ்கின் கையெழுத்துப் பிரதியில் மட்டும்தான் இந்த அத்தியாயம் இருக்கிறது. அவரே ''நீக்கப்பட்ட அத்தியாயம்'' என்று தலைப்பும் கொடுத்திருக்கிருர். சில பாத்திரங்களின் பெயர்களையும் மாற்றி எழுதியிருக்கிருர். உதாரணமாக, கிரின்யோவ் **புலானின்** என்ற பெயரிலும் ஸுரின் **கிரின்யோவ்** என்றும் இந்த அத்தியாயத்தில் அழைக்கப்படுகிருர்கள்.—**ப-ர்.**

நாம் அக்கரைக்குப் போவோம். உன் வீட்டில் ஏதேனும் ஆபத்து ஏற்படலாமென்பதால் ஐம்பது ஹுஸார்களேயும் கூட்டிக் கொண்டு போவோம்'' என்ருர்.

எனினும் அன்றிரவிலேயே ஆற்றைக் கடப்பதென்று நான் முடிவு செய்தேன். ஒரு படகு தயாராக இருந்தது. இரண்டு படகோட்டிகளோடு அந்தப் படகில் ஏறி உட்கார்ந்தேன். அவர்கள் படகைத் தண்ணீருக்குள் தள்ளி விட்டுச் சுறுசுறுப்பாகத் துடுப்புகளைப் போட்டார்கள்.

நிர்மலமான வானத்தில் நிலவு பிரகாசமாகத் தெரிந்தது. பருவநிலை அமைதியாக இருந்தது. வோல்கா நதி அமைதியாகவும் சமதளமாகவும் ஓடிக் கொண்டிருந்தது. தண்ணீரின் கறுப்பான மேற்பரப்பில் படகு தாளலயத்தோடு அசைந்தாடிக் கொண்டு வேகமாகப் போய்க் கொண்டிருந்தது. நான் கற்பனைத் தேரில் விண்ணேக்கிப் பறந்தேன். படகு புறப்பட்டு சுமார் அரை மணி நேரம் ஆகியிருக்கும். ஆற்றின் நடுப் பகுதிக்கு வந்து விட்டோம்... திடீரென்று படகோட்டிகள் குசுகுசுவென்று பேசிக் கொண்டார்கள். ''என்ன விஷயம்?'' என்று திடீரென்று கற்பனைச் சுகத்திலிருந்து விடுபட்டுக் கேட்டேன். ''அது என்னவென்று கடவுளுக்குத் தெரிந்திருக்கலாம். எங்களுக்குத் தெரியவில்லை'' என்று அவர்களிருவரும் ஒரே திசையில் பார்த்தபடியே பதிலளித்தார்கள். அவர்கள் பார்த்த திசையை நோக்கி நானும் பார்த்தேன். ஏதோ ஒரு பெரிய பொருள் தண்ணீரின் கீழ் நீரோட்டத்தில் மிதந்து வருவது அந்த இருட்டிலும் தெரிந்தது. அந்த மர்மமான பொருள் சிறிது சிறிதாக எங்கள் படகை நோக்கி வந்து கொண்டிருந்தது. படகோட்டிகளிடம் துடுப்புப் போட வேண்டாம் என்று சொல்லிவிட்டு அந்தப் பொருள் படகின் அருகில் வரும் வரை காத்திருந்தேன். திடீரென்று நிலா ஒரு மேகத்துக்குப் பின்னுல் மறைந்து விட்டது. மிதந்து வந்த பேயுரு இன்னும் அதிகக் கறுப்பாகத் தோன்றியது. அது படகுக்கு மிக அருகே வந்து விட்டது. எனினும் அது என்னவென்று எனக்குத் தெரியவில்லை. ''அது என்னவாக இருக்கும்?'' என்று படகோட்டிகள் பேசிக் கொண்டார்கள். ''அது பாய்மரமல்ல; பாய்களும் இல்லை....'' திடீரென்று மேகங்களுக்குப் பின்னுலிருந்து நிலா வெளியே வந்து ஒளி

வீசியதும் நாங்கள் ஒரு பயங்கரமான காட்சியைக் கண்டோம். எங்களை நோக்கி ஒரு மிதவை வந்து கொண்டிருந்தது. அதன் மத்தியில் தூக்குக் கம்பங்கள் நிறுத்தி வைக்கப்பட்டிருந்தன. அதன் குறுக்குச் சட்டத்திலிருந்து மூன்று உடல்கள் தொங்கிக் கொண்டிருந்தன. எனக்கு ஒரு விசித்திரமான ஆசை ஏற்பட்டது. தூக்கிலிடப்பட்ட நபர்களின் முகங்களைப் பக்கத்திலே போய்ப்பார்க்க விரும்பினேன்.

நான் உத்தரவிட்டதும் படகோட்டிகள் கொக்கியை வீசி அந்த மிதவையைத் தடுத்து நிறுத்தினார்கள். இப்பொழுது என்னுடைய படகு அந்த மிதக்கும் தூக்கு மேடையில் மோதியது. நான் படகிலிருந்து மிதவையில் தாவிக் குதித்து இரண்டு தூக்குக் கம்பங்களுக்கும் இடையே போய் நின்றேன். தூக்கிலிடப்பட்ட பரிதாபத்துக்குரியவர்களின் மூளியான முகங்கள் மீது நிலா பிரகாசித்தது. அவர்களில் ஒருவன் அதிக வயதான சுவாஷ், மற்றொருவன் சுமார் இருபது வயதுகளே முடிந்த ருஷ்ய விவசாயி; அவன் பலசாலியாகவும் ஆரோக்கியமானவனாகவும் இருந்தான். மூன்றாவது நபரைப் பார்த்த பொழுது எனக்குப் பயங்கரமான அதிர்ச்சி ஏற்பட்டது. என்னையறியாமல் ஓ வென்று அலறி விட்டேன். அந்த நபர் வான்யா. ஆம். என்னுடைய ஏழை வான்யாதான். ஏதோ ஒரு கண நேர முட்டாள்தனத்தில் அவன் புகச்சோவின் கலகக் கும்பலோடு சேர்ந்திருக்க வேண்டும். அவர்களுடைய தலைக்கு மேலே ஒரு கறுப்புப் பலகை ஆணியடித்து மாட்டப்பட்டிருந்தது. அதில் ''திருடர்கள் மற்றும் கலகக்காரர்கள்'' என்று வெள்ளை வர்ணத்தில் பெரிய எழுத்துக்களில் எழுதப்பட்டிருந்தது. படகோட்டிகள் கொக்கியை இழுத்துப் பிடித்துக் கொண்டு மிதவையை நிறுத்தி வைத்துக் கொண்டிருந்தார்கள். நான் அடுத்தபடியாக என்ன சொல்லப் போகிறேன் என்று அக்கறை இல்லாமல் காத்துக் கொண்டிருந்தார்கள். நான் மறுபடியும் படகுக்குத் தாவினேன். அந்த மிதவை நீரோட்டத்தில் மிதந்து சென்றது. இருட்டில் தூக்குக் கம்பங்கள் மட்டும் வெகு நேரம் வரை தெரிந்தன. கடைசியில் மிதவை என் பார்வையிலிருந்து மறைந்து போய் விட்டது. எங்கள் படகும் மேடான கரைக்கு வந்து சேர்ந்தது....

நான் படகோட்டிகளுக்குத் தாராளமாகக் கூலி கொடுத்தேன். படகோட்டிகளில் ஒருவன், ஆற்றோரத்தி லுள்ள கிராமத்தின் தலைவரிடம் என்னைக் கூட்டிக் கொண்டு போவதற்கு முன்வந்தான். நான் அவனோடு அந்தத் தலைவர் வீட்டுக்குள் நுழைந்தேன். எனக்குக் குதிரைகள் வேண்டும் என்று நான் சொன்ன பொழுது அந்தக் கிராமத் தலைவர் என்னை விரட்டியடிப்பது போலப் பார்த்தார். ஆனால் பட கோட்டி அவரிடம் இரகசியமாக ஏதோ பேசிய பிறகு முத லில் காட்டிய கடுகடுப்பை மாற்றிக் கொண்டு குழைய ஆரம் பித்தார். சில நமிடங்களில் ஒரு டிரோய்கா வண்டி தயாராக வந்து விட்டது. நான் வண்டியில் ஏறிக் கொண்டு என் னுடைய தகப்பனார் வசிக்கும் கிராமத்துக்கு ஓட்டு என்று வண்டிக்காரனிடம் சொன்னேன்.

அந்த விசாலமான நெடுஞ்சாலையில், தூங்கிக் கொண் டிருந்த கிராமங்களைக் கடந்து வண்டி வேகமாகப் போய்க் கொண்டிருந்தது. வழியில் யாராவது என்னை நிறுத்திவிடக் கூடாதே என்ற ஒரே கவலைதான் அந்த நேரத்தில் எனக்கு இருந்தது. வோல்கா நதியில் மிதந்து வந்த தூக்கு மேடையைப் பார்த்ததிலிருந்து கலகக்காரர்கள் அந்தப் பகுதியில் நடமாடுவதைத் தெரிந்து கொண்டாலும் அதிகாரி கள் அவர்களைப் பயங்கரமாக ஒடுக்கிக் கொண்டிருக்கிறார் கள் என்பதை முக்கியமாகப் புரிந்து கொண்டேன். புகச் சோவ் எனக்குக் கொடுத்த அனுமதிச் சீட்டையும் கர்னல் கிரின்யோவ் கையொப்பமிட்ட உத்தரவையும் சந்தர்ப்பத் துக்குத் தகுந்தாற்போல உபயோகித்துக் கொள்ளலாம் என்ற எண்ணத்தில் என் சட்டைப் பையில் பத்திரமாக வைத்திருந்தேன். ஆனால் போகும் வழியில் யாரும் என் வண் டியை நிறுத்தவில்லை. மறு நாள் அதிகாலையில் எங்கள் கிராமத்திதின் எல்லையிலுள்ள ஆற்றையும் பிர்மரக் காட்டை யும் பார்த்தேன். வண்டிக்காரன் சாட்டையைச் சொடுக்கி குதிரைகளை விரட்டினான். கால்மணி நேரத்தில் நான் கிராமத்துக்குள் நுழைந்தேன்.

எங்களுடைய பெரிய வீடு கிராமத்தின் மறு கோடி யில் இருந்தது. குதிரைகள் வேகமாகப் போய்க் கொண்டிருந் தன. ஆனால் திடீரென்று வண்டிக்காரன் தெருவின் நடு விலே குதிரைகளின் கடிவாளத்தை இழுத்து நிறுத்தினான்.

''ஏன் நிறுத்திஞய்?'' என்று நான் பொறுமையில்லாமல் கேட்டேன். ''தடுப்பு வைத்திருக்கிருர்கள்'' என்று அவன் குதிரைகளின் பாய்ச்சலை சிரமப்பட்டுக் கட்டுப்படுத்திக் கொண்டு பதில் சொன்ஞன். அந்த இடத்தில் தெருவுக்குக் குறுக்கே இரண்டு கம்புகளைத் திடீரென்று கட்டியிருந்தது உண்மையே. அதன் முன்ஞல் ஒரு விவசாயி தோளிலே கம்பைச் சாய்த்தபடி நின்று காவல் செய்து கொண்டிருந் தான். அவன் என்னிடம் வந்து தலையிலிருந்த தொப்பியை எடுத்துவிட்டு, அனுமதிச் சீட்டைக் கேட்டான்.

''என்ன இதெல்லாம்? இந்தத் தடுப்பு எதற்கு? யாரைக் காவல் செய்கிருய்?'' என்று நான் கேட்டேன்.

''ஏன்? நாங்கள் கலகம் செய்திருக்கிறோம், ஐயா!'' என்று அவன் தலையின் பின்புறத்தைச் சொறிந்து கொண்டு பதில் சொன்ஞன்.

''உன்னுடைய எஜமானர்கள் எங்கே இருக்கிருர்கள்?'' என்று கவலையோடு கேட்டேன்.

''எஜமானர்களா? எஜமானர்கள் களஞ்சியத்தில் இருக் கிருர்கள்'' என்று பதிலளித்தான்.

''களஞ்சியத்திலா?''

''அந்திரியூஷா அவர்கள் கைகளில் மரச் சட்டத்தை மாட்டிஞன். அவர்களை சக்கரவர்த்தியிடம் கொண்டு போக வேண்டும் என்று சொன்ஞன்.''

''அட கடவுளே! சீ முட்டாள்! கம்பை இழு. வாயைப் பிளந்து கொண்டு நிற்காதே!''

அந்தக் காவலாள் தயங்கிஞன். நான் உடனே வண்டி யிலிருந்து கீழே குதித்து அவன் காதைச் சேர்த்து அறைந் தேன் (இதை நினைத்து வருந்துகிறேன்). பிறகு நானே போய்க் கம்பை இழுத்துத் தடையை நீக்கினேன். அவன் வாயைப் பிளந்து கொண்டு ஆச்சரியத்தோடு என்னைப் பார்த்துக் கொண்டிருந்தான். நான் மறுபடியும் வண்டியில் உட்கார்ந்து கொண்டு பெரிய வீட்டுக்கு ஓட்டு என்று வண்டிக்காரனிடம் சொன்னேன். பெரிய வீட்டின் பின் பகுதி யில் களஞ்சியம் இருந்தது. அதன் கதவுகள் பூட்டப்பட் டிருந்தன. இரண்டு விவசாயிகள் கைகளில் கம்புகளோடு காவல் காத்துக் கொண்டிருந்தார்கள். வண்டி நேராக அவர்களுக்கு முன்னே போய் நின்றது. நான் வண்டியிலி

ருந்து குதித்து நேரே அவர்களிடம் போனேன். ''கதவைத் திற!'' என்று அவர்களை அதட்டிச் சொன்னேன். என்னுடைய தோற்றத்தில் ஏதோ ஒரு அம்சம் அவர்களுடைய மனதில் பயத்தை உண்டாக்கியிருக்க வேண்டும். அவர்கள் கம்புகளைக் கீழே போட்டுவிட்டு ஓடி விட்டார்கள். நான் முதலில் கதவின் மேலிருந்த தாழ்ப்பாளை நீக்குவதற்கு முயற்சித்தேன். பிறகு கதவை ஓங்கி உதைத்தேன். ஆனால் அந்தப் பெரிய தாழ்ப்பாள் உறுதியானது; கதவோ ஓக் மரத்தில் செய்யப்பட்டிருந்தது. எனவே எந்தப் பலனும் ஏற்படவில்லை. அந்த நேரத்தில் குடிசையிலிருந்து ஒரு உயரமான இளம் விவசாயி வெளியே வந்தான். என்னைப் பார்த்து ஏன் கலாட்டா செய்கிறாய் என்று மரியாதையில்லாமல் கேட்டான்.

''அந்திரியூஷா எங்கே? அவனை வரச் சொல்'' என்று உரத்த குரலில் பேசினேன்.

''என் பெயர் அந்திரியூஷா அல்ல; அந்திரேய் அஃபனஸியெவிச்'' என்று அவன் கைகளை இடுப்பில் வைத்துக் கொண்டு ஆணவமாகப் பதிலளித்தான். ''உனக்கு என்ன வேண்டும்?''

நான் அவனுக்குப் பதிலளிக்கவில்லை; உடனே ஓடிப் போய் அவன் சட்டையின் கழுத்துப் பட்டையைப் பிடித்து அவனைக் களஞ்சியத்தின் கதவு வரை தரதரவென்று இழுத்துக் கொண்டு போய் கதவைத் திற என்று உத்தரவிட்டேன். அவன் ஒரு வினாடி நேரம் பிடிவாதமாக மறுத்தான். ஆனால் தகப்பனார் மாதிரி நான் கொடுத்த தண்டனைக்கு ஒரு விளைவு ஏற்பட்டிருக்க வேண்டும். அவன் சாவியை எடுத்துக் களஞ்சியத்தின் கதவைத் திறந்தான். நான் வாயிலைக் கடந்து உள்ளே பாய்ந்தேன். அங்கே இருட்டாகவே இருந்தது. ஆனால் கூரையிலிருந்த சிறிய துவாரத்தின் வழியாக உள்ளே நுழைந்த மங்கலான வெளிச்சத்தில் என் தகப்பனாரும் தாயாரும் ஒரு மூலையில் இருப்பதைப் பார்த்தேன். அவர்களுடைய கால்களில் மரச் சட்டங்கள் பொருத்தப்பட்டுக் கைகள் கயிற்றால் கட்டப்பட்டிருந்தன. நான் அவர்களை ஆர்வத்தோடு கட்டித் தழுவினேன். என்றால் ஒரு வார்த்தை கூடப் பேச முடியவில்லை. அவர்கள் என்னை அதிகமான ஆச்சரியத்தோடு பார்த்தார்கள். மூன்று வருட

இராணுவ வாழ்க்கை அவர்களால் அடையாளம் தெரிந்து கொள்ள முடியாத அளவுக்கு என்னை மாற்றியிருந்தது. என் தாயார் பெருமூச்சு விட்டுக் கொண்டு கண்ணீரைக் கொட்டினாள்.

திடீரென்று எனக்குப் பின்னாலிருந்து அறிமுகமான, இனிய குரல் கேட்டது: ''பியோத்தர் அந்திரேயெவிச்! வந்து விட்டீர்களா?'' நான் வாயடைத்துப் போனேன்.... நான் திரும்பிப் பார்த்தேன். அங்கே இன்னொரு மூலையில் மார்யா இவானவ்னா கைகள் கட்டப்பட்டுக் கால்களில் மரச் சட்டங்கள் பொருத்தப்பட்டுக் கிடந்தாள்.

என் தகப்பனார் தம்முடைய கண்களை நம்ப முடியாமல் என்னை மௌனமாகப் பார்த்துக் கொண்டிருந்தார். அவர் முகம் ஆனந்தமயமாகப் பிரகாசித்தது. நான் என்னுடைய வாளை உருவி அவர்களைக் கட்டியிருந்த கயிற்றின் முடிச்சுக் களை அவசரமாக வெட்டினேன்.

''பெத்ரூஷா! வா! வா!'' என்று சொல்லிக் கொண்டு என் தகப்பனார் என்னைத் தன் மார்போடு அணைத்துக் கொண்டார். ''கடவுள் கருணையால் உன்னைப் பார்க்கும் வரை உயிரோடிருந்து விட்டேன்....''

''பெத்ரூஷா! என் அன்பு மகனே!'' என்று என் தாயார் பேசினாள். ''உன்னை எந்தத் தேவதை இங்கே கூட்டிக் கொண்டு வந்தது? நீ சுகமாக இருக்கிறாயா?'' என்று கேட்டாள்.

அந்தச் சிறையிலிருந்து அவர்களை விடுவிக்க வேண்டு மென்று நான் அவசரப்பட்டேன். ஆனால் கதவின் அருகே போன பொழுது, கதவு மறுபடியும் பூட்டப்பட்டிருந்தது.

''அந்திரியூஷா! கதவைத் திற!'' என்று சத்தம் போட் டேன்.

''திறக்க மாட்டேன்'' என்று அவன் கதவு இடுக்கின் வழியாகப் பதில் சொன்னான். ''நீயும் அங்கேயே இரு. கலாட்டா செய்ததற்கும் ஜார் சக்கரவர்த்தியின் அதிகாரி களைக் கழுத்தைப் பிடித்து இழுத்ததற்கும் உனக்குத் தகுந்த பாடம் கற்பிப்பேன்'' என்றான்.

நாங்கள் தப்பிச் செல்வதற்கு ஏதேனும் வழி இருக் கிறதா என்று களஞ்சியத்தை ஆராய்ந்தேன்.

''நடக்காது'' என்று என் தகப்பனார் கூறினார். ''என்

னுடைய களஞ்சியங்களுக்குள் திருடர்கள் நுழைய முடியாது; வெளியே தப்பிப் போகவும் முடியாது'' என்ருர்.

நான் வந்திருப்பதை நினைத்து லேசாக உற்சாகமடைந்த என்னுடைய தாயார் இப்பொழுது நானும் குடும்பத்தோடு சேர்ந்து பயங்கரமாகச் சாகப் போகிறேனே என்று அதிகக் கலவரமடைந்தாள். ஆனல் என்னுடைய பெற்ருேர்களையும் மார்யா இவானவ்னுவையும் பார்த்த நிமிடத்திலிருந்து நான் முன்னைக் காட்டிலும் நிதானமடைந்தேன். என்னிடம் ஒரு வாளும் இரண்டு கைத்துப்பாக்கிகளும் இருந்தபடியால் முற்று கையிட்டால் அதைச் சமாளிக்க முடியும். மேலும் அன்றிரவுக்குள் கிரின்யோவ் வந்து எங்களை விடுவித்து விடுவார் என்று உறுதியாக நம்பினேன். என் பெற்ருேர்களிடம் இதைச் சொன்ன பிறகு என் தாயாரின் கவலையை ஓரளவுக்குக் குறைக்க முடிந்தது. நாங்கள் பல வருடங்களுக்குப் பிறகு ஒன்ருகக் கூடியிருப்பதன் மகிழ்ச்சியை அனுபவிக்கத் தொடங்கினேம்.

''பியோத்தர்! நீ குறும்புத் தனமாகப் பல காரியங்களைச் செய்ததைப் பற்றிக் கேள்விப்பட்ட பொழுது எனக்கு உன் மீது கோபமேற்பட்டது. ஆனல் அதை இப்பொழுது பேசுவது சரியல்ல. நீ இப்போது திருந்தி விட்டாய்; உன்னுடைய வீணை விளையாட்டுக்களை ஆடி முடித்து விட்டாய் என்று நம்புகிறேன். ஒரு கௌரவமான அதிகாரியாகச் சேவை செய்திருக்கிருய் என்று எனக்குத் தெரியும். உனக்கு எனது நன்றியைத் தெரிவிக்கிறேன். வயதான காலத்தில் எனக்கு மனநிம்மதியைத் தந்திருக்கிருய். உன்னுல் எனக்கு விடுதலை கிடைத்தால் அது எனக்கு இரட்டிப்பு மகிழ்ச்சியைத் தரும்.''

நான் கண்ணீர் விட்டபடியே அவர் கையை முத்தமிட்டேன். மார்யா இவானவ்னுவைப் பார்த்தேன். என்னைப் பார்க்க முடிந்ததே அவளுக்குப் பேரானந்தமாக இருந்தபடியால் அவள் மகிழ்ச்சியோடு சாந்தமாகத் தோன்றினுள்.

நடுப்பகல் நேரத்தின் போது அளவுக்கு மீறிய கூக்குரலும் சத்தமும் கேட்டன. ''என்ன நடக்கிறது? உன்னுடைய கர்னல் சீக்கிரமாகவே வந்து விட்டாரா?'' என்று என் தகப்பனுர் கேட்டார். ''இருக்காது. இரவு நேரத்தில்தான் அவர் இங்கே வந்து சேர முடியும்'' என்று நான் சொன்

னேன். சத்தம் அதிகரிக்க ஆரம்பித்தது. எச்சரிக்கை மணி ஒலித்தது. எங்கள் வீட்டைச் சுற்றி குதிரை வீரர்கள் வேக மாக வந்திறங்கும் சத்தம் கேட்டது. அந்த நேரத்தில் சுவரி லிருந்த ஒரு சிறு பிளவில் ஸவேலிச்சின் கிழட்டுத் தலை தெரிந் தது. ''அந்திரேய் பெத்ரோவிச்! அவ்தோத்யா வசீலியெவ்னு! பியோத்தர் அந்திரேயெவிச்! ஐயா! மார்யா இவானவ்னு! சீமாட்டியே! மோசமான தகவல் கிடைத்திருக்கிறது. போக் கிரிகள் கிராமத்துக்குள் வந்து விட்டார்கள். பியோத்தர் அந்திரேயெவிச்! அவர்களுக்குத் தலைமை வகிப்பது யார் என்று நினைக்கிறீர்கள்? அலெக்சேய் இவானவிச் ஷ்வாப்ரின் தான். அவனைச் சைத்தான் கொண்டு போகட்டும்!'' என்று எனது முன்னுள் ஆசிரியன் மிகவும் பரிதாபமான குரலில் சொன்னுன். அந்தக் கேவலமான பெயரைக் கேட்டதும் மார்யா இவானவ்னு என்ன செய்வதென்று தெரியாமல் கைகளைப் பிசைந்து கொண்டு அசையாமல் நின்ருள்.

''ஸவேலிச்! கவனமாகக் கேள்'' என்று நான் உள்ளே யிருந்து கத்தினேன். ''யாரையாவது ஆற்றங்கரைக்குக் குதிரை மீது அனுப்பு. நாம் மிக அபாயமான நிலையில் இருக் கிருேம் என்பதைக் கர்னலிடம் உடனே தெரிவிக்குமாறு ஹுஸார் படைக்குத் தகவல் கொடு'' என்றேன்.

''ஐயா! நமக்கு உதவி செய்ய இங்கே ஒருவரும் இல்லையே. இளைஞர்கள் எல்லோரும் கலகக்காரர்களோடு சேர்ந்து விட்டார்கள். குதிரைகளை முன்பே கைப்பற்றிக் கொண்டார்கள். அட கடவுளே! எதிரிகள் இங்கே வந்து விட்டார்கள். களஞ்சியத்துக்கு வருகிருர்களே'' என்ருன்.

கதவுக்கு வெளியே பலர் பேசிக் கொண்டிருக்கும் சத் தம் இப்பொழுது கேட்டது. என் தாயாரையும் மார்யா இவானவ்னுவையும் ஒரு மூலையில் போய் மறைந்திருக்குமாறு சைகை காட்டிவிட்டு நான் வாளை உருவிக் கொண்டு கத வுக்குப் பக்கத்தில் சுவரில் சாய்ந்து கொண்டு நின்றேன். என் தகப்பனர் கைத்துப்பாக்கிகளைக் கைகளில் பிடித்துக் கொண்டு சுடுவதற்குத் தயாராக எனக்குப் பக்கத்தில் நின்ருர். வெளியில் பூட்டைத் திறக்கும் சத்தம் கேட்டது; கதவைத் திறந்து கொண்டு அந்திரியூஷா உள்ளே வந்தான். அவன் தலை தெரிந்ததும் என்னுடைய வாளை ஓங்கித் தலையை வெட்டினேன். அவன் உடல் தரையில் விழுந்து பாதையை

அடைத்துக் கொணடது. அதே சமயத்தில் என் தகப்பஞர் வெளியேயிருந்த கும்பலே நோக்கிக் கைத்துப்பாக்கியால் சுட்டார். எங்களே முற்றுகையிட வந்த கூட்டம் அலறிக் கொண்டு பின்வாங்கியது. வாசற்படியில் காயம்பட்டுக் கிடந்தவனே நான் உள்ளே இழுத்துக் கொண்டு கதவைச் சாத்தி உள்ளே தாளிட்டேன். களஞ்சியத்துக்கு வெளியே ஆயுதங்களோடு பெரிய கூட்டம் நின்று கொண்டிருந்தது. அவர்கள் மத்தியில் ஷ்வாப்ரின் நிற்பதையும் பார்த்தேன்.

''பயப்பட வேண்டாம்'' என்று நான் பெண்களேப் பார்த்துச் சொன்னேன். ''நாம் நம்பிக்கையோடிருக்க வேண்டும். ஐயா! நீங்கள் தயவு செய்து இனிமேல் சுட வேண்டாம். ஒவ்வொரு தோட்டாவும் இனி முக்கியமாகும்'' என்றேன்.

என் தாயார் மௌனமாகப் பிரார்த்தனே செய்து கொண்டிருந்தாள்; அவளுக்குப் பக்கத்தில் மார்யா இவானவ்ஞ நின்று வரப் போகும் ஆபத்தை ஞானிகளுக்குரிய அமைதியோடு எதிர் நோக்கிக் கொண்டிருந்தாள். வெளியே வசவுகளும், பயமுறுத்தல்களும், பேய்க் கூச்சலும் கேட்டுக் கொண்டிருந்தன. யாராவது துணிந்து உள்ளே நுழைந்தால் அவர்களேக் கொன்று விடுவது என்ற உறுதியோடு நான் கதவுக்குப் பக்கத்திலேயே நின்று கொண்டிருந்தேன். திடீரென்று அந்த ராஸ்கல்கள் போட்ட சத்தம் நின்று விட்டது. ஷ்வாப்ரின் என்னேப் பெயர் சொல்லிக் கூப்பிடுகிற சத்தம் தெளிவாகக் கேட்டது.

''நான் இங்கேதானிருக்கிறேன். உனக்கு என்ன வேண்டும்?'' என்று கத்தினேன்.

''புலானின்! எங்களே எதிர்ப்பதால் ஒரு பயனும் ஏற்படாது. சரணுகதி அடைவதுதான் நல்லது. உன் வயதான பெற்ருேர்களே நினேத்துப் பார். உன் பிடிவாதம் அவர்களுக்கு ஆபத்தை ஏற்படுத்தும். நான் உங்களேச் சும்மா விட மாட்டேன்!''

''சீ! துரோகி! உள்ளே வா, பார்த்துக் கொள்கிறேன்.''

''நான் முட்டாள்தனமாக உள்ளே வந்து ஆபத்தில் சிக்க மாட்டேன். என்னுடைய ஆட்களேயும் ஆபத்தில் மாட்டி விட மாட்டேன். நான் களஞ்சியத்துக்குத் தீ வைக்கப் போகிறேன். பெலகோர்ஸ்க் கோட்டையின் டான் குவிக்ஸோத்தே! நீ அப்பொழுது என்ன செய்வாய் என்று பார்க்

கிறேன். இப்பொழுது சாப்பிடும் நேரம் வந்து விட்டது. நீ இருக்கும் இடத்திலேயே நின்று கொண்டு நிதானமாக யோசனை செய்து பார். மார்யா இவானவ்ஞு! போய் வரு கிறேன். நான் உன்னிடம் மன்னிப்புக் கேட்கத் தேவை யில்லை. உனக்குப் பொழுது சுலபமாகப் போகும். ஏனென் ருல் இருட்டில் உன்னுடைய வீரக் காதலன் பக்கத்திலேயே இருக்கிருனே'' என்று ஷ்வாப்ரின் கிண்டலாகப் பேசினுர்.

களஞ்சியத்துக்கு வெளியே நபர்களைக் காவலுக்குப் போட்டுவிட்டு ஷ்வாப்ரின் போய் விட்டார். நாங்கள் ஒரு வரும் பேசிக் கொள்ளவில்லை. ஏனென்ருல் ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமான சிந்தனையில் மூழ்கியிருந்தோம். அந்தச் சிந்தனையை அடுத்தவருக்குத் தெரிவிப்பதற்கும் கூட நாங் கள் பயந்தோம். ஷ்வாப்ரின் தனக்கு ஏற்படும் கோபத்தில் எத்தகைய தீமைகளைச் செய்வாஞே என்று நினைத்தேன். நான் என்னைப் பற்றிச் சிறிதும் கவலைப்படவில்லை. அப்புறம் —உண்மையைச் சொல்லட்டுமா? என் பெற்ருேர்களைப் பற்றியும் கவலைப்படவில்லை. மார்யா இவானவ்ஞவைப் பற்றித்தான் அதிகமாகக் கவலைப்பட்டேன். விவசாயிகளும் பண்ணை அடிமைகளும் என் தாயாரிடம் அதிகமாக மரியாதை காட்டுவார்கள் என்று எனக்குத் தெரியும். என் தகப்பஞர் கண்டிப்பானவர் என்ற போதிலும் விவசாயிகள் அவரிடம் அன்பாக இருப்பார்கள். ஏனென்ருல் தம்முடைய அதிகாரத் துக்கு உட்பட்டவர்களின் உண்மையான தேவைகள் என்ன என்பதைத் தெரிந்து கொண்டு உதவி செய்வார்; நியாய மாக நடந்து கொள்வார். அவர்களுடைய கலகம் ஒரு கற் பனையே. அது அவர்களுக்கு நெடுங்காலமாக ஏற்பட்ட கோபத்தின் பிரதிபலிப்பு அல்ல; ஒரு கணப் பொழுதிலேற் பட்ட வெறியின் விளைவு. எனவே அவர்கள் வயதானவர் களிடம் நிச்சயமாக இரக்கம் காட்டுவார்கள் என்று எதிர் பார்க்கலாம். ஆஞல் மார்யா இவானவ்ஞவின் கதி என்ன? எந்த தார்மிக நெறிகளையும் பின்பற்ருத ஒரு வெறியனிடம் அவள் சிக்கப் போகிருளே! அந்தப் பயங்கரமான நிலைமை யைப் பற்றி நான் சிந்திக்கத் துணியவில்லை. அந்தக் குரூர மான எதிரியிடம் அவள் இரண்டாவது தடவையாகச் சிக்கி விடுவதைக் காட்டிலும் நானே அவளைக் கொன்று விடுவது நல்லது (கடவுள் என்னை மன்னிப்பாராக).

மேலும் ஒரு மணி நேரம் கழிந்தது. கிராமத்திலிருந்து கலகக்காரர்கள் குடித்து விட்டுப் பாட்டுப் பாடிக் கொண்டிருக்கும் சத்தம் கேட்டது. எங்களைக் காவல் காத்துக் கொண்டிருந்தவர்களுக்குத் தாங்களும் கிராமத்துக்குப் போய் கேளிக்கைகளில் ஈடுபட வேண்டுமென்று ஆசை. அதற்கு நாங்கள் தடையாக இருப்பதாக எங்கள் மீது கோபம். எனவே எங்களைக் கேவலமாகப் பேசியதோடு எங்களை எப்படிச் சித்திரவதை செய்து கொலை செய்வோம் என்று சொல்லி எங்களைப் பயமுறுத்திக் கொண்டிருந்தார்கள். ஷ்வாப்ரின் தன்னுடைய பயமுறுத்தலை எப்பொழுது நிறைவேற்றப் போகிறார் என்று காத்துக் கொண்டிருந்தேன். திடீரென்று அங்கே ஒரு பரபரப்பு ஏற்படுவதை உணர்ந்தோம். மறுபடியும் ஷ்வாப்ரின் பேசுவதைக் கேட்டோம்:

''என்ன? நன்றாகச் சிந்தித்து விட்டீர்களா? நீங்களாகவே என்னிடம் சரணடைந்து விடுவது நல்லது.''

இதற்கு நாங்கள் பதில் சொல்லவில்லை. சிறிது நேரத்துக்குப் பிறகு வைக்கோல் கட்டுகளைக் கொண்டுவருமாறு ஷ்வாப்ரின் உத்தரவு கொடுத்தார். சில நிமிடங்களில் களஞ்சியத்தைச் சுற்றிலும் வைக்கொல் கட்டுகளில் தீ வைக்கப்பட்டு அவை எரிந்து கொண்டிருந்தன; அவற்றின் ஒளியில் இருண்ட களஞ்சியம் பிரகாசித்தது. கதவின் கீழேயுள்ள இடுக்கு வழியாகப் புகை உள்ளே வந்தது. அப்போது மார்யா இவானவ்னா என் அருகே வந்து என் கையைப் பிடித்துக் கொண்டு தணிந்த குரலில் என்னிடம் பேசினாள்.

''பியோத்தர் அந்திரேயெவிச்! நீங்களும் உங்கள் பெற்றோர்களும் எனக்காகச் சாக வேண்டுமா? நான் வெளியே போய் ஷ்வாப்ரினைச் சந்திக்கிறேன். என் சொல்லை அவன் கேட்பான்'' என்றாள்.

''ஒருக்காலும் முடியாது!'' என்று நான் காட்டமாகச் சொன்னேன். ''நீ வெளியே போனால் உன்னை என்ன செய்வார்கள் தெரியுமா?''

''அவர்கள் எனக்கு எந்தத் தீங்கு செய்தாலும் அதற்குப் பிறகு நான் உயிரோடிருக்கப் போவதில்லையே'' என்று அவள் அமைதியாகப் பதிலளித்தாள். ''ஆனால் என்னைக் காத்த

வரையும், ஒரு ஏழை அனாதைக்குப் பெருந்தன்மையோடு புகலிடம் கொடுத்த குடும்பத்தையும் நான் காப்பாற்ற வழி உண்டாகும். அந்திரேய் பெத்ரோவிச்! விடை கொடுங்கள். அவ்தோத்யா வசீலியெவ்னு! விடை கொடுங்கள். உங்களிருவரையும் என்னைக் காப்பாற்றியவர்களாக மட்டும் நான் நினைக்கவில்லை. நீங்கள் அதற்கும் மேலானவர்கள். என்னை ஆசீர்வதியுங்கள். பியோத்தர் அந்திரேயெவிச்! நீங்களும் விடை கொடுங்கள். உங்களை....'' என்று சொல்லித் தன் முகத்தைக் கைகளுக்குள் புதைத்துக் கொண்டு அழுதாள். எனக்கு உணர்ச்சி மேலிட்டது. என் தாயாரும் கண்ணீர் விட்டாள்.

''மார்யா இவானவ்னு! போதும். அந்தப் போக்கிரியிடம் நீ தனியாகப் போவதற்கு நாங்கள் விடுவோமா? இனிமேல் நீ எதுவும் பேசக் கூடாது. நீ இங்குதான் இருக்க வேண்டும். சாவதென்ருல் எல்லோரும் ஒன்ருகவே சாவோம்'' என்று என் தகப்பனுர் உறுதியாகச் சொன்னுர். ''உஸ்... அவர்கள் என்ன சொல்கிருர்கள் என்று கவனியுங்கள்.''

''நீங்கள் சரணடையப் போகிறீர்களா இல்லையா?'' என்று ஷ்வாப்ரின் கேட்டார். ''கவனியுங்கள். இன்னும் ஐந்து நிமிடத்தில் உங்களை உயிரோடு நெருப்பிலே பொசுக்கி விடுவோம்.''

''போக்கிரிப் பயலே! நாங்கள் சரணடைய மாட்டோம்'' என்று என் தகப்பனுர் உறுதியாகச் சொன்னுர்.

அவருடைய சுருக்கங்கள் நிறைந்த முகத்தில் புது வேகம் பீறிட்டது; நரைத்த இமைகளுக்குக் கீழே கண்கள் நெருப்புத் துண்டங்களைப் போல ஜொலித்தன. என்னைப் பார்த்து ''இதுதான் நல்ல சந்தர்ப்பம்!'' என்ருர்.

அவர் தாழ்ப்பாளை நீக்கினுர். நெருப்பு உள்ளே தாவியது; மரச் சட்டங்களையும் அவற்றுக்குள் சொருகப்பட்டிருந்த காய்ந்த பாசியையும் பற்றிக் கொண்டது. என் தகப்பனுர் கைத்துப்பாக்கி விசையைத் தட்டினுர். உடனே எங்களைப் பார்த்து ''நீங்கள் எல்லோரும் எனக்குப் பின்னுல் வாருங்கள்!'' என்று சொல்லிக் கொண்டு எரிந்து கொண்டிருந்த மர வாசலைத் தாவிக் குதித்தார். நான் என் தாயாருடைய கையையும் மார்யா இவானவ்னுவின் கையையும் பிடித்துக் கொண்டு அவர்களை இழுத்துக் கொண்டு

வெளியே ஓடி வந்தேன். என் தகப்பனுர் தம்முடைய நடுங் கும் கரத்திஞல் சுட்ட பொழுது காயமடைந்த ஷ்வாப்ரின் வாசலில் விழுந்து கிடந்தார். எங்கள் தாக்குதலே எதிர் பார்க்காத போக்கிரிக் கும்பல் முதலில் பயந்து போய் ஓடி விட்டது. ஆனுல் மறுபடியும் தைரியமடைந்து எங்களேச் சூழ்ந்து கொண்டு தாக்குவதற்கு ஆரம்பித்தது. அந்த நேரத்தில் குறிபார்த்து வீசப்பட்ட பெரிய கல் என் மார்பில் அடித்ததும் நான் கீழே விழுந்து விட்டேன். சில நிமிடங் கள் மயக்கமாகக் கிடந்தேன். சுய உணர்வு ஏற்பட்ட பொழுது ஷ்வாப்ரின் இரத்தக் கறை படிந்த புல்தரையில் எழுந்து உட்கார்ந்திருப்பதையும் எங்கள் குடும்பத்தினர் அவருக்கு முன்ஞல் நிற்பதையும் பார்த்தேன். என்னே இரண்டு பக்கத்திலும் உதவி செய்து தூக்கி நிறுத்திஞர் கள். கஸாக்குகள், பஷ்கீரியர்களடங்கிய விவசாயிகள் கும்பல் எங்களே நெருங்கி வந்து கொண்டிருந்தது. ஷ்வாப்ரினுடைய முகம் வெளுத்துப் போய் விட்டது. ஒரு கையால் குண்டடிபட்ட பக்கத்தைப்பிடித்துக் கொண்டு உட்கார்ந் திருந்தார். அவர் முகத்தில் வேதனேயும் வெறியும் ஒன்று கலந்து வெளிப்பட்டது. அவர் மிகவும் சிரமப்பட்டுத் தலேயை உயர்த்தி என்னேப் பார்த்தார்.

''அவனேத் தூக்கிலே போடுங்கள்... அவளேத் தவிர எல்லோரையும் தூக்கிலே போடுங்கள்....'' என்று பலவீன மான, தெளிவில்லாத குரலில் பேசிஞர்.

இப்பொழுது போக்கிரிகள் கூட்டம் எங்களுக்கு மிக அருகில் வந்து விட்டது. எங்களே இழுத்துக் கொண்டு வெளிக் கதவை நோக்கி பலமாகச் சத்தம் போட்டுக் கொண்டு வந்தனர். ஆனுல் அவர்கள் திடீரென்று எங்களே அப்படியே விட்டுவிட்டுத் தலே தெறிக்க ஓடிஞர்கள். அங்கே கதவுக்கு வெளியே கர்னல் கிரின்யோவ் தலேமையில் ஒரு படைப் பிரிவு உருவிய வாட்களோடு எங்களேக் காப் பாற்ற வந்து கொண்டிருந்தது.

---

கலகக்காரர்கள் எல்லாத் திசைகளிலும் சிதறி ஓடி விட் டார்கள். ஹுஸார்கள் அவர்களே விரட்டிச் சென்று வெட்டி

வீழ்த்திஞர்கள். ஏராளமானவர்களைக் கைதிகளாகப் பிடித் தார்கள். கிரின்யோவ் குதிரையின் மீதிருந்து கீழே குதித்து என் பெற்ருேர்களைக் குனிந்து வணங்கிஞர். பிறகு கையைப் பிடித்துப் பரிவோடு அழுத்திஞர். ''நல்ல வேளை. சரியான சமயத்தில் வந்து சேர்ந்து விட்டேன். இது உன் மணப் பெண்ணு?'' என்று கேட்டார். மார்யா இவானவ்ஞவின் முகம் வெட்கத்தால் சிவந்தது. என் தகப்பஞர் வெளிப் பார்வைக்கு அமைதியாகத் தோன்றிஞலும் உள்ளூற மிக வும் அதிகமான உணர்ச்சி வசப்பட்டிருந்தார். அவர் கிரின்யோவின் அருகில் சென்று தம்முடைய நன்றியைத் தெரிவித்தார். என் தாயார் கிரின்யோவை எங்களைக் காப் பாற்ற வந்த தேவதூதன் என்று பாராட்டிக் கூறிவிட்டு அவரைக் கட்டியணைத்துக் கொண்டாள். ''எங்கள் வீட் டுக்கு வந்துவிட்டுத் தான் போக வேண்டும்'' என்று கூறிக் கொண்டு என் தகப்பஞர் எல்லோரையும் வீட்டுக்குக் கூட்டிக் கொண்டு போஞர்.

நாங்கள் ஷ்வாப்ரினைக் கடந்த பொழுது, கிரின்யோவ் அந்த இடத்தில் நின்ருர்.

''அது யார்?'' என்று காயமடைந்த நபரைப் பார்த்த படியே கேட்டார்.

''அவன்தான் கலகக்காரர்களின் தலைவன்; அந்தக் கும் பலை ஆட்டிப் படைத்தவன். இந்த இளம் போக்கிரியைத் தண்டித்து என் மகன் சிந்திய ரத்தத்துக்குப் பழி வாங்கு கிற பெருமையைக் கடவுள் எனக்குக் கொடுத்தார்'' என்று என் தகப்பஞர் ஒரு பழைய படை வீரனுக்குரிய மிடுக் கோடு சொன்ஞர்.

''அவன்தான் ஷ்வாப்ரின்'' என்று நான் கிரின்யோ விடம் தெரிவித்தேன்.

''ஷ்வாப்ரிஞ? அவனைப் பார்க்க முடிந்தது பற்றி மிக வும் மகிழ்ச்சி அடைகிறேன் ஹுஸார்களே! அவனைத் தூக் குங்கள்! நம்முடைய படையின் மருத்துவரிடம் அவன் காயத்துக்கு நல்ல மருந்து போட்டு கண்ணின் கருமணி யைப் போலக் காப்பாற்ற வேண்டும் என்று சொல்லுங் கள். கஸான் நகரத்தில் இருக்கிற விசாரணைக் குழுவுக்கு முன்பு ஷ்வாப்ரினை எப்படியாவது கொண்டுபோய் நிறுத்தி விட வேண்டும். அவன் முக்கியமான குற்றவாளிகளில் ஒருவன்.

என்பதால் அவனுடைய சாட்சியம் மிகவும் பய னுள்ளதாக இருக்கும்'' என்றார்.

ஷ்வாப்ரின் தன்னுடைய கண்களை மிகவும் சிரமப்பட்டுத் திறந்து பார்த்தார். அவர் உடம்பு முழுவதும் வலி ஏற் பட்டிருப்பது முகத்தில் நன்றாகத் தெரிந்தது. ஹுஸார்கள் அவரை ஒரு மேலங்கியைப் போர்த்தித் தூக்கிக் கொண்டு போனார்கள்.

நாங்கள் வீட்டுக்குள் நுழைந்தோம். நான் மிகவும் உணர்ச்சி வசப்பட்டவனாக நாலா பக்கங்களிலும் பார்த்து என்னுடைய குழந்தைப் பருவ நாட்களை நினைவு கூர்ந்தேன். வீட்டில் சிறிதுகூட மாற்றமில்லை. எல்லாப் பொருள்களும் பழைய காலத்தில் இருந்த மாதிரி அப்படியே இருந்தன. கலகக்காரர்கள் வீட்டிலிருந்த பொருள்களைக் கொள்ளை யடிக்க ஷ்வாப்ரின் அனுமதிக்கவில்லை என்பது தெரிந்தது. அவர் எவ்வளவு மோசமாகத் தாழ்ந்த போதிலும் கொள்ளை யடிக்கும் இழி *செயலை அனுமதிக்க விரும்பவில்லை போலும். எங்கள் வேலைக்காரர்கள் ஹாலுக்குள் வந்து நின் றனர். அவர்கள் கலகத்தில் சம்பந்தப்படவில்லை. எனவே நாங்கள் எல்லோரும் உயிர் தப்பியதைப் பற்றி அவர்கள் மனப்பூர்வமாக மகிழ்ச்சி அடைந்தனர். ஸவேலிச் வெற்றிப் பெருமிதத்தோடு நின்றான். கலகக்காரர்கள் களஞ்சியத்தை முற்றுகையிட்ட பொழுது ஏற்பட்ட பரபரப்பின் போது அவன் குதிரை லாயத்துக்கு ஓடிப் போய் அங்கே நின்று கொண்டிருந்த ஷ்வாப்ரினுடைய குதிரையைச் சத்தமில் லாமல் வெளியே கொண்டு வந்தான். பிறகு அங்கேயிருந்த குழப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு யாருக்கும் தெரி யாமல் ஆற்றங்கரைக்கு வேகமாகப் போய்ச் சேர்ந்தான். ஹுஸார் படைப் பிரிவு அப்பொழுதுதான் வோல்கா நதி யைக் கடந்து வந்து ஆற்றங்கரையில் ஓய்வெடுத்துக் கொண் டிருந்தது. எங்களுக்கு ஏற்பட்டிருந்த ஆபத்தான நிலைமை யைப் பற்றி ஸவேலிச்சின் மூலமாகத் தெரிந்து கொண்ட கர்னல் கிரின்யோவ் உடனே படையினரைப் புறப்படச் சொல்லி உத்தரவிட்டார். கடவுள் தயவால் அவர்களும் சரியான நேரத்துக்கு வந்து சேர்ந்தார்கள்.

கிரின்யோவின் உத்தரவுப்படி அந்திரியூஷாவின் வெட் டப்பட்ட தலை மதுக் கடைக்குப் பக்கத்தில் ஒரு கம்பத்

தின் மீது சில மணி நேரத்துக்குக் குத்தி வைக்கப்பட்டிருந்தது.

கலகக்காரர்களை விரட்டிக் கொண்டு சென்ற ஹுஸார்கள் அவர்களில் சிலரைக் கைதிகளாகப் பிடித்துக் கொண்டு திரும்பி வந்தார்கள். நாங்கள் அடைபட்டிருந்த அதே களஞ்சியத்தில் சிறைப்பிடிக்கப்பட்ட கலகக்காரர்கள் அடைத்து வைக்கப்பட்டார்கள்.

நாங்கள் அவரவருடைய அறைகளுக்குச் சென்ரேம். வயதானவர்களுக்கு ஓய்வு அவசியமாக இருந்தது. முந்திய இரவில் நான் தூங்கவில்லை என்பதால் என் படுக்கையில் விழுந்ததும் உடனே நன்ருகத் தூங்கினேன். கிரின்யோவ் படைகளுக்கு உத்தரவு கொடுக்க வெளியே சென்ருர்.

மாலை வந்ததும் நாங்கள் வரவேற்பு அறையில் கூடினேம். எல்லோரும் சமோவார் பாத்திரத்தைச் சுற்றி உட்கார்ந்து கொண்டு எவ்வளவு மோசமான ஆபத்திலிருந்து மயிரிழையில் தப்பி விட்டோம் என்று உற்சாகமாகப் பேசிப் பொழுது போக்கினேம். மார்யா இவானவ்ன கோப்பைகளில் தேநீரை ஊற்றினுள். நான் அவளுக்குப் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டேன். என் முழு கவனமும் அவளிடம் தான் இருந்தது. என்னுடைய பெற்ருேர்கள் எங்களுடைய பரஸ்பர அன்பை ஊக்குவிப்பது மாதிரி சலுகை காட்டினுர்கள். அந்த மாலை நேரம் இன்னும் என் நினைவில் அப்படியே இருக்கிறது. அன்று நான் ஆனந்தமாக, மிகவும் ஆனந்தமாக இருந்தேன். நம்மைப் போன்ற மனிதர்களின் வாழ்க்கையில் அப்படிப்பட்ட நாட்கள் மிகவும் அபூர்வமானவை தானே.

மறு நாள் என் தகப்பனுரிடம் மன்னிப்புக் கேட்பதற்காக விவசாயிகள் வீட்டுக்கு முன்னுல் கூடியிருக்கிருர்கள் என்று தெரிவிக்கப்பட்டது. அவர்களோடு பேசுவதற்காக என் தகப்பனுர் வீட்டின் வாயிற்பகுதிக்குப் போனுர். அவரைப் பார்த்ததும் விவசாயிகள் முழந்தாளிட்டுக் குனிந்து வணங்கினுர்கள்.

''அட முட்டாள்களே! எதற்காகக் கலகம் செய்தீர்கள்?'' என்று அவர் அதட்டினுர்.

''எஜமான்! தப்புச் செய்து விட்டோம். எங்களை மன்னி

யுங்கள்'' என்று விவசாயிகள் அனைவரும் ஒரே குரலில் சொன்னார்கள்.

''எல்லாத் தப்புத் தண்டாவையும் செய்து விட்டு ஏண்டா அழுகிறீர்கள். என் மகன் பியோத்தர் அந்திரே யெவிச்சைக் கடவுள் என்னிடம் சேர்த்து விட்டார். அந்த சந்தோஷத்துக்காக உங்களை மன்னிக்கிறேன். நீங்கள் தப்புச் செய்து விட்டீர்கள்; அதிகமாகவே தப்புச் செய்து விட்டீர்கள். கடவுள் நல்ல பருவநிலையைக் கொடுத்திருக்கிறார். வைக்கோலைக் காயப்போட வேண்டும். மூன்று நாட்களாக என்ன செய்தீர்கள், முட்டாள்களா? பெரியவரே! எல்லோரையும் புல்லை வெட்ட அனுப்புங்கள். டேய் சிகப்புத் தலை ராஸ்கல்! புனித இலியா தினத்துக்குள் புல்லை வெட்டிக் கட்டிவிட வேண்டும். போங்கடா எல்லோரும்'' என்று விரட்டினார்.

அங்கே கூடியிருந்த விவசாயிகள் தங்கள் எஜமானரைக் குனிந்து வணங்கிவிட்டு ஒன்றுமே நடக்கவில்லை என்பது போல அவருடைய வயல்களில் வேலை செய்வதற்குப் புறப் பட்டார்கள்.

ஷ்வாப்ரினுக்கு ஏற்பட்டிருந்த காயம் ஆபத்தானதல்ல. எனவே அவரைத் தகுந்த பாதுகாப்போடு கஸான் நகரத் துக்கு அனுப்பி வைத்தார்கள். அவரைத் தூக்கி வண்டியில் உட்கார்த்தி வைப்பதை நான் சன்னல் வழியாகப் பார்த் தேன். அப்பொழுது எங்களிருவருடைய கண்களும் சந்தித் தன. அவர் தலையைக் குனிந்து கொண்டார். நான் சட் டென்று சன்னலிலிருந்து தலையை இழுத்துக் கொண்டேன். என்னுடைய எதிரியின் துரதிருஷ்டத்தையும் தோல்வியை யும் கண்டு நான் மகிழ்ச்சியடைவதாகக் காட்டிக் கொள்ள விரும்பவில்லை.

கிரின்யோவ் வேறு சில இடங்களுக்கும் போவது அவ சியமாக இருந்தது. என் குடும்பத்தினரோடு இன்னும் சில நாட்கள் உல்லாசமாகத் தங்கியிருக்க வேண்டுமென்று நான் விரும்பிய போதிலும், அவரோடு புறப்படுவதென்று முடிவு செய்தேன். படைப் பிரிவு புறப்படுவதற்கு முந்திய நாளன்று நான் என் பெற்றோர்களைச் சந்தித்த பொழுது அந்தக் காலத் திலிருந்த முறைப்படி அவர்களுக்கு முன்பு நிலத்தைக் குனிந்து வணங்கி, நான் மார்யா இவானவ்னாவைத் திரு

மணம் செய்து கொள்வதற்கு அனுமதி கொடுத்து ஆசீர் வதிக்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டேன். என் பெற் றோர்கள் என்னைத் தூக்கியணைத்துக் கொண்டு ஆனந்தக் கண்ணீர் வடித்தார்கள். என் திருமணத்துக்குத் தங்களுடைய இசைவைத் தெரிவித்தார்கள். பிறகு உடல் வெளுத்துப் போய் நடுங்கிக் கொண்டிருந்த மார்யா இவானவ்னவை என் பெற்றோர்களிடம் கூட்டிக் கொண்டு வந்தேன். அவர்கள் எங்களை ஆசீர்வதித்தார்கள்.... அந்த நேரத்தில் எனக்கு ஏற்பட்ட உணர்ச்சிகளை நான் வருணிக்கப் போவதில்லை. என்னுடைய நிலையில் இருந்திருப்பவர்கள் நான் வருணிக் காமலே என்னுடைய நிலையைப் புரிந்து கொள்வார்கள். என்னுடைய நிலையில் இல்லாதவர்களைப் பற்றி நான் மிக வும் அனுதாபப்படுகிறேன். அந்த நபர்களுக்கு என்னுடைய ஆலோசனை இதுவே: காலம் போய் விடுவதற்கு முன்பு காதல் செய்யுங்கள்; பெற்றோர்களின் ஆசிகளைப் பெறுங் கள். அந்த இன்பமே தனி.

எங்கள் படைப் பிரிவு மறு நாள் காலையில் புறப்படத் தயாராக இருந்தது. கர்னல் கிரின்யோவ் என் குடும்பத் தினரிடமிருந்து விடை பெற்றுக் கொண்டார். இராணுவ நட வடிக்கைகள் சீக்கிரமாக முடிந்துவிடும் என்று நம்பினோம். சுமார் ஒரு மாதத்தில் என் திருமணம் முடிந்துவிடும் என்று நினைத்தேன். மார்யா இவானவ்னா எல்லோருக்கு முன்பாக வும் என்னை முத்தமிட்டு விடை கொடுத்தாள். நான் குதிரை மீது ஏறி உட்கார்ந்தேன்; வழக்கம் போல ஸவேலிச் என்னைப் பின்தொடர்ந்தான். எங்கள் படைப் பிரிவு கிராமத்தை விட்டுப் புறப்பட்டது.

என்னுடைய வாழ்க்கையில் இரண்டாவது தடவையாக என்னுடைய வீட்டை விட்டுப் பிரிகின்றேன். வெகு நேரம் வரை என் வீட்டைப் பார்த்துக் கொண்டிருந்தேன். என் மன தில் கவலைகளும் தீமையின் முன் அறிகுறிகளும் ஊடாடிக் கொண்டிருந்தன. என்னுடைய துன்பங்கள் இன்னும் முடிந்துவிடவில்லை என்று ஏதோ ஒரு முணுமுணுப்பு ஒலித்துக் கொண்டேயிருந்தது. என்னுடைய வாழ்க்கையில் இன்னொரு புயலைச் சமாளிக்க வேண்டியிருக்குமோ என்று மனதில் நினைத்துக் கொண்டேன்.

எங்களுடைய படைப் பிரிவின் முன்னேற்றத்தையும்

புகச்சோவ் கலகம் எப்படி முடிவுக்கு வந்தது என்பதையும் விரிவாக எழுதுவது அவசியமல்ல. புகச்சோவ் கும்பல் சூறையாடிவிட்டுப் போன கிராமங்களுக்குள் நாங்கள் நுழைந்தோம். அந்தப் பரிதாபத்துக்குரிய விவசாயிகளிடம் கலகக்காரர்கள் விட்டுச் சென்ற ஓரிரு பொருள்களையும் நாங்கள் விருப்பமில்லாமலேயே பிடுங்கிக் கொண்டோம்.

பாவம்! யாருடைய அதிகாரத்துக்குப் பணிவதென்று மக்களுக்குத் தெரியவில்லை. அரசாங்க நிர்வாகம் என்பது பெயரளவுக்குக் கூட எங்கேயும் காணப்படவில்லை. நிலச் சுவான்தார்கள் காடுகளில் ஒளிந்து கொண்டார்கள். கொள்ளைக்காரர்கள் கும்பல் கும்பலாக கிராமப் பகுதி களில் சுற்றிக் கொண்டிருந்தார்கள். அப்போது ஆஸ்ட் ரகானை நோக்கி ஓடிப் போன புகச்சோவை விரட்டிப் பிடிப் பதற்காக அனுப்பப்பட்ட படைகளின் தளபதிகள் நல்லவர் கள், கெட்டவர்கள் எல்லோருக்கும் ஒரே மாதிரியாக தண் டனை கொடுத்தார்கள்... கலகத் தீ பற்றியெரிந்த பிரதேசம் முழுவதும் மிகவும் பயங்கரமான நிலைமைகள் ஏற்பட்டிருந் தன. ஈவிரக்கமற்ற முட்டாள் தனத்தோடு நடத்தப்படும் ருஷ்ய நாட்டுக் கலகங்களிலிருந்து கடவுள் நம்மைக் காப்பாற்றட்டும். நடக்க முடியாத புரட்சிகளைப் பற்றி நம் நாட்டில் பேசிக் கொண்டிருப்பவர்கள், நாட்டு மக்களைப் பற்றி ஒன்றுமே தெரியாத இளைஞர்களாக இருக்க வேண் டும்; அல்லது அவர்கள் மற்றவர்களுடைய உயிர்களைப் பற்றி அற்பமாக நினைப்பதோடு தங்களுடைய உயிர்களைப் பற்றி யும் கவலைப்படாத கல் மனங்கொண்டவர்களாக இருக்க வேண்டும்.

இவான் இவானவிச் மிஹெல்சோன் துரத்த புகச்சோவ் ஓடிப்போய் விட்டான். அவன் மிகவும் பரிதாபமாகத் தோல்வியடைந்தது பற்றி சீக்கிரமாகவே தகவல் வந்தது. கடைசியில் பாசாங்குக்காரன் பிடிபட்டு விட்டான் என்ற தகவலை கிரின்யோவுக்கு எழுதிய ஜெனரல், எங்கள் படைப் பிரிவு அங்கேயே இருக்கட்டும் என்றும் உத்தரவு அனுப் பினர். இனிமேல் நான் வீட்டுக்குப் போகலாம் என்று நினைத் தேன். என் மனதில் ஆனந்தம் ஊற்றெடுத்துப் பாய்ந்தது. ஆனால் தீமை வரப் போகிறதென்ற அறிகுறிகள் தோன்றி என் மகிழ்ச்சியில் கலக்கம் ஏற்பட்டது.

1 இது பூஷ்கின் எழுதிய கடைசிப் புத்தார்வக் (romantic) கவிதை; 1824ம் வருடத்தில் அவர் இக்கவிதையை எழுதினார்.

இக்கவிதையின் கதாநாயகனைப் புத்தார்வம் கொண்டவனாகவும் நாகரிக சமுதாயத்திலிருந்து தப்பியோடியவனாகவும் பூஷ்கின் சித்திரிக்கிறார். அந்தச் சமுதாயத்தில் மனிதர்கள் உடலுழைப்பில் மட்டுமல்லாமல் தார்மிக ரீதியிலும் பண்ணையடிமைகளாக இருப்பதால் அவன் அதைவிட்டு ஓடிச் சுதந்திரத்தைத் தேடுகிறான். சட்டங்கள் எதுவும் இல்லாத, மனிதர்கள் ஒருவருக்கொருவர் எந்தக் கடமைகளும் உரிமைகளும் கொண்டிராத சமுதாயத்தைத் தேடுகிறான். தனக்கு சுதந்திரம் கோரிய அலேக்கோ அந்த சமுதாயத்தில் மற்றவர்களுக்கு—அவர்களுடைய சுதந்திரம் தன்னுடைய உரிமைகளில் அல்லது நலன்களில் குறுக்கிடுமானால்—அந்த சுதந்திரத்தைக் கொடுக்க மறுக்கிறான்.

சுதந்திரத்தை விரும்புகின்ற புத்தார்வக் கதாநாயகன் என்ற மரபுவழியான கருத்து, தனிமுதலான சுதந்திரத்தைப் பற்றிய புத்தார்வக் கற்பனை ஆகிய இரண்டையுமே பூஷ்கின் இந்தக் கவிதையில் அவை வகித்த உயர்ந்த நிலையிலிருந்து அகற்றினார்.

சமூகத்துக்கும் தனிநபரின் ஆளுமைக்கும் இடையே உள்ள முரண்பாடுகளை வெளிப்படுத்தும் இப்படிப்பட்ட பிரச்சினைகள் டிசம்பரிஸ்டுகளின்[3] புரட்சிக்கு முந்திய வருடங்களில் குறிப்பிடத்தக்க முக்கியத்துவம் பெற்றிருந்தன. எனவே டிசம்பரிஸ்டுகள் இந்தக் கவிதையை அதிகமாகப் பாராட்டினார்கள். ''உங்களுடைய 'ஜிப்சிகள்' கவிதையை எல்லோரும் வாயாரப் புகழ்கிறார்கள்'' என்று டிசம்பரிஸ்டுகளில் ஒருவரான கவிஞர் ரிலேயெவ் 1825 மார்ச் 25ந் தேதியன்று பூஷ்கினுக்கு எழுதினார். —9

[2] பெஸராபியா—சோவியத் யூனியனின் தென் பகுதியில் உள்ள பிரதேசம்; இன்றுள்ள மோல்தேவிய சோவியத் சோஷலிஸ்ட் குடியரசு.—9

[3] டிசம்பரிஸ்டுகள்—ஜாராட்சியின் சர்வாதிகாரத்தையும் பண்ணையடிமை முறையையும் ஒழிப்பதற்காக 1825 டிசம்பர் 14ந் தேதியன்று புரட்சி செய்தவர்கள். டிசம்பர் மாதத்தில் புரட்சி செய்த காரணத்தால் டிசம் பரிஸ்டுகள் என்று அழைக்கப்பட்டனர். இதில் இராணுவ அதிகாரிகளோடு பல எழுத்தாளர்களும் கவிஞர்களும் இலக்கிய விமரிசகர்களும் பங்கெடுத்துக் கொண்டார் கள்.—461

[4] ரோமானியக் கவிஞரான ஓவிடை சக்கரவர்த்தி அகஸ் டஸ் கருங்கடலுக்கு நாடு கடத்தினார். அங்கே அவ ருடைய வாழ்க்கையைப் பற்றிய கற்பனைக் கதைகள் பெஸராபியாவில் அதிகமாகச் சொல்லப்பட்டன.

ருஷ்யாவுக்கும் துருக்கிக்குமிடையே போர்கள் நடை பெறும் களமாக பெஸராபியா நெடுங்காலம் வரை இருந் தது. 1812ம் வருடத்தில் ருஷ்யாவுக்கும் துருக்கிக்கு மிடையே வகுக்கப்பட்ட எல்லைக்கோடு அதன் வழியாகச் சென்றது.—15

[5] பூஷ்கின் இக்கவிதையை 1833ம் வருடத்தில் எழுதினார். அவருடைய கவிதைகளிலேயே அதிகமான ஆழத்தையும் துணிச்சலையும் மிக முழுமையான கலைநயத்தையும் இக் கவிதையில் காணலாம். இதில் இரண்டு சக்திகள் உருவக அடிப்படையில் மாறுபடுத்திக் காட்டப்படுகின்றன. ஒரு பக்கத்தில் பலம் பொருந்திய அரசு; மாபெரும் பீட்டர் அதன் உருவகம். மறு பக்கத்தில் சொந்த ஆசைகளையும் உணர்ச்சிகளையும் கொண்ட தனி மனிதன். அவனுக்குக் குறியீடாக இருப்பது தான் உயிர் பெற்ற வெண்கலக் குதிரை வீரன் சிலை.

மாபெரும் பீட்டர் செய்த மகத்தான சீர்திருத்தங் களையும் அவர் நிர்மாணித்த அழகிய நகரத்தையும் பூஷ் கின் எத்தகைய தயக்கமும் இல்லாமல் பாராட்டுகிறார். ஆனால் குற்றம் குறைகளில்லாத யெவ்கேனி என்ற சாதாரண மனிதனின் மரணத்துக்கு இச் சீர்திருத்தங்கள் காரணமாகின்றன.

பூஷ்கின் மரணமடைந்த பிறகு வஸீலி ஜுக்கோவ்ஸ்கி என்ற கவிஞரால் திருத்தம் செய்யப்பட்டு இக்கவிதை வெளியிடப்பட்டது.

இக்கவிதையில் வர்ணிக்கப்படும் வெள்ளம் பீட்டர்ஸ் பர்க்கில் 1824 நவாம்பர் 7ந் தேதியன்று ஏற்பட்டது.

அந்த வெள்ளத்தினுல் ஏற்பட்ட சேதம் மிக அதிகம். அந்த சமயத்தில் பூஷ்கின் மிஹாய்லவ்ஸ்கோயே கிராமத்தில் வசித்துவந்தார். வெள்ளச் சேதத்தைப் பற்றிக் கேட்டதும் அவர் மனம் வேதனையால் துடித்தது. சேதத்தைப் பற்றிய முழு விவரங்களையும் கவலையோடு கேட்டறிந்தார். 1824 டிசம்பர் 4ந் தேதியன்று தன்னுடைய சகோதரருக்கு எழுதிய கடிதத்தில் ''எப்பொழுதும் நான் வெள்ளத்தைப் பற்றியே நினைத்துக் கொண்டிருக்கிறேன்'' என்று எழுதினுர். வெள்ளச் சேதத்தால் பாதிக்கப் பட்டவர்களுக்கு அரசாங்கம் கொடுத்த உதவி மிகக் குறைவானதென்று அவர் கருதினுர். ''இந்தப் பரிதாபத்துக்குரியவர்களில் யாருக்காவது உதவி செய்ய வேண்டுமென்று உனக்குத் தோன்றினுல் 'ஒனேகின்' பணத்தை (அதாவது 'யெவ்கேனி ஒனேகின்' என்ற கவிதையின் முதல் அத்தியாயத்துக்காக பூஷ்கினுக்குக் கிடைத்த பணத்தை.—பதிப்பாசிரியர்) நீ அதற்குப் பயன்படுத்தலாம். ஆனுல் ஒன்று முக்கியம். என்னுடைய உதவியைப் பற்றிப் பேச்சிலோ எழுத்திலோ பீற்றிக் கொள்ளக் கூடாது.''—31

6 ருஷ்யாவின் மாபெரும் கவிஞரான பூஷ்கினுடைய இலக்கியப் பணிகளில் ஒரு புதிய வளர்ச்சிக் கட்டத்தை அவருடைய உரைநடை எழுத்துக்கள் குறிக்கின்றன.

1827ம் வருடத்தில் ஒரு வரலாற்று நாவலை அவர் எழுதத் தொடங்கிய பொழுது அது ஆரம்பமாயிற்று. ''சக்கரவர்த்தியின் கறுப்பு ஊழியன்'' என்று பெயரிடப் பட்ட அந்த நாவல் பூர்த்தி செய்யப்படவில்லை.

இதனையடுத்த மூன்று வருடங்களில் 1812ம் வருடத்தில் நடைபெற்ற தேசபக்தப் போரைப் பற்றியும் 1825ம் வருடத்தில் ஏற்பட்ட டிசம்பரிஸ்டுகள் கலகத்தைப் பற்றியும் எழுதினுர். அவர் எழுதிய திருத்தம் செய்யப்படாத கையெழுத்துப் பிரதிகள் நமக்குக் கிடைத்திருக்கின்றன.

1830ம் வருடத்தில் போல்தினே கிராமத்தில் இலையுதிர்காலத்தில் தங்கியிருந்த பொழுது பூஷ்கின் தொடர்ச்சியாக ஐந்து கதைகள் எழுதினுர்; அவற்றைத் தொடர் வரிசையாக இணைத்து ''பெல்கின் கதைகள்'' என்று பெயரிட்டார். ருஷ்ய சமூகத்தின் பல்வேறு பகுதியினருடைய வாழ்க்கையையும் உண்மையாகச் சித்திரித்த முதல் ருஷ்ய எழுத்தாளர் அவர்தான். ருஷ்யாவில் பண்ணையடிமைகளாக இருந்த விவசாயிகளின் வாழ்க்கையைப் பற்றி அவர் மிகவும் வேதனைப்பட்டார். அவர் பிற்காலத்தில் எழுதிய ''கரியூஹினே கிராமம்'', ''துப்ரோவ்ஸ்கி'',

''காப்டன் மகள்'' ஆகியவற்றில் இந்தப் பிரச்சினையை எடுத்துக் கொண்டார். பிறகு அது ருஷ்ய முற்போக்கு இலக்கியத்தின் வழிகாட்டும் கருத்தாக மாறியது.

அதிகமான தெளிவு, கச்சிதமான உரைநடை, துல்லியமான சொல்வளம், அலங்காரமான உபமான உபமேயங்கள் பயன்படுத்தப்படாமை, வேகமாக வளர்ச்சியடைகின்ற கதைப் போக்கு—இவை பூஷ்கின் எழுதிய உரைநடையின் சிறப்பான அம்சங்களாகும்.

''சுருக்கமும் துல்லியமான தன்மையும் உரைநடைக்குப் புகழ் சேர்க்கும். அவை சிந்தனையை, மென்மேலும் அதிகமான சிந்தனையைத் தூண்டும். இல்லாவிட்டால் அழகான உரைநடையினால் மட்டும் எந்தப் பயனும் ஏற்படாது'' என்று அவரே எழுதியிருக்கிறார்.

ருஷ்ய இலக்கியத்தில் மாபெரும் சீர்திருத்தக்காரராக விளங்கிய பூஷ்கின் யதார்த்தவாத உரைநடைக்கு அடித்தளம் அமைத்தார்.—85

7 1830ம் வருடத்தில் இலையுதிர்காலத்தில் பூஷ்கின் போல்தினோ கிராமத்தில் தங்கியிருந்த பொழுது ''பெல்கின் கதைகளை'' எழுதினார். இத்தொகுப்பில் ''சவப்பெட்டி வியாபாரி'' என்ற கதை முதன்முதலாக எழுதப்பட்டது; அதை செப்டெம்பர் 9ந் தேதியன்று எழுதியதாகக் குறித்திருக்கிறார். அடுத்து ''அஞ்சல் நிலைய அதிகாரி'' என்ற கதையை செப்டெம்பர் 14ந் தேதியன்று எழுதியிருக்கிறார். ''சீமாட்டியின் மாறுவேடம்'' என்ற கதையை செப்டெம்பர் 20ந் தேதியிலும் ''கைத்துப்பாக்கி வேட்டு'' என்ற கதையை அக்டோபர் 12, 14 தேதிகளிலும் ''பனிப்புயல்'' என்ற கதையை அக்டோபர் 20ந் தேதியிலும் எழுதியிருக்கிறார். டிசம்பர் 9ந் தேதியன்று பூஷ்கின் பிலெட்னேவ் என்ற நண்பருக்கு எழுதிய கடிதத்தில் ''உரைநடையில் ஐந்து கதைகள்'' எழுதியிருக்கும் தகவலை ''மிகவும் இரகசியமாகத்'' தெரிவிக்கிறார். 1831ம் வருடம் ஏப்ரல் மாதத்தில் மாஸ்கோவில் இந்தக் கதைகளைப் படித்துக் காட்டியிருக்கிறார். இக்கதைகளை உண்மையான ஆசிரியர் பெயரைக் குறிப்பிடாமல் ''காலஞ்சென்ற பெல்கின்'' எழுதியது என்று வெளியிடுவதென்று பூஷ்கின் முடிவு செய்தார். இக்கதைகளைத் தொடர்வரிசையாக அமைத்துக் கொண்டு ''பதிப்பாசிரியரிடமிருந்து'' என்று ஒரு முன்னுரையையும் சேர்த்துக் கொண்டார். இக்கதைகளின் தொடர்வரிசையை மாற்றி ''கைத்துப்பாக்கி வேட்டு'', ''பனிப்புயல்'' ஆகிய கதைகளை முறையே முதலாவதாகவும் இரண்டாவதாகவும் மாற்றிக் கொண்டார்.

*இப்புத்தகம் 1831ம் வருடம் அக்டோபர் மாதத்தில் வெளியிடப்பட்டது; 1834ம் வருடத்தில் மறுபதிப்பு வெளிவந்த பொழுது பூஷ்கின் பெயர் சேர்க்கப்பட்டது.—87*

8 *இந்த மேற்கோள் தெனீஸ் இவானவிச் போன்வீஸின் (1745—1792) 1782ல் எழுதிய "முட்டாள்" என்ற இன்பியல் நாடகத்திலிருந்து எடுத்துத் தரப்பட்டிருக்கிறது. அவர் முக்கியமான ருஷ்ய நாடகாசிரியராகவும் கட்டுரையாளராகவும் புகழ்பெற்றவர்.—87*

9 *யெவ்கேனி பாரதீன்ஸ்கி எழுதிய "நடனம்" (1828) என்ற கவிதையிலிருந்து எடுத்துத் தரப்பட்ட மேற்கோள்.—94*

10 *இந்த வரிகள் அலெக்சாந்தர் பெஸ்டூஷெவ்-மார்லீன்ஸ்கி எழுதிய "வெட்டவெளியில் ஒரு மாலை நேரம்" (1822) என்ற கதையிலிருந்து எடுத்துத் தரப்பட்டவை. அவர் ஜாராட்சிக்கு எதிராக 1825 டிசம்பர் 14ந் தேதி நடைபெற்ற கலகத்தில் கலந்து கொண்டவர்.—94*

11 **தெனீஸ் தவீதவ்**—*கவிஞர், இராணுவக்கலை பற்றிய எழுத்தாளர், பூஷ்கினுடைய நெருங்கிய நண்பர். 1812ம் வருடத்தில் தெனீஸ் தவீதவ் இராணுவத்தின் பார்டிஸான் படைப் பிரிவுக்குத் தலைமை வகித்தார். இந்தப் படை விவசாயிகளோடு சேர்ந்து ருஷ்யா மீது படையெடுத்த பிரெஞ்சுத் துருப்புகளுக்கு எதிராகப் போர் செய்தது.*

**பூர்த்ஸவ், அலெக்சாந்தர் பெத்ரோவிச்**—*1812ம் வருட தேசபக்தப் போரில் பங்கு கொண்ட ஹுஸார் அதிகாரி. அவர் தெனீஸ் தவீதவின் கவிதைகளில் அடிக்கடிக் குறிப்பிடப்படுகிறார்.—102*

12 *1812ம் வருடத்தில் அலெக்சாந்தர் இப்ஸிலாந்தியின் (1792—1829) தலைமையில் நடைபெற்ற துருக்கி எதிர்ப்புக் கலகம் இங்கே குறிப்பிடப்படுகிறது. அவர் கிரீஸ் நாட்டின் விடுதலைக்காகப் போராடிய ஒரு இரகசியச் சங்கத்திற்குத் தலைவராக இருந்தார். பூஷ்கின் கிஷின்யோவில் வசித்த பொழுது அலெக்சாந்தா இப்ஸிலாந்தியோடு பழகினார்.*

*1821 ஜூன் 29ந் தேதியன்று ஸ்குலியானி என்ற இடத்தில் நடைபெற்ற யுத்தத்தில் துருக்கிய இராணுவம் இரகசியச் சங்கத்தின் படைகளை முறியடித்தது.—115*

13 *ருஷ்யக் கவிஞரும் மொழிபெயர்ப்பாளருமான வசீலி ஜூக்கோவ்ஸ்கி (1785—1852) எழுதிய "ஸ்வெத்லானா" (1813) என்ற கதைப்பாடலிலிருந்து எடுத்துத் தரப்பட்ட மேற்கோள்.—116*

[14] *19ம் நூற்றுண்டில் பிரபலமான ருஷ்ய நாடகாசிரியரும் இராஜதந்திரியுமான அலெக்சாந்தர் கிரிபயேதவ் எழுதிய ''அறிவினுல் ஏற்படும் துன்பம்'' (1824) என்ற இன்பியல் நாடகத்திலிருந்து எடுத்துத் தரப்பட்ட மேற்கோள்.—129*

[15] *சென்-பிரியோவின் காதற் கடிதம் இங்கே குறிப்பிடப் படுகிறது. பிரெஞ்சு எழுத்தாளரும் சிந்தனையாளருமான ரூஸோ எழுதிய ''ஜூலியா அல்லது புதிய அலோய்ஸா'' (1761) என்ற நாவலின் கதாநாயகனுடைய பெயர்.—133*

[16] *18ம் நூற்றுண்டைச் சேர்ந்த புகழ் மிக்க ருஷ்யக் கவிஞரான கவ்ரீலா தெர்ழாவின் எழுதிய ''நீர்வீழ்ச்சி'' (1794) என்ற கவிதையிலிருந்து எடுத்துத் தரப்பட்ட மேற்கோள்.—137*

[17] *ஷேக்ஸ்பியர் எழுதிய ''ஹாம்லெட் '' (1600—1601) என்ற சோக நாடகத்திலும் வால்டர் ஸ்காட் எழுதிய ''லாமெர்மூர் மணப்பெண்'' (1819) என்ற நாவலிலும் வர்ணிக்கப்படும் வெட்டியான்களைப் பூஷ்கின் இங்கே குறிப்பிடுகிருர்.—138*

[18] *19ம் நூற்றுண்டைச் சேர்ந்த ருஷ்ய எழுத்தாளரான பகரெல்ஸ்கி எழுதிய கதையில் வருகின்ற பாத்திரம்.—141*

[19] *கினியாழ்னின் எழுதிய ''வீம்புக்காரன்'' (1786) என்னும் இன்பியல் நாடகத்தில் வருகின்ற கவிதை வரிகள் சிறிது மாற்றிக் கொடுக்கப்பட்டிருக்கின்றன.—143*

[20] *பியோத்தர் வியாஸெம்ஸ்கி எழுதிய ''அஞ்சல் நிலையம்'' (1825) என்ற கவிதையிலிருந்து சில வரிகள் இங்கே மாற்றிக் கொடுக்கப்பட்டிருக்கின்றன. முதலாம் பீட்டர் தயாரித்த அதிகாரிகளின் அந்தஸ்துப் பட்டியலில் பிராந்திய அதிகாரிகள் பதினுன்காவது (கடைசி) நிலையில் வைக்கப்பட்டனர்.—150*

[21] *அந்தக் காலத்துச் சட்டங்களின்படி அதிகாரிகளைச் சவுக்கால் அடிக்கக் கூடாதென்று விலக்களிக்கப்பட்டது.—150*

[22] *18ம் நூற்றுண்டைச் சேர்ந்த ருஷ்யக் கவிஞரான இப்பலீட் பக்தனேவிச் எழுதிய ''என் இதயமே'' (1775) என்ற கவிதையிலிருந்து எடுத்துத்தரப்பட்டமேற்கோள்.—171*

[23] *இரண்டாம் எகதிரீனுவின் மரணத்துக்குப் பிறகு முதலாம் பாவெல் பதவிக்கு வந்ததும் எகதிரீனுவின் காவலர்*

*படையைக் கலைத்துவிட்டு ருஷ்ய இராணுவத்தைப் பிரஷ்ய முறையில் திருத்தியமைக்கத் தொடங்கினார்.*
*—171*

24 *ருஷ்யக் கவிஞர் அலெக்சாந்தர் ஷுகோவ்ஸ்கி (1777 1846) எழுதிய ஒரு கவிதையிலிருந்து எடுத்துத் தரப் பட்ட வரிகள்.—172*

25 *அந்தக் காலத்தில் அதிகாரிகள் மீசை, தாடி வைத்திருக்கக் கூடாதென்று கண்டிப்பாக உத்தரவிடப்பட்டிருந்தது; ஆனால் இராணுவத்தைச் சேர்ந்தவர்கள் கண்டிப்பாக மீசை வைத்திருக்க வேண்டும்.—173*

26 **ழான்-போல்**—*ஜெர்மனியைச் சேர்ந்த எழுத்தாளரும் புத்தார்வவாதியுமான ஜோஹான் பாவுல் ரிஹ்டரின் (1763—1825) புனைபெயர்.—175*

27 *ரிச்சர்ட்ஸன் என்ற ஆங்கில எழுத்தாளருடைய "பமெலா அல்லது நற்பண்புகள் நன்மதிப்படைதல்" (1741) என்ற பிரபலமான நாவல் இங்கே குறிப்பிடப்படுகிறது.—176*

28 **பொம்பதூர் சீமாட்டி**—*பிரெஞ்சு அரசரான பதினைந் தாம் லுயீயின் ஆசைநாயகி.—193*

29 **லங்காஸ்டர் முறை**—*லங்காஸ்டர் (1771—1838) என்ற ஆங்கில ஆசிரியர் உருவாக்கிய கல்வி கற்பிக்கும் முறை.*
*—196*

30 *கரம்ஸின் என்ற ருஷ்ய எழுத்தாளர் 1792ல் எழுதிய கதையின் பெயர்.—196*

31 *18ம் நூற்றுண்டைச் சேர்ந்த ருஷ்ய நாடகாசிரியரான போன்வீஸின் எழுதிய "முட்டாள்" (1782) என்ற நாட கத்தில் வருகின்ற ஸ்கொதீனின் என்ற பாத்திரத்தின் பேச்சு இங்கே குறிப்பிடப்படுகிறது.—199*

32 *இக்கதை 1833ம் வருடத்தில் இலையுதிர்காலத்தின் போது போல்தினோ கிராமத்தில் எழுதப்பட்டது. இக் கதையின் ஆரம்பத்தில் குறிப்பிடப்பட்டுள்ள முக்கியமான விவரங்கள் உண்மையாக நடந்தவையே என்று பூஷ்கி னுடைய சமகாலத்தவர்கள் எழுதியிருக்கிறுர்கள். மாஸ் கோவில் கவர்னர்-ஜெனரலாகப் பதவி வகித்த திமீத்ரி விளதீமிரவிச் கலீத்சினுடைய தாயாரான நத்தாலியா பெத்ரோவ்ஞ கலீத்சிஞ இந்தக் கதையில் முதுமை யடைந்த சீமாட்டியாகச் சித்திரிக்கப்பட்டிருக்கிறுர். ஒரு காலத்தில் பாரிஸ் நகரத்தில் அந்த சீமாட்டி பூஷ்கின் வர் ணித்த மாதிரியே வாழ்க்கை நடத்திஞள். அவளுடைய*

பேரன் கலீத்சின் பூஷ்கினிடம் கீழ்க்கண்ட சம்பவத்தைச் சொல்லியிருக்கிறான். அவன் ஒரு சமயத்தில் சீட்டாட்டத்தில் அதிகமான பணத்தை இழந்து விட்டபடியால் தன்னுடைய பாட்டியிடம் உதவி செய்யுமாறு கேட்டிருக்கிறான். அவன் கேட்டது பண உதவி; ஆனால் அவன் பாட்டி அதற்குப் பதிலாக மூன்று சீட்டுகளைக் குறித்துச் சொல்லியிருக்கிறாள்.... அவள் பேரன் அந்த மாதிரியே மறுபடியும் சீட்டாடியதில் இழந்த பணம் முழுவதையும் திரும்பப் பெற்றான. இதைத் தவிர இக்கதையின் மற்ற அம்சங்கள் கற்பனையே.

இக்கதை வாசகர்களின் சிறப்பான வரவேற்பைப் பெற்றது. ''என்னுடைய 'ஸ்பேடுகளின் ராணி' மிகவும் பிரபலமடைந்து விட்டது; சூதாட்டக்காரர்கள் ஆஸ், மூன்று, ஏழு ஆகிய சீட்டுகளின் மீது பணத்தைக் கட்டுகிறார்கள்'' என்று பூஷ்கின் எழுதியிருக்கிறார்.—*203*

33 **சென்-ஜெர்மென் பிரபு**—*18ம் நூற்றாண்டின் கடைசிப் பகுதியில் பிரான்சில் வாழ்ந்த இரஸவாதி மற்றும் சாகசங்கள் நிறைந்த ஒருவர்.—208*

34 **கஸனோவா, ஜோவான்னி ஜாக்கோமோ** *(1725—1798) மிகவும் பிரபலமடைந்த இத்தாலிய சாகசக்காரர்; அவருடைய ''வாழ்க்கைச் சரிதம்'' மிகச் சுவையானது.—208*

35 **திருவாட்டி லெப்ரான்** *(1755—1842)—பிரெஞ்சு ஓவியர்; உருவப்படங்கள் வரைபவர்.—229*

36 **ஸ்வெதென்பர்க், எம்மானுவேல்** *(1688—1722)—ஸ்வீடன் நாட்டைச் சேர்ந்த தத்துவஞானி.—240*

37 **பூஷ்கின்** *1830ம் வருடத்திலிருந்தே யெமெல்யான் புகச்சோவ் (1744—1775) தலைமையில் நடைபெற்ற விவசாயிகளின் கலகத்தைப் பற்றி அதிகமான அக்கறை கொண்டிருந்தார். இந்தக் கலகத்தைச் சேர்த்து புகச்சோவுடன் நெருங்கிய நட்புக் கொண்டிருந்த ஒரு கனவானின் வாழ்க்கையைப் பற்றி நாவல் எழுதுவதென்று முடிவு செய்தார். 1833 ஜனவரி மாதத்தில் இந்த நாவலின் ஆரம்ப உருவரையைப் பூஷ்கின் தயாரித்தார். அதில் ஒரு படைப் பிரிவைச் சேர்ந்த இராணுவ அதிகாரி மிஹயீல் அலெக்சாந்தரவிச் ஷ்வானவிச் என்ற உண்மையான நபர் கதாநாயகராக இருந்தார்; அவர் புகச்சோவை ஆதரித்தவர்; பிறகு சைபீரியாவுக்கு நாடுகடத்தப்பட்டவர்.*

*கலகம் பரவிய எல்லா இடங்களுக்கும் பூஷ்கின்*

சென்று அதை நேரில் கண்டவர்களைச் சந்தித்துப் பேசினார்; அதோடு அரசின் ஆவணங்களையும் ஆராய்ந்தார். "காப்டன் மகள்" என்ற சரித்திர நாவலையும் "புகச்சோவ் கலகத்தின் வரலாறு" என்ற வரலாற்றுப் புத்தகத்தையும் அவர் ஒரே சமயத்தில் எழுதிக் கொண்டிருந்தார்.

நாவலின் ஆரம்ப உருவரை பிறகு கணிசமான மாற்றமடைந்தது. நாவலில் விவசாயிகள் கலகம் மென்மேலும் அதிக முக்கியத்துவம் பெற்றது. கதாநாயகனுக்கும் காப்டன் மகளுக்கும் இடையே வளரும் காதல்-கதையின் கரு—அழுத்தமாக உருப்பெற்றது.

பூஷ்கின் நாவலை மெதுவாகத்தான் எழுதினார். 1836ம் வருட இலையுதிர்காலத்தின் போது அதை எழுதி முடித்தார். அரசாங்கத் தணிக்கைக்காக நாவலை சமர்ப்பித்தபொழுது தணிக்கை அதிகாரியான கோர்ஸக்கவுக்கு 1836 அக்டோபர் 25ந் தேதியன்று பின்வருமாறு கடிதம் எழுதினார்: "மிரோனவா என்ற பெயர் கற்பனையே. ஓர் இராணுவ அதிகாரி தன் கடமையைத் துறந்து புகச்சோவ் கும்பலோடு சேர்ந்து கொண்டதாகவும், அந்த அதிகாரியின் வயதான தகப்பனார் சக்கரவர்த்தினியின் காலடியில் விழுந்து மன்றாடியதன் காரணமாக அந்த அதிகாரிக்கு மன்னிப்பளிக்கப்பட்டது என்று நான் கேள்விப்பட்டிருக்கிறேன். இந்த 'உண்மையிலிருந்து' இந்த நாவல் அதிகமான மாற்றங்களை அடைந்திருப்பதை நீங்கள் காண முடியும்."

"காப்டன் மகளில்" பூஷ்கின் 1773—1775ம் வருடங்களில் தானாகவே வெடித்த விவசாயிகள் கலகத்தை தத்ரூபமாகச் சித்திரிக்கிறார். பண்ணையடிமை முறையை எதிர்த்துக் கிளம்பிய புகச்சோவ் இயக்கத்தின் உண்மையான தேசியத்தன்மையை அவர் அழுத்தந்திருத்தமாகக் காட்டுகிறார். புகச்சோவை மதிநுட்பமும் மனிதப்பற்றும் கொண்டவராக, விவசாயிகள் கலகத்தின் வீர மறவனாக, ஆற்றல் மிக்க தலைவனாகப் பூஷ்கின் சித்திரிக்கிறார். 1836 நவம்பர் முதல் தேதியன்று வியாஸெம்ஸ்கி ஏற்பாடு செய்த இலக்கியக் கூட்டத்தில் பூஷ்கின் தன்னுடைய நாவலை வாசித்துக் காட்டினார். 1836ம் வருடத்தில் இந்த நாவல் முதன்முதலாக வெளியிடப்பட்டது.

பூஷ்கின் காலத்தில் வாழ்ந்தவரும் மாபெரும் ருஷ்ய விமரிசகருமான வி. பெலீன்ஸ்கி "காப்டன் மகளை" மிகவும் பாராட்டினார். பூஷ்கினுடைய உரைநடை இலக்கியங்களில் அதிகச் சிறப்புடையது "காப்டன் மகள்" என்று நி. கோகல் (1809—1852) கருதினார்.—253

38 கினியாழ்னின் எழுதிய "வீம்புக்காரன்" (1786) இன்

பியல் நாடகத்திலிருந்து மேற்கோள் காட்டப்பட்ட வரிகள்.—255

39 **மினிஹ் புர்ஹார்ட் கிறிஸ்டோபெர்** (1683—1767)—இராணுவ ஜெனரல்; இரண்டாம் எகதிரீனு ஆட்சியைக் கைப்பற்றிய பொழுது மூன்றும் பீட்டருக்கு விசுவாசமாக நடந்து கொண்டவர்.—255

40 போன்வீஸின் எழுதிய (1769) ''எனது வேலைக்காரர்களுக்கு—ஷுமீலவ், வான்கா மற்றும் பெத்ருஷாவுக்கு—ஒரு செய்தி'' என்ற கவிதையிலிருந்து ஒரு வரி.—266

41 **யாயிக் படைகள்**—யாயிக் நதிக் கரைகளில் (புகச்சோவ் கலகத்துக்குப் பிறகு அரசி இரண்டாம் எகதிரீனு இந்த நதியின் பெயரை உரால் என்று மாற்றினுர்) நிறுத்தி வைக்கப்பட்டிருந்த கஸாக்குகளின் படைகள். 1772 ஜனவரி 12ந் தேதியன்று யாயிக் நகரத்தில் ஏற்பட்ட கலகம் கோடை காலத்தின் போது நசுக்கப்பட்டது. அதன் பிறகு கஸாக்குகளின் மனநிலையைப் பற்றி ''புகச்சோவின் வரலாறு'' என்ற புத்தகத்தில் பூஷ்கின் பின்வருமாறு எழுதினுர்: '' 'அதற்குப் பிறகு நிலைமை எவ்வாறிருக்கும்? மாஸ்கோவை நாம் இப்படி உலுக்குவோமா?...' என்று மன்னிப்பளிக்கப்பட்ட கலகக்காரர்கள் பேசிக் கொண்டார்கள். ஸ்டெப்பியிலும் நெடுந்தொலைவிலுள்ள வீடுகளிலும் இரகசியக் கூட்டங்கள் நடைபெற்றன. ஒரு புதிய கலகம் ஏற்படும் என்ற அறிகுறிகள் எங்கும் நிலவின. அவர்களுக்குத் தலைவர் மட்டும்தான் இல்லை. விரைவில் ஒரு தலைவர் தோன்றினுர்.''—277

42 அதுதான் மினிஹ். குறிப்பு 39ஐப் பார்க்கவும்.—281

43 போர்வீரர்கள் பாடல். இதைப் பூஷ்கின் எழுதியிருக்கலாம்.—283

44 ஏழாண்டுப் போர் நடைபெற்ற பொழுது 1758ம் வருடத்தில் ருஷ்யத் துருப்புகள் கீஸ்திரின் என்ற கோட்டையை முற்றுகையிட்டன.

ருஷ்ய-துருக்கி யுத்தத்தின் போது (1735—1739) 1737ம் வருடத்தில் துருக்கியர்களுக்குச் சொந்தமான ஒச்சாக்கவ் கோட்டையை ருஷ்யத் துருப்புகள் கைப்பற்றின.—285

45 கினியாழ்னின் எழுதிய ''விந்தையான மனிதர்கள்'' (1794) என்ற இன்பியல் நாடகத்திலிருந்து மேற்கோள் காட்டப்பட்டிருக்கும் வரிகள்.—293

46 **சுமரோக்கவ், அலெக்சாந்தர் பெத்ரோவிச்** *(1718—1777)* *—கவிஞர்; நாடகாசிரியர்; ருஷ்ய மூலச்சிறப்புடைய மரபின் தத்துவக் கோட்பாடுகளை விளக்கியவர்.—295*

47 *''ருஷ்யப் பாடல்களின் தொகுப்பு (புதியதும் முழுமையுமான நூல்)'' என்ற தலைப்பில் நோவிக்கவ் 1790ம் வருடத்தில் வெளியிட்ட புத்தகத்தின் முதல் பகுதியில் உள்ள பாடல்; இது சுருக்கப்பட்டும் மாற்றியமைக்கப் பட்டும் இங்கே தரப்பட்டிருக்கிறது. 295*

48 **த்ரேதியக்கோவ்ஸ்கி, வசிலி கிரீலவிச்** *(1703—1769)—கவிஞர்; மொழிபெயர்ப்பாளர்; இலக்கிய விமரிசகர். இவர் எழுதிய பாடல்களை அவருடைய சமகாலத்தவர்கள் பெரும்பாலும் ஏளனம் செய்தார்கள். அது முழுக்கச் சரியானதென்று சொல்ல முடியாது. 296*

49 *''ருஷ்ய நாட்டுப் பாடல்களின் தொகுப்பு'' என்ற தலைப்பில் பிராட்ச் 1790ம் வருடத்தில் வெளியிட்ட புத்தகத்திலிருக்கும் பாடலிலுள்ள வரிகள் இங்கே தரப்பட்டிருக்கின்றன.—301*

50 *மேலே குறிப்பிட்ட ''ருஷ்ய நாட்டுப் பாடல்களின் தொகுப்பில்'' உள்ள பாடல்.—308*

51 *''ருஷ்யப் பாடல்களின் தொகுப்பு (புதியதும் முழுமையுமான நூல்)'' என்ற தலைப்பில் 1790ம் வருடத்தில் நோவிக்கவ் வெளியிட்ட புத்தகத்தின் முதற்பகுதியில் உள்ள பாடல்.—308*

52 *ஜார் பயங்கர இவான் கஸான் நகரத்தைக் கைப்பற்றியதைப் பற்றி எழுதப்பட்ட பாடல் (நோவிக்கவ் வெளியிட்ட பாடல்களின் தொகுப்பிலிருந்து எடுக்கப் பட்டது).—320*

53 *குறிப்பு 41ஐப் பார்க்கவும்.—321*

54 *இது புகச்சோவுக்கு ஆலோசனை கூறி நெருக்கமாக இருந்த கஸாக்குகள் தயாரித்து வெளியிட்ட அறிக்கைகளையும் வேண்டுகோள்களையும் பற்றிய குறிப்பு.—327*

55 *பஷ்கீரியர்களுடைய கலகம் இங்கே குறிப்பிடப்படுகிறது; ஜாரிஸ்ட் துருப்புகள் இந்தக் கலகத்தைக் கொடூரமான முறையில் நசுக்கி விட்டன.—330*

56 **கிரீஷ்கா அத்ரியேபியெவ்**—*சுடோவ் மடத்தில் கிரிகோரி என்ற பெயரில் இருந்த ஒரு துறவியான பிரபு யூரி அத்ரியேபியெவ்; 1602ம் வருடத்தில் பயங்கர இவானின் மகனை இளவரசர் திமீத்ரி தானே என்று அறிவித்தார். —359*

57 ஹெராஸ்கோவ் (1733—1807) எழுதிய ''பிரிவு'' என்ற கவிதையின் வரிகள். —361

58 ஜார் பயங்கர இவான் கஸான் நகரத்தைக் கைப்பற்றியதைப் பற்றி ஹெராஸ்கோவ் எழுதிய கவிதையின் வரிகள்.—369

59 லிஸவேத்தா ஹார்லவா—கீழ் ஏரிக் கோட்டைத் தளபதி மேஜர் ஹார்லவின் மனைவி. மேஜர் ஹார்லவ் புகச்சோவினல் கொல்லப்பட்டார்.—378

60 சுமரோக்கவின் கவிதைகளைப் போல எழுதப்பட்டிருக்கும் இந்த வரிகளை பூஷ்கினே எழுதினர்.—382

61 பூஷ்கின் ஒரு திருமணப் பாடலைச் சிறிது மாற்றிக் கொடுத்திருக்கிறர்.—400

62 இந்தக் கவிதையை கினியாழ்னின் எழுதியதாகக் குறிப்பிட்டிருந்தாலும் இதை எழுதியவர் பூஷ்கினே.—411

63 1774 மார்ச் 22ம் தேதியன்று இது நடைபெற்றது. —418

64 1774 ஜூலை 12ம் தேதியன்று புகச்சோவ் கஸானைக் கைப்பற்றினர்.—419

65 மிஹெல்சோன், இவான் இவானவிச் (1740—1807)—ருஷ்ய இராணுவத்தில் லெப்டினென்ட்-கர்னல் பதவி வகித்த அதிகாரி. 1774 ஆகஸ்ட் 22—25ம் தேதியன்று ட்ஸாரீட்சினுக்கும் சேர்னியாறுக்குமிடையே உள்ள பிரதேசத்தில் நடைபெற்ற போரில் புகச்சோவை முற்றிலும் முறியடித்தவர்.—420

66 ஆன்ன இயொயானவ்னவின் ஆட்சியின் போது பிரோனுக்கு அரசாங்கத்தில் ஏற்பட்டிருந்த அதிகப்படியான செல்வாக்குக்கு எதிராக வலீன்ஸ்கி என்ற அமைச்சரும் ஹ்ருஷ்சோவ் என்ற கடற்படை அட்மிரலும் சதியில் ஈடுபட்டனர். அதற்காக 1740ம் வருடத்தில் அவர்களுக்கு மரண தண்டனை விதிக்கப்பட்டது.—431

67 ஸபீயா—ஜார்ஸ்கயே செலோ பூங்காவுக்குச் சமீபத்தில் அமைந்திருந்த இராணுவ முகாம். 1808ம் வருடத்திலிருந்து ஜார்ஸ்கயே செலோவோடு சேர்த்துக் கொள்ளப்பட்டது.—433

68 1770ல் ககூலா நதிக் கரையில் துருக்கிப் படைகளை ருஷ்யத் துருப்புகள் வெற்றி கொண்டதன் நினைவாக எழுப்பப்பட்ட கம்பம்.—434

''நீங்கள் பூஷ்கின் எழுதிய உரைநடை இலக்கியங்களைப் படித்து நெடுங்காலமாகி விட்டதா? தயவு செய்து எனக்காக ஒரு காரியம் செய்வீர்களா? 'பெல்கின் கதைகள்' எல்லாவற்றையும் மீண்டும் ஒரு முறை படியுங்கள். ஒவ்வொரு எழுத்தாளரும் அவற்றைப் படிக்க வேண்டும். நான் சில நாட்களுக்கு முன்பு மறுபடியும் அவற்றைப் படித்தேன். அது எவ்வளவு நன்மையை எனக்குச் செய்தது என்பதைச் சொல்லவும் முடியுமோ!''

லேவ் தல்ஸ்தோய்

மாபெரும் ருஷ்யக் கவிஞரான அலெக்சாந்தர் பூஷ்கின் (1799—1837) எழுதிய நூல்களில்தெர்ந்தெடுக்கப்பட்ட சில இத்தொகுப்பில் வெளியிடப்பட்டிருக்கின்றன. ருஷ்ய நாடோடிக் கதைகளை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்ட ''ஜிப்சிகள்'' (1826) ''வெண்கலக் குதிரை வீரன்'' (1833) என்ற கவிதைகளும் ''கஞ்சப் பிரபு'' (1830) என்ற கவிதை நாடகமும் இத்தொகுப்பில் அடங்கியுள்ளன.

பூஷ்கின் எழுதிய''பெல்கின் கதைகள்'' (1830) ''ஸ்பேடுகளின் ராணி'' (1833) மற்றும் ''காப்டன் மகள்'' (1836) என்ற வரலாற்று நாவல் அவருடைய இலக்கிய மேதையை எடுத்துக் காட்டுவதோடு வெவ்வேறு இலக்கிய வடிவங்களை அவர் எத்துணை ஆற்றலோடு கையாண்டார் என்பதை நமக்கு விளக்குகின்றன. இப்புத்தகத்தில் கவிஞர், அவருடைய உறவினர்கள், நண்பர்கள் ஆகியோரது படங்களும் அவருடைய சித்திரங்களும் அவருடைய நினைவுச் சின்னங்களும் அவர் காலத்திய ஆவணங்களும் வெளியிடப் பட்டிருக்கின்றன.